149

# மருதவனப்புராணம்

குறிப்புரையுடன்



ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்
திருவிடைமருதூர்

ACC. NO. 25916
7914

வெளியீடு எண் 21.

உ

சிவமயம்

கொட்டையூர் – ஸ்ரீ சிவக்கொழுந்துதேசிகர்

இயற்றிய

# மருதவனப்புராணம்

குறிப்புரையுடன்

இஃது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

திருவிடைமருதூர்

ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில்

வெளியிடப்பெற்றது.

1964



## பொருளடக்கம்

உ
சிவமயம்

# முகவுரை

---

திருச்சிற்றம்பலம்

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
ஆதி யையம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
என்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

திருச்சிற்றம்பலம்

– சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்.

மருதவனம் என்பது சோழநாட்டிலே தேவாரம் பெற்று விளங்கும் சிவதலங்களுள் திருவிடைமருதூர் என்னும் தலமாம். இத்தல விருட்சம் மருதமரம் ஆகலின் இது மருதவனம் எனப் பேர்பெற்றது; காவிரிநதி பாயும் வளமுள்ள மருதநிலத்தைச் சார்ந்தது. இது காவிரியின் தென்பால் உள்ள தலங்களுள் ஒன்று. கயிலைமலையே ஒருகாலத்து இத்தலத்தில் மருதமரமாய் நின்று சிவபெருமானும் உமாதேவியாரும் மனமகிழ்ந்து வீற்றிருக்குமாறு நிழலைத் தராநின்றது. இத்தலம் மத்தியார்ச்சுனம் என்னும் வடமொழிப் பெயருடையது. வடக்கே மல்லிகார்ச்சுனமும், தெற்கே திருப்புடார்ச்சுனமும் இருத்தலால் இது மத்தியார்ச்சுனம் என வழங்கும்.

மத்தியம் - நடு. அர்ச்சுனம் - நின்மலம். இது நின்மலத்தானம் எனப் பொருள்படும். ஆதிசத்தியின் இதயகமலமாக உள்ள மத்திய தானத்தை உணர்த்தி, பின்பு அந்த இதயகமல மத்தியிலே தியானிக்கப்பட்டு விளங்கிய சோதிர்மய மகாலிங்கத்தை உணர்த்தி, பின்பு அப்பெருமான் எழுந்தருளி விளங்கும் தலத்துக்கும் வந்தது. இனி, உரோமசமுனிவர் வந்தபோது சிவலிங்கப்பெருமான் மருதவனத்தின் மத்தியில் எழுந்தருளியிருத்தலைக் கண்டு இத்தலம் மத்தியார்ச்சுனம் என்றமையால் வந்த பெயருமாம். அர்ச்சுனம் - மருது.

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதினத்துக்குச் சொந்த மானது இச்சோதிர் மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்.

திருவலஞ்சுழி - விநாயகக்கடவுள், சுவாமிமலை - சுப்பிரமணியக் கடவுள், திருவாப்பாடி - சண்டேசுரநாயனார், சூரியனார்கோயில் - சூரியன் முதலிய ஒன்பது கோள்கள், சிதம்பரம் - நடராசப்பெருமான், சீகாழி - வைரவக்கடவுள், திருவாவடுதுறை - திருநந்திதேவர், திருவாரூர் - சோமாஸ் கந்தர், ஆலங்குடி (திருஇரும்பூளை) - தட்சிணாமூர்த்தி என்னும் மூர்த்தங் களைப் பரிவாரமூர்த்திகளாகக்கொண்டு இத்தலம் நடுநாயகமாக மூலமூர்த்தி யாகிய ஸ்ரீ சோதிர் மகாலிங்கத் தானமாக விளங்குகிறது. (திருநகரச் - 50.)

தலவிருட்சம்: மருதமரம்; இது பிரணவப்பிரகாரத்திலே வடபுறத் தில் உள்ளது.

வழிபட்டுப் பேறுபெற்றோர்: பிரமதேவர், நாரதமுனிவர், உரோமச முனிவர், வீரசோழன், மார்க்கண்டேயர், சுகீர்த்தி, வசிட்ட முனிவர், வரகுணபாண்டியர், அஞ்சத்துவசன், வீரசேனன், சித்திரகீர்த்தி, திரியம்பகன் முதலியோர்.

இத்தலத்தின் பெருமை வடமொழிக் கந்தபுராணம், இலிங்கபுராணம், பிரமகைவர்த்த புராணம் முதலியவற்றுட் கூறப்பட்டது.

**மூர்த்தி:**

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்பது தாயுமானவர் வாக்கு.

தல விநாயகர்: இவர் திருநாமம் ஆண்டபிள்ளையார். இவர் உட்பிர காரத்திலே ஜோதிர் மகாலிங்கேசுவரருக்குத் தென்பால் வீற்றிருக்கின்றார். சிவபெருமான் கட்டளையிட்டருளியபடி உரோமசமுனிவர் வருமளவும் ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியை இவர் வழிபாடுசெய்து வந்ததுடன் அன்பர்களுக்கு யாதொரு இடையூறும் அணுகாவண்ணம் ஆண்டுவந்தனர் ஆகலின் இப் பெயர் பெற்றார்.

சுவாமி திருநாமங்கள்: மருதவனேசர், ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி, ஏக நாயகர் என்பன. சோதி, மருதநாயகன், பணைமுலைமணாளன், மருதீசன், மருதவாணன், மருதிறைவன், மருதத்தாணு என இந்நூலில் போற்றப்படு கின்றன.

அம்பிகை திருநாமம்: பெருநலமாமுலையம்மையார். பிருகத்சுந்தர குசாம்பிகை என்பது வடமொழிப்பெயர்.

பல இலிங்கவடிவங்கள்: அகத்தியலிங்கம், காசிபலிங்கம், உரோமச லிங்கம், சோழலிங்கம், சேரலிங்கம், சகத்திரலிங்கம், பஞ்சபூதலிங்கங்கள் முதலிய இலிங்கமூர்த்தங்கள் உள்ளன. மற்றும், கொடுமுடிப் பிரகாரத்தி னுள் ஸ்ரீ சொக்கநாதருக்குப் பின்னுல் ஈசானதிக்கில் இருபத்தேழு இலிங்கங் கள் உள்ளன. அவைகள் பலரால் பூசிக்கப்பட்டவைபோலும்.

மருதமரத்தின் நிழலில் உரலில் கட்டுண்ட கண்ணபிரான் வடிவம் உள்ளது. மருதவிருட்சத்தின் மேல்பால் ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில் ஒன்று இருக்கின்றது. ஸ்ரீ விசுவநாதர், ஸ்ரீ ஆன்மநாதர், ஸ்ரீ சொக்கநாதர் ஆலயங் களும் தனித்தனியேயுள்ளன.

வேறு மூர்த்தங்கள்: சாம்பதட்சிணுமூர்த்தி, அர்த்தநாரீசுவரர், மருத நாயகர் முதலியன விசேடமானவை. இத்தலத்துச் சோமாஸ்கந்த மூர்த்தியே ஏகநாயகர். அம்பிகை தவக்கோலமே மூகாம்பிகை என்பது.

சைவசமயகுரவர் நால்வர், சேக்கிழார்சுவாமிகள், பட்டினத்தடிகள் முதலிய வடிவங்கள் உள்ளன. அறுபத்துமூன்று நாயன்மார்கள் மூலத் திருவுருவங்களும், உற்சவமூர்த்திகளும் உள்ளன. இத்தலத்திலே சன்மார்க் கம் சகமார்க்கம் சற்புத்திரமார்க்கம் தாதமார்க்கம் என்பவைகட்கு இயைய மாணிக்கவாசகசுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் என்னும் முறையிலே நால்வருடைய மூலவடிவங்கள் உள்ளன. அகத்தியமுனிவர் ஸ்ரீ தட்சிணுமூர்த்தி சந்நிதியை அடுத்து விளங்குகின்றுர். தட்சிணுமூர்த்தத்தின் எதிரில் சப்தகன்னியரை அடுத்துப் பதினொரு இலிங்கமூர்த்திகள் உள்ளன. அதனை அடுத்து நிருதி மூலையில் 'கலாபலிங்கம்' என்ற ஒரு சிவலிங்கமும் இருக்கின்றது. காசிப முனிவர் படிவம் அறுபத்துமூவர் மூலவடிவங்களின் இறுதியில் வடக்கில் உள்ளது.

பாண்டியன் தோரணவாயிலின் தென்பால் வரகுணபாண்டியர் வடிவ முள்ளது. கிழக்குக் கோபுரவாயிலில் பட்டினத்தடிகளும், மேலைக் கோபுர வாயிலில் பத்திரகிரியாரும் எழுந்தருளியுள்ளனர். கீழைவாயிலினுட்புறத்தில் படித்துறைவிநாயகர் வீற்றிருந்தருளுகின்றுர். இவ்விநாயகமூர்த்திக்குப் பின் புறம் பெரிய இடபதேவர் வடிவம் உள்ளது. கிழக்குப் பெரிய கோபுரத்தை அடுத்து உள்ளே இருக்கும் கோபுரவாயிலின் தென்புறத்திலே பிரமகத்தி வடிவம் இருக்கிறது. கோயிலினுட்சென்று மகாலிங்கேசரைத் தரிசித்த பின்பு கொடுமுடிப்பிரகாரத்தின் வழியே மக்கள் அம்மையாரைத் தரிசிக்கச் செல்வது இத்தலவழக்கம்.

**தலம் :**

இத்தலம் திருவிடைமருதூர், சண்பகாரணியம், சத்திபுரம், தபோவனம், சோதிநகர், சருவதீர்த்தபுரம், வில்வவனம், தருமவிருத்திபுரம், வீரசோழநகரம், சிவலோகம், செல்வவிருத்திபுரம், முத்திபுரம் என்னும் பன்னிரு காரணப் பெயர்களை உடைத்து. (தலவிசேட. செய். 16—18)

**தீர்த்தம் :**

இத்தலத்திலுள்ள தீர்த்தங்களில் காவிரி (பூசத்தீர்த்தம்), காருணியாமிருததீர்த்தம், கனகதீர்த்தம் (காக்கைக்குளம்) என்பன சிறந்தன.

காருணியாமிருததீர்த்தம் : கங்கை முதலிய நதிகள் சிவபெருமான் கட்டளையால் நீராடி மலினம் நீங்கப்பெற்றன. மிதிலையரசன் இட்டரோமன் உதங்கமுனிவரிட்ட கட்டளைப்படி நீராடி இறைவரை வழிபட்டு மகப்பேறு பெற்றான். சித்திரைவிஷுபுண்ணியகாலத்தில் இதில் நீராடுவது விசேடம்.

கனகதீர்த்தம் : காகத்திற்குப் பொன்னிறம் அருளி, உருத்திரவடிவம் அளித்தமையால் காகதீர்த்தம் எனவும் பெயர் பெறும். இதுவே காக்கைக் குளம் என்பது. சந்திரன் இதில் மூழ்கிக் கயரோகம் நீங்கப்பெற்றான். ஓர் அந்தணன் ஆராயாமல் புழு வெட்டுண்ட மலரைக்கொண்டு இறைவரைப் பூசித்த குற்றத்தால் இரண்டு கண்களும் இழக்கப்பெற்று, வசிட்ட முனிவர் கட்டளையின்படி இத்தீர்த்தத்தில் முழுகிக் கண்களைப் பெற்றான்.

பாணதீர்த்தம் : தசரதராமனால் உண்டாக்கப்பெற்றது. இதில் பிதிர் தர்ப்பணம் செய்தால் கயையிற்செய்த புண்ணியம் உண்டாம்.

பராசரதீர்த்தம் : உரோமசமுனிவர் ஆணையால் பராசர முனிவர் இதில் மூழ்கி மச்சகந்தியால் உண்டான துன்பத்தைப்போக்கி இன்புற்றார்.

சோமதீர்த்தம் : கனகதீர்த்தத்தில் மூழ்கிக் கயரோகம் ஒழிந்த சந்திரனால் உண்டாக்கப்பட்டது. இதில் நீராடின் பஞ்சமாபாதகங்கள் நீங்கும். வேறொரு சோமதீர்த்தமும் உண்டு. இதுவும் சந்திரனால் உண்டாக்கப் பட்டது. இதில் நீராடித் தன்னைப்பற்றிய பெரும்பாவமொன்றைச் சந்திரன் போக்கிக்கொண்டான்.

உருத்திரதீர்த்தம் : மீன் வடிவமுற்ற கோடி உருத்திரர் இத்தீர்த்த சம்பந்தத்தால் சாபம்நீங்கிப் பண்டைய வடிவமுற்றுச் சிவபெருமானுக்கு அணுக்கராயினர். காத்தியாயன முனிவர் கட்டளைப்படி திட்டகேது என்னும் அரசன் தன் புதல்வனுக்கு நேர்ந்த கண்டமாலை என்னும் நோய் இத் தீர்த்த ஸ்நானத்தால் நீங்கப்பெற்றான்.

பதுமதீர்த்தம் : இத்தீர்த்தத்திலே முன்பு நீராடிய புண்ணியத்தால் மகாபலி மூவுலகையும் ஆட்சிபுரிந்தான்.

பாண்டவ தீர்த்தங்கள் : கண்ணபிரானுடைய கட்டளையை மேற்கொண்டு பாண்டவர் இத்தலத்தை அடைந்து தனித்தனியே தீர்த்தங்களை உண்டாக்கி அவைகளில் மூழ்கி இறைவரை வழிபட்டு இழந்த செல்வங்களைப் பெற்றனர்.

இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலகர் தீர்த்தங்கள் : இவைகளில் நீராடி இறைவரை வழிபட்டுப் பேறுபெற்றோர் பலர்.

கிருஷ்ணகூபம் : கிருஷ்ணனால் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்தற்பொருட்டு உண்டாக்கப்பெற்றது. மகாபலி செய்த தானத்தைத் தடுத்தமையால் இழந்த தமது கண்ணை இதில் நீராடி அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் பெற்றனர். அட்டமி திதியில் இதில் நீராடுதல் விசேடம்.

கங்காகூபம் : குமாரக்கடவுள் வசிட்டர் முதலிய பல முனிவர்களுடன் இத்தலத்தையடைந்து சுவாமியைத் தரிசிப்பித்து, 'பெருமானுக்கு அபிஷேகம் செய்தற்பொருட்டும் யாவரும் நீராடி உய்தற்பொருட்டும் இத்தலத்தில் இருப்பாயாக' எனக் கங்கைக்குக் கட்டளையிட இங்கே கூப வடிவாய் மூலத்தானத்திற்கு ஈசானதிக்கில் அமர்ந்தனள் என்பது வரலாறு. இவ்விடத்தில் பிதிர் தருப்பணம்செய்யின் பிதிர்தினங்கள் தொண்ணூற்றாறினும் காசியில் தருப்பணம் செய்ததாகப் பாவித்துப் பிதிர்க்கள் மகிழ்வர்.

ஏனைய தீர்த்தங்கள் : கருடதீர்த்தம், வசுதீர்த்தம், சூரியதீர்த்தம், மருத்துக்கள் தீர்த்தம், நரசிங்க தீர்த்தம், நந்திதீர்த்தம், துரோண தீர்த்தம், இராகவகூபம், சுரதீர்த்தம், முனிதீர்த்தம், கச்சபதீர்த்தம், கௌதமதீர்த்தம், கல்யாணதீர்த்தம் என்பன.

கல்யாணதீர்த்தம்: எல்லாத் தீர்த்தங்களிலும் இது மேலானது என்று சொல்லப்படுகிறது. காவிரியின் தென்புறத்தில் உள்ள ஒரு துறை இதுவாம். இதற்குப் பூசத்தீர்த்தம் என்றும் பெயர் உண்டு. இத்தீர்த்தத்திலே மூழ்கிப் பேறு பெற்றோர் பலர். அவருட் சிலர் வருமாறு : கார்க்கோடகன், நளன், பலராமர், பகீரதன், ஒரு கொடியோன், விதேகநாட்டில் காபிலம் என்னும் ஊரில் உள்ள ஒரு பிராமணன், ஆதிசேடன், குமாரக்கடவுள், ஐராவதம் என்போர்.

பிரதக்கிணப்பேறு : அசுவமேதப்பிரகாரம் என்பது திருக்கோயிலின் வெளிமதிலினுள்ளாக விளங்குவது. இதில் வலம்வந்து பேறுபெற்றோர் யுவனாசுவன், மாந்தாதா, வசுமான் முதலியோர்.

கொடுமுடிப் பிரகாரம்: இஃது அசுவமேதப் பிரதக்கிணத்திற்கு உள்ளே உள்ளது. சிவபெருமான் கட்டளைப்படி வரகுணபாண்டியரால் கட்டுவிக்கப்பெற்றது. இதனை வலம்வருதல் கயிலைமலையை வலம்வருதலோடொக்கும்.

பிரணவப்பிரகாரம்: கொடுமுடிப்பிரகாரத்துக்கு உள்ளே உள்ளது. இப்போதும் இதில் நாதம் உண்டாகும்.

ஆகமம்: காமிகாகமம்.

இந்நூலில் வந்துள்ள வடசொற்களும், தொடர்களும்: சொன்னம், சிதம், தசதினம், இதம், மதி, ஓதனம், திவ்வியம், பஞ்சகவ்வியம், விம்மிதம், நளினம், நிபம், கனகம், ஏமம், தவனன், வனசம், துருவை, சிரகிரி, பிரமகத்தி, மித்திரன், தரணி, பனவன், காந்தன், மான்மியம், வனிதை, கஞ்சம், பரிமகம், சடிலம், சலந்தரன், சரணமுண்டகம், புவனம், சதுர்முகம், வசிகரதிலகம், பந்தித்து, பவனி, மகுடம், கவசம், வனிதை, மகரகுண்டலம், விதி, அச்சுதர், சுதர், பூசுரன், சூதம், தண்டுலாதி, கயாசிராத்தம், பவம், இருது, வசந்தம், மது, பரபதம், தீர்த்தம், நிட்டை, கஞ்சனம், சலசம், படம், வாதனம், பங்கயம், கந்தரம், அந்தரம், சொர்க்கம், பயோதரம், தனம், பதக்கிணம், சிவநிசி, விக்கினேசுரன், அயிராவதம், சலதி, வருடம், சந்ததம், பன்னகம், வடுகேசன், பகீரதன், தபோதனர், மகராலயம், சித்தர், சாரணர், உரகர், கந்தருவர், அட்டாங்கம், இதரேதரம், உடுபதி, கரசரோருகம், மீனகேதனன், இடபம், பூரணை, துங்கபத்திரை, அந்தர்வாகினி, சங்கரன், பரிவர்த்தனை, திகாந்தம், அரவிந்தம், சவலம், அருணம், தாரு, மேதி, வாசவன், பற்குனன், பாவகன், தம்பனம், நிமலன், துரங்கம், கேசவன், நிதிபதி, கண்டாகர்ணன், சுகந்தம், அருத்தம், வாசுதேவன், விப்பிரன், கிராதன், அனிலன், சமீரணன், தீர்க்கம், முரகாரி, அரி, கச்சபம், இரசதம், அத்தநாரீசன், காமதகனம், பூருவம், உத்தரம், வாருணம், இராகவன், சேடன், மகிதலம், அகிலலோகம், விசயம், வச்சிரம், அனுதினம், விசேடம், நிருபன், நைமிசம், பலபத்திரன், கல்யாணதீர்த்தம், நியமம், நரபதி, அகமருடணம், ஓமம், துவசம், குரகதம், துவாதசாந்தம், பாதசேகரன், சத்திரம், ஆடகம், அனங்கன், சலசபவத்திறன், கணுதிபர், விதுமுகம், விதுவதனம், திலம், அகோரமூர்த்தி, சரணபங்கயம், மந்தராசலம், உற்பலம், நயனம், மந்தமாருதம், மகவான், துரங்கம், சுவேதம், உரகம், பங்கயானனம், இந்திரசாலம், சகளநிஷ்களம், சலசரம், தினகரர், நிற்குணம், தம்பிதம், சினகரம், கும்பசம்பவன், அனந்தரம், வேதநாதம், திக்கயம், பிரேதபிதிரர், தேவபிதிரர், நந்தநந்தனன், அசுவத்தம், அக்கினிட்டோமம் முதலியன.

முனிவர்கள்: விபண்டகர், நாரதர், சூதர், சாபாலி, வசிட்டர், உரோமசர், காசிபர், மார்க்கண்டேயர், கபிலர், மலையமுனி, பரத்துவாசர்,

கௌதமர், சதுகர்ணர், மாண்டவி, துருவாசர், பிப்பிலர், காத்தியாயனர், ததிசி, சதானந்தர், சித்தர், கண்ணுவர், அத்திரி, திரிசடி, உபமன்னியு, வியாக்கிரபாதர், பதஞ்சலி, கவேரன் முதலியோர்.

அரசர்கள் : மாந்தாதா, வசு, யுவனாசுவன், வீரசேனன், பரீட்சித்து, நளன், பாண்டவர், நிமி, திட்டகேது, இட்டரோமன், சுகீர்த்தி முதலியோர்.

நாகங்கள் : கார்க்கோடகன், ஆதிசேடன்.

ஊர்கள் : உறந்தை, சத்திமுத்தம், சிரகிரி, இலங்கை, கயிலை, காசி, அருணை, காளத்தி, கூடல், புலீச்சரம், கமலை, கச்சி, சண்பகவதி, கலிங்கம், அயோத்தி, சீகாழி, திருத்தவத்துறை, ஆவினன்குடி, பரங்குன்று, பழமுதிர் சோலை, செந்தூர், ஏரகம் முதலியன.

விழாக்கள் : பங்குனிவிழா, வைகாசிவிழா, தைப்பூசவிழா முதலியன.

இத்தலத்திலே பிரதோஷந்தோறும் ஸ்ரீ மகாலிங்கமூர்த்திக்குத் தீபாராதனை செய்த பின்னரே நந்திதேவருக்குத் தீபாராதனை நடைபெறும். அன்றியும், பிரதோஷநாயகர் பிரகாரத்தில் வலமாக வந்தவுடனேயே இரண்டாங் கால பூஜையும் நடைபெற்றுவருகிறது. மழையில்லாத காலத்தில் மழை பெய்யும்பொருட்டும், அதிக மழைபெய்யுங்காலத்துத் தவிர்தற்பொருட்டும் இத்தலத்தில் சிறப்பாக வழிபாடு செய்யப்பெற்றுவருகிறது.

சில பரியாயப் பெயர்கள் : பரிமுகத்துளரி, பரிமேதம், செம்பதுமத் தாள் முதலியன.

சில சொற்கள் : புலோமிசை, ஆலயம், குதிகுதித்தல், நிற்குணம், அருணம் என்பன.

நயமுள்ள சில பகுதிகள்

பக்கம் 3 : 'மலர்வாவிக் கயல்வாவி'

,, 33 : 'பூ மணம் பெறலால்'

,, 213 : 'களங்கொள் கண்டன்'

,, 280 : 'இனையள் பூ மடந்தையானுள், நீ மாலாகி மற்றனைந்தின்புற்றுய்'

,, 286 : 'மதனை அனங்கனாக்கிய விழியினன்'

,, 290 : 'மணக்கோலஞ்செய்யும்'

,, 333 : 'மல்லிகை முகையினென்று மலரொன்று'

பக்கம் 348 : ‘ உறையூ ருறையூராம் ’

,, 355 : ‘ கண்ணுறு முனிவற் கண்ணினும் வாக்கைக் கண் ணுறு கனலி ’

,, 363 : ‘ வெற்றி வேலை நீடிது சத்தியிலை ’

‘ ஏற்றின் இயங்கிடும் ஓர் ஏற்றின் ஏற்றி ’

பழமொழிகள்

பக்கம் 324 : கற்றுளோர்களை இகழ்ந்துரை கயவர்தம் திருவின்

,, 345 ; இருநிதியுளதேல் யார்க்கும் எண்ணிய முடியும்

,, 353 ; பணிவாய் கொண்டிடு தேரை

,, 371 : நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது, பேய்கோட்பட்ட பைத்தியர் கள்ளும் குடித்தாற் போல என்பன போன்றன.

இம்மருதவனப்புராணம் காப்பிய இலக்கணங்கள் செவ்வே அமையப் பெற்று விளங்குவது. கடவுள்வாழ்த்து, அவையடக்கம், திருநாட்டுச்சிறப்பு, திருநகரச்சிறப்பு, நைமிசாரணியச் சிறப்பு முதலிய உறுப்புக்கள் முன்னே அமையத் தலவிசேடச் சருக்கம் முதலாக ஐம்பத்திரண்டு சருக்கங்களைப் பெற்று விளங்குகிறது. இதன் செய்யுட்டொகை 1384. செய்யுட்கள் எளிய நடையில் அமைந்துள்ளன ; சொல்லணிகளும் விரவிப் பொருட்சிறப்புப் பெற்று விளங்கக் காணலாம். தற்குறிப்பேற்றம், உவமை, உருவகம், மடக்கு, வேற்றுப்பொருள் வைப்பு, இல்பொருளுவமை, சிலேடை முதலிய அணிநலங்கள் பெரிதும் இதில் பயின்றுள்ளன. அகப்பொருட் செய்தி களும் புறப்பொருட் செய்திகளும் அங்கங்கே காணப்படுவன. சைவ சமயத்துக்குரிய பல பரிபாஷைகள் சொல்லப்பட்டுள. தம்மைத்தாமருச் சித்த சருக்கத்தில் சிவபூசாவிதி சுருக்கமாகச் சொல்லப்பட்டது. பூமடந்தை யானுள், பூமணம் பெறலால், வில்லின் அம்புருவ, தென்மலையின் வடமலை உற்று, கமல மலரினை வனத்தி னகற்றிய பதம், நீடுறு துதிக்கையோன் முதலிய தொடர்கள் சமத்காரமாக அமைக்கப்பட்டுள்ளன. இவருடைய தமிழ்நூற் பயிற்சி, சங்கநூல்கள் தேவார திருவாசகங்கள் பெரியபுராணம் கந்தபுராணம் முதலியவற்றிலுள்ள சொற்களையும் சொற்றொடர்களையும் அங்கங்கே எடுத் துக் குழைத்தமைத்தலான் விளங்கும். ஆழ்ந்த கருத்துக்களை எளிய இனிய நடையில் அமைத்துச் சுவைபெறக் காட்டியிருத்தலின் கவித்திறன் வெளி யாம். அவ்வச் சருக்கச் செய்யுட்களின் குறிப்புரையில் அங்கங்கேயுள்ள நலங்களையெல்லாம் விளங்கக் காட்டியிருத்தலின் அவற்றை மீண்டும் இம் முகவுரையிலே விரித்தெழுத விரும்பிலேன்.

## இத்தல சம்பந்தமாகவுள்ள ஏனைய நூல்கள்

தேவாரத் திருப்பதிகங்கள் ;

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பதிகங்கள் 6
திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகங்கள் 5
சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம் 1

திருவாசகப் பகுதிகள் :

திருவேசறவு 9 ஆம் பாடல்
திருப்பொன்னூசல் 2 ஆம் பாடல்
திருப்பூவல்லி 2 ஆம் பாடல்
திருக்கோவையார் 'குன்றங்கிடையும்' என்ற பாடல்

திருவிசைப்பா :

கருவூர்த்தேவர் அருளிய பதிகம் 1

பதினொராந்திருமுறை :

திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
(பட்டினத்துப்பிள்ளையார் அருளியது)

பெரியபுராணம் :

'ஓங்கு திருப்பதிகம்' 'அடியவர்கள்' 'பரவுறுசெந் தமிழ்ப்பதிகம்'
என்ற திருப்பாடல்கள்.

அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாடல்கள் 4
க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்ப் பாடல் 1
திருவிடைமருதூர்க் கலம்பகம்
(எவ்வுளூர் - ஸ்ரீ இராமசாமிச் செட்டியாரவர்கள் இயற்றியது)

திருவிடைமருதூர் உலா
திருவிடைமருதூர்த் திரிபந்தாதி
மருதவாணர் தோத்திரப் பதிகம்
(மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றியன)

திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

(ஆதீனவித்துவசிகாமணி - ஸ்ரீ சபாபதிநாவலரவர்கள் இயற்றியது)

நொண்டிநாடகம்

(ஸ்ரீ அநந்தபாரதி இயற்றியது)

இத்தலத்துக்கு வேறொரு புராணமும் உள்ளது. அது 'பழைய திருவிடைமருதூர்ப் புராணம்' என வழங்கப்படும். அதன் செய்யுட்டொகை மூவாயிரத்தின் மிக்கது; அது அச்சாகவில்லை.

வடமொழியிலே தத்துவங்களை விளக்கும் சிறு நூல்களுள் **மத்தியார்ஜுன தீபிகை** என்பதும் ஒன்று.

மருதவனப்புராணம் மூலம்மட்டும் 1896-ம் ஆண்டு அச்சிடப்பட்ட பிரதி ஒன்று 1931-ம் ஆண்டிலே பேரளத்தைச்சார்ந்த உக்கடை மிராசுதாரர் ஸ்ரீ முத்துவேலுப் பிள்ளையவர்களால் கிடைக்கப்பெற்றேன். அதன் பின்பு, அடியேன் திருவாவடுதுறை ஆதீனத்திலே பணியையேற்றுக்கொண்டு, ஆதீனத்திலுள்ள கல்விக்களஞ்சியமாகிய சரசுவதிமகால் நூல்நிலையத்தில் ஆராய்ந்தகாலத்து ஸ்ரீ சுந்தரலிங்கத் தம்பிரான் சுவாமிகள் திருக்கரத்தால் எழுதியுள்ள காகிதக் கையெழுத்துப் பிரதி ஒன்று கிடைத்தது. இவ்விரண்டனையும் வைத்து ஆராய்ந்தகாலத்துப் பல திருத்தங்கள் கிடைத்தன. அதனை அச்சிடுதற்குத் தக்கமுறையில் எழுதிமுடித்துக் **குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகளிடம்** விண்ணப்பித்தேன். இவ்வரிய புராணத்திற்கு நல்ல குறிப்புரையொன்று எழுதிக் கதைச்சுருக்கமும் அவ்வச்சருக்கத்தின்முன் சேர்த்தால் மிக நலம்தரும் என, குருமகாசந்நிதானம் ஆசியுடன் அருள்மொழி அருளினார்கள். அவ்வாறே குருவருளையும், ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி திருவருளையும் மனத்தகத்திருத்தி என் அறிவு சென்ற அளவில் ஒருவாறு குறிப்புரையும் கதைச்சுருக்கமும் எழுதி இந்த நூலை இம்மட்டில் அச்சிட்டு முடித்தேன். இதன் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பு அகராதியொன்றும் இணைக்கப்பட்டுள்ளது.

இத்தல சம்பந்தமான திருவருட்பணிகளையெல்லாம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் கட்டளைப்படி குறிப்பறிந்து முடித்துப் பெரும்புகழை யுண்டுபண்ணும் இத்தேவஸ்தான நிர்வாகத்திலுள்ள அனைவரும் இத்தல புராணம் வெளிவரும் விஷயத்தில் அடிக்கடி என்னையூக்கி நிறைவேற்றினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இப்புராணச் செய்யுட் காகிதப் பிரதியை வழக்கம்போலவே உடனிருந்து அச்சிடுதற்குத் தக்கமுறையில் எழுதியுதவிய என் மாணவர் செல்வச் சிரஞ்சீவி R. இராமசேஷையர், B. A., B. Ed., அவர்கட்கும், இப்பதிப்பு

நடைபெறுங்காலத்துப் புரூப் திருத்தம், நல்ல அமைப்புமுறை, செய்யுள் முதற்குறிப்பு அகராதித் தொகுப்பு முதலிய பலவகையான உதவிகளை அன்புடன் செய்த வித்துவான் திரு. M. ஆறுமுகதேசிகர் அவர்கட்கும், சிறந்தமுறையிலே என் கருத்தின்படி இந்நூலை அச்சிட்டுத்தந்த திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகத்தாருக்கும் எல்லாம்வல்ல ஸ்ரீ மகாலிங்கசுவாமி எல்லா நலங்களையும் தந்து அருள்புரிய வேண்டுகிறேன்.

பெரியோர்கள் செய்யவேண்டிய பெரும் பணியாகிய இதனைக் குருவருள் எளியேனைக்கொண்டு முற்றுவித்தது. குற்றமுளதாயின் உலகம் பொறுத்தருள்க.

இங்ஙனம்

*சித்தாந்த சைவமணி —*

**த. ச. மீனுட்சிசுந்தரம்பிள்ளை,**

ஆதீனவித்துவான்.

*திருவாவடுதுறை,*
*30—12—64.*

# நூலாசிரியர் வரலாறு

'மருதவனப்புராண'மாகிய இதனை இயற்றியவர்கள் கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் அவர்கள். இது திருவிடைமருதூர்ப் புராணம் எனவும் வழங்கும். கொட்டையூர் ஒரு சிவத்தலம். அது கும்பகோணத் திற்கு அருகில் வடபால் உள்ளது. தேவாரம்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த 'திருவலஞ்சுழியும் கொட்டையூரும்' என்னும் தலைப்பில் 'திருத்தாண்டகம்' ஒரு திருப்பதிகம் உள்ளது. கொட்டையூர், ஏரண்டபுரம், கோடீச்சுரம் என நூல்களில் வழங்கும். இவர் பரம்பரை யினர் சற்றேறக்குறைய முந்நூறுஆண்டுகளாக அவ்வூரில் இருந்துவந்தனர் என்பது செவிவழிச் செய்தியாகும். பரம்பரைச் சைவாசாரிய மரபினர், அருணிறைந்த கோத்திரத்தினர். இவர் தந்தையார் தண்டபாணிதேசிகர். கொட்டையூரின் தென்பாலுள்ள திருச்சத்திமுற்றத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் திருநாமம் ஸ்ரீ சிவக் கொழுந்தீசர் என்பதாம். அப்பெருமான் திருநாமத்தையே இவருக்கு இவர் பெற்றோர்கள் இட்டு வழங்கினர்.

சிவக்கொழுந்துதேசிகர் தம் இளமைப் பருவத்திலேயே தக்கவர்க ளிடம் முறையாகத் தமிழ்க்கல்வி பயின்று நல்ல பெரும்புலமை பெற்றார். ஆயினும், இவர் இன்னார் இன்னாரிடம் பாடங்கேட்டுச் சிறந்தார் என்பது இப்போது அறிந்துகொள்வதற்கில்லை. எனினும், இலக்கணவிளக்க நூலா சிரியராகிய ஸ்ரீ வைத்தியநாததேசிகருடைய பரம்பரையினரும் தமிழ்ப் புலமை பெற்றவரும் திருவாரூரிலே இருந்தவருமாகிய ஒரு பெரியவரிடத் தில் இவர் பாடங்கேட்டார் என அறிந்தோர் சொல்லுவர்.

பிறந்த ஊராகிய கொட்டையூரில் இவருக்கு வாழ்க்கையை நடத்துவ தற்குப் போதிய நிலபுலங்களும் வீடும் இருந்தன. ஆதலால், காவிரி முழுக்கும் சிவபூஜை சிவதரிசனங்களும் செய்துகொண்டு மன அமைதியாக நூல்களை ஆராய்ந்தும் படித்தும் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டும் இவர் இன்பமாகக் காலங்கழித்துவந்தார். கல்வியிற்சிறந்தவர் என்னும் புகழ் எங்கும் பரவியது. இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர்.

அக்காலத்தில் தஞ்சையில் இருந்த சரபோஜி மன்னர் (1798-1832) புதிதாக ஒரு புத்தகசாலையை அமைத்து, அதில் பற்பல மொழிகளிலும் உள்ள பலவகையான நூல்களையும் தொகுத்தார். பல வித்துவான்களை வருவித்துத் தக்க பொருளுதவி செய்து ஆதரித்து, அவர்களைக்கொண்டு புதிய நூல்களைச் செய்வித்தும் வந்தார். அம்மன்னர் இவரைப்பற்றிக் கேள்வியுற்று, இவரையும் வருவித்து, இவருடைய முத்தமிழ்ப் புலமையைத் தக்கவர்களால் அறிந்து, தம் அரண்மனை வித்துவானாக அமர்த்திக் கொண்டார். பலவகையான தமிழ்நூல் ஏட்டுப்பிரதிகளையெல்லாம் தக்க விலை கொடுத்து வாங்கித் தொகுப்பித்தார். சரபேந்திரர் வைத்திய முறைகள் (403 செய்யுட்கள்), சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள் (360 செய்யுட்கள்), சரபேந்திரர் வைத்தியம் (362 செய்யுட்கள்) என்ற இம்மூன்று நூல்களும் சரபோஜி மன்னருடைய விருப்பத்தின்படி அனுபவ வைத்திய முறைகளை அறிந்து தமிழ்ச் செய்யுள் வடிவத்தில் இவரால் அமைக்கப்பெற்றன. அவற்றுள், சன்னிரோக சிகிச்சைகள் என்னும் நூல் எழுதிய சுவடியில் உள்ள குறிப்பினால் அந்த நூல் கி. பி. 1826-ல் இவரால் இயற்றப்பெற்றதென்று தெரிகிறது.

'அக்காலத்தில் இவருடன் அங்கே இருந்த தமிழ்ப் புலவர்கள் காரைக்குறிச்சி - வேல்ாயுத உபாத்தியாயர், திருவேங்கடத்தா பிள்ளை, சுப்பராயக் கவிராயர், வேங்கடாசலம் பிள்ளை முதலியோர்.'

'இவர் 90-ம் பிராயம்வரையில் இருந்தனர் என்பர். இவருக்கு மனைவிமார் இருவர்; குமாரர்கள் இருவர்; குமாரிகள் ஐவர். முதல் மனைவியார் குமாரர் ஸ்ரீ வடுகநாத தேசிகர் என்பவர். அவர் வடமொழி தென்மொழிகளில் நல்ல பயிற்சியுடையவர். இரண்டாம் மனைவியாரின் புதல்வர் ஸ்ரீ சாமிநாத தேசிகர். அவர் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் - ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடங்கேட்டுச் சிறந்த தமிழ்ப் புலமை வாய்ந்து, கி. பி. 1864-ல் கும்பகோணம் காலேஜிலும் அதன்பின் திருவனந்தபுரம் மகாராஜா காலேஜிலும் தமிழ்ப்பண்டிதர் வேலை பார்த்துப் பின் உபகாரச் சம்பளம் பெற்றார்.'

'பல ஆண்டுகளுக்கு முன்பு சென்னையில் துரைத்தனத்தார் ஒரு கல்விச்சங்கம் அமைத்து, பல வித்துவான்களை வருவித்துப் பல நூல்களை இயற்றுவித்தும், பழைய நூல்களை ஆராய்ந்து பதிப்பித்தும், பலருக்குப் பாடம் சொல்வித்தும் வந்தார்கள். அக்கல்விச் சங்கத்தில் தலைமைத் தமிழாசிரியராயிருந்துவந்த வித்துவான் ஸ்ரீ தாண்டவராய முதலியாருக்கு உடனிருந்து உதவிசெய்து நல்ல மதிப்புப் பெற்றிருந்தார். திருவாசகம் இவரால் அக்காலத்து முதல்முறை அச்சிடப்பட்டது.'

## இவர் இயற்றிய நூல்கள்

1. மருதவனப் புராணம் — *1384* செய்யுட்களை உடையது; இது சரபோஜி மன்னர் விருப்பத்தின்படி இயற்றப்பெற்றது. 2. ஆச்சாபுரமென வழங்கும் திருப்பெருமணநல்லூர்ப் புராணம் - *533* செய்யுட்களையுடையது; இது இளமைப்பருவத்திலே செய்யப்பட்டிருத்தல் வேண்டுமென அந்தச் செய்யுள் நடைமுதலியவற்றால் ஊகிக்கப்படுகிறது. 3. கோடீச்சுரக்கோவை, 4. தஞ்சைப் பெருவுடையார் உலா, 5. ஸ்ரீ சரபேந்திரபூபாலக் குறவஞ்சி, 6. ஸ்ரீ சரபேந்திரர் வைத்தியமுறைகள், 7. ஸ்ரீ சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள், 8. ஸ்ரீ சரபேந்திரர் வைத்தியம் என்பன.

கொட்டையூருக்கு ஒருலா இவரால் இயற்றப்பெற்றதென்பர்; அது கிடைக்கவில்லை. தாம் பிறந்த தலத்தினிடத்து இவருக்குள்ள அன்பு அத்தலத்திற்கு ஒரு கோவையும் ஒருலாவும் பாடினமையால் புலப்படும்.

சென்னையிலிருந்த புரசை அட்டாவதானம் ஸ்ரீ சபாபதி முதலியார் இவருடைய சம்பாஷணையால் உண்டாகும் இன்பத்தைப்பற்றிப் பாராட்டிச் சொல்லுவாராம்.

---

குறிப்பு: இவ்வரலாறு மகாமகோபாத்தியாய பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் பதித்த கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள் என்னும் புத்தகத்தில் ஐயரவர்களால் எழுதப்பட்ட வரலாற்றினின்று தொகுத்தெழுதப்பட்டது.

# சருக்க அகராதி



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்துதேசிகர்

இயற்றிய

# மருதவனப்புராணம்

---

## பாயிரம்

காப்பு

### ஆண்டவிநாயகர்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உலகமுணர்ந் திடுகருணை யதனெடுநெஞ்
 சகமதில்நீ டுவகை யெய்தி
அலகில்புக ழுறுகவிகை நிழலதின்மெய்
 யன்பர்குல மதனைக் காக்கக்
குலவுமுப நிடதவரி யணைமீது
 பரசெழிற்செங் கோல்கைக் கொண்டாங்
கிலகுமிடை மருதாண்ட விநாயகனை
 எப்பொழுது மிறைஞ்சி வாழ்வாம். 1

---

1. உவகை - மகிழ்ச்சி. அலகு இல் - அளவில்லாத. கவிகை - குடை. மெய்யன்பர்குலம் - உண்மையடியார்கூட்டம். உபநிடதமாகிய அரியணை என்க: அரியணை - சிங்காதனம். பரசு எழில் செங்கோல் - பரசாகிய அழகிய செங்கோல். பரசு - ஆயுதம்; யாவரானும் துதிக்கப்பெற்ற எனினும் ஆம். இடைமருது ஆண்டவிநாயகன்: இத்தல விநாயகக் கடவுளின் திருநாமம் ஆண்டவிநாயகர் என்பது.

## *வாழ்த்து*

வேறு

பூவுல கிதனு ளெங்கும் புகழுறு சுருதி வேள்வி
மேவுமா கமநன் னூல்கள் விளங்குக வளங்கள் நீடு
பாவுக மதிக்கோர் மூன்று பயின்மழை பொழிக நாளும்
காவிரி வருக வாரி காவலன் செங்கோல் வாழ்க. 2

## *நூற்பயன்*

வேறு

போற்றலுறு மருதவனப் புராண மென்னப்
புகலிதனைப் படிப்பவர்கள் கேட்போ ரியாரும்
மாற்றரிய வினையினெடு பகையை வென்று
மன்னுநெடுஞ் செல்வமொடு மகவு மெய்தித்
தேற்றலுறு புவியினிடை நீடு வாழ்ந்து
திகழுறுவிண் ணுலகில்வள ரின்பம் துய்த்துச்
சாற்றரிய பரஞானம் மருவி யீசன்
சரணபங் கயநிழல்வீற் றிருப்பர் மன்னே. 3

---

2. சுருதி வேள்வி - வேதங்களும் வேதத்தில் விதிக்கப்பட்ட யாகங்களும்: உம்மைத்தொகை. ''மல்குக வேதவேள்வி'' (பரஞ்சோதி திருவிளையாடல்); ''வேத வேள்வியை நிந்தனை செய்துழல்'' (திருஞான - தேவாரம்). ஆகம நல் நூல்கள் - ஆகமமும் நல்ல நூல்களும். ஆகமம் இருபத்தெட்டு. ஆகமமாகிய நல்ல நூல்கள் எனினும் ஆம். பாவுக - பரவுவதாகுக. மதிக்கு - மாதத்துக்கு. மதிக்கு ஓர் மூன்று பயில் மழை - மாதமும்மாரி. வாரி - நீர்.

3. மாற்ற அரிய - போக்குதற்கு அருமையான. மன்னுநெடு செல்வம் - நிலைபெற்ற மிக்க செல்வம்: அறத்தாற்றின் ஈட்டப்படுதலால் செல்வம் நிலைபெறும், பெருக்கமடையும். தேற்றல் உறு - தெளிவு பொருந்திய. துய்த்து - அநுபவித்து. பரஞானம் - மேலாகிய சிவஞானம். சரணபங்கயம் - திருவடித்தாமரைகள்.

# கடவுள்வாழ்த்து

## மகாலிங்கேசர்

பூமேவு திசைமுகன்மா லெனுமவரும் போற்றரிதாய்ப் பொருவி லாதாய்
நாமேவு செழுமறையி னுட்பொருளாய் அகண்டிதமாய் நளின மென்னும்
மாமேவு மலர்வாவிக் கயல்வாவிக் கனியுதிர்க்கும் வளத்தி னீடு
தேமேவு பொழில்புடைசூ ழிடைமருதின் வளரொளியைச் சிந்தை செய்வாம். 4

## ஏகநாயகர்

தேறுபுக ழிடைமருதி லுறையேக நாயகன்றன் செய்ய தாளும்
ஊறுமது மலர்க்கூந்தற் பசியமயி லுறையிடமு மோங்கு கங்கை
ஆறிலகு சடைமுடியு மைம்முகமு நாற்றோளு மணிமுக் கண்ணும்
கூறுதிற லிருமானு மொருமழுவும் அனவரதங் குறித்து வாழ்வாம். 5

## மருதவாணர்

ஒருதவள மால்விடைமேல் புகலவுறும் ஒருசிருட்டி யுதய நீ தன்னில்
பொருதனிவான் சிலைநுதல்வேற் றடங்கணுமை அணங்கினெடு புவன முய்யக்
கருதிமையோர் கணம்புடைசூழ் கயிலையினின் றணைந்தனைய கயிலை யென்னும்
மருதநிழ லிடத்துறையு மருதவா ணக்கடவுள் மலர்த்தாள் போற்றி. 6

## பெருநலமாமுலையம்மை

பொன்னிலகு பனிவரைக்கண் முளைத்தருள்வண்
தளிர்குழைத்துப் பொற்பி னோங்கிப்
பன்னுமிள மதிச்சடிலப் பவளமலை
யிடத்தினிது படர்ந்து மேன்மை

---

4. திசைமுகன் - பிரமதேவர். மால் - விஷ்ணுமூர்த்தி. பொருவிலாதாய் - ஒப்பபற்றதாய். மறை - வேதம். அகண்டிதம் - கண்டிக்கப்படாதது. நளினம் - தாமரை. மாமேவும் - திருமகள்தங்கும். மலர்வாவி - மலர்களை யுடைய குளம். கயல் வாவி - கயல்மீன்கள் தாவிச்சென்று. இடைமருதின் வளர்ஒளி - ஜோதிர்மகாலிங்கேசர்.

5. ஏகநாயகன் : இத்தலத்தில் உள்ள சோமாஸ்கந்தமூர்த்தி. பசிய மயில் - பச்சைமயில் போலும் உமாதேவியார். அனவரதம் - எப்போதும். குறித்து - தியானித்து. கங்கையாறு, ஐம்முகம், நாற்றோள், முக்கண், இருமான், ஒருமழு என்பன எண்ணலங்காரம்பட நின்றது.

6. தவளம் - வெண்மை. மால் விடைமேல் - பெரிய இடப ஊர்தியின் மேல்; திருமாலாகிய விடை எனினுமாம். சிலை நுதல் - வில்போலும் புருவம்: நுதல் - புருவம், நெற்றி.

என்னுமுகை முகிழ்த்துவகை பூத்துமணா ந்
திடைமருதி லிமையோர் போற்ற
மன்னுபுகழ் பெருநலமா முலையெனச்சொல்
பசுங்கொடியை வணங்கு வாமால். 7

### *வயிரவர்*

வேறு

மேலையோர் கற்பத் திறுதியிற் கதிர்கண் மேவுடுக் கணங்கள்கீ ழுறத்தீம்
பாலையொத் திடுசங் கீன்றமுத் தினங்கள் பரந்திடப் புவியிடத் தெழுந்த
வேலையின் மிதந்த புகலியந் தோணி விளங்கிடு வடுகனுங் கடவுள்
காலைமென் போதை யுச்சியிற் கொள்வாம் கடுந்துயர் மாலைதீர்ந் திடவே. 8

### *படித்துறை விநாயகர்*

வடித்துறைவே லனகருங்கட் பாவையர்க
ளொடுமருதம் வயங்கு வாள்விற்
பிடித்துறைநன் களிக்குமுகி லுலவுமலர்ப்
பொழிலினிடைப் பெருகு செந்தேன்
குடித்துறைவண் டினங்களுமோ திடைமருதின்
மருதீசர் கோயின் மேவு
படித்துறைக்குஞ் சரத்தின்மலர்ப் பதத்துணையை
மனத்துணையாப் பதித்து வாழ்வாம். 9

---

7. பனிவரை - இமயமலை. அருள் வண் தளிர் - அருளாகிய தளிர் என்க. குழைத்து - தழைத்து. சடிலம் - சடை. முகை - அரும்பு. முகிழ்த்து - அரும்பி. ஒரு பசுங்கொடி முளைத்து, குழைத்து, ஓங்கிப் படர்ந்து, முகிழ்த்து, பூத்து, மணந்து மன்னும் எனக் கூட்டுக. உருவக அணி.

8. கதிர்கள் - சூரிய சந்திரர். உடுக்கணம் - விண்மீன்கூட்டம். கால் ஐ மென் போது - திருவடிகளாகிய அழகிய மென்மையான (தாமரை) மலர்கள். உச்சி - தலை. மாலை - வரிசை. துயராகிய வரிசை. காலை உச்சி மாலை எனப் பொழுதுவரக் கூறியது ஒருநயம். வடுகன் - வைரவக்கடவுள்.

9. வடித்து - கூர்மையாகச்செய்து. வடித்து உறு ஐ வேல் அ(ன்)ன. வாள் வில் பிடித்து - ஒளிபொருந்திய இந்திரதனுசைக் கைக்கொண்டு. உறை - மழை நீர். பதத்துணை - திருவடிகள் இரண்டினையும். படித்துறைக் குஞ்சரம் - படித்துறை விநாயகர்: குஞ்சரம் - யானை.

### குமாரக்கடவுள்

சத்திதனை யனைவள்ளி காந்தனைக்கந் தனையசுரர் தம்மை வென்ற
சத்திதனை யுறுமலர்க்கைத் தலத்தனையன் போர்கடமி தயமாம் பங்க
சத்திதனை யிடைமருதூர்க் குமரனைநெஞ் சேபணியென் றன்பான்மன்னே
சத்திதனை யவனுகந்தின் னருளெனக்குத் தருமஃதுன் சகாய மாமால். 10

### திருநந்திதேவர்

முழுதுலகு நிறைபிரமம் பரமனே
 யெனமறைகள் மொழியுந் தன்மை
வழுதியின்பால் முதுகிலடி படுபொழுதிற்
 கண்டிருந்து மயங்கு வோர்க்குக்
குழுவுறுமால் விரிஞ்சன்முதல் வானவர்மேல்
 கைப்பிரம்பு கொண்டு தாக்கிச்
செழுமணித்தண் கயிலையின்பாற் றெளிவிக்கு
 மவன்மலர்த்தாள் சிரத்திற் கொள்வாம். 11

### நாமகள்

எழுத்தசைசொற் பொருளுதவு மணிகளிரு
 வகைபெறுபா வினங்கள் கொண்டு
மழுத்தடக்கைக் கடவுளிடை மருதவன
 வடசொலுறு மான்மி யத்தை
வழுத்திடத்தென் தமிழதினு மினிதுபுரிந்
 திடுகவென மகிழ்ந்து வண்டின்
குழுத்தமைப்போற் றிடுதவள பங்கயத்தின்
 உறைந்திடுபூங் கோதை தானே. 12

---

10. சத்தி தனயன் - உமாதேவியாரின் புத்திரர். காந்தன் - கணவன். சத்தி - வேலாயுதம். அன்போர்கள் தம் இதயம். பங்கசத்து இதன். பங்கசம் - தாமரை. இதன் - இதம் செய்பவன். மன் நேசத்து இதனை உகந்து. சகாயம் - துணை. இச்செய்யுளில் யமகவணி அமைந்துளது.

11. வழுதி - பாண்டியன். விரிஞ்சன் - பிரமதேவன். கைப்பிரம்பு - வேத்திரப்படை. அவன் - திருநந்திதேவர்.

12. அணிகள் இருவகை - சொல்லணி பொருளணிகள்; உருவகம், உவமை அணிகள் எனினுமாம். தவளபங்கயம் - வெண்டாமரை. பூங் கோதை - நாமகள்.

### தமிழாசிரியர்

புவியினகத் திருளொதுக்கி வானெய்தி யறியவுறு பொருள்கள் காட்டிச்
சவிமருவிப் பொலிபரிதித் தமிழினிது தோன்றுகுண சயிலம் தன்னைக்
குவிதிரைத்தண் பெருங்கடலை நெடுங்கிரியை அடக்குசிறு குடங்கை யானை
நவியமெடுத் திடுபரனுக் குரியவனைப் பணிகுவதே நமக்கு வேலை. 13

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

சிவஞானக் கடலருந்திக் கருமைகொடு திசைகளெங்குந் தெரிய மின்னித்
தவரினஞ்சூழ்ந் திடவுலக முணரவிடித் தமண்கோடை தணப்ப வோங்கு
புவனமதிற் சைவநெடும் பயிர்தழைப்பப் பரங்கருணைப் பொருப்பின் மீது
கவிமழைகள் சொரிபுறவக் கவுணியக்கொண் டலைநாளும் கருத்துள்
வைப்பாம். 14

### திருநாவுக்கரசு நாயனர்

வடமருவு தென்னிழலிற் கருணைவடி
வாய்விளங்கு வரதன் போல
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோள்
மிசையேற்று விடைமேற் கொண்டு
தடமருவு தரணியிடைத் திகழ்ந்திடுவா
கீசர்பத சரோரு கத்தைத்
திடமுறுமன் பொடுதினமும் சிந்திப்போம்
துயர்களெல்லாம் சிந்திப் போமால். 15

---

13. புவி - பூமி. இருள் - அறியாமை. வான் - சிறப்பு. சவி - ஒளி. பரிதித்தமிழ் - பரிதியாகிய தமிழ். குணசயிலம் - குணமலை. நெடுங்கிரி - பெரிய விந்தியமலை. குடங்கை - உள்ளங்கை. நவியம் - பரசு. உரியவன் - அகத்தியமுனிவர். வேலை - செயல்.

14. கருமை - பெருமை. தவர் - தவசிகள், வில். தணப்ப - நீங்க. கருணைப்பொருப்பு - கருணைமலை. புறவம் - சீகாழி. கொண்டல் - மேகம். உருவக அணி.

15. வடம் - ஆல். தென் நிழல் - அழகிய நிழல். வரதன் - சிவபெருமான். விடம்பருகுதல், சூலம் ஏற்றல், விடைமேற்கொள்ளல் சிவபெருமானுக்கும், திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் கொள்க. தரணி - பூமி. வாகீசர் - திருநாவுக்கரசுசுவாமிகள். பதசரோருகம் - திருவடித்தாமரை. சிந்திப்போம் - தியானிப்போம், சிதறிப்போம். ஆல்: அசை.

### சுந்தரமூர்த்தி நாயனர்

முதலைவள ராருறு தந்திடவை யாறெய்தி முடிவி லாத
முதலைநெடுந் தமிழொடுசெந் தமிழ்க்கவிதை யாற்றுதித்து மொழியா விக்கண்
முதலையொரு மகவுதரச் செய்துகந்த முன்னேனை முகிழ்மென் கொங்கை
முதலையிதழ்ப் பரவைமணு ளனைவணங்க நமதெண்ண முற்றுந் தானே. 16

### மாணிக்கவாசக சுவாமிகள்

வந்திதனிச் சிவலோகம் பெறவழுதி பவநீங்க மனத்தி னீடார்
வந்திதனிக் கொம்மைமுலை யுமையவள்பால் வைத்தபரன் மகிழ்வி னுடல்
வந்திதம்பெற் றிடப்பல்லோர் வைகையின்பாற் கண்டிடச்செய் மறையோன்
வந்திதக வுறமனமே நந்தமைமெய் யன்பரிடை வைக்கு மன்றே. [றன்னை

### சண்டேச நாயனர்

நேசமுறு தாதைபுரி தவறுமவன் துணைப்பதமும் நீக்கி நீடு
பாசமகற் றிடுபரம பதத்திறெடு சண்டேச பதமும் பெற்றேன்
வாசமலர்ப் பதந்தனையாம் வணங்கிடுதும் அணையதனி வணக்க மாகும்
பேசரிய பேரின்ப மருவுதற்கோர் பதமென்னப் பெரிது மன்றே. 18

### பட்டினத்துப்பிள்ளையார்

விளம்புகா ரெனுமிடற்று மருதிறைவன் திருவருளின் மெய்ம்மை நோக்கிக்
களம்புகார் வின்மதன்றன் படைமகளிர் புவியாசை கருதுங் காதல்
உளம்புகா ராகிவெறுத் தணைந்தொருமும் மணிக்கோவை யுகந்து நல்கும்
வளம்புகார்ப் பட்டினத்துப் பிள்ளையெனும் பெரியவர்தாள் மனத்துள்
வைப்பாம். 19

---

16. ஆறு ஆறுதந்திட - காவிரியாறு வழிவிட. ஐயாறு - திருவையாறு என்னும் தலம். முடிவில்லாத முதல் - ஈறில்லாத சிவபெருமான். ஆவி - குளம். ஒரு மகவு-ஒப்பற்ற பிராமணச்சிறுவன். ஐ இதழ்-அழகிய அதரம். பரவைமணாளன் - பரவைநாச்சியாரின் கணவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள். முற்றும் - நிறைவெய்தும்.

17. வழுதி - பாண்டியன். பவம் - பிறப்பு. மறையோன் - மாணிக்கவாசக சுவாமிகள். மனமே தகவுற வந்தி.

18. தாதை - எச்சதத்தன். தவறு - பாற்குடத்தைக் காலால் இடறிய பிழை. நீடு பாசம் - மிக்க பற்று. பெற்றேன் - விசாரசருமர்.

19. கார் எனும் மிடறு - கரியகண்டம். கள் அம்பு உகு ஆர் வில் மதன். கள் அம்பு - தேன்பொருந்திய மலரம்புகள். உகு ஆர் வில் -

## அவையடக்கம்

சொன்ன மேருமுன் சிறியகற் குன்றமும் துலங்கும்
மன்னு மான்மதக் களிற்றின்முன் முயல்களும் வயங்கும்
பன்னு தண்கதிர்க் கடவுள்முன் னுடுக்களும் பயிலும்
என்னின் மேதையர் கவிதைமுன் னிலங்குமென் கவியும். 20

பகரு நாரெழின் மலரொடு பயில்கட வுளர்தம்
சிகர முற்றிடு திறமெனச் சிறியனேன் பனுவல்
மகர வண்குழைப் பிறைச்சடை மருதநா யகன்றன்
புகழு டன்கலந் தறிஞர்தம் செவிக்களம் புகுமால். 21

விமல ஞாயிறு சிறியனேன் விளம்பிய கவிதை
கமல நாண்முகை யறிந்தநீ டருளினோர் கருத்து
நிமிர்தன் மேவழுக் காற்றினோர் நெஞ்சக மலர்ந்த
குமுத மூடர்த முறுமனம் குறித்திடு கருங்கல். 22

நற்ற வத்தினோர் தொழுமிடை மருதிறை நாமம்
உற்ற விக்கதை யானெடுத் துரைத்திடு கின்றேன்
முற்று சீருறு தென்றமி ழிலக்கண முழுதும்
கற்று ளார்தமைப் புவியினோர் புகழ்ந்திடக் கருதி. 23

---

சிந்துதல் பொருந்தும் கரும்பு வில். மதன் - மன்மதன். காதல் - விருப்பம். மும்மணிக்கோவை என்றது திருவிடைமருதூர் மும்மணிக்கோவையை. புகார்ப்பட்டினம் - காவிரிப்பூம்பட்டினம்.

20. சொன்ன மேரு - பொன்மலையாகிய மேரு. மால் மதம் களிறு: மதம் மால் களிறு என மாறுக. தண் கதிர்க் கடவுள் - சந்திரன். உடு - விண் மீன். மேதையர் - அறிவுடையோர்.

21. மலரொடு பயிலுதலால் நாரும் கடவுளர் முடிமேல் ஏறும். சிகரம் - முடி. பனுவல் - செய்யுள்: நூலுக்கு ஆகுபெயர். குழையையும் சடையையும் உடைய மருதநாயகர் என்க. செவிக்களம்: பண்புத்தொகை.

22. கவிதை ஞாயிறு, கருத்து நாண்முகை, அழுக்காற்றினோர் நெஞ்சகம் மலர்ந்த குமுதம், மூடர்தம்மனம் கருங்கல் என்க. அழுக் காறு - பொறாமை. ஞாயிறு - சூரியன். கமல நாள் முகை - தாமரையினது (மலரும் பருவத்து) அரும்பு. குமுதம் - அல்லி.

23. இடை மருது இறை. இறை - மருதவாணர். நாமம் - பெயர். முதிர்ந்த சிறப்பினையுடைய அழகிய செந்தமிழ் இலக்கணம் முழுமையும்.

# திருநாட்டுச்சிறப்பு

கலிநிலைத்துறை

பொன்னி லத்துறை சுரர்களும் விருப்புறும் பொலிவும்
துன்னி யீசர்வாழ் பதிகளும் துதைந்திசை தரணி
தன்னி லோங்குநா டெவற்றிற்கு தலைமைய தாகிச்
சென்னி நாடெனத் திகழுறு நாட்டணி தெரிப்பாம். 1

திங்க ளொண்சுதைக் கதிரின துருவெனச் சென்று
மங்கு லின்வழித் தண்கடற் றெண்டிரை வாரி
பங்க மின்றுயர் பரிமுகத் தெரியினிற் பருகிப்
பொங்கு நள்ளிருள் வடிவுபெற் றெழுந்தன புயல்கள். 2

எழுந்த தண்புயல் இடைமரு திறையவ னிபத்தின்
முழங்கி யாங்கத னோடையின் மின்னியோர் மூன்று
செழுங்க ணுனுட னுமைதிகழ் சிறப்பின்விற் கோட்டிப்
பொழிந்த சையமேற் சுரரமு துகுத்தன போல. 3

மாலெ னப்புகல் பெயருறு மாயனும் முகிலும்
வேலை வாய்க்கடைந் தெடுத்தமு துதவினும் விளங்கு
மேலை வானவர் தமக்கரி யுதவினன் விசும்பு
ஞால மீதுறு சராசர வுயிர்க்கெலாம் நல்கும். 4

---

1. பொன்னிலம் - விண்ணுலகம். சுரர் - தேவர். துதைந்து - நெருங்கி. தரணி - பூமி. சென்னி நாடு - சிரத்தானம்போன்ற நாடு; சோழ நாடு. சென்னி - சோழன். தற்குறிப்பேற்றவணி, சென்னிநாடென்பதற்கு வேறு காரணம் கற்பித்தலின்.

2. திங்கள் - சந்திரன். சுதை - வெண்மை. கதிர் - கிரணம். மங்குல் - மேகம். வாரி - கடல்நீர். பரிமுகத்து எரி - வடவாமுகாக்கினி: பெண் குதிரை வடிவாயுள்ளது. புயல் - மேகம்.

3. இபம் - யானை. ஓடை - நெற்றிப்பட்டம். வில் கோட்டி - வில்லை வளைத்து. சையம் - சையமலை. இறையவன் இபம் - ஐராவணம்.

4. மால் - மேகம், திருமால். முகில் - மேகம். வேலை - கடல். அமுது - அமுதம், நீர். விசும்பு - ஆகாயம். அரி - திருமால்.

ஓங்கி டும்பல சிகரங்கொள் சிலம்பின்மே லுதகம்
தாங்கு தண்புயல் சொரிதரல் இராவணன் தன்மேல்
தேங்கொள் பூந்தொடைத் தசரதப் பெயரினேன் சிறுவன்
வாங்கு விற்கொடு சொரிந்திடு சரங்களை மானும். 5

துங்க வெற்பினிற் கருமுகில் சிலையொடுந் துன்னிப்
பொங்கு தீம்புனல் சொரிதரல் புரையுநீ டெழிலார்
எங்கள் காளத்தி யிடத்திலோ ரன்பன்வா யிடுநீர்
சங்க ரன்திரு முடிமிசை யுமிழ்ந்திடும் தன்மை. 6

கூறு வானிடை மிடைதரு பயோதரம் குளிர்பூ
நாறு வெற்பினீள் சுனைசொரி நறும்புனற் றுரை
தேறு வான்தனி மகவன்னை யன்னதன் செவ்வாய்
ஊறு கொங்கையிற் பீர்விடுத் தூட்டுவ தொக்கும். 7

கருவ ரைச்சிக ரத்தினின் றிடையிடை கதிர்வெள்
ளருவி யின்கண மார்ப்பரித் திழிகுவ தாங்காங்
கிருளும் வெண்ணில வுங்கறுத் தணிவகுத் திலங்கப்
பொருது வெல்வதற் கெதிரெதிர் நிற்பது பொருவும். 8

வெற்பி டத்துறு தரளங்க ளுடன்திரை வேலை
யிற்பி றங்குநித் திலங்களு மிடையிடை யிசைத்துப்
பொற்பு விண்ணெனும் வணிகனேர் நோக்குதல் புரையும்
விற்ப ரப்புநித் திலங்களோ டாலிகள் மிடைதல். 9

---

5. சிகரம் - மலையுச்சி. சிலம்பு - மலை. உதகம் - நீர். பூந்தொடை - பூமாலை. வாங்கு வில் - வளைந்த வில். சரம் - அம்பு. சிறுவன் - சீராமன். மானும் - ஒக்கும்.

6. வெற்பு - மலை. முகில் - மேகம். சிலை - வில். துன்னி - நெருங்கி. அன்பன் - கண்ணப்பநாயனர். (கந்தபுரா - ஆற்றுப் - செய் - 6)

7. மிடைதரு - நெருங்கிய. பயோதரம் - மேகம்.

8. ஆர்ப்பரித்து - ஆரவாரித்து. அருவியின்கணம் - அருவிக்கூட்டம். இழிகுவது - ஒழுகுவது. கறுத்து - கோபித்து. அணி வகுத்து - படை வகுத்து. பொருது - போர்செய்து.

9. தரளம் - முத்து. நித்திலம் - முத்து. ஆலி - ஆலங்கட்டி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அலைகொடு திரிவான் சீறி யம்புகள் துரக்கின் மாவும்
கொலைபுரி யிபமும் தேரும் குலமணி வில்லு மம்பும்
மலையெனும் பெயரும் கொண்டு வளர்சைய வேந்து வாளா
குலவுற நின்றி டுங்கொல் கோபமேற் கொண்ட தம்மா. 10

வேறு

குரவ னேதவத் தொருவனை வலுவினிற் கொண்டு
விரவு பாசநீத் தரனிடை விடுத்திடு திறத்தின்
உரவு தண்கடற் புனல்முகந் துவர்கெடுத் துலகம்
பரவ நீள்புயல் விடுத்தது பொன்னியின் பாங்கர். 11

வேறு

வாகுறு தரள மூரற் கயமுலை வண்கைக் காந்தள்
மேகமென் கூந்தற் சைய வெற்பணங் ககத்தி யன்றன்
மாகமண் டலமென் றேதும் வயிற்றினின் றுதித்த கன்னி
யாகிய பொன்னி நீத்த மருவியைத் தழீஇய தன்றே. 12

கலிவிருத்தம்

அருவி பொற்கதிர்ப் போரிழுத் தாங்கிழி
அருவி வச்சிர மீனென வார்த்தெழும்
குருவி யின்கணம் கூட்டற மந்திகள்
குருவி யன்மணி கொண்டெறிந் தோட்டுமால். 13

சிந்து வாரஞ் செறிவெதிர் நித்திலம்
சிந்து வாரத் தசோகஞ் சிதைத்துநி
வந்து வாரத் திறைஞ்சிட மண்ணுளோர்
வந்து வாரங் கடந்தது வாரியே. 14

---

10. துரக்கின் - செலுத்தினால். மா - குதிரை. இபம் - யானை. சைய வேந்து - சையமாகியவேந்து. வாளா - சும்மா. வான் - மேகம். அம்பு - நீர்.

12. மூரல் - பல். தரளம் - முத்து. கயம் - யானை. வெற்பாகிய அணங்கு: அணங்கு - தெய்வப்பெண். மா கமண்டலம் - பெருமைதங்கிய ஜலபாத்திரம். நீத்தம் - பெருக்கு. ஏகதேச உருவகவணி.

13. கணம் - கூட்டம். கூட்டு அற - கூட்டத்தினின்று நீங்க. குரு இயல் மணி - நிறம் பொருந்திய மணிகள்.

14. சிந்துவாரம் - வெண்ணொச்சி. வெதிர் நித்திலம் - மூங்கில் முத்து. நிவந்து - உயர்ந்து. வாரத்து இறைஞ்சிட - அன்போடு வணங்க.

மற்க டத்தடங் கோடு மருவுமா
மற்க டத்தடங் கோடு மருவொடு
சொற்க டத்தலர் துன்னிடு தண்புனல்
சொற்க டற்செல வென்னத் துலங்குமால். 15

மாத னந்தன் வயினுற வாய்ந்துதண்
போத னந்தன் மிசைக்கொடு போதலிற்
போத னந்தம் புரைதரு மென்பரால்
போத னந்தம் வளைபயில் பொன்னியே. 16

காம னார்திண் கரைபொரு காவிரி
காம னுமலர் கன்னல் பரித்தலின்
மாம னுக மலைவன மேவியே
மாம னுக மணாளனு மேய்க்குமால். 17

வேறு

புன்னு கம்மறு கம்பு பொருந்தலை
மன்னு வுமிழும் மதிகு டிறையைப்
புன்னு கம்மறு கம்பு பொருந்தலை
மன்னு தரவோ டேகிடு மாநீர். 18

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செல்புனல் குறிஞ்சி யிற்கொள் செறிகதிர் நேமி வாளி
வில்லுட னணைந்து முல்லை விளங்கிடங் கெவையுங் கொண்டு
மெல்லிடை மகளி ராய ரிரங்கநோய் விளைத்திட் டோடி
மல்லலம் புவனத் தோர்க்கு மறவர்பாற் பயிற்சி காட்டும். 19

---

16. மா தனம் தன் வயின் உற வாய்ந்து. போது அனம் தன்மிசை கொடு.

17. கா மன் ஆர் திண் கரை - சோலைகள் நிலைபெற்ற அரிய வலிய கரைகள். காமன் ஆம் - மன்மதனும். கன்னல் - கரும்பு. பரித்தலின் - சுமத்தலினல்.

19. நேமி - சக்கரம். வாளி - அம்பு. முல்லை விளங்கிடு அங்கு எவையும் கொண்டு. ஆயர் - இடையர். மறவர் - வேடர்.

குலவுறு புறவி னின்று கொடியிடை நுடங்க வங்கண்
இலகுவெண் டயிர்பால் வெண்ணெ யினிதுறு தாழி பற்றி
வலுவொடு தலைமேற் கொண்டு வனமுலை குலுங்கச் சென்ற
தலகில்சீர் மருத நோக்கி யாயர்த மடந்தை யென்ன. 20

இன்னலம் படரும் பொன்னி யிலங்கிடு பொழிற்பூங் கோதைக்
கன்னலென் னெழிற்ரேுட் பைம்பூ கதமிடற் றரம்பை யென்னும்
மன்னுமென் கவான்வண் டேமாந் தளிரியன் மருதப் பாவை
தன்னெழிற் றேழி யாகத் தழீஇவிளை யாடி நின்று. 21

தடமுறு மருதங் கொண்ட தமனக முதல சூடித்
திடமுறு வனச மென்னும் திருமுக மலர்வுற் றன்ன
மடநடை கொடுசென் றங்கே தகைமணம் மருவ லுற்ற
கடலிறை யவன்முன் னெய்தல் கண்டெதிர் கலந்த தன்றே. 22

ஏலம்வன் மிளகு மஞ்சள் குங்கும மிலவங் கந்தன்
பாலுறு செம்பொ னல்கிப் பனிவரை விடக்கொண் டோங்கும்
நீலுறு கடற்பா லெய்து நெடும்புனல் வயங்கு மோர்பெண்
கோலுறு தாயி னின்று கொழுநனிற் கேக லொத்தே. 23

சொற்றிடு குறிஞ்சி தன்னிற் றேன்றுதன் பொருளே காட்டி
மற்றுள திணைகள் தம்மில் வரைபடு பொருள்க ளாதி
பற்றிய முறையிற் காட்டல் பகர்தரு பொன்னி நீரால்
உற்றிடொன் ருதி யோரைந் தறிவுறு முயிர்கள் போலும். 24

நகமதிற் கதழ்விற் றேய்க்கும் நறியகுங் குமத்தி னுலும்
மிகநிலத் தியல்பி னுலும் கலங்கிப்பின் னியங்கு நீத்தம்
தகவுறத் தெளிந்த தாங்கோர் சார்பினிற் கலக்குற் ருலும்
திகழ்சிறு பொழுதிற் ருமே தெளிவரே சிறந்த நீரார். 25

---

20. புறவு - முல்லைநிலம். நுடங்க - அசைய. தாழி - மிடா. வனம் - திருத்துழாய். முலை - முல்லை: தொகுத்தல். வனமுலை - அழகிய நகில், காட்டிலுள்ள முல்லைக்கொடி. (கோடீச் — 118)

21. பொழிலாகிய கோதை. கன்னல் - கரும்பு. பூகதம் - பாக்கு. அரம்பை - வாழை. கவான் - துடை.

22. தமனகம் - மருக்கொழுந்து. வனசம் - தாமரை. அங்கே தகை மணம் - தக்கமணம். அம் கேதகை மணம் - அழகிய தாழையினது மணம்.

25. நகம் - மலை. கதழ்வு - விரைவு. நீத்தம் - வெள்ளம். நீர்மை - தன்மை; நீரார் - தன்மையுடையார், தண்ணீர்.

கலிநிலைத்துறை

சைய முற்றமுத் தமிழ்முனி சதமக னவன்றன்
கையி னுற்றிடு கமண்டலம் அமிர்தவண் கலசம்
துய்ய காவிரிப் புனல்பவம் தொலைத்திடு மமிர்தம்
வைய மேலது பெற்றவர் வானவர் கணங்கள். 26

மால்ப டிந்திடு சையமே வானுல கதனிற்
சால்பு கொண்டெழு பொன்னிநீள் கற்பகத் தாரு
பால்பி ரிந்திடு நதிக்குல மாங்கதன் பணைகள்
கால்கள் யாவையும் சிறியகொம் பினங்களைக் கடுக்கும். 27

கூறு கால்வழிப் படர்புனல் வயலிடைக் கூட்டிக்
கீறு சால்வழி மணிக்குலங் கிளர்தர வுழுது
சேறு செய்துவண் டழைவிராய்ச் சொன்முளை சிதறி
நாறு செய்குவர் களமர்கள் நலம்புனை மருதம். 28

பெருகு காவிரிப் புனலன்றிப் பிறங்குநாற் றினைத்தன்
அருகு வாழ்பொழிற் பலவொடு சூதநீ டரம்பை
தருக னித்திர ளிரதமும் தகைமலர்த் தேனும்
திருகு றுலையின் சாறதூஉம் வளர்த்திடுஞ் சென்று. 29

பூட்டு நாஞ்சில்வெங் கொழுப்படை யூர்தரப் புலம்பு
கோட்டி னோசையுங் கரும்பொடித் துழவர்கள் குலவே
றோட்டு மோசையு முழத்தியர் நடும்பொழு துரைக்கும்
பாட்டி னோசையும் பரந்திடும் பழனங்க ளெங்கும். 30

---

26. தமிழ்முனி - அகத்தியர். சதமகன் - இந்திரன். பவம் - பிறப்பு.

27. மால் - மேகம். பால் - பகுதி, முறை. குலம் - கூட்டம். பணைகள் - கிளைகள். கால் - கால்வாய். கடுக்கும் - ஒக்கும்.

28. சால் - படைச்சால். சொல் முளை - நெல் முளை. நாறு - நாற்று. களமர் - உழவர்.

29. சூதம் - மா. அரம்பை - வாழை. இரதம் - சாறு. திருகு உறு ஆலை.

30. நாஞ்சில் - கலப்பை. கோடு - சங்கு. குலவு ஏறு ஓட்டும் ஓசை. பழனம் - வயல்.

வள்ள வாய்ச்செழுஞ் சலசமுங் குமுதமென் மலரும்
கள்ளு லாமலர்க் குவளையு மதிமுகங் கனிவாய்
துள்ளு சேல்விழிப் பகையெனத் துரப்பவர் போலப்
பள்ள நீர்வயற் கடைசியர் களைந்தனர் பரவி. 31

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மள்ளர்தம் விழியின் சாயல் கயலென மறிக்கக் கையால்
தெள்ளுநீர் வயலு ணின்று செறிகளை களையும் நல்லார்
அள்ளல வனையும் பற்றிக் குழிசியி னடைப்பர் காணிற்
கள்வனை விடுவர் கொல்லோ வுலகினிற் களைகள் தீர்ப்போர். 32

அலவனே ராக நாள மார்தரு கமலப் போதில்
கலனையி னுழுது கொம்மைக் கமடத்திற் பரம்பின் செய்கை
இலகுறச் செய்வர் மள்ள ரின்சிறு புதல்வர் செய்யுள்
வலசிறு மகளிர் பைம்புல் நடுவர்கள் மகிழ்வுற் றோர்பால். 33

நெடியநீர் கொடுவந் தூட்டும் நெடுவரை யிருலின் தேனும்
படிமலர்ப் புறவத் தாவின் பாலுமல் லாது பானற்
கடிகமழ் வனசத் தேனும் கயலினம் பாய மேதி
மடிசொரி பாலு முண்டு வளர்ந்தன சாலி யெல்லாம். 34

சூக்குமை யாதி மூன்று தொழில்களுட் பட்டுக் கண்ட
மேக்கெழு சொல்லிற் சாலி விளைகருக் கொண்டு பின்னர்த்
தேக்குரு வொழுங்கு பெற்றுத் தெரியவுள் விம்ம லுற்று
மாக்கவி னுறமேற் றோன்றிற் றன்னதூஉம் வளர்சொல் லன்றோ. 35

---

31. வள்ளம் - கிண்ணம். சலசம் - தாமரை. குமுதம் - அல்லி. குவளை - நீலோற்பலம். துரப்பவர் - வெருட்டுபவர், செலுத்துபவர்.

32. மள்ளர் - உழவர். நல்லார் - பெண்கள். அள் அலவன் - சேற்றிலுள்ள நண்டு. அள்ளல் - குழைசேறு: கடைக்குறை. குழிசி - பானை.

33. அலவன் - நண்டு. நாளம் - தண்டு. கலனையின் - கலப்பைபோல. இன்: ஐந்தன் உருபு. கொம்மை - திரட்சி. கமடம் - ஆமை. செய் - வயல். பரம்பு - கழனி திருத்தும் பலகை.

34. புறவம் - முல்லை நிலம். பானல் - நீலோற்பலம். வனசம் - தாமரை. சாலி - நெற்பயிர்.

35. சூக்குமை, பைசந்தி, மத்திமை. கண்டம் மேக்கு - கண்டத்தின் மேலே. சொல்லின் - இன் ஐந்தன் உருபு. சாலி - நெல். தேக்கு உரு ஒழுங்கு. சொல் - நெல்.

உதயமால் விலங்கல் தன்னி லுதித்தெழுங் கதிரே யென்ன
மதியுல குவகை நீட வண்பயி ரெழுந்து செந்நெல்
சதிருற வுச்சி நின்று முதிர்ந்துபிற் சாய்ந்து தானும்
கதிருருக் கொண்ட தன்மை காட்டிய தெவர்க்கு மன்றே. 36

விளைவுகண் டரிவாள் கொண்டு மேவின ரரியும் போது
களையினிற் பிழைத்த செங்கட் கமலமொண் குமுத மென்னும்
கிளையுறு மலருங் கூட வரிபட்டுக் கிடந்த வம்ம
தளர்வுறி லடுத்தோர் தாமும் தளர்வுறு மறிஞர் போல. 37

அரிந்தன விசித்துத் தூக்கி யடுத்திடு களத்திற் சேர்த்துத்
திருந்தவான் தீண்டப் பல்போர் செய்துபின் பிரித்து விட்டுப்
பரந்திடு பகட்டி னூர்ந்து படிந்தவை யுதறித் தூற்றிப்
பொருந்துபொற் குன்றி னீட்டம் போன்மெனப் பொலிக ளாக்கி. 38

முன்னிசைந் தனவூர்த் தெய்வம் அந்தணர் முதலோர்க் கீந்து
பின்னளந் தரசர்க் குள்ள தளந்ததன் பிறகு நெல்லும்
புன்னில விளைவுந் தங்கள் மனைகளிற் பொருந்த வுய்த்தாங்
கன்னமும் பிறவு மன்பால் அருந்துவோர்க் கருத்தி யுண்பார். 39

மின்னிய லெழிலி யூர்தி வேந்தனென் றிசைத்த லாலும்
பன்னிசை யரம்பை மாதர் பயிலுற வினிதி னெங்கும்
மன்னிய தாலும் வெள்ளை வாரணஞ் சூழ்த லாலும்
பொன்னிசூழ் மருதந் தன்னைப் பொன்னுல கென்ன லாகும். 40

பொய்வதை முதலாஞ் சேனைப் பொருபவப் பகையை மோதி
மெய்யெனுஞ் செங்கோ லோச்சி விளங்கிசைத் தரும மென்றும்
வையமேத் திடத்தண் பொன்னி மருதநன் னிலமென் றோதும்
செய்யசிங் காத னத்திற் சிறந்திருந் தரசு செய்யும். 41

---

*36.* மால் விலங்கல் - பெரிய மலை. கதிர் - சூரியன், நெற்கதிர்; சூரிய சந்திரர்.

*38.* விசித்து - கட்டி. பகட்டின் - எருமைக்கடாக்களால். வை - வைக்கோல். ஈட்டம் - கூட்டம். பொலி - நெற்பொலி.

*39.* ஊர்த்தெய்வம் - காவல் தெய்வம். புன்னிலம் - புன்செய் நிலம். அருத்தி - உண்பித்து. (பரஞ்சோதி திருவிளை - நாட்டு - 28)

*40.* எழிலி - மேகம். வேந்தன் - இந்திரன். அரம்பை - வாழை, தெய்வமகளிர். வெள்ளை வாரணம் - ஐராவதம்; வாரணம் - யானை, சங்கு.

*41.* பொரு - போர்செய்கின்ற. பவப்பகை - பிறவியாகிய பகை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தேசுறு மருத நாடெலா நகர்கள் சிறந்திடந் நகரெலா மிலங்கும்
வாசநீ டியதா மரைச்செழுந் தடமும் வளம்பெறு செந்நெல்சூழ் வயலும்
மூசுவண் டிரைக்கும் சோலையுங் கமுகு மொழிதரு சூதமுங் கரும்பும்
பாசிலைக் கதலி தெங்குடன் பலவும் பரமனு லயமுநல் விழாவும். 42

கலிநிலைத்துறை

மலரின் மின்னெனப் பணவைமே லெயினர்த மகளிர்
இலக நின்றுதே னிறைத்தலி னுலோல மெனலும்
நிலவு செந்தினைக் கதிர்கொள நெடுஞ்சினை வேங்கை
குலவு பைங்கிளிக் குலமெதிர் கூவிடும் குறிஞ்சி. 43

அனைய வன்னிலத் தெயினர்கள் வெறியினி தாற்ற
வனைத ருங்களன் மணப்பர்செங் காந்தண்முன் மணக்கும்
தினையி னெண்புனங் காத்திடு சிறுமியர் சென்று
சுனையி னுடுவ ரவர்முனந் தோகைக ளாடும். 44

கருந்து ணர்ச்செழும் பூவைவீழ் கடுக்கையந் துணர்போர்த்
திருந்தி டுந்திற மத்திணைத் தெய்வத மெவரும்
பொருந்து றத்தனை யறிந்திடப் பொலங்கலை யுடனே
திருந்த நிற்பதை யுறழ்ந்திடும் சிறந்திடு முல்லை. 45

கான்கு திக்குமப் புறவிடை யிடைச்சியர் கவின்செய்
தேன்கு திக்குமென் கூந்தலை நோக்கிமுன் சேர
வான்கு திக்குமற் றவர்கடம் வரிவிழி நோக்கி
நான்கு திக்கினும் குதித்திடும் நவ்வியென் றிரலை. 46

---

42. தேசு - புகழ். மருதம் - வயலும் வயல்சூழ்ந்த இடங்களும். மூசு - மொய்க்கின்ற. இரைக்கும் - ஒலிக்கும். சூதம் - மா.

43. மலரின்மின் - திருமகள். பணவை - பரண். எயினர் - வேடர். சினை - கிளை. வேங்கை - வேங்கைமரம். குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த இடமும். ஆலோலம் - கிளி முதலியவற்றை ஒட்டுவதோர் சொல்.

44. வல் நிலம் - மலை. மணப்பர் - சேர்வார்கள். மணக்கும் - மணஞ் செய்யும்.

45. துணர் - பூங்கொத்து. பூவை - காயாம்பூ. கடுக்கை - கொன்றை. அத்திணைத் தெய்வதம் - முல்லைநிலத்துக்குரிய தெய்வமாகிய மாயோன். பொலம் கலை - பொன்னுடை.

46. கான் - வாசனை. புறவு - முல்லைநிலம். தேன் - வண்டுகள். நவ்வி - பெண்மான். இரலை - ஆண்மான்.

நீள்க ருஞ்சினைப் புன்னை நன் னீழலுப் பறலுள்
வானை மீனெடு வரால்களும் பொருந்துழி மதனன்
கோளி ரும்படைக் கேதகை குருகெனத் தோன்றி
மீள லுற்றெளித் திடச்செயும் விளங்கிடு நெய்தல். 47

ஓங்கு வேலையிற் பரதர்க ளோட்டுவர் தோணி
பாங்கு வேலையிற் பரத்திய ரோட்டுவர் பறவை
ஆங்க ளத்தவர் குவிப்பர்க ளமைத்தவெள் ளுப்பு
தேங்க ளத்தியர் குவிப்பர்கள் திரையெறி துப்பு. 48

மன்னு மால்வரை முல்லைத்தண் மருதநன் னெய்தல்
என்னு நானிலங் களிற்றனி யியல்பிவை நிற்கச்
சொன்ன மென்மலர் கடுக்கைசெங் காந்தண்மேற் சொரியத்
துன்னு முல்லையுங் குறிஞ்சியும் தொடரிடம் சிலவே. 49

ஆயர் வேய்ங்குழ லிசையொலி யகஞ்செவிக் கொண்டு
தூய சோலையி லோதிமந் துயிலவும் விழவின்
மேய வோதையின் மான்குல மருளவும் விரிசீர்
பாய முல்லையும் மருதமும் புணரிடம் பலவே. 50

செந்நெல் மேய்ந்தெழு படர்மருப் பெருமைகள் சென்று
புன்னை நீழலின் மறியவும் புணரிவால் வளைகள்
பன்னு பூகதப் பாளைமீ தெறியவும் பாங்கின்
மன்னு நெய்தலும் மருதமும் மயங்கலு முரிய. 51

---

47. உப்பு அறல் - உப்புநீர். கோள் - வலிமை. படை - ஆயுதம். கேதகை - தாழை. குருகு - நீர்வாழ்பறவை. நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடமும்.

48. வேலை - கடல். பரதர் - நெய்தல்நிலமக்கள். ஆங்கு அளத்தவர். தேங்கு அளத்தியர். துப்பு - பவளம்.

49. சொன்னம் மென் மலர் - பொன் போன்ற நிறத்தையுடைய மென்மையான மலர்.

50. ஆயர் - இடையர். ஓதிமம் - அன்னம். ஓதை - ஓசை.

51. புணரி - கடல். வால் வளை - வெள்ளிய சங்கம். பூகதம் - கமுகு.

திகழ்க ளங்கனிக் கத்துணை செய்யவொண் பவளம்
நிகரில் பட்டினத் தவரெதிர் புறவிடை நேர்ந்து
தகவி னெய்துவர் பொதுவியர் பட்டினஞ் சார்ந்து
பகர்வர் நித்தில மொருபடி தனக்கொரு படிபால். 52

ஆன வெற்பிடை மணிசொரி யருவியின் சிலைப்பும்
கானி டைச்சியர் நறுந்தயிர் கடைந்திடு கலிப்பும்
மான முற்றிடு மருதவொண் மணமுர சதிர்ப்பும்
வானு றுங்கடற் கனைப்புநீள் மாலையிற் றொடரும். 53

வைய கம்புகழ் பொன்னிநன் னாட்டுறு வளத்தைத்
தையல் பாகநீ டிறையவன் தானெதிர் நோக்கி
ஐயர் சூழ்மணி மன்றுள்நின் றானந்த நடனம்
செய்யு மென்றிடி லதனையாம் தெரிப்பதற் கெளிதோ. 54

பொன்னி னாட்டினிற் சிறந்திடு பொன்னிநாட் டியல்பு
தன்னி லிங்ஙனஞ் சிறிதிசைத் திட்டனம் சாற்றி
டன்ன நாடெனும் தனிமக ளணிநுதற் றிலகம்
என்ன நீடுறும் திருநகர் வளமினி யிசைப்பாம். 55

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 78.

---

52. களங்கனி - களாப்பழம். புறவிடை - முல்லைநிலத்தில். பொதுவியர் - இடைச்சிகள். நித்திலம் - முத்து.

53. சிலைப்பு, கலிப்பு, அதிர்ப்பு, கனைப்பு - இவை ஒலிக்குறிப்பு.

54. ஐயர் - தில்லைவாழந்தணர்கள், சிவஞானிகள். சூழ்தல் - ஆராய்தல், சுற்றியிருத்தல்.

55. பொன்னின் நாடு - விண்ணுலகம். நுதல் திலகம் - நெற்றிப் பொட்டு.

# திருநகரச்சிறப்பு

பொற்பு மிக்கவிந் நாட்டிடைப் பொன்னிதன் றென்பால்
கற்ப காலத்து மழிவின்றிக் கடவுளர் போற்றச்
சிற்ப ரன்பரை யுடன்மகிழ்ந் துறைந்திடத் திகழும்
அற்பு தத்திரு விடைமரு தெனும்பதி யம்ம. 1

கொண்ட லூர்தியும் விரிஞ்சனும் கோடுறு கரனும்
பண்ட ரங்கனை நணுகியே வலரொடும் பணிபோ
தெண்ட ரும்புக ழுவர்பதி யென்னவு மெழிற்பேர்
அண்ட மென்னவு மிலங்கிடு மனையநீள் பதியே. 2

அனைய மாநக ரொருதனிப் பூந்தட மதன்கண்
வனைத லுற்றொளிர் மாளிகை மண்டப மெவையும்
புனையெ ழிற்கருங் குவளையுற் பலம்புகல் குமுதம்
நனைகொள் பங்கயச் செழுமலர் நாயகன் கோயில். 3

மேரு வாமரு திறையவன் மேவுபொற் கோயில்
சீரு லாமணி மறுகெழு கடல்களுந் தீவும்
சாரு மந்நகர்ப் புடைமதில் நேமியஞ் சயிலம்
காரு லாமதன் புறத்தகழ் புறத்தடங் கடலே. 4

சுருதி யோங்கிநான் முகனெனத் துலங்குமந் நகருள்
மருவ ஞாங்கருற் றொளிர்தரு மணிமதில் வலையம்
இரவி மண்டில மெனத்திகழ்ந் திடுமதைச் சூழ
விரவு தெண்டிரை யகழ்பரி வேடமொத் திலங்கும். 5

---

1. பொற்பு - அழகு. பொன்னி - காவிரி. கடவுளர் - தேவர்கள். சிற்பரன் - ஞானவடிவாகிய சிவபெருமான். பரை - உமாதேவியார்.

2. கொண்டல் ஊர்தி - மேக வாகனனாகிய இந்திரன். விரிஞ்சன் - பிரமதேவர். கோடு உரு கரன் - பாஞ்சசன்னியம் என்னும் சங்கை ஏந்திய திருமால். பண்டரங்கம் - ஒருவகைக் கூத்து. ஏவலர் - பணியாளர்.

3. உற்பலம் - செங்கழுநீர். நனை - அரும்பு.

4. மருது இறையவன் - இடைமருதீசர். மறுகு - வீதிகள். நேமி அம் சயிலம் - சக்கரவாளகிரி. கார் - மேகம். புறத்தடங்கடல் - பெரும்புறக்கடல்.

5. சுருதி ஓங்கி - வேதஒலி நிரம்பி. ஞாங்கர் - பக்கம். மணி மதில் - இரத்தினங்களிழைத்த மதில். இரவி - சூரியன். பரிவேடம் - ஊர்கோள்.

சந்த மாரிடை மருதெனும் நகரமே சலதி
இந்தி ராதியர் சூழ்ந்திடக் கோயில்சூழ்ந் திலங்கும்
அந்த வான்மதில் வாசுகி யெனும்பெய ரரவம்
மந்த ராசலம் போன்றது வயங்குகோ புரமே. 6

நீடு பொன்மதி லிடந்தொறும் நிகழ்ந்திடு மிடபக்
கோடு பட்டுடல் கிழிந்துசெல் கொண்டலைத் தாவிப்
பீடு தங்கிய கவிக்குலம் பிடித்ததன் புனலை
மாடு சித்திரச் சாதக வாயிடைப் பிழியும். 7

விண்ணி னோங்கலிற் காவல்பெற் றிருப்பதின் விரிசீர்க்
கண்ண னெக்குநல் விதிமுறை புரிந்திடு கவினல்
நண்ணு நாற்றிசை முகத்தினல் நெறிப்பினல் நளினத்
தண்ண லொக்குமக் கோயில்சூழ்ந் தமர்ந்திடு மதிலே. 8

சிகர கோபுர வாயிலிற் செறிந்திடு மிமையோர்
மகுட கோடிக ளொன்றொடொன் றுரிஞ்சிடு மாண்பால்
திகழு நந்திகைப் பிரம்படி தேக்கலா னுதிர்ந்த
புகரின் மாமணிக் குலத்தொடு பொற்பொடி யிறையும். 9

மாக நாயக னுலகெலாம் படைப்பவன் மலர்மின்
ஆக நாயகன் சித்தர்விச் சாதர ரமரர்
நாக நாயகன் போற்றுபொற் கோயிலுள் நடுவே
ஏக நாயகன் உமையுட னினிதுவீற் றிருக்கும். 10

---

6. சந்தம் - அழகு. சலதி - கடல். மந்தராசலம் - மந்தரமலை.

7. இடபக்கோடு - இடபத்தின்கொம்பு. கொண்டல் - மேகம். பீடு - பெருமை. கவிக்குலம் - குரங்கினது கூட்டம். மாடு - பக்கம். சித்திரச் சாதகம் - சித்திரத்தில் எழுதப்பட்ட சாதகப்புள்; சாதகம் - வானம்பாடி.

8. விண்ணின் ஓங்கலின் - ஆகாயத்தில் உயர்ந்திருத்தலின், ஓங்கி உலகு அளத்தலின். காவல் பெற்றிருப்பதின் - பாதுகாத்தலின், காத்தற் றொழிலை உடைமையின். விதிமுறை – விதிப்படி. கவின் - அழகு. புரிதல் - சிருட்டிசெய்தல். திசைமுகம் - திசையாகிய முகம், திசைகளை நோக்கிய முகம். நெறிப்பு - வளைதல், வளைவு. நளினத்து அண்ணல் - பிரமன்.

9. சிகரம் - உச்சி. நந்தி கைப்பிரம்பு - வேத்திரப்படை. தேக்கலால் - நிறைதலால். இமையோர் - தேவர். மகுடகோடிகள் - முடிகளின் நுனைகள். குலம் - கூட்டம். புகர் இல் - குற்றம் இல்லாத.

10. மாக நாயகன் - இந்திரன்; மாகம் - விண்ணுலகம். மலர்மின் - திருமகள். ஆகம் - மார்பு. நாக நாயகன் - ஆதிசேடன்.

பன்ன கத்தனிப் பேருல கெங்கும்வேர் பரப்பித்
துன்னி மீதல மடங்கலு முலவையால் தூர்த்துப்
பொன்னி நாட்டொடந் நகருக்கும் தன்பெயர் பூட்டி
மன்னி நின்றிடு மொருமரு திறையவன் மருங்கு. 11

பேசு மம்மரு தலர்கள்தூஉய்ப் பிறைகொள்வே ணியனைப்
பூசை செய்துதன் பெயர்முத லிடைகளாற் புறஞ்சூழ்
கேச ரங்களை வருவியாக் கிளர்முத லீறு
விசி நல்லிசை பயில்விக்கும் விமலனுண் மகிழ. 12

இலகு மத்தருப் புவிபுகழ் கயிலையென் றிசைக்கும்
திலக மான்மிய மொன்றுகொல் சிலேடையி னுலும்
அலர்த ருந்தனி வெண்மையும் கோடுமார்ந் தருகு
நிலவ ணிந்திடு வோனுமுற் றன்னதாய் நிலவும். 13

நெற்றி நாட்டத்து நிருத்தன்முன் னெடியதோர் தாரு
வற்றி நிற்குமெப் போதுமம் மாண்பின தேனும்
உற்றி டும்பசு ந் தழைமலர் உலர்ந்திடா ததனைச்
சுற்றி வந்தவர்க் களித்திடு பலன்களோ தொகையில். 14

எங்கு மண்டபம் எங்கணு ந் தேவர்த மிருக்கை
எங்கும் சித்திர விதானங்கள் எங்குநற் றீபம்
எங்கு மின்னிசைத் தூரியம் எங்குநாட் டியங்கள்
எங்கும் தோத்திரம் இடைமரு திறையவன் கோயில். 15

---

*11.* பன்னகம் தனி பேர் உலகு - நாகர்கள் வசிக்கும் ஒப்பற்ற பெரிய உலகம்; நாகலோகம்: பாதலம். மீதலம் - மேல் உலகம். உலவை - காற்று. தூர்த்து - மூடி. ஒரு மருது - ஒப்பற்ற மருதமரம்.

*12.* வேணியன் - சடையை உடையவன்: சிவபெருமான். தன் பெயர் முதல் இடை: மரு - வாசனை. கேசரம் - மகரந்தம். முதல் ஈறு வீசி - மதுவைச் சிந்தி.

*13.* அ தரு - அந்த மருதமரம். திலக மான்மியம் - திலகம்போன்ற பெருமை. சிலேடை - இரு பொருள் பயப்பது. அலர்தரும் - விளங்கும். வெண்மை - வெண்ணிறம். கோடு - கிளை, சிகரம். நிலவு அணிந்திடுவோன் - சிவபெருமான். அன்னதாய் - அந்தக் கயிலைமலையாய்.

*14.* நெற்றி நாட்டம் – நெற்றிக்கண். தொகை இல் - அளவில்லாதன.

*15.* விதானம் - மேற்கட்டி. தூரியம் - வாத்தியம்.

மன்னு சீர்மரு திறையவன் கோயிலும் வகுத்தி
டன்ன தன்புற நாற்றிசை யாலய நான்கு
மின்னு செஞ்சடைக் கண்ணுதல் விமலன்றன் முகங்கள்
என்ன நூலறி புலவர்கள் புகலவுற் றிலங்கும். 16

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஓங்குபொற் றசும்பி னிலகுகோ புரத்தின் உறுதுகிற் கொடிகளி னீட்டம்
ஆங்கிரு விசும்பி னவிருடுத் திரளை அடித்துதிர்த் திடுகின்ற தென்னப்
பாங்குறு மதியுண் ணடுங்கியக் கொடியிற் படிதுகி லடிவழிப் படரும்
தேங்கிசைப் பரிதி யதுவுமுட் கொள்ளான் சிகரபந் திகளடிச் செல்லும். 17

பகர்மணிக் குவையால் அலங்கலே மருவும் பண்பினாற் படர்ந்திடுங் காலால்
திகழுறுங் கலன்க ளூர்ந்திடும் திறத்தால் சிறக்கநாற் றிசையுமுற் றிடலால்
மகரமுற் றிடுவண் டணை ந்துநீ டிலங்கு மாண்பினு லிசையொலி யதனல்
சகரர்க ளமைத்த பெருங்கட லென்னத் தயங்கிடும் நெடியபொன் வீதி. 18

தாரணி யதனைப் பழித்துவாம் பரியும் சகடமும் கொடிஞ்சியும் புனை ந்து
மேருவந் ததுபோற் கிளர்மணி நெடுந்தேர் மிசையிறை யுலாவுமவ் வீதி
நாரணன் பிரம னிந்திர னிமையோர் நவில்சிவ கணங்கள்பா ரிடங்கள்
சீருறு மியக்கர் முனிவர்சூழ்ந் திடலால் திகழ்சிவ லோகமும் பொருவும். 19

விடஞ்செறி மிடற்றெம் பிரான்தினம் பவனி மேவலி னருகுநின் றிரட்டும்
மடந்தையர் கவரிக் காற்றுமோங் கால வட்டமா ருதமும்வெங் களிற்றின்[கும்
தடஞ்செவி மருத்தும் பொருதிடத் தென்றல் சாளரந் தொறும்புகுந் தொளிக்
இடம்பெறு வீதித் தோரண நிரையால் இரவிகாண் பரியதெப் போதும். 20

---

17. பொற்றசும்பு - பொற்குடம். கொடிகளின் ஈட்டம் - கொடிகளின் கூட்டம். உடுத்திரள் - நட்சத்திரக் கூட்டம். பாங்கு - பக்கம். சிகரபந்திகள் - கலசங்களினது கூட்டம்: சிகரம் - கலசம், உச்சி.

18. மணிக்குவை - இரத்தினக் குவியல். அலங்கு அலே மருவும் - அசைகின்ற அலைகள் பொருந்தும். அல் அம் கலை மருவும்-இருளில் அழகிய ஆடைகள் பொருந்தும். காலால் - காற்றுல், பாதங்களால். கலன்கள் - ஆபரணங்கள், மரக்கலங்கள். மகரம் - மகரமீன்கள், ஓர் ஆபரணம். வண்டு - வண்டுகள், வளையல்கள். இசை ஒலி - இசைக்கின்ற ஒலி, இசையினது ஒலி. பெருங்கடல் - சாகரம். தயங்கிடும் - விளங்கும்.

19. தாரணி – பூமி. வாம்பரி - தாவிச்செல்லும் குதிரைகள். சகடம் - சக்கரம். கொடிஞ்சி - தேர் உறுப்பு; தாமரைமலர் வடிவாகச்செய்து தேர்த்தட்டின்முன் நடுவது. பாரிடங்கள் - பூதங்கள்.

20. பவனிமேவல் - உலாவரல். இரட்டும் - மாறிமாறி அசைக்கும். மாருதம் - காற்று. மருத்து - காற்று. சாளரம் - பலகணி.

காலையிற் கடைக்கட் குவிக்குநித் திலமும் கதிர்மணித் தோரணத் தவிழ்ந்த
மாலையு மாலைப் பொழுதினிற் புலவி மகளிர்க ளெடுத்தெறி கலனும்
ஆலைவிற் சொரிபூங் கணையடு மகளிர் அணிமலர்க் கைசொரி வளையும்
சோலையுற் றிடுங்கால் பறித்துவந் திறைக்கும் துணருமவ் வீதியிற் குப்பை. 21

வனமுலைத் தடங்க ளசைந்திடி லொடியும்
மருங்குல்மெல் லெனநடந் திடுமென்
றினமணிச் சிலம்பு காலில்வீழ்ந் திசைப்ப
எதிர்ப்படு காமுகர் நயக்கும்
மனமுமன் மதனும் தொடர்ந்திடக் கயற்கண்
மடந்தையர் மறுகிடைச் செலுங்கால்
அனமவர் பின்னர் நடந்திடுங் கிளிகள்
அந்தரத் தருகுறச் சுழலும். 22

கணிதரு விசும்பி னுறநிமிர்ந் தெழுந்த கதிர்மணி மேடைமுற் றத்து
நணுகிவிற் றொடிக்கைக் காந்தள்கீ ழாட நயனமைக் குவளைமீ தாட
இணையிலம் மனைக ளிடையினின் றாட இடையிரு பந்தெடுத் தாட
அணியிழை மகளி ராடல்பொன் னுலகில் அரம்பைய ராடலிற் றேன்றும். 23

தொண்டையங் கனிவாய் மாதர்பொன் மேடைச்
சுடர்மணித் தொட்டிலில் வளர்த்த
தண்டளிர்த் தவளப் பசுங்கொடி கவின்கொள்
சாளரச் சுற்றெலாம் தவழ்ந்து
வெண்டுகிற் கொடியிற் பற்றிமீச் சென்று
வெயில்விரி மணிமுடி யிமையோர்
கொண்டகற் பகப்பூங் கொம்பரிற் படர்பொற்
கொடியுட னினிதுவீற் றிருக்கும். 24

---

21. கடைக்கண் - கடையினிடத்து. நித்திலம் - முத்து. புலவி - ஊடல். கலனும் - ஆபரணங்களும். ஆலை வில் - கரும்புவில். பூங்கணை - மலரம்புகள். வளை - வளையல்கள். துணர் - பூங்கொத்துகள்.

22. மருங்குல் - இடை. நயக்கும் - விரும்பும். மறுகு - தெரு. அந்தரம் - ஆகாயம்.

23. விசும்பு - ஆகாயம். கதிர் - கிரணம். மணி மேடை முற்றம் - நிலாமணி முற்றம். வில் - ஒளி. தொடி - வளையல். நயனம் - கண். இரு பந்து - இரண்டு பந்துகள் போன்ற நகில்கள்.

24. தொண்டை அம் கனி - ஆதொண்டங்கனி. மீச்சென்று - மேலே சென்று. பொற்கொடி - காமவல்லி.

விண்படு பளிங்கி னரமியத் தலத்து மேல்விளை யாடுமங் கையர்க்குப்
பண்படு நறுஞ்சொ லரம்பைய ரணிதம் பணியொடு தொடையலும் புனைந்து
சண்பகத் தொடையோ டவர்கடம் பணியும் தாங்கொடு தரித்துவான் புகுவர்
நண்புறு மவரும் இருதிறத் தரையும் நவிலும்வாள் விழிகளால் தெளிப. 25

மஞ்சினை நிகர்த்த மலர்க்குழன் மகளிர் வடமொழிக் கவியெளி துணர்ந்து
விஞ்சையர் மகளிர்க் கெதிரிசைப் பதிகம் விளம்பலு மவர்முழு துணரா
தஞ்சுகத் தொடுவண் பூவையும் தம்மில் அறைதல்கேட் டதிசயிப் பவர்போல்
பஞ்சரத் தருகு திரிவர்விண் டொடுபொன் பயிலர மியங்களின் மாதோ. 26

சுந்தர மிகுந்த பளிங்கினு லமைத்த துங்கமண் டபமிசை யொருபால்
கந்தர மணைவுற் றிலங்கிடு காட்சி கவுரியோர் புறத்தனைப் பொருவும் [தல்
இந்திர நீலத் திலங்குமா ளிகைதன் னிடைகொள்செம் மணியொடு மொளிர்
செந்திரு மடமான் மருவுறு மருமத் திருநெடு மாலினை நிகர்க்கும். 27

உச்சியிற் கதிரோ னடைந்திடுங் காலை யொளிர்தரு பொன்னிறஞ் சிவப்புப்
பச்சையி னுருவுற் றிலங்கிடு முயர்ந்த பளிங்கினி லியற்றர மியங்கள்
மெச்சிடு துரங்கம் தோற்றுதன் வடிவை விளங்குபுல் லெனவெதிர் தாவும்
அச்சுறு நெடுந்தேர் வலவனத் திறங்கண் டணிக்கரம் வருந்தவோட் டிடுமால்.

குழிமதக் கவுட்குஞ் சரங்களி னொலியும் கொய்யுளைப் புரவியி னொலியும்
எழின்மணித் தடந்தே ரூர்ந்திடு மொலியும் இலங்குபல் லியக்குழாத் தொலியும்
பொழியிசைச் சுருதி முதலிய வொலியும் பொலிந்தினி தெங்குமோங் குதலான்
மொழியுமந் நகரில் கடலொலித் திடலும் முகிலொலித் திடுவதும் கேளா. 29

---

25. அரமியத்தலம் - மேல்முற்றம். அரம்பையர் - தெய்வமகளிர். அணி தம் பணியொடு: பணி - ஆபரணம். தொடையல் - மாலை. சண்பகத் தொடை - சண்பகமலர்மாலை. வாள்விழிகளால் - ஒளிபொருந்திய கண்கள் (இமைத்தலால்).

26. மஞ்சு - மேகம். அம் சுகம் - அழகிய கிளிகள். பூவை - நாகண வாய்ப்புள். பஞ்சரம் - கூடு.

27. கந்தரம் - மேகம். கவுரி ஓர்புறத்தன் - உமையொருபாகராகிய சிவபெருமான். மருமம் - மார்பு.

28. உச்சி, காலை என்னும் பொழுதின் பெயர்கள் வந்துள்ளமை காண்க. கதிரோன் - சூரியன். துரங்கம் - குதிரை: ஏழ்பரி. தேர்வலவன் - தேர்ப்பாகன்: அருணன்.

29. கவுள் - மதச்சுவடு. கொய் உளை - கொய்துவிடப்பட்ட பிடரி மயிர். பல் இயம் - பலவகை வாத்தியங்கள். முகில் - மேகம்.

ஆலையி னிடத்திற் கிளர்நறும் புகையும் அந்தணர் புரிந்திடு வேள்விச்
சாலையி னெழுந்த புகையுமொண் கூந்தல் சார்ந்திடு சுரும்பின மகல
வேலையிற் கணவ ரிடுமகிற் புகையும் விசும்பின்மேற் சுழல்வது நோக்கிச்
சோலையிற் குயில்வாய் திறந்திடா தொளிக்கும் தோகையின் குழாமெதிர்
நடிக்கும். 30

விளங்கிடு மறையோர் மாடநீள் வீதி வெண்சுதைத் தண்கதிர் பரப்பி
வளங்கெழு கலைகள் மருவிமீ தெழுந்து மகத்தொடும் பயின்றுநேர் கண்டோர்
உளங்களி கூரப் புலவர்கொண் டாடும் உயர்ச்சிபெற் றிலங்கிடுந் திறத்தால்
களங்கமின் மதிகள் நிரையொரு கோடி கலந்துவிற் றிருப்பது கடுக்கும். 31

வாங்கொலிக் கடல்சூழ் புவிபுரந் தருளும் மன்னவ ரியாவரு மீண்டித்
தாங்களுற் றிடும்வீ ரெடுமணை நந்திருக்கும் தகைமையொத் தரசர்வாழ் வீதி
ஓங்கலிற் றேன்றிச் செம்மணிக் கதிர்கொண் டுலவுகா ரிருட்குழா மொதுக்கிப்
பாங்குறு மாட மாளிகைக் குலங்கள் பரிதியின் கணங்களொத் திலங்கும். 32

புகழொடு தனமும் தருமமும் பொறையும் போற்றிடு வணிகர்தம் வீதித்
திகழுறு சிகரத் தணிநவ மணிகள் செறிந்தொளி புரிந்திடல் நோக்கி
மகிதலத் தனய னுதிமண் டலத்தின் மருவுறு கோளின மயங்கும்
தகவுற மனைகள் அலகில்செல் வத்தால் தனித்தனி அளகையின் விளங்கும். 33

மன்னவர் தமக்கு மணிமுடி சூட்டும் வளங்கொள்வே ளாளர்தம் வீதித்
துன்னிய செல்வக் கதிர்மணி மாடத் தொகுநிரை இந்திரன் றனக்கு
முன்னவர் முகில்காத் தியற்றிடு முதவி முன்னினன் உளங்களி துளும்பத்
தன்னெழில் விமான மெனப்பல வமைத்துத் தந்தன விருப்பது போலும். 34

---

30. ஆலை - கரும்பாலை. சுரும்பு - வண்டு. வேலை - பொழுது, காலம். புகையை மேகமெனக்கருதிக் குயில் வாய் திறந்திடாது; தோகையின் குழாம் நடிக்கும் என்க.

31. சுதை - சுண்ணச்சாந்து. மகம் - மகநட்சத்திரம். களிகூர - களிப்புமிக. புலவர் - தேவர்கள்.

32. வாங்கு - வளைந்த. ஈண்டி - நெருங்கி. ஓங்கல் - மலை. செம் மணிக்கதிர் - சிவந்த மாணிக்கக் கற்களின் ஒளி.

33. மகிதலம் தனயன் - பூமியின்புதல்வனாகிய செவ்வாய். அளகை - குபேரநகரம். கோள் - கிரகங்கள்.

34. துன்னிய - நெருங்கிய. முன் அவர் முகில் காத்து இயற்றிடும் உதவி. முகில்காத்து இயற்றினோர் - கார்காத்த வேளாளர் எனப்படுவர். முன்னினன் - நினைந்தனன் ஆகி.

கண்ணுறுஞ் சிகர வரைபடு பொருளும் கானிடைப் படுபொருட் குலனும்
தண்ணுறு மருதத் திணைபடு பொருளும் சலதியின் பாற்படு பொருளும்
நண்ணுறும் சலதி யிடைப்பொலிந் தோங்கு நகர்படு பொருள்களு மேனை
விண்ணுறு பொருளும் கவின்குடியிருக்கும் வீதியில் வயின்தொறும் விளங்கும்.

வானவர் மகுட முரிஞ்சுபொற் றுகளும் மற்றவர் புனைமலர்த் துகளும்
மாநிலந் தனைவிட் டெழுந்திடா தடக்கும் மாளிகைக் கொடிபடிந் துதறும்
மேனதித் துளியும் சண்பகத் தருக்கள் விரித்திடு மலர்மதுத் துளியும்
கானமுற் றிலங்கும் சிவிறிநீர்த் துளியும் விழவருக் கண்ணகன் மறுகின். 36

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மாந்தளி ரஞ்சி லோதி மடந்தையர் வடிவு காட்டும்
ஏந்தெழிற் கமுக மன்னார் இழையணி மிடறு காட்டும்
வாய்ந்திடு மூரு வின்றன் வனப்பினைக் கதலி காட்டும்
தேந்துளி யிலவின் போது சேயிதழ் காட்டு மெங்கும். 37

மிகவிரி பாளை போர்த்து விளங்குதெங் கிளநீ ரன்னார்
துகிலொரு புறமேற் கொண்ட துணைமுலை காட்டும் காவில்
தகுகொடி யிடைகள் காட்டும் தடமுறு நளினம் யாவும்
முகமலர் காட்டும் வண்டு முகத்துறு கண்கள் காட்டும். 38

கலிநிலைத்துறை

மந்த மாருதம் பயின்றிடை மருதினெம் மருங்கும்
சந்த முற்றெளிர் சண்பக முதலிய தழைந்து
கந்த மார்தரு பொழிலெழில் கண்டவர் மகவான்
நந்த னந்தன தெழிலினை நவிலநா ணுறுவார். 39

---

35. சலதி - கடல். கான் - காடு. வயின்தொறும் - இடங்கள்தோறும்.

36. பொன் துகள் - பொற்பொடி. மேல் நதி - ஆகாயகங்கை. சிவிறி - நீர்தூவும் துருத்தி. கண் அகல் மறுகு - இடம் அகன்ற தெருக்கள்.

37. அம் சில் ஓதி. ஓதி - கூந்தல். கமுகு - பாக்கு. மிடறு - கண்டம், கழுத்து. கதலி - வாழை. ஊரு - துடை. வனப்பு - அழகு. இலவின் போது - இலவம் பூவரும்பு. சே இதழ் - சிவந்த உதடு.

38. துகில் - மெல்லிய ஆடை. நளினம் - தாமரை.

39. எ மருங்கும் - எல்லாவிடத்தும். மந்தமாருதம் - இளந்தென்றல் காற்று. சந்தம் - அழகு. கந்தம் - வாசனை. மகவான் - இந்திரன். நந்தனம் - சோலை (கற்பகக்கா).

எண்ட ரும்புக ழுலகெலா மெய்திடை மருதில்
வெண்ட னிக்கலை மதிச்சடை விமலர்தம் விழாவில்
பண்ட ருங்கனி மொழியெழிற் பாவைய ராடல்
கண்டி லாதவர் திலோத்தமை யாடலிற் களிப்பார். 40

எங்க ளீசர்வீற் றிருப்பதூஉ மாலயத் தெழிலும்
பொங்கு தண்புக ழிடைமரு தெனுநகர்ப் பொலிவும்
தங்கி வாழ்பவர் மகிழ்ச்சியும் சார்ந்தெதிர் கண்டோர்
அங்க ணார்சிவ னுலகினை யகத்தினில் விரும்பார். 41

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மொழிதரு மொருமை தன்னே டிருமைசெய் முத்தீ வேட்டுச்
செழுமறை நான்கும் நன்ருய்த் தெளிந்துமற் றையந் திரப்
பழுதக லங்க மாறும் பயின்றர னிடத்தி லன்பும்
எழுதரும் பிறவி யெட்டா தியற்றிநாள் கழிப்பர் சில்லோர். 42

பத்தியிற் காமி காதி பகருமா கமங்க ளாய்ந்து
நித்தியப் பொருளென் ருேதும் நிமலனைப் பூசித் துற்ருேர்
சத்திநி பாத மோர்ந்து சார்ந்திடு கலைக ளைந்தும்
சுத்திசெய் திகலும் பாசந் தொலைத்தகற் றுவர்நாள் சில்லோர். 43

கல்வளை கணைய மாதி கரங்கொடு சுழற்றி யுங்கை
மல்லொடு வடிவா ளாதி மற்றெழில் பயின்றுந் தான
வல்லிபந் துரங்க மூர்ந்தும் வகுத்திடு கலைக ளாய்ந்தும்
சில்லியந் தடந்தே ரூர்ந்தும் சிலர்க்குறு பொழுது போமால். 44

---

40. எண் தரும் புகழ், வெண் தனி கலை மதி, பண்தரும் கனி மொழி. திலோத்தமை - தேவலோகத்து ஆடல்மகளிருள் ஒருத்தி: ஏனையோர் அரம்பை ஊர்வசி மேனகை முதலியோர்.

41. அம் கண் ஆர் - அழகிய நெற்றிக்கண்ணை உடைய.

42. ஒருமை - மன ஒருமைப்பாடு. இருமை - இம்மை மறுமைகள். முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணுக்கினி என்பன. ஒன்று முதல் எட்டு எண் வரை கூறியது ஒரு நயம்: எண்ணணி.

43. நித்தியப்பொருள் - அழிவில்லாதபொருள். சத்தி நிபாதம் - திருவருட்சத்தி பதிதல். ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. கலைகள் ஐந்து - நிவிர்த்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீத கலைகள். கலைகள் ஐந்து சுத்தி செய்து என்றது கலாசோதனை செய்து என்றவாறு. இகலும் - மாறுபடும்.

44. கணையம் - வளைதடி. வடிவாள் - கூர்மை பொருந்திய வாள். தானம் - மதசலம். இபம் - யானை. துரங்கம் - குதிரை.

விரிபொருள் தம்பா லுள்ள வேண்டுநர்க் கினிதி னீந்தும்
புரிதரு மவர்தம் செங்கைப் பொருளெதிர் முறையி னேற்றும்
வரிமலர்ச் சோலை பார்த்தும் வயலுறு வளமை பார்த்தும்
தெரிவுறு கேள்வி யுற்றும் சிலர்க்குறு பொழுது போமால். 45

துலங்குகா விரியிற் பூசத் துறைப்புன லாடல் செய்தும்
நலம்பெறு நியம மூற்ற நடாத்தியும் கலைகள் தேர்ந்தும்
பலன்தரு மருத வாணன் பணிவிடை புரிந்து மன்னோன்
சிலம்பணி பதம்ப ணிந்தும் சிலர்க்குறு பொழுது போமால். 46

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொடிபடு நெடிய மாளிகை வீதி குலவுறு மனையபொற் பதியில்
அடிபடல் மணிவார் செறிந்திடு முரசே அமைவடுப் படுவன மாவே
கடிமது வருந்தல் சிறைகொள்வண் டினமே கட்புன லுகுத்தல்பைம் பொழிலே
படியுறு குளனே யலைபடல் சிறுமைப் படலெழிற் பாவைய ரிடையே. 47

காரண மின்றிச் சினத்துட னெதிர்த்துக் கடுஞ்சமர் விளைத்தல்செஞ் சூட்டு
வாரண மதுவே திரித்திடு கோட்டு வளம்பெறு பெருமையும் விளைக்கும்
ஏரண வுருவ மதனனே தன்னோ டெதிர்த்திடா திருப்பவர் தம்மேல்
தாரண முறுநீ டம்புகள் துரக்கும் தடித்துறு முகிலுமத் தகைத்தால். 48

திரிதரு பறவைக் குலங்களே யன்றிச் சிறைப்படு முயிர்களங் கில்லை
விரிதரு பயமுற் றுளித்திருந் திடுதல் மீனின மன்றிவே றில்லை
வரிதரு மகளிர் கடைக்கணே யன்றி வழிநெறி கடப்பன வில்லை
உரிமையுற் றொருவர்க் குதவிசெய் யாத தோவிய மன்றிமற் றில்லை. 49

---

47. மணி - அழகு. வடுப்படுவன - வடு உண்டாவன: வடு - மாவடு, குற்றம். மா - மாமரம். கட்புனல் - கள்ளாகிய புனல், கண்ணீர். உகுத்தல் - சிந்தல். அலைபடல் - அலையுண்டாதல், வருந்தல்.

48. செஞ்சூட்டு வாரணம் - சிவந்த உச்சிக்கொண்டையையுடைய கோழி. துரக்கும் - செலுத்தும். ஏரணம் - ஏணம் என்பதன் விரித்தல்; ஏணம் - மான். தடித்து - மின்னல். முகில் - மேகம். அத்தகைத்து - அத்தன்மையை உடையது: அம்புகளைத் துரக்கும்: அம்பு - நீர், பாணம்.

49. சிறைப்படும் - சிறகுகளோடு கூடியிருக்கும், சிறைச்சாலையில் அடைபடும். சிறை - பக்கம். பயம் உற்று - நீரிலே பொருந்தி; அச்சமுற்று. வரி - கருவரி செவ்வரிகள். நெறி கடத்தல் - முறைமை தவிர்தல். ஓவியம் - சித்திரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அணிமருவு மிடைமருதீ சருக்கு நந்தி
ஆவடுதண் டுறைசோமாக் கந்த ராரூர்
திணிபுகழா லங்குடியில் குருமூர்த்தி யானைத்
திருமுகத்தோன் வலஞ்சுழியே ரகத்திற் செவ்வேள்
கணிதருமாப் பாடியிற்சண் டீசன் தில்லைக்
கதிர்ப்பொதுவில் நடக்கடவுள் வடுகன் காழி
பணைமருவு மாந்துறையி னிரவி யாகும்
பரமனெழிற் பதமலருக் கன்பு மிக்கீர். 50

அன்னதனித் தலத்தினுறு மெழிலை நோக்கும்
ஆதரங்கொண் டிந்திரனு யிரங்கண் பெற்றான்
பன்னகநா யகனுமந்தத் தலத்தின் மாட்சி
பகர்வதற்கே யனையதொகை முகங்க ளுற்றான்
துன்னுபிற சுரர்களுமன் னதனேர் நோக்கித்
துலங்கிடுகண் ணிமையாமல் இமையோ ரானர்
என்னவுரைத் திடத்தகுமந் நகரின் பொற்பை
யாமெடுத்திங் கிசைப்பதனுக் கிசையு மன்றே. 51

திருநகரச்சிறப்பு முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் — 129.

---

50. இடைமருதை ஆலயமாக வைத்து, ஏனைய தலங்களைச் சுற்றாலய மாகச் சொல்லுவது இச்செய்யுள். இதனைத் திருவிடைமருதூருலாவினும், க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழினும் காண்க.

51. ஆதரம் - விருப்பம். பன்னகம் - பாம்பு. நாயகன் - ஆதிசேடன்.

# நைமிசாரணியச்சிறப்பு

[முன்னொருகாலத்து முனிவர்கள்யாவரும் பிரமதேவரை அடைந்து வணங்கி நின்று 'கருணைக்கடலே! நிலவுலகத்திலே யாங்கள் மகிழ்வுடன் தவஞ்செய்து சிறந்தபயனை அடைதற்குரிய இடம் ஒன்றைச் சொல்லி யருளுக' என விண்ணப்பித்தனர். அம்முனிவருடைய விண்ணப்பத்தைக் கேட்டருளிய பிரமதேவர் தருப்பையை எடுத்து ஒரு சக்கரவடிவாகச்செய்து பூமியில் உருட்டிவிட்டனர். முனிவர்களே! நீங்கள் இந்தச் சக்கரத்தின் பின்னரே தொடர்ந்துசென்று இது தங்குமிடத்திலே இருந்துகொண்டு தவஞ்செய்வீராக எனக் கட்டளையிட்டனுப்பினர்.

பிரமதேவர் இட்ட கட்டளையைச் சிரமேற்கொண்ட முனிவர்கள், சக்கரத்தின் பின்னரே செல்வாராயினர். அச்சக்கரம் உருண்டோடி விரைந்துசென்று கங்கையாற்றின் பக்கத்திலே ஸ்ரீகாசியின் வடகிழக்குத் திசையிலேதங்கியது. முனிவர்களும் அங்கே தங்குவாராயினர். நேமியின் சம்பந்தத்தால் உண்டாயினமையின் அவ்வனம் 'நைமிசவனம்' எனப்பெயர் பெறுவதாயிற்று. அந்தத் தவவனத்தில் வசிக்கும் புள் விலங்கு முதலியனவும் ஒல்லும் வகையிலெல்லாம் முனிவர்களுடைய தவத்துக்குரியன கொடுத்து உபகாரம் செய்தன.

அந்த நைமிச வனத்தில் ததீசி, சதானந்தர், சித்தர், கண்ணுவர், அத்திரி, திரிசடி முதலாகவுள்ள முனிவர்கள்யாவரும் ஒருங்குகூடி வேள்வி ஒன்றை விதிப்படி செய்தனர். அந்த வேள்வியைக் காணும்பொருட்டுச் சூதமுனிவரும் சிவவேடப் பொலிவழகுடனே அவ்வனத்தையடைந்தனர். சூதமுனிவரைக்கண்ட மாதவத்தோர் அனைவரும் எதிர்சென்று வணங்கி அவரை அன்புடன் அழைத்துவந்து ஆசனத்தில் இருத்தி, உபசாரங்கள் யாவற்றையும்செய்து முகமன் கூறினர். சூதமுனிவரும் அவரவருக்குரிய நன்மொழி பகர்ந்தார். வேள்வியும் செவ்வே முற்றுப்பெற்றது. பின்னர் நைமிசமுனிவர்கள் அச்சூதமுனிவரைப் பார்த்து, 'ஐய! எல்லையில்லாத தலங்களும், தீர்த்தங்களும் உள்ளன; சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்களின் பெருமையை யாங்கள் கேட்க விரும்பினோம்; அவற்றுள், விரைவிலே மனத்திலே நினைத்தவற்றை எளிதினில் கொடுக்கவல்லதும் சிவபெருமான் எப்பொழுதும் அன்புடன் நீங்காமல் எழுந்தருளியிருப்பதும் ஆகிய தலம் ஒன்றைப்பற்றி விவரமாக அருளிச்செய்யவேண்டும்' என வேண்டினர்.

சூதமுனிவர் அதனைக்கேட்டு உளமகிழ்ந்து, ஐம்புலனையும் வென்ற அருந்தவ முனிவிர்காள்! நீங்கள் விரும்பியபடியே எல்லாவற்றையும் அளிக்கத்தக்க தலமொன்று உளது; அஃது இடைமருது என்பது; மிக்க பெருமையினையுடையது; அதனை உங்களுக்குச் சொல்லுவேன் என்றார். பின்பு, சூதமுனிவர் திருவிடைமருதையும், மருதவாணரையும், பெருநல மாமுலையம்மையையும் தியானித்துச் சிறிதுநேரம் ஆனந்த பரவசராய் இருந்தனர். வெதிரிமா வனத்திலிருந்து வேதங்களை நான்காகப் பகுத்து உலகினுக்கு அருளிய வியாசமுனிவர் முன்னர் பதினெட்டுப் புராணங்களை அருளிச்செய்தனர். அப்புராணங்களை அம்முனிவர் எமக்கு உபதேசித் தருளினர். இவைகளையெல்லாம் பெருவிருப்புடைய சிவபுண்ணிய முதிர்ந்த வர்களுக்கு அவர் விருப்பத்தை அறிந்து கூறுவாயாக எனக் கட்டளை யிட்டனர். அப்பதினெண் புராணங்களில் சிவபெருமானுக்குரியன பத்து. அவை: காந்தபுராணம், வாமனபுராணம், பிரமாண்டபுராணம், மார்க்கண் டேயபுராணம், இலிங்கபுராணம், கூர்மபுராணம், மற்சபுராணம், வராக புராணம், பவிடியபுரா்ணம், சைவபுராணம் என்பனவாம். நாரதியபுராணம், வைணவபுராணம், காருடபுராணம், பாகவதபுராணம் என்னும் நான்கும் விஷ்ணுபுராணங்களாம். பதுமபுராணம், பிரமபுராணம் என்னும் இரண்டும் பிரமனுக்குரிய புராணங்களாம். ஆக்கிநேயபுராணம் அக்கினிக்குரியது; பிரமகைவர்த்தம் சூரியபுராணமாம். இவைகளில் சிவபுராணங்கள் பத்தும் சாத்துவிகபுராணங்கள். சத்துவகுணம் வெண்ணிறமுடையதும் சுகத்துக் கும் ஞானத்துக்கும் இடமுமாம். யோகிகளுக்கு ஞானோபதேசம்செய்யும் சிவ பெருமான் தெளிபளிங்கு வடிவினராய் எங்கும் உறங்காது பிராமணுதி பதியாயிருப்பார். ஆதலால், இப்பதினெட்டினுள்ளும் சிவபுராணங்கள் பத்துமே உயர்ந்தனவாம். ஆகையால், சிவபத்தியுடையோர் விதிப்படி மெய்யன்போடு சிவபுராணங்களையே கேட்கக்கடவர்.

இனி, காந்தபுராணம் இலிங்கபுராணம் பிரமகைவர்த்தம் என்னும் புராணங்கள் இடைமருதின் பெருமையை நன்கு எடுத்துக் கூறுவனவாம். ஆகலின், அவற்றை உங்களுக்குக் கூறுவோம் கேட்பீர்களாக எனச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

முன்னமோர் காலம் தன்னின்மா தவத்து முனிவர்க ளியாவரும் சென்று [ந்து
நன்னர்செய் வனசப் பொகுட்டின்விற் றிருக்கும் நான்முகக் கடவுள்பா லடை
பொன்னடி வணங்கிக் கருணையங் கடலே புவியிடை யாங்களுண் மகிழ்ந்து
துன்னுநற் றவஞ்செய் தரும்பல னடையச் சொல்கவோ ரிடமினி தென்றார். 1

---

1. வனசப் பொகுட்டு - தாமரைப் பூங்கொட்டையாகிய பீடம்.

மற்றவர் மொழியுட் கொண்டலர் மிசையோன் மருங்குறு மொருதருப் பையி
பற்றியோர் நேமி யாக்கியங் கதனைப் பார்மிசை யுருட்டிமுன் நீவிர் [னைப்
உற்றிடு மிதன்பின் நடந்திடு மிதுசென் றுறைந்திடுங் கானக மதுதான்
குற்றமில் குணத்தீர் நல்வழி யென்னக் குறித்திடு மூதுரை கொடுத்தான். 2

இரவிவிற் றிருக்கும் எழுபரித் தடந்தேர் ஏற்றிடு நேமிசென் றிடுதல்
ஒருவியப் பலவென் றுரைத்திடத் தனித்தாங் கூர்ந்திடு நேமியின் பின்னர்
இருடிக ளெவரும் அயன்விடை மேற்கொண் டேகின ரதுபகீ ரதியாம்
திருநதிப் பாங்கர்க் காசியின் வடகீழ்த் திசையினிற் சென்றுதங் கியதால். 3

தூமறை யுருக்கொண் டேகுவ தென்னத் தொடர்ந்திடு மாதவ முனிவர்
நேமியங் குறையக் கண்டனர் தாமும் நின்றனர் நிறைதவ மியற்றி
ஏமமுற் றிடுநற் றலமிதே யென்ன இலங்குமக் கானகந் தனக்கு
நாமமிந் நேமி தங்கிய திறத்தால் நைமிச மெனப்பொருந் தியதால். 4

மாயனை நிகர்க்கும் பூமணம் பெறலான் மயின்மிசை யிருப்பதா லெனையாள்
சேயினை நிகர்க்கும் கொண்டலூர்ந் திடலால் தேவர்க ளிறைவனை நிகர்க்கும்
பாயதா மரைதங் கலின்விதி நிகர்க்கும் பசுமையா லுலகினை யீன்ற
தாயினை நிகர்க்கும் கலைநிறைந் திடலால் தண்மதி நிகர்க்குமவ் வனமே. 5

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அணிதரு கோங்க மெங்கும் அதனரு கோங்க மெங்கும்
திணிதரு தமால மெங்கும் செறிநரந் தமால மெங்கும்
தணிவில்பைங் கோல மெங்கும் சாற்றுதற் கோல மெங்கும்
கணியுடன் சால மெங்கும் கலந்திடு விசால மெங்கும். 6

---

2. நேமி - சக்கரம்.

3. இரவி - சூரியன். ஒரு வியப்பு அல. பகீரதி - கங்கை; காரணக்குறி.

4. நைமிசம் - நேமியினதுசம்பந்தம் உடையது. வடமொழித்தத்தித பதம்.

5. பூ மணம் பெறலால் - பூக்களின் மணத்தைப் பொருந்துதலால்: பூ - பூமி, மலர். பூமிதேவியை மணஞ்செய்தலால். ஸ்ரீதேவி பூதேவிகள் திருமாலின் மனைவிகள். சேய் - முருகக்கடவுள். மிசை - மேல். கொண்டல் - மேகம். தேவர்கள் இறைவன் - இந்திரன். விதி - பிரமதேவன். தாய் - உமாதேவியார். கலை - பதினாறு கலைகள், மான்கள்.

6. தமாலம் - பச்சிலைமரம். நரந்தம் ஆலம். தக்கோலம் - வால்மிளகு. கணி - வேங்கை. சாலம் - ஆச்சாமரம். கோலம் - பாக்கு. சாற்றுதற்கு ஓலம்.

தவளித வருக்க மெங்கும் தாதகி வருக்க மெங்கும்
அவமில்சம் பகங்க ளெங்கும் அலர்கொள்சம் பகங்க ளெங்கும்
குவிதரு கடுக்கை யெங்கும் குருந்தில கடுக்கை யெங்கும்
தவவொளிர் சோதி யெங்கும் தழைந்தெதி ரிருத்தல் கண்டார். 7

காவுற வளரும் தேமா புளிமாநற் கருவி ளந்தண்
கூவிள மருவும் சீரும் குலவுகாய் கனியின் சீரும்
பூவுட னிழலின் சீரும் புகலுநேர் நிரைய தாகிப்
பாவுறு சீரு மெங்கும் பார்த்தனர் மகிழ்ச்சி பெற்றார். 8

அன்னதில் வேள்விச் சாலை அருட்கதை வேள்விச் சாலை
துன்னிடு யோக சாலை சுவைதரு பாக சாலை
வன்மறை நவிற்று சாலை வளர்தவ மியற்று சாலை
இன்னபல் சாலை செய்தங் கிருந்தனர் தவஞ்செய் கின்றார். 9

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கரங்கொடு பன்ன சாலைகள் புதுக்கக் கட்டிநின் றிபக்குழாம் களிக்கும்
உரங்கிளர் கலைகள் இறந்திடு கலையின் உரிகொடு முனிவர்முன் விரிக்கும்
குரங்கினங் கிழங்கு தருப்பைமா விலைதேன் குறித்திடு சமிதைகொண் டளிக்கும்
மரங்களுந் தாமே வணக்கமுற் றருகே மலரொடு காய்கனி குவிக்கும். 10

நடனுறு மயில்கட் குலவுபச் சோந்தி நறுங்கனி பறித்தெதிர் நீட்டும்
படவர வதன்மேல் படும்வெயில் மயில்கள் படர்சிறை விரித்தினி தோட்டும்
கொடுவரிக் குலந்தம் மடிசுரந் திடுபால் கோவிளங் கன்றினுக் கூட்டும்
வடுவறு மடங்கல் மறந்தருந் தொழிலை மறந்தருந் தவநெறி காட்டும். 11

---

7. தாதகி - ஆத்தி. அவம் இல் சம்பகம். கடுக்கை - கொன்றை. குருந்து இலகு அடுக்கை. தவ - மிகுதி; உரிச்சொல்.

8. மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர், கனிச்சீர், பூச்சீர், நிழற்சீர் முதலிய யாப்பிலக்கணத்து ஈரசைச்சீர் மூவசைச்சீர் நாலசைச்சீர்கள் தொனித்தல் காண்க. பா உறு சீர் - பாவின்கண் உள்ள சீர்கள், பரவுதலுற்ற சிறப்பு.

10. பன்னசாலை - தழைக் குடிசை. பர்ணம் - தழை. இபக்குழாம் - யானைக் கூட்டம். உரம் - வலிமை. கலை - மான். உரி - தோல். சமிதை - ஓமச் சுள்ளி. வணக்கமுற்று - வளைந்து.

11. கொடுவரி குலம் - வேங்கையினது கூட்டம். கோ - பசு. மடங்கல் - சிங்கம். மறம் தரும் தொழில் - கொல்லும் தொழில். மறந்து அரும் தவநெறி காட்டும்.

பொழுதினுற் றிறைஞ்சிக் கிள்ளையைத் தீஞ்சொற் பூவைமற் றிருவென விருந்
கெழுதுசித் திரத்தி னடங்கிவாய் செவியா எழிற்சிவ கதையமு தருந்தி [தாங்
முழுதுமுள் ளத்துள் விடாதமைத் தேக மொழிந்தபின் னேகிடும் தெய்வம்
தொழுதுபைங் கிள்ளை முகமலர்ந் துரைக்கும் தொகுத்ததன் அகத்தினிற்
பொருந்த. 12

கலிநிலைத்துறை

இத்த கைப்பெருஞ் சிறப்புற விருந்திடு நாளில்
உய்த்தி டுந்தவத் ததீசிமிக் குயர்சதா னந்தர்
சித்தர் கண்ணுவ ரத்திரி திரிசடி யாதி
மெய்த்த வத்தினோர் கூடிநல் வேள்வியொன் றிழைத்தார். 13

அந்த வேள்விபார்த் திடும்பொருட் டருந்தவச் சூதன்
சந்த முற்றகண் மணியொடு தயங்குவெண் ணீறும்
சுந்த ரம்பெறத் தரித்திடு மிடந்தொறும் துலங்க
வந்த ணந்தனன் கண்டனர் மாதவத் தவர்கள். 14

உவகை யுற்றெழுந் தெதிர்கொடு முகமனன் குரைத்தோர்
தவிசின் மீதுற விருத்தினர் தாங்களு மிருக்க
நவையில் சூதனு மவரவர்க் கிசைந்தன நவின்றான்
அவிய ளித்திடு வேள்வியு முடிந்ததாங் கதன்பின். 15

மாத வத்தினோர் சூதனை நோக்கிநும் வதன
சீத பங்கய மலர்ந்தெதிர் செப்பினீ ரனந்தம்
கோதி லாதநற் றலங்களும் தீர்த்தமும் குலவும்
ஈதி வற்றரன் றலக்கதை விரும்பினோ மின்னம். 16

அத்த லஞ்சிறு பொழுதினி லகத்தினிற் குறிக்கும்
எத்த கைப்பெரும் பயன்களும் எளிதினிற் கொடுக்கும்
இத்த கைத்ததாய்க் கொடுவினை யெவையுமாற் றுவதாய்
நித்த னன்புறு மிடத்ததாய் நிலவிட வேண்டும். 17

---

12. தீஞ்சொல் - இனிய சொல். பூவை - நாகணவாய்ப் புள்.

14. சந்தம் - அழகு. கண்மணி - உருத்திராக்கம். மா தவத்தவர்கள்.

15. முகமன் - உபசார வார்த்தை. தவிசு - ஆசனம். நவை - குற்றம். அவி - அவிர்ப்பாகம், தேவருணவு.

16. வதனம் - முகம். சீதபங்கயம் - குளிர்ந்த தாமரை. மா தவத்தினோர் - நைமிசாரணிய முனிவர்கள். அனந்தம் - எல்லையில்லாதன.

17. அகத்தினில் - மனத்தில். குறிக்கும் - எண்ணுகின்ற.

வேத வாகம புராணமாம் விளங்கிருங் கடலை
ஓது நும்மதி மந்தரங் கொடுகடைந் துதிக்கும்
தீதி லத்தலக் கதையெனும் தெளிவுறு மமிர்தை
ஏதில் வாக்கெனுங் கரத்தினு லெந்தமக் கருள்விர். 18

என்று ரைத்தனர் சூதன்மற் றிகலுமைம் புலனும்
வென்ற மாதவ முனிவிர்நீர் விருப்புறு தலமும்
ஒன்று பாரிடை யுளதிடை மருதென வோதும்
துன்று சீரினை மருவிய தஃதெனச் சொல்லி. 19

திரும கிழ்ந்துறைந் திடுமிடை மருதினைச் செல்வ
மருத வாணனைப் பெருநல மாமுலைக் கொடியைக்
கருதி நீடெழு மானந்தக் கடலிடை மூழ்கி
ஒருமு கூர்த்தமங் கோவிய மொத்திருந் ததன்பின். 20

வெதிரி மாவனத் திருந்திரு வேதங்க ளவையும்
சதுர்வி தப்படுத் திசைத்திடு வியாதனும் தவத்தோன்
புதிய வின்னமு தென்னவீ ரொன்பது புராணம்
கதியு றும்படி யெமக்குமுன் கருணைவைத் துரைத்து. 21

விரவு மின்னவை தவத்துட னருளுறு மேலோர்
பரவு காதலின் வினுவிடிற் பகரென்று னவற்றுள்
மருவு மீசன்மா லயன்பகல் வன்னிமற் றிவர்க்கு
நிரல்கொள் பத்துநான் கிரண்டுட னிகழ்த்துமொவ் வொன்றும். 22

காம னைப்பொடி செய்தவற் குரியன காந்தம்
வாம னம்பிர மாண்டமொண் மார்க்கண்ட மிலிங்கம்
கூர்ம மச்சம்வ ராகமே பவுடிகம் குறிக்கும்
நேம முற்றிடு சைவமென் றிசைக்குமீ ரைந்தும். 23

---

18. மதியாகிய மந்தரமலை : வேதாகம புராணம் கடல், மதி மந்தரம், கதை அமிர்து, வாக்குக் கரம் என்க. முற்றுருவக அணி.

19. இகலும் - மாறுபடும், பகையினைச் செய்யும். பார் - பூமி.

20. ஆனந்தமாகிய கடல். ஓவியம் - சித்திரம். நீடுஎழும் - மிக்கெழும்.

21. வெதிரிமாவனம் - வியாச முனிவர் இருப்பிடம். சதுர்விதம் - நான்குவகை. ஈர் ஒன்பது - பதினெட்டு. கதி - வீடுபேறு.

22. பரவு காதல் - மிக்க விருப்பம். பகல் - சூரியன். வன்னி - அக்கினிதேவன். நிரல் - முறையே. பத்தும் நான்கும் இரண்டும் ஒவ்வொன்று ஆம் என்க.

23. காமனைப் பொடி செய்தவன் - சிவபெருமான். நேமம் - நியமம்.

நார ணன்றனக் குரியவை நாரதம் விண்டு
காரு டந்திகழ் பாகவ தப்பெருங் காதை
ஆர ணற்கியல் பதுமமும் பிரமமு மருணற்
கோரும் பிர்ம்மகை வர்த்தமாக் கினேய ந்தீக் கோதும். 24

ஈச னீடிசைக் காந்தமு மிலிங்கமு மிரவி
மாசில் வண்கதைப் பிரமகை வர்த்தமு மருவி
வீசு திண்புக ழிடைமரு தெனுமதன் பெருமை
பேசு மன்னவை யுமக்குநாம் பெரிதுரைத் திடுதும். 25

என்ன மாதவர் மகிழ்வுற வெதிர்விரித் துரைத்தான்
அன்ன வன்திருப் பதமல ரகத்தினும் சிரத்தும்
மன்ன வைத்தவ னிசைத்தவா வடசொலா மதனை
உன்னு தென்சொலிற் புகலுவாம் தமிழினோ ருணர. 26

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உரைதரு தலவி சேட முபதேச மகிமை யீசன்
திருவிளை யாடல் வெற்பின் சிறுவிதன் தவத்தி னுற்றல்
பரன்றனைப் பூசை செய்த பரிசுவெங் கொடியொன் ருடி
விரவுபொன் னிறமாய்ப் பின்னர் வெள்ளிவெற் படைந்த வாறு. 27

உரோமசன் பூசை மற்றை யோதுமார்க் கண்டன் காதை
தராதலம் புகழ்சு கீர்த்தி மன்னவன் தன்மை மேன்மை
விராவுகா சிபன்றன் காதை வெற்றிவேற் குமர னெய்திப்
பராவல்செய் திறையோன் றன்னைப் பரிந்துபூ சித்த தன்மை. 28

வாணுத லிமயச் செல்வி மன்னுகா ருணியத் தீர்த்தம்
பாணமா தீர்த்த மோங்கு பராசர தீர்த்த மேன்மை
நீணலச் சோம தீர்த்தம் நிகழுருத் திரமா தீர்த்தம்
நாண்மலர்ப் பதுமப் பேரான் நண்ணிய புனித தீர்த்தம். 29

---

24. நாரணன் - திருமால். ஆரணன் - பிரமதேவர். அருணன் - சூரியன். தீ - தீக்கடவுள்.

25. ஈசன் நீடு இசை காந்தம் - சிவபெருமானது மிக்க புகழைக் கூறும் காந்தபுராணம்.

26. அகம் - மனம். மன்ன வைத்து அவன்.

27. வெற்பின் சிறுவி - மலையரயன் புதல்வியாகிய பார்வதிதேவியார். பரன் தனைபூசைசெய்த பரிசு - பெருமான் தன்னைத்தானே பூசித்ததன்மை.

28. பராவல் - பரவுதல், துதித்தல். பரிந்து - விரும்பி.

மிக்கபாண் டவர்கள் தீர்த்தம் விண்புரந் திடுவோ னுதித்
திக்கிறை யவர்கள் தீர்த்தம் திருவுறு கண்ண தீர்த்தம்
தக்கசீர்க் காக தீர்த்தம் சாற்றிடு கெங்கா கூபம்
சக்கர கருட தீர்த்தம் முதலிய தசதீர்த் தங்கள். 30

கச்சப தீர்த்தம் நீடு கவுதம தீர்த்தம் யாரும்
மெச்சுகல் யாண தீர்த்தம் விளங்கிடு சேட தீர்த்தம்
விச்சைகொள் கந்த தீர்த்தம் வெள்ளைவா ரணத்தின் தீர்த்தம்
இச்சையின் இயம்ப லுற்ற இவ்வகைத் தீர்த்தக் காதை. 31

தெரிதரு வீர சேனன் சித்திர கீர்த்தி யெங்கும்
விரிதரு சீர்த்தி விச்வா மித்திரன் கூட லுற்ற
வரகுணத் தென்னன் காதை வலனுறு நலன யோத்தி
வருயுவ னுச்சு வன்சீர் மாந்தாதாப் பெற்ற பேறு. 32

மாசறு வசுமன் னன்சீர் வளரஞ்சத் துவசன் காதை
வீசுறு புகழ்செய் தேவ விரதனந் தகன்றன் வண்மை
பூசமான் மியத்தின் தன்மை பொதியுறு வாடல் மீன்கள்
ஈசனீ டருளி னுவி யெய்தல்பொன் வளவன் தன்மை. 33

சுணங்கன்மா முத்தி யெய்தல் சொற்றிரி யம்ப கன்சீர்
இணங்கிடு மினைய யாவும் இருபத்தைந் திரண்டி ரண்டின்
கணங்குலாஞ் சருக்க மாக்கிக் கருதிடு விருத்த மென்னும்
மணங்குலாங் கவிதை தன்னுல் வகைபட வுரைத்தல் செய்வாம். 34

நைமிசாரணியச்சிறப்பு முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் — 163

---

31. கச்சபம் - ஆமை. வெள்ளைவாரணம்-வெள்ளையானை; ஐராவதம்.

32. வரகுணத் தென்னன் - வரகுண பாண்டியன். வலன் - வெற்றி. கூடல் - மதுரை.

33. வாடல் மீன் - மீன் உணங்கல். ஆவி - உயிர். வளவன் - சோழன்.

34. சுணங்கன் - நாய். மணம் குலாம் கவிதை.

## முதலாவது

# தலவிசேடச் சருக்கம்

[சையமலைச்சாரலில் ஓரிடத்திலே வசிட்டர், சுமந்து, விசுவாமித்திரர், கவுதமர் முதலிய பல முனிவர்கள் ஒன்றுகூடினர். தவம், வேள்வி, தருமம் முதலியவைகளை எத்தலத்திலிருந்து செய்யின் மிக்க பயனை விரைவில் நாம் பெறலாம் என ஆலோசித்தனர். அம்முனிவர் கூட்டத்திலே ஒருவர் காசியே தக்கது என்றார். மற்றொருவர் தில்லையே என்றனர். ஒருவர் திருவண்ணாமலையே சிறந்தது என்றார். வேறொருவர் ஆரூரே அமையும் என்று கூறினர். இன்னொருவர் மதுரையே என்றனர். இவ்வாறு பலரும் அவரவருக்கு இயைந்த ஒரு தலத்தைச் சொல்லி வந்தனர். அப்பொழுது முருகவேள் மயில்வாகனத்தின்மீது ஏறி அவ்விடத்துக்கு எழுந்தருளி வந்தார். முருகவேளைக்கண்ட முனிவரனைவரும் பொருக்கென எழுந்து அச்சமுற்று மகிழ்ச்சிகூர்ந்து வணங்கித் துதித்து நின்றனர். உபசாரங்கள் பலவற்றையும் செய்து முருகவேள்பால் அணுகிநின்று 'யாங்கள் வேள்வி ஒன்று இயற்றக் கருதியுள்ளோம்; அவ்வேள்வியை அடியேங்கள் செய்யுங் காலத்து மந்திரம், கிரியை, திரவியம் முதலியவற்றில் ஏதேனும் தவறுத லாகக் குறைகள் வந்துசேரினும் அக்குறைகளைப் போக்கி நிறைவு செய்தற் குரியதும், அரக்கர் முதலியோரால் கெடுதி நேராதிருப்பதுமாகித் தன் பெருமையால் எத்தலம் மேம்பட்டு விளங்குவது? அதனை எங்களுக்குச் சொல்லியருளவேண்டும்' என வினவினர்.

அம்முனிவர்வினவினைக் கேட்டருளிய முருகக்கடவுள் முனிவர்களை நோக்கி, முனிவர்களே! முன்னொருகாலத்துச் சிவபெருமான் உமாதேவியா ரிடத்திலே தலங்களின் மகிமையைச் சொல்லும்போது விளையாட்டாகக் கேட்டுவைத்ததுண்டு; சோதி எனவும், தலமெனவும் இரண்டு உண்டு. அவற்றுள், சோதி என்பது வேதம் ஆகமம் புராணம் மிருதி ஆசிரியன் யோகிகள் மந்திரம் சூரியன் அக்கினி அந்தணர் விபூதி முதலியன. அவற்றுள் நாம் விளங்கித் தோன்றுவோம். நிலவுலகத்திலே விளங்கும் தலங்கள் ஒன்று என்றது காசி, காளத்தி, கேதாரம், ஆரூர், வலஞ்சுழி, ஏரகம், தில்லை, திருவெண்காடு, குடந்தை, இடைமருது என்பன. முத்தித் தலங்களும் பல; அத்தலங்களிலும் உறைவோம்; அவை: அயோத்தி, மதுரை, மாயை, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகை என்பன. அவைகளுள்

திருவிடைமருதூர் என்ற தலமே சிறந்தது; அநாதியாகவே விளங்கும் தலம் அதுவாகலின் என்று சிவபெருமான் அருளிச் செய்தனர். ஆதலின், நீங்கள் திருவிடைமருதூர் சென்று உங்களுடைய எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளுங்கள் என அருளினர். அதனை முனிவர்கள் கேட்டு ஐயனே! அந்தத் தலவிசேடத்தையும் சிறிது அருளிச்செய்யவேண்டும் என வேண்டினர். அவ்வாறே முருகக்கடவுளும் தலத்தின் விசேடத்தை முனிவருக்குச் சொல்வாராயினர்.

திருவிடைமருதூர், சண்பகாரணியம், சத்திபுரம், தபோவனம், சோதிநகர், சருவதீர்த்தபுரம், வில்வவனம், தருமவிருத்திபுரம், வீரசோழநகரம், சிவலோகம், செல்வவிருத்திபுரம், முத்திபுரம் என்னும் பன்னிரு பெயர்களைக் கொண்டு அத்தலம் விளங்குவது. அன்றியும், பராசத்தியின் இதயகமலம் போல்வது; ஒப்பில்லாதது. பூரண சின்மயானந்த தனிச் சோதி கருணையுடன் அத்தானத்தில் விளங்குகின்றது. மருதவனத்தின் இடையிலே பொருந்திய காரணத்தால் அது இடைமருது என்னும் பெயர் பெற்றது. இறைவர் சோதி வடிவினராதலால் அது சோதிநகரம் என்றும், சண்பகவனமாதலால் சண்பகாரணியம் என்றும், சத்தி அணைந்துறுதலால் சத்திபுரம் என்றும், முத்தியைத் தருதலால் முத்திபுரம் என்றும், வில்வ மரங்கள் நிறைந்திருத்தலின் வில்வவனம் என்றும் காரணப்பெயர்கள் பெற்றது. இடைமருது என்னும் தலமானது தவம், புகழ், மெய்ஞ்ஞானம், திடம், பொறை, பொருள், வேள்வி, சராசர உயிர்கள் முதலியவற்றைப் பெற்ற தாயெனப் பாதுகாப்பதாம். இன்னும், அத்தலத்தை வாசமாகப் பொருந்தினோர் பிரமதேவன் விதித்த விதியையும் வெல்வர். இயமபயம் கனவிலுமின்றாம். அத்தலத்திலே காலன் வாரான். இடைமருதில் மறந்து அடிவையேல் எனத் தூதுவர்கட்கு இயமன் நாடோறும் சொல்லுவான். இடைமருதில் உள்ளோர் எதிர்ப்படினும் இயமன் அஞ்சுவான்.

திருவிடைமருதூரை அடையும் புண்ணியமுடையோரை நவக்கிரகங்கள் துன்பம் செய்யா. பூதம், பசாசு முதலியன பீடிக்கமாட்டா; துன்பம் அடையா. வைரவக்கடவுள் ஆணையால் தவம் தானம் யோகம் முதலியன செய்யுமிடத்து இடையூறு உண்டாகாது. புகழ், ஞானம் முதலியன மிகும். புத்தியும் முத்தியும் எளிதிற் கைகூடும். தானதருமம் செய்யில் பலமடங்கு சிறந்த பயனைத்தரும். வேறு தலங்களில் அசுவமேதம், வாசபேயம், அக்கினிட்டோமம், இராசசூயம் முதலிய யாகங்களைச் செய்த பயனும்; கங்கை முதலிய தீர்த்தங்களில் மூழ்கிவரும் பயனும் இத்தலத்தில் வசிப்போருக்கு எளிதிற்கிட்டும். இத்தலத்திலே உள்ள சோதிலிங்கத்தை வழிபட்டோர்



முருகப்பெருமான் முனிவர்களுக்குத் தலச்சிறப்பு உரைத்தல்

நிறை கல்வியும், அரசச் செல்வமும், வறுமை நீக்கமும், பகை நீக்கமும், புதல்வர் ஆக்கமும், பிணி நீக்கமும் எளிதில் கைகூடப்பெற்றுப் பின்னர் முத்தியும் பெறுவர். சிவபெருமானுக்கு விதிப்படி அபிஷேக ஆராதனை நிவேதனம் தூபதீபம் முதலியன செய்வித்தோர் சிவகணங்கள் போற்றச் சிவலோகத்திலே பிரியாமல் வாழ்வர்.

இடைமருதீசரை வணங்குதற்கு எண்ணி ஒருவர் எழுந்தால் அவர் வினையும் எழும்; நடந்துசெல்லின் அவ்வினை புறத்திலே நடந்து செல்லும்; நடக்கச் செயலின்றி அவர் திரும்பினாலும் அவ்வினை திரும்பிவந்தடையாது. ஸ்ரீ காசியை அடைந்து கங்கையில் மூழ்கிவரும் பலன் அவருக்கு எய்தும். கொலைப்பாவம் செய்தோரும் இடைமருதீசரை வணங்கச்செல்லின் அப் பாவம் வாயிற்புறத்தே மெலிந்து நிற்கும்; தொடராது. பட்டினி கிடந்து நோற்கும் பயனும், பலகாலம் தவம்செய்தபேறும், ஒருநாழிகை பஞ்சாக்கர செபம் செய்து இத்தலத்திலே பெறும் பேற்றுக்கு இணையாகா. இதன் பெருமை ஆதிசேடனாலும் சொல்லுதல் முடியாது. அன்றியும், இங்கு உமாதேவியார் முதலியவர்கள் இறைவனைப் பூசித்துப் பேறுபெற்றனர். இறைவர் தம்மைத்தாமே அருச்சித்தார். பலர் வழிபட்டுப் பழிபாவங்கள் நீங்கப்பெற்றனர் என்று முனிவர்கட்கு முருகவேள் தலமகிமையை அருளிச் செய்தார். அதனைக்கேட்ட முனிவர்கள் இத்தலமகிமையை இந்நாள்வரை அறிந்துகொள்ளாமல் இருந்தோம்; இன்று உமது அருளால் அறிந்து கொள்ளும் பேறு பெற்றோம்; உமாதேவியார் இத்தலத்திலே வந்து தவம் செய்து இறைவரை வழிபடக் காரணமென்னை? என வினவினர். முருகக் கடவுளும் மேலே தொடர்ந்து வரலாற்றை அருளிச்செய்வாராயினர்.]

கலிநிலைத்துறை

புவனம் யாவையும் படைத்தவன் பொருந்தொரு காற்றேர்க்
கவன வாம்பரி நின்றிளைப் பாறிடக் கருதிச்
சவிம ணித்திரள் கொண்டுமுன் சமைத்ததே யென்னத்
தவநி மிர்ந்திலங் கிடுவது சையமாம் பொருப்பு. 1

1. புவனம் - உலகம்: யாவையும் என்றது பதினான்கையும் என்றபடி. ஒரு கால் தேர் - ஒற்றைச் சக்கரம் கோத்த தேர்: அது சூரியன் தேர். கவனம் - வேகம். வாம் பரி: தொகுத்தல்; வாவும் பரி - தாவிச் செல்லும் குதிரை. சவி - ஒளி. தவ - மிகுதிப் பொருட்டு: உரிச்சொல். இலங் கிடுவது - விளங்குவது. பொருப்பு - மலை.

மொழிந்தி டம்மலை யிடத்துறு முதிர்ந்தசூல் மந்திக்
கெழுந்த வன்பொடு கடுவனீ டிருலெடுத் ததன்வாய்ப்
பிழிந்த தேன்வழிந் தருவியா யிடந்தொறும் பெருகும்
செழுந்தண் சாரலி னொருபகல் சிறந்துழி யிருந்து. 2

சுத்த மாதவ வசிட்டனே சுமந்தொடு விசுவா
மித்தி ரன்புகழ்க் கவுதமன் முதலிய மேலோர்
மெய்த்த வம்மகம் தருமங்கள் செயிற்பலன் மிகவும்
எத்த லந்தரும் விரைவினி லென்னவாய்ந் தனரால். 3

ஒருவர் காசியென் றிசைத்தனர் தில்லையென் றுரைத்தார்
ஒருவர் சோணமா சைலமென் ரோதினர் உயர்மற்
றொருவர் நீடெழிற் கமலையோ வென்றன ருகந்தாங்
கொருவர் கூடலோ வெனப்புக லுற்றன ரொருவர். 4

உற்ற வேலையிற் குன்றுதோ ருடுத லுகந்த
கொற்ற வேற்படைச் சூர்ப்பகைச் சேவலங் கொடியோன்
எற்று தெண்டிரைக் கடன்மிசை யிரவிதோன் றுதல்போல்
சுற்றும் வானவர் சூழ்ந்திடத் தோகைமேல் வந்தான். 5

---

2. சூல் முதிர்ந்த மந்தி. சூல் - கருப்பம். மந்தி - பெண் குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு. நீடு இருல் - பெரிய தேன்கூடு. சாரல் - மலைப் பக்கம். சிறந்த உழி - சிறந்த இடம்: அகரவீறு தொக்கது.

3. மெய்த்தவமும் மகமும் தருமங்களும். மகம் - யாகம். ஆய்ந்தனர் - ஆராய்ந்தனர்.

4. சோண மா சைலம் - அருணசலம்: அண்ணமலை. சோணம் - சிவப்பு. சைலம் - மலை. கமலை - திருவாரூர். கூடல் - மதுரை. காசியில் இறக்க முத்தி, தில்லையில் தரிசிக்க முத்தி, அண்ணமலை சிந்திக்க முத்தி, ஆரூர் பிறக்க முத்திதரும் தலங்களாம். மதுரை - துவாதசாந்தத் தலம்.

5. பின் இரண்டடிகள்: ''பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு..'' என்னும் பகுதியை நினைவூட்டுகின்றன. இரவி - சூரியன். தோகை - மயில். சேவலங்கொடியோன் தோன்றுதல்போல் வந்தான் என்க. ''ஞாயிறு இருளைக் கெடுக்குமாறுபோலத் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு மாயையைக்கெடுத்தலின் தொழிலுவமமும், தன்னைக் கட்புலனால் நோக்குவார்க்குக் கடலிற்பசுமையும் ஞாயிற்றின் செம்மையும் போல மயிலிற்பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ண உவமமும் கொள்ளக் கிடந்தமை காண்க'' என்று உரை கூறினர் நச்சினார்க்கினியர்.

கண்ணுற் றுர்வமோ டெழுந்தனர் கதுமெனப் பணிந்து
பண்ணுற் றுர்துதி யரியணை யீந்தனர் பரனும்
நண்ணுற் றனெதிர் பூசனை விதிமுறை நவின்றுர்
எண்ணுற் றுர்தவ மென்செய்தோ மிவண்வர வென்ன. 6

அங்க தன்பினர்ச் சிறுவரை தாழ்ந்தரு கணைவுற்
றிங்கு வேள்வியொன் றிழைத்திடக் கருதின மியாங்கள்
எங்க ளீசர்தம் புதல்வமற் றியாவையு முணர்ந்தோய்
புங்க முற்றிடு மன்னது புரிந்திடு போதின். 7

மந்தி ரத்தினிற் கிரியையில் வளர்திர வியத்தில்
வந்து சேரினு மொருகுறை மருவிவா ளரக்கர்
சிந்தி டாவகை தனதுமான் மியத்தினுல் சிறப்ப
தெந்த மாதல மிகுபல னதுதரு மென்றுர். 8

இத்தி றம்புகல் முனிவரை நோக்கிவே லிளையோன்
உத்த மத்தனிப் புராணங்க ளுமையவட் கெங்கள்
அத்த னேதுநாள் மிகுவிளை யாட்டொடு மவற்றை
உய்த்து ணர்ந்தனன் அவளிடத் திருந்தஃ துரைப்பேன். 9

நீவிர் கேண்மினி மகிழ்ந்துறை தலனெது நிகழ்த்தென்
றுவ லுற்றனை வினவின ளஃதுமுன் னிசைத்தேம்
மேவு வாலையான் மறந்தனை விளம்புது மின்னும்
பாவு சோதிநற் றலங்களென் றிரண்டுள பகரின். 10

---

6. கண்ணுற்று - பார்த்து. கதும் என - விரைவாக. அரியணை - சிங்காதனம். எழுந்தனராகிப் பணிந்து பண்ணுற்றுர் ஈந்தனர் நவின்றுர் எண்ணுற்றுர் என முடிக்க.

7. சிறு வரை தாழ்ந்து - சிறிது காலம் தாமதித்து. இழைத்திட - செய்ய. புங்கம் - உயர்ச்சி, மேன்மை.

8. மந்திரலோபம், கிரியா (தந்திர) லோபம், திரவிய லோபம் என்க. குறை - தாழ்வு. சிந்திடாவகை - சிதையாதவண்ணம். மான்மியம் - பெருமை: மாகாத்மியம் என்ற வடசொற்சிதைவு.

9. அத்தன் - பிதா, கடவுள்: சிவபெருமான்.

10. இசைத்தேம் - சொன்னேம். வாலை - பாலப்பருவத்தள்.

சோதி யென்பதோர் தானமென் றுரைத்தது தூய
வேத மாகமம் புராணம்வண் மிருதிகள் குரவன்
தீதில் யோகிகள் மந்திரம் செங்கதிர் கனலி
ஓது மந்தணர் விபூதியென் றிவற்றினு முறைவோம். 11

தரணி தன்வயிற் றிகழ்ந்திடு தலங்களொன் றென்ற
தருணை காசிகா ளத்திகே தாரந்தென் னூர்
திருவ லஞ்சுழி யேரகந் தில்லைவெண் காடு
மருவு தண்பொழிற் குடந்தைபொன் வளரிடை மருது. 12

ஆதி யாகிய முத்திதந் தருளிடு தலங்கள்
ஓதி டப்புகில் அனேகமுண் டவற்றினு முறைவோம்
கோதி லாங்கவற் றிடைமரு ததிகமாய்க் குலவும்
யாதி னுலெனி லநாதியா யிலங்கலி னென்னு. 13

அத்த லத்துறு மகிமையும் சிறிதெடுத் தறைந்தான்
மெய்த்த வத்தினீ ரத்தல மேன்மையே யாகும்
நித்த னம்பிகை யுடனங்கு நிலவுமெஞ் ஞான்றும்
சித்த மின்புறு பலன்தரும் சென்மினுங் கென்ருன். 14

மாத வப்பெரு முனிவர்கள் வரையுரம் பிளந்த
சோதி வேற்படைக் கரதலத் தோகைவா கனத்து
வேத நாதவத் தலத்துறு விசேடத்திற் சிறிதீண்
டோது கென்றனர் கருணைகூர்ந் தனையவே ளுரைக்கும். 15

---

11. குரவன் - ஆசாரியன். செங்கதிர் - சூரியன். கனலி - அக்கினி. இச்செய்யுளில் சிவபிரான் சாந்நித்தியமுடையராக விளங்குமிடங்கள் கூறப்பட்டன.

12. தரணி - பூமி. இச்செய்யுளில் பதினொரு தலங்கள் கூறப்பட்டன.

13. முத்திநகரங்கள் ஏழு: காசி, காஞ்சி, அவந்திகை, மதுரை, மாயை, அயோத்தி, துவாரகை என்பன. ''அழகிய அயோத்தி மதுரையே மாயை அவந்திகை காசிநற் காஞ்சி, விழுமிய துவரை . . மேலவாய் வீடருள் கின்ற எழுநக ரத்துள்'' (கந்தபுரா - திருநகர. 75). இலங்கலின் - விளங்குதலினல்.

14. எஞ்ஞான்றும் - எப்பொழுதும்.

15. வரை உரம் - கிரௌஞ்ச கிரியின் வலியை. உரம் - மார்பு, நடுவிடம் என்க. வேதநாத: விளி. வேத முதல்வனே என்பது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தகைமைபெறு முயர்சம்ப காரணியம் சத்திபுரம் தபோவ னஞ்சீர்
திகழ்சோதி நகர்சருவ தீர்த்தபுரம் வில்வவனம் செல்வ நாளும்
மிகுதரும விருத்திபுரம் முத்திபுர மிடைமருது விர சோழ
நகரமெனப் புவியிடத்துச் சிவலோக மெனுமதன்ற னுமமாகும். 16

கருதுபுகழ்ப் பராசத்தி விமலமுறு தனியிதய கமல மென்னப்
பொருவிலதாய்ப் பூரணசின் மயான ந்தத் தனிச்சோதி புவனம் போற்ற
விரவலுறு செழுங்கருணை யுடனிருக்கு மிடமாகி விளங்கும் தானம்
மருதவனத் திடைமேவி யிடைமருதென் றதினுமம் வயங்கிற் றன்றே. 17

கொத்துறுசண் பகவனத்தாற் புகல்சம்ப காரணியம் குலவு முன்னர்ச்
சத்தியணை ந் துறைதலினுல் சத்திபுர முயர்முத்தி தருத லாலே
முத்திபுர மிறைசோதி யானதனுற் சோதிநகர் மொழியும் வில்வம்
அத்தமெனச் சூழ்ந்திடலால் வில்வவனம் பிறவுமங்காங் கறிய லாகும். 18

கலிநிலைத்துறை

நற்ற வம்புகழ் தருமநல் விரதமெய்ஞ் ஞானம்
சொற்றி டுந்திடம் பொறைநலம் தொகுபொருள் தம்மை
உற்ற வேள்வியைச் சராசர வுயிர்த்தொகை தம்மைப்
பெற்ற தாயென வளர்ப்பது பேரிடை மருது. 19

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கோலமுறு மனைய நக ரிடத்துற் றேர்கள்
கோகனகன் விதித்தவிதி தனையும் வெல்வர்
காலனச்சம் கனவினிலு மவர்கட் கில்லை
கருதுமந்தப் பதியிடத்தி லவனும் வாரான்
ஏலுமவன் தூதருக்குத் தினமும் சொல்வான்
இடைமருதின் மறந்துமணை ந் திடேன்மி னென்னப்
பாலினவ்வூ ரினர்களெதிர்ப் படினு மஞ்சும்
பார்க்கினருங் குறள்கணத்தோர் வெகுள்வ ரென்றே. 20

---

16. இடைமருதுக்குரிய வெவ்வேறு பெயர்கள் கூறப்பட்டன.

17. விமலம் - பரிசுத்தம்: குற்றமின்மை. கருணை - திருவருட்சத்தி.

20. கோகனகன் - தாமரையிலிருக்கும் பிரமதேவன்.

பூதலத்தி லுயர்ந்தவிடை மருதின் மேவும்
புண்ணியர்க்கு நவக்கிரகத் திடுக்க ணில்லை
பூதமொடு பசாசுதான் வாரா வின்னல்
பொருந்தாது வயிரவன்றன் ஞணை தன்னுல்
பூதமுறு தவந்தான மியோக மாதி
புரிந்திடுங்கா லிடையூறு புணரா தாமுற்
பூதமுறு மினியபுகழ் ஞான நீடும்
புத்தியொடு முத்தியது மெளிதி னுமே. 21

அந்தவளம் பதியிடத்தோர் கவள மன்னம்
அருந்திடநீ ரணுவளவு செம்பொன் தானம்
அந்தணர்கட் களித்தவர்கள் கயிலை சேர்வார்
அகஞ்சமைத்தீந் தவர்திண்கல் லாதி நுண்மண்
அந்தமொரு துகட்கயுத யுகமீ சன்பால்
அமர்ந்திருப்பார் விளைநிலனுக் கரன்போ லாவர்
அந்தமுறு கன்னியரைத் தான மாக
அளித்தவர்க ளரவணையோன் பதவி சேர்வார். 22

தருவுதவு கனிகளொடு காய்கள் மூலம்
சந்தனம்வெள் ளிலைகமுகம் தயில நெய்பால்
மருவுகலை கவிகைபா துகைநீள் கட்டில்
வழங்கினர்கள் வேண்டுமின்பம் மருவி வாழ்வார்
குருடரொடு செவிடர்பித்தர் பிணிய ரூமர்
குறையுடையோர் முடவர்முது கிழவ ரென்னும்
பொருளிலர்க ளெவரேனும் அவர்கட் கன்னம்
புரிந்தளித்தோ ருலகமெல்லாம் புரப்பர் தாமே. 23

விடத்தனியொண் மிடற்றிறைவ னடியார் கட்கு
விருப்பிெனுடு மடஞ்சமைத்தாங் களித்திட் டோர்கள்
உடுத்திடுமென் கலைகொடுத்தோர் சொன்ன மன்னம்
உதவினே ரிம்மையிலும் செல்வ மின்பம்

---

21. இடைமருதை அடையும் புண்ணியம் உடையவர்களுக்கு உண்டாகும் நன்மைகள் கூறியபடி.

22. அயுதம் - பதினுயிரம்.

23. இத்தலத்திலே தானம் செய்வோர், அறம்புரிவோர் அடையும் பேறு கூறப்பட்டது.

அடுத்திருந்து மறுமையினும் நெற்றி மேற்கண்
அமர்ந்திலங்கப் பாரிடங்கள் சூழ வாழ்வார்
கொடுத்திடுவோர் பெறும்பலன்மற் றெருவர்க் குண்டோ
கூறுவது முலகமவர் புகழே யன்றே. 24

புறநகரிற் பரிமேதம் வாச பேயம்
புகலுமக்கி னிட்டோமம் இராச சூயம்
திறனுச்செய் திடுபலனும் கங்கை யாதித்
தீர்த்தமெலாம் படிந்துவரு பலனும் தூய
நெறியுதவு மிடைமருதில் வதிவோர் கட்கு
நேருமனு தினமுமங்கண் இனிது செய்யும்
அறமெவையும் திலமளவு மேரு வாகும்
அல்லதுவெற் பெள்ளளவு மாகா தன்றே. 25

சுருதியிழந் திடுமறையோ னுங்கு மேவிச்
சோதிதனைப் பணிந்திடிற்சூ ரியனே ராவன்
தரணியிழந் திடுவேந்தன் தரணி சேர்வன்
தக்கபொரு ளிழந்தவர்கட் கதுவந் தெய்தும்
பொருபகைமை தவிரவெண்ணில் தவிரு மோங்கு
புதல்வருற வேண்டினரேல் புதல்வ ருண்டாம்
மருவுபிணி தீரவெனில் தீரு முத்தி
வழங்குநகர்க் கிவைகளொரு வியப்போ வம்மா. 26

வீசுபுகழ் மருதீசர் தமக்கு நெய்பால்
வெண்டயிர்தே னுதிகள்கொண் டாட்டு வோர்கள்
வாசமொடு மலரளித்தோர் தூப தீபம்
வகுத்திட்டோ ரனமாதி நிவேதித் திட்டோர்
தேசுபெறு சிவலோகத் தினிது வாழ்வர்
திகழாடல் பாடலிவை செய்வித் தோர்கள்
பேசுமெழிற் கயிலையில்நீ டூழி காலம்
பிரியாது வாழ்வர்சிவ கணங்கள் போற்ற. 27

---

24. மென்கலை - மெல்லிய ஆடை. சொன்னம் - பசும்பொன்.

25. பரிமேதம் - அசுவமேத யாகம். திலம் - எள். வெற்பு - மலை. இடைமருதில் வசிப்போர் அடையும் பேறும், தானஞ்செய்வோர் பேறும் கூறப்பட்டது.

26. சோதி - ஜ்யோதிர்மகாலிங்கம். வழிபடுவோர் பேறுகூறியது.

27. ஆட்டுவோர் - அபிடேகஞ்செய்வோர். அனம் - அன்னம்: இது தொகுத்தல்.

இடைமருதி சனைப்பணிதற் கொருவ ரெண்ணுற்
றெழுந்திடிலங் கவர்வினையு மெழுந்து நிற்கும்
நடையுறிலவ் வூர்நோக்கிப் புறவூர் நோக்கி
நடக்குமது சொல்லாம லவர்க ளேகத்
திடமிலரா யுடனெருகாற் றிரும்பி னாலும்
திரும்பாது சென்றவினை சென்ற தேயாம்
புடவிபுகழ் காசியினுற் றிலகு கங்கைப்
புனல்படிந்து வருபலன்மற் றவருக் கெய்தும். 28

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொலைபுரி வினைசெய் தோர்கள் குலவிடை மருதர் செய்ய
மலரடி வணங்கற் கெய்தின் வாயிலின் புறத்தே மிக்க
மெலிவொடு நிற்கு மன்னோர் வெளிவரிற் குனிந்து கொள்ளும்
வலியர்தம் மருள்பெற் றோரை மற்றையோர் செய்வ தென்னே. 29

பாங்குயர் தலத்தோர் திங்கட் பட்டினி விரதத் தின்பே
ருங்கொரு திங்கள் வாரத் தாற்றிய விரதம் நல்கும்
பாங்குயர் தலத்திற் பல்லாண் டருந்தவம் பயின்ற தின்பே
ருங்கொரு கடிகை மூலத் தாற்றிய செபத்தி னெய்தும். 30

அத்தலத் துமையா ளாதி யனேகர்மெய்த் தவஞ்செய் தாரைந்
தத்தனு தியர்பல் லோரெம் மத்தனை யருச்சித் தாரெம்
அத்தனுந் தன்னைத் தானே அருச்சனை புரிந்தான் மேலும்
அத்தநாட் டிறைமுன் னாகப் பலர்பழி யகற்றி னார்கள். 31

ஆயிரம் வாயி னாலும் அனந்தனோர் பணிய தாகி
ஆயிர முகஞ்சொன் னாலும் அணியிடை மருதின் மேன்மை
ஆயிர மதனி லோர்கூ றுயினு மறைதன் முற்று
தாயிரங் கதிரோ னன்ன வாய்மைசா லருந்த வத்தீர். 32

---

28. புடவி - பூமி.

29. குனிந்துகொள்ளும் - குப்புற்றுக்கொள்ளும். இதில் வேற்றுப் பொருள்வைப்பணி வந்துளது.

30. திங்கள் - மாதம். வாரத்து - விருப்பத்தோடு. கடிகை - நாழிகை.

31. ஐந்து அத்தன் ஆதியர் - ஐந்து கரத்தையுடைய விநாயகர் முதலியோர்.

32. அனந்தன் - ஆதிசேடன். ஆயிரம் கதிரோன் - சூரியன். இவ் விரண்டு செய்யுளும் யமகம்.

என்றனன் முனிவ ரைய வித்தல மகிமை தம்முள்
ஒன்றுமித் திவசங் காறு முணர்ந்தில முணர்த லுற்றேம்
இன்றுன தருளி னுன்மற் றிசைதவ மிமைய மென்னும்
தென்றனிப் பொருப்பின் செல்வி செய்ததென் னிமித்த மென்றார். 33

என்றலு மகிழ்வுற் றந்த இருடியர் விருப்பந் தன்னைக்
குன்றெறி வடிவே லண்ணல் குறித்தருங் கருத்தி தாயின்
நன்றதூஉ முரைத்து மென்ன நவின்றனன் நவின்ற வாறே
துன்றுமக் கறைது மென்னச் சூதமா முனிவன் சொல்வான். 34

தலவிசேடச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 197

---

33. திவசம் - நாள். பொருப்பின் செல்வி - உமாதேவியார்.

34. கருத்து இது ஆயின். துன்று உமக்கு அறைதும்.

## இரண்டாவது

# உபதேசச் சருக்கம்

---

[திருக்கயிலாய மலையானது வெள்ளிமயமாக விளங்குவது; தரும விடை போன்றது; பாற்கடல் திரண்டு மலைபோல் உயர்ந்துளது எனச் சொல்லநிற்பது. அம்மலைச்சாரலில் குறள் வடிவினவாகிய பூதகணங்கள் எண்ணிலாதன உள. அவை சிவபெருமான் திருவடிகளைப் புகழ்ந்து பாடி ஆடி மகிழ்வன. ஆயிரம் இதழ்த்தாமரை ஓடைகள் பல அங்கேயுள்ளன; மணம் வீசும் மலர்கள் நிறைந்த சோலைகள் பல சூழ்ந்துள்ளன. நவமணி களின் ஒளி விளங்கும் வீதிகளும், உருத்திரர்கள் தங்கும் சோதி மாளிகை வரிசையும், தெய்வ முனிவர்கள் தங்குதற்குரிய மடாலயங்களும், மண்டபங் களும் அங்கங்கே அமைந்துள. இப்படிப்பட்ட வீதிகள் புடைசூழ நடுவில் பொன்மயமான மதில்களால் சூழப்பெற்று, நாற்புறங்களிலும் மேருமலை என்னும்படி கோபுரங்கள் மிகஉயர்ந்து விளங்குவன. அம்மலையின் உச்சியில் மகாமேருவின் சிகரம்போல ஒளி மிக்க கோயிலொன்று சிறந்துள்ளது. அக்கோயிலில் பொன்னாலாகிய தூண்களும், இந்திரநீலத்தால் அமைந்த போதிகைகளும், மரகத உத்திரங்களும், பதுமராகக் கொடுங்கைகளும், அதன்மேல் சந்திரகாந்தக் கற்களாலாகிய விட்டங்களும், முத்துக்களால் வேயப்பட்ட விதானங்களும் பொருந்தித் தெய்வ ஒளி வீசும் மண்டபம் ஒன்று விளங்குவதாம். சூரியன் ஒளியும் வெட்கும்படி தேசோமயமானது அம்மண்டபம். அதன் நடுவிலே ஒரு சிங்காதனத்தில் சிவபெருமான் எழுந்தருளியிருந்து உமாதேவியாருக்கு ஆகமங்களை அருளிச் செய்வாரா யினர். சிவபெருமானைத் தரிசித்தற்குப் பிரம விஷ்ணுக்களும் இந்திரனும் வானவர்களும் சமயம் பார்த்துக்கொண்டு தலைவாயிலில் காத்திருந்தனர். பானுகம்பன் முதலிய பூதகணத்தினர் மானமுடையராய்த் தூரத்திலே தூண்மறைவில் நின்றனர். பெருமானுடைய திருக்கடைக்கண் நோக்கம் அவர்கள்மேல் சிறிது பட்டது.

உமாதேவியாருடைய திருமுகத்தைப் பார்த்த வண்ணமாகவே கமலினி முதலிய தோழியர் அன்புடனே தூரத்தில் சுவர் அருகிலே சித்தி ரத்தை ஒத்துநின்றனர். சிவபெருமான் முன்னர் உமாதேவியார் வேறோர் ஆசனத்தில் அருகிருந்து சில வினவினர். இறைவ! ஆகமப்பொருள்களை எடுத்தெடுத்து அடியேனுக்கு அருளிச்செய்கின்றீர். எனக்குள்ள மலைவும்

வேதங்கள் உமது தன்மை இன்னதென்றறியாமல் மயங்குகின்ற செயலும் நன்கு என்மனம் அமைவரக் கேட்கத்துணிந்தேன். 'உலகம் எம்மிடத்துள்ளது, நாம் அவ்வுலகத்திலுள்ளோம்' என அருளினீர். உலகம் அவன் அவள் அது என்னும் பகுப்பினை உடையதாய் விளங்குகிறது. அவற்றுள், உம்மை எவ்வாறு பிரித்தறிவேன். தேவரீர் சாந்தனுகவும் இருக்கின்றீர்; உக்கிரனுகவும் இருக்கிறீர்; மன்மதனை எரித்தொழித்தீர்; என்பால் விருப்பமுடையீர்; மாயைகள் பலப்பல செய்கின்றீர். ஆயினும், நாம் மாயையிற் பொருந்தோம் என்றருளினீர். ஒருதொழிலும் நமக்கிலது என்றீர்; எத்தொழிலும் உம்மையன்றி நடைபெறுமாறில்லை. ஒருருவமும் நமக்கின்று என்றீர்; தூயவடிவுடன் விளங்குகின்றீர். உயிர்களுக்குச் சுகத்தைச் செய்கின்றீர்; அழித்தல் தொழிலையும் செய்கின்றீர். நீர் பிச்சை எடுத்துத் திரிகின்றீர்; உம்மை அடைந்தோர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் அருளுகின்றீர்; உலகுக்கு ஒருவனுகவும் இருக்கின்றீர்; அநேகனுகவும் விளங்குகின்றீர். யான் உம்மை எவ்வாறறிவேன்? என்று உமாதேவியார் பலப்பல வினுக்களை எழுப்பினர்.

அதனைத் திருச்செவியேற்ற சிவபெருமான், உமையே! நம்மிடத்தில் உள்ளது மாயை. அதனைப் பேதித்து நோக்கினேம். பிரிந்து முன்நின்றது. புவனம் முதலியவற்றை ஆக்குக எனப் பணித்தோம். ஆலம்வித்தில் மரம் அடங்கலும் அடங்கியுள்ளது. அதுபோல, மாயையில் செகமெலாம் அடங்கியுளது. ஆயினும் மாயை அறிவில்லாதது, உம்மையன்றிச் செய்ய இயலாதென்றது. பின்பு இச்சை ஞானம் கிரியை என்னும் சத்திகளைத் தந்தோம். இம்மூவகைச் சத்தியில் யாமும் ஓர் உருக்கொண்டோம். தனு கரண புவன போகங்களை மாயையினின்று விரிவாய்த் தோற்றுவித்தோம். ஆன்மாக்களின் நன்மை தீமைகளுக்கு இசைய இத்தநு கரண புவன போகங்களைத் தருவோம். அவ்வாறுக, உயிர்கள் பிறப்பு இறப்புக்களிற் பட்டுச் சுழல்வனவாம். நாம் மாயையின் மயங்கமாட்டோம். இந்திரசாலம், செய்பவனை மயக்குதலில்லை; ஏனையோரையே மயங்கச்செய்யும். அதுபோல மாயையை நாம் இயக்குகின்றேம் ஆகலின், அம் மாயை நம்மை மயக்கா; சத்தியும் நாமும் வேறல்ல ஆதலால் இச்சை ஞானம் கிரியைகளில் பொருந்தியுள்ளோம். அது பூவும் மணமும், சூரியனும் கிரணமும் போல என்றறிக. பராசத்தி, அநாதி நித்தியமாய் விளங்குவது. இச்சாசத்தி, ஒடுங்கிய உயிர்களைக் கருணையால் எடுக்கும். ஞானசத்தி, அவ்வுயிர்களின் கன்மங்களை அறிந்து அவ்வவற்றிற்கேற்ற பயனைத்தருவது. கிரியாசத்தி, உயிர்களுக்கு ஏற்ற அவயவங்களை உண்டுபண்ணும். நாம் ஐந்தொழில் இயற்றல் ஒரு விளையாட்டேயாம்; பாரமின்று. ஞானம் இருவகை; ஒன்று கற்பனை,

மற்றென்று கரணமாம். சத்தியால் மாயையை நீக்குதல் கற்பனை. ஐந் தொழில் இயற்றுதலே கரணமாம். நம் வடிவம் நிஷ்களம் சகளம் வித்தை மாயை என நான்காம்.

மாயையே திருமேனியாக்கொண்டு நிட்களம் சகளம் வித்தைகளை அதிட்டித்துப் பூசை கொள்வோம். சுத்த வித்தை மந்திரமயம். ஆகமம் முதலிய விதிகளால் பூசைசெய்ய அதன்கண் வீற்றிருந்து மெய்யன்பர்கள் வழிபாடு கண்டு அருள்செய்வோம். சகளத் திருமேனியே சத்தியால் வடிவுற்றது; மாதவத்தோர் தியானம் பூசை துதி முதலியவற்றிற்கு நிலைக் களனாயுள்ளது. நிட்களத்தை அடைதற்கு வாயிலும் இதுவே. இந்த வடிவிலேதான் செலுத்துவதும் ஒடுக்கமுமாம். நிட்களம் புலன் முதலிய வற்றைக் கடந்தது. முதிர்ந்த அறிவுருவாயது. அறிவுவடிவாய்த் தியா னிப்போர்கட்கு அறிவுருவாய், உயிர்க்குயிராய், குருவருளினால் அருள் செய்வதாம். சகளவடிவும் நீ, நிஷ்கள வடிவும் நீ, எண்வகையுருக்கொளப் புரிவதும் நீயே, ஐந்தொழிற்செயலும் நீயே, யாம் உன்னிடத்து மகிழ்வோடு உறைவோம். இவ்வாறு நீ பொருந்துவாய். உருப்பெயர் வேறன்றி நாம் வேறன்று. நீரும் தண்மையும்போலப் பொருந்திப் பூரணப்பொருளாயுள்ள நாம் உயிர்களின்பொருட்டு ஐந்தொழிலாற்றுவோம்; உயிர்களுக்கெல்லாம் புத்தி முத்திகளைக் கொடுத்தற்பொருட்டு, பலப்பல உருவமும் செயலும் மேற்கொள்ளுவோம் எனச் சிவபெருமான் உமாதேவியாருக்கு அருளிச் செய்தார். அம்மையார் வணங்கி நின்று, ஐயமெல்லாம் நீங்கியதென்றார். பின்பு, சுவாமீ! உலகத்திலே எத்தலத்தில் தேவரீர் அதிக மகிழ்வுற்று எழுந்தருள்வது என வேண்டினள். இறைவன் அம்மையாருக்கு மேலும் அருளுவாராயினர்.]

கலிநிலைத்துறை

இரும ணிப்பெருங் கோடுபெற் றிலங்கலாற் சுவேத
உருமனுற்றிடும் தகையினு லுமையவ ளொடுதண்
மரும லர்ச்சடைத் தனிமுதல் மகிழ்ந்துறைந் திடலால்
தரும மால்விடை போன்றது கைலையஞ் சயிலம். 1

---

1. இரு மணி பெரு கோடு - பெரிய இரத்தினங்கள்பொருந்திய பெரிய சிகரம், இரண்டு அழகிய பெரிய கொம்புகள். சுவேத உரு மன் உற்றிடும் - வெண்மையான நிறம் நிலைபெறும். சுவேத உரு - வெள்ளிய வடிவம். மரு - வாசனை. தனி முதல் - ஒப்பற்ற முழுமுதற் கடவுளாகிய சிவபெரு மான். தரும மால் விடை - தரும வடிவாகிய பெரிய இடபம்: மால் விடை - திருமாலாகிய விடை எனினுமாம். சயிலம் - மலை.

செங்கண் மாலினை விடுத்தொரு சிறுவனுண் டிடமுன்
அங்க ளித்தல்போல் தனையின்னு மளித்திடா தெவர்க்கும்
துங்க வெற்புவிற் பரன்றனைச் சுமந்துகொண் டினிது
பொங்கு பாற்கடல் இருப்பது போலுமச் சயிலம். 2

அகில லோகமும் கணத்திடை யழித்துட னுக்கும்
இகலு டைக்குறட் பூதங்க ளிலங்குபல் கோடி
பகரு மம்மலைச் சாரலெங் கணுமுயர் பரமன்
உகள பங்கயப் பதம்புகழ்ந் தாடிடு முலாவும். 3

அனைய சாரலின் மீதெழி லாயிரந் தோட்டு
நனைகொ டாமரை யோடையும் நறவமுண் டளிகள்
கனைசெ யப்பொலிந் தாயிரம் யோசனை கமழும்
புனைம லர்ப்பொழிற் குளங்களும் புடைதொறுஞ் சூழும். 4

ஓதி வற்றினுட் கதிர்மணி யொளிர்தரு மருகில்
வீதி யும்புக லமரரோ டுருத்திரர் மேவும்
சோதி மாளிகை நிரைகளும் சூளிகைக் குலமும்
மாத வத்தினோ ருறையுளும் வயின்றொறும் விளங்கும். 5

---

2. செங்கண் மால் - சிவந்த (தாமரை மலர்போலும்) கண்களையுடைய திருமால். சிறுவன் - உபமன்னியு முனிவர்: வியாக்கிரபாதரின் குமாரர். முன் அங்கு அளித்தல்போல். தன்னை - தனை: தொகுத்தல். வெற்பு வில் பரன். சிறுவனுக்குப் பாற்கடல் அளித்தமை: ''பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்'' (திருப்பல்லாண்டு); ''கண் பிசைந் தொருசே யின்னும் கலுழினும் தனைக்கொ டுப்பன், மண்பிசைந் துண்ட மாயன் மறுத்திட வலிய னல்லன், நண்பிசைந் திறைவ னுக்கே நாமிட னுவ மென்று, பண்பிசைந் தலைதிரண்ட பரிசினின் றிடுமக் குன்றம்'' (பிரபுலிங்க - கைலாச - 5).

3. அகிலம் - எல்லாம். இகல் - வலிமை. பரமன் உகள பங்கயம் பதம். உகளம் - இரண்டு. குறட்பூதங்கள் கணத்திடை அழித்துடனுக்கும்: ''நீடுதேவர் நிலைகளும் வேண்டிடின், நாடு மைம்பெரும் பூதமும் நாட்டுவ, கோடி கோடி குறட்சிறு பூதங்கள், பாடி யாடும் பரப்பது பாங்கெலாம்'' (பெரியபுராணம் - திருமலைச்சிறப்பு - 6).

4. தோட்டு - இதழ்களையுடைய. நனை - அரும்பு. ஓடை - நீர்நிலை. நறவம் - தேன். அளி - வண்டு. கனைசெய - ஒலிக்க. ஆயிரந் தோட்டு நனைகொள் தாமரை: ஆயிரம் இதழ்களையுடைய தாமரை என்க.

5. ஓது இவற்றினுள். அமரர் - தேவர். நிரை - வரிசை. சூளிகை - மாளிகையின் உச்சியறை; சூடிகா என்னும் வடமொழித் திரிபென்பர். வயின்தொறும் - இடந்தோறும்.

அலகின் மங்கைய ரிசைக்குமே ழிசையுட னூர்வத்
திலகு தும்புரு நாரத ரிசைக்குமியா ழிசையும்
நிலவு வானமு தெனச்செவி நெறிப்புகுந் துளத்தில்
உலவ மெய்ம்மறந் துறைவரீ சனைத்தொழ வுற்றோர். 6

படக மாதியின் முழக்கமும் பணைமுலை மகளிர்
அடிக டாங்கிடு மணிச்சிலம் போதையு மமர
ருடன ருந்தவர் துதித்திடு மமலையு மொன்றாய்
இடியி னார்த்தலி னுமுற் றிடியுட லிடியும். 7

இன்ன வீதிகள் சூழ்ந்திட நாப்பணுற் றிலங்கு
பொன்னின் மாமதி லேழினும் பொருந்துநாற் றிசையும்
துன்னு கோபுரந் துணைகொள்பொன் மலையெனத் தோன்ற
மன்னு கோயிலொன் றம்மலை யுச்சியின் வயங்கும். 8

கோயி லெங்கணு மமரர்தங் குலமணி மகுடம்
மேய வொன்றொடொன் றுரிஞ்சலின் வீழ்ந்திடு மணியால்
தூய மாமணி வரையெனச் சொலும்படி துலங்கும்
வாயி லெங்கணுங் கணாதிப ரளவிலர் வதிவார். 9

மணிய முத்திய தமனியத் தூண்பல வகுத்திட்
டிணையி லிந்திர நீலவொண் போதிகை யியற்றி
அணிசெ யுத்திர மரகதத் தமைத்துவண் கொடுங்கை
தணிவி னீள்கதிர்ப் பதுமரா கத்தினுற் சமைத்து. 10

---

6. தும்புரு நாரதர் சங்கீத சாகித்தியத்தில் வல்லவர். செவி நெறி - செவியின் வழியே. தொழவுற்றோர் மெய்ம்மறந்துறைவர் என்க.

7. படகம் - வாத்திய விசேடம். ஓதை - ஓசை. அமலை - ஒலி. இடியின் ஆர்த்தலின் - இடிபோலச் சத்தித்தலின். ஈற்றடியில் இடி மடக்கு.

8. நாப்பண் - நடுவிடம். பொன்மலை - மேருகிரி. வயங்கும் - விளங்கும்.

9. குலமணி மகுடம் - சிறந்த நவரத்தின கிரீடம். மணி - மாணிக்கக் கற்கள் எனினுமாம். உரிஞ்சலின் - உராய்தலினால். மாமணிவரை - இரத்தின மலை: மாணிக்கமலை எனினும் பொருந்தும். துலங்கும் - விளங்கும். வதிவார் - தங்கியிருப்பர்.

10. தமனியம் - பொன். போதிகை - தூணின் மேலுறுப்பு: சுமையடைக்கட்டை.

இந்து காந்தவுத் திரங்கண்மி திலங்கிடப் பரப்பிச்
சந்த நித்தில விதானங்கள் சாற்றிடுள் ளெங்கும்
தந்து மீதெழில் விமானமுந் தயங்கிடப் புரிந்த
அந்தண் மண்டப மொன்றுள தாலய நடுவில். 11

அடுக்கும் வச்சிரத் தமைத்தொளிர் விமானமீ தமரத்
தொடக்கு மாணிக்கத் தசும்புறு சோதியின் முன்னர்
நடக்கு மோதின கரன்கதிர் நாளெடு தெற்கும்
வடக்கு மாகவே திரிகுவன் வயங்குமப் பகலோன். 12

ஓங்கு மண்டபத் திடையினே ருரகமா மணிகள்
தாங்கு வச்சிரத் தகட்டெழின் மடங்கலா தனத்தின்
வாங்கு வெண்பிறைச் செஞ்சடை வரதன்வீற் றிருந்து
பாங்கு பெற்றிடு மம்பிகைக் காகமம் பகரும். 13

ஆல மார்மிடற் றிறைவனைப் பணிவதற் கணைந்த
மால யன்புரந் தரன்முதல் வானவர் கணங்கள்
சால்பெ ரும்புகழ்ச் சிலாதரன் றனையனுங் கீது
கால மன்றென மீண்டகன் கடைத்தலை யிருப்ப. 14

பானு கம்பனு தியர்சில பாரிடத் தலைவர்
மான முற்றவர் சேய்மையி னிலங்குதூண் மறைவில்
ஞான நாயகன் பார்வையுஞ் சிறிதுமே னண்ணத்
தான மொன்றினிற் பொருந்திடார் தனித்தனி நிற்ப. 15

---

11. இந்துகாந்தம் - சந்திரகாந்தக்கல். சந்த நித்தில விதானம் - அழகிய முத்துக்களால் கோக்கப்பெற்ற மேற்கட்டி. தயங்கிட - விளங்க.

12. வச்சிரம் - வைரக்கல். தசும்பு - குடம். தினகரன் - சூரியன். கதிர் - கிரணம். பகலோன் - சூரியன்.

13. உரக மா மணி - நாகரத்தினம். மடங்கலாதனம் - சிங்காசனம். வாங்கு - வளைந்த. வரதன் - சிவபெருமான்.

14. ஆலம் ஆர் மிடறு - நீலகண்டம். புரந்தரன் - இந்திரன். கணங்கள் - கூட்டங்கள்: பதினெண்கணங்கள். சிலாதரன் தனையன் - சிலாத முனிவருடைய புத்திரராகிய திருநந்திதேவர். காலம் அன்று என.

15. பானுகம்பன். பாரிடம் - பூதம். மானம் - பெருமை. சேய்மை - தூரம். ஞானநாயகன் - ஞானமே வடிவமாகிய சிவபெருமான். சிறிது மேல் நண்ண தானம் ஒன்றினில் பொருந்தார். ஓரிடத்தில் பொருந்தாத வராய்; பொருந்தார்: முற்றெச்சம்.

அயில்கொள் வேல்விழிக் கமலினி யாதியாஞ் சிலர்கள்
பயிலுஞ் சேடிய ருமையவள் பங்கயா னனத்தில்
இயலு மன்பொடு நோக்கம்வைத் தினிதுசே ணிடையோர்
வெயின்ம ணிச்சுவ ரருகிற்சித் திரமென மேவ. 16

கூறி டும்முல கனைத்தையு மீன்றவள் குலவு
வேறொ ராதனத் தருகெதிர் மேவின ளிருந்து
மாறி லாதர முளத்திடை மருவிடக் கேட்கும்
தேறி டும்படி கேட்பவள் சிலவினச் செய்வாள். 17

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இறைவநின் வடிவா மாகமப் பொருளை
யெடுத்தெடுத் தருளுட னெனக்கீண்
டறைதியா லனந்த விதங்களி னவற்று
லடியனேற் குற்றதோர் மலைவு
மறைகளு முனது குணமுண ராது
மருள்கொடு திரிவதூஉந் தெரியும்
முறைமையாற் கேட்ட தமைவரக் கேட்டல்
முன்னினன் வினவுறத் துணிந்தேன். 18

---

16. அயில் கொள் வேல் - கூர்மை பொருந்திய வேற்படைபோலும். பயிலும் - இடைவிடாது பழகும். சேடியர் - தோழிகள். பங்கய ஆனனத்தில் - தாமரை மலர்போன்ற திருமுகத்தில். ஆனனம் - முகம். நோக்கம் - பார்வை. சேண் இடை - தூரத்தில். வெயில் மணி சுவர் - கிரணங்களை வீசும் மாணிக்கக் கற்களால் எடுக்கப்பட்ட சுவர்.

17. ஈன்றவள் - உமாதேவியார். மாறு இல் ஆதரம் - மாறுதல் இல்லாத விருப்பம்.

18. வடிவு ஆம் ஆகமப்பொருளை. எனக்கு ஈண்டு அறைதி. ஆல்: அசை. அனந்த விதங்களின் அறைதி. அனந்தவிதம் - அளவில்லாதபடி. விதம் - வகை. அடியனேற்கு உற்றது ஓர் மலைவும்: ஈண்டு உம்மை தொக்கது. மலைவு - மயக்கம், மாறுபாடு. வேதங்களும் இறைவனுடைய தன்மை உணராமை: ''அல்லையீ தல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லினல் துதித்திளைக்குமிச்சுந்தரன்'' (பரஞ்சோதி. திருவிளை.) மருள் - மயக்கம். அமைவர - பொருந்த. முன்னினன் - கருதினேனாகி; முற்றெச்சம். துணிந்தேன் - உறுதிபூண்டேன்.

உலகமென் னிடத்தி லுளதியா னந்த வுலகிடத் துளனென வுரைத்தாய்
இலகுமாண் பெண்ணோ டலியெனு மூன்றி லெதுவென நினைப்பிரித்தறிவேன்
நலனுறு சாந்த னாகவு மிருத்தி நவிலுமுக் கிரனென வுறைதி
மலர்நெடுங் கணையோன் றனைமுனிந் திட்டாய் வாஞ்சையென் னிடத்தினீ
டுற்றாய். 19

மாயைபற் பலவாற் றிடுதியிங் கனைய மாயையி னொன்றிலோ மென்றாய்
மேயவோர்தொழிலு மிலனென வுரைத்தாய் விளங்குமெத் தொழில்களும் புரிதி
தூயதாம் வடிவோ டிருத்தியோர் வடிவுந் தோய்விலோ மெனவெடுத் திசைத்
ஏயுறு முயிர்க்குச் சங்கர னாக விருத்திசங் காரமும் விளைத்தி. [தாய்

ஐயமேற் றிடுதி நினைநினைந் தோர்கட் கருள்கொடு வேண்டிய தளித்தி
ஐயமின் றுலகுக் கொருவனா யிருத்தி யனேகனா யிருக்கவுங் கண்டேன்
ஐயமென் மலரா னனத்தினை யுனையா னறிவதெவ் வாறருளென்றாள்
ஐயனு முவகை கூர்ந்திது வினுதற் கமைந்ததே யெனவுரைத் திடுவான். 21

கலிநிலைத்துறை

ஆதி நம்மிடத் திருந்தது மாயைமற் றதனைப்
பேத முற்றிட நோக்கின நோக்கலும் பிரிவுற்
றாத ரத்தெதிர் நின்றதை யாங்குற நோக்கி
ஓது மிப்புவ னாதியைச் சிருட்டியென் றுரைத்தேம். 22

---

*19.* இலகும் ஆண் பெண்ணோடு. நலன் உறு சாந்தன் ஆகவும். இருத்தி - இருப்பாய். மலர் நெடு கணையோன்தனை - மலர்களாகிய நீண்ட அம்புகளையுடைய மன்மதனை: கணை - அம்பு. முனிந்திட்டாய் - கோபித்தாய். வாஞ்சை - விருப்பம்.

*20.* ஒன்றிலோம் - பொருந்தமாட்டோம். மேய ஓர் தொழிலும் இலன். தூயது ஆம் வடிவோடு. தோய்விலோம் - பொருந்தோம். சங்கரன் - சுகத்தைச் செய்பவன். சங்காரம் - சங்கரித்தல் தொழில்: அஃது இளைப்பாற்றுதல்.

*21.* ஐயம் ஏற்றிடுதி - பிச்சையெடுக்கின்றாய். வேண்டியது அளித்தி. ஐய: விளி. மெல் மலர் ஆனனத்தினை - மெல்லிய மலர்போலும் திருமுகத்தினையுடையாய்.

*22.* ஆதி நம்மிடத்து இருந்தது. ஆதி - முதன்முதலாக: விளி எனினுமாம். ஆதி - ஆதிசத்தி. பிரிவு உற்று ஆதரத்து எதிர்நின்றதை. புவனாதி - புவனம் முதலியவைகள்.

மன்னு றும்வட வித்தினில் வடபரி ணமம்
என்ன மாயையிற் செகமெலா மடங்கிய தெனினும்
அன்ன தற்கென ஞானமொன் றின்மையி னுகா
துன்னை யன்றிநா னதுசெய வென்றதா லுற்று. 23

முந்தி நம்மினின் றிச்சைமென் மொழிதரு ஞானம்
சந்த முற்றிடு கிரியையா மிவைகளைத் தந்தே
இந்த மூவகைச் சத்தியில் யாமுமோ ருருக்கொண்
டந்த மாயையிற் றனுமுத னுன்கையு மகற்றி. 24

நன்மை தீமைகட் கிசைவுற நவிறனு வாதி
என்னு நான்கையு மளிக்குவ மிசையுயிர்க் கங்ஙன்
அன்ன தன்மையிற் பிறந்திறந் தயருமம் மாயை
தன்னி னுஞ்சிறி தேனுமுண் மயங்கிடே ந் தழுவி. 25

வலிகொ ளிந்திர சாலஞ்செய் வான்றனை மயக்கா
துலகின் மற்றுள மனிதரை மயக்குத லொப்ப
நிலவு மாயையு நந்தமை மயக்குற நினையா
திலகு நம்மையல் லுயிரெலா மயங்கிட வியற்றும். 26

மேவ லென்னை நா மிச்சையா திகளைமேன் மேவி
ஆவ தென்னெனிற் சத்தியு நாமும்வே றன்று
பூவும் வாசமு மிரவியுங் கிரணமும் போல்வோம்
தாவு சத்திநித் தியமதா யநாதியாய்த் தயங்கும். 27

---

23. வடவித்து - ஆலம்விதை. அன்னதற்கு என ஞானம் ஒன்று இன்மையின். ஞானம் - அறிவு.

24. இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்திகள். தனு முதல் நான்கு - தநு கரண புவன போகங்கள்.

25. இசைவுற - பொருந்த. நவில் தனு ஆதி. சிறிதேனும் உள் மயங்கிடேம்.

26. இந்திரசாலம் செய்வோனை மயக்காமல் ஏனைய மனிதரை மயங் கச்செய்யும். அதுபோல, மாயை நம்மை மயக்காது, நம்மையல்லாத உயிர் வருக்கங்களையே மயக்குவதாம்.

27. மேவி ஆவது என். இரவி - சூரியன். மலரும் மணமும், சூரியனும் கிரணமும்போலப் பிரிப்பின்றி என்றபடி. தயங்கும் - விளங்கும்.

இச்சை மற்றெடுங் குயிர்களைக் கருணையா லெடுக்கும்
மெச்சு ஞானமவ் வுயிர்களின் வினையறிந் துதவும்
எச்ச மில்லதாங் கிரியைநின் றவயவ மிசைக்கும்
நச்சி யைந்தொழி னடாத்துவோம் நாம்வினை யாட்டின். 28

இலகு கற்பனை கரணமென் றிருவிதந் திருட்டி
நிலவு கற்பனை சத்தியின் மாயையை நீக்கல்
உலவு மைந்தொழி லியற்றுதல் கரணமென் றுரைக்கும்
திலக வாணுதற் றுடியிடைச் சேயிழைக் கொடியே. 29

மன்ற நிட்களஞ் சகளநீள் வித்தையே மாயை
என்று நந்தமக் கீரிரண் டுருவநன் கிசையும்
துன்று மாயைகட் டோன்றியோர் மேனியாத் துலங்க
நின்று மூன்றதிட் டிதமுற நேர்கொள்வோம் பூசை. 30

சாற்று மந்திர வுருவமாய்த் தயங்கிடு வித்தை
ஏற்ற தந்திர மாதிவர்க் காதிக ளீந்திட்
டாற்று பூசனைக் குரியமெய் யுருவமா யன்பர்
போற்றல் செய்யவீற் றிருந்தவர்க் கின்னருள் புரியும். 31

சத்தி மூவகை யால்வடி வுற்றது சகளம்
சுத்த மாதவர் தியானமும் பூசையுந் துதியும்
இத்தி றத்தினே நிட்களம் புணர்தலு மிதுவே
உய்த்தல் செய்வது மொடுக்கலு மித்தகை யுருவே. 32

---

28. இச்சா ஞானக் கிரியா சத்திகளின் இயல்பு கூறியபடி. எச்சம் இல்லது ஆம் கிரியை - குறைவில்லாத கிரியாசத்தி. நச்சி - விரும்பி.

29. வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றி. நுதலினையும் இடையையும் உடைய கொடியே. சே இழை - சிவந்த ஆபரணம். கொடி என்றது உமாதேவியாரை.

30. மன்ற - நிச்சயமாக. நிட்களம் - அருவம். சகளம் - உருவம். ஈர் இரண்டு உருவம் - நான்கு வடிவம். சுத்த மாயையில் திருமேனி கொள்ளல் ஒன்று. ஏனைய மூன்றும் அதிட்டித்துநின்று செய்தல்.

31. மந்திரவடிவம். வீற்றிருந்து அவர்க்கு இன்னருள் புரியும்.

32. சகளத்திருமேனியே தியானம் பூசை துதிகளுக்கு உரியவாய் விளங்குவது என விளக்கியபடி.

வந்த நிட்கள மளவைநீண் மறைதிருக் காதி
முந்தி டும்புலங் கடந்தொளிர் முதிரறி வுருவாய்ச்
சிந்தை செய்பவர்க் கத்திறந் திகழ்ந்துயிர்க் குயிராய்
அந்த மார்குரு வருளினு லளவிலே யருளும். 33

சகள நீயுரை நிட்களந் தானுநீ யாமெண்
திகழு ருக்கொளப் புரிதனீ யைந்தொழிற் செயனீ
மகிழ்வொ டுன்னிடத் துறைவம்யா மிங்ஙனீ வதிவாய்
மிகுமு ருப்பெயர் நமக்குவே றன்றிநாம் வேறே. 34

நீருந் தண்மையு மென்னவே நின்னுட னிலகும்
பூர ணப்பொரு ளாகுநா மைந்தொழில் புரிந்திட்
டாரு யிர்க்கெலாம் புத்தியு முத்தியு மளிப்பான்
சாரும் பற்பல வுருவமுஞ் செய்கையுந் தரித்தோம். 35

ஆத லான்முன மிசைத்ததே யுண்மையென் றமலன்
ஆதி நாயகிக் கிசைத்தலும் மவள்மகிழ்ந் திறைஞ்சி
ஆத ரத்தொடு தெளிந்ததா லையநின் னருளால்
நாத னேயுல கெழிலினிக் காட்டென நவின்றாள். 36

பாண்ட ரங்கனெம் முடலினிற் பரவுல கியல்போ
பூண்டி டும்புற வுலகுறு புதுமையோ வென்ன
ஆண்ட நின்கணு ருலகிய லுணர்வினு லறிகேண்
காண்டல் வேண்டுமிவ் வுலகுறு கவின்றனை மாதோ. 37

---

33. நிட்களத் திருமேனி அளவைகளைக் கடந்தது, வேதங்களைக் கடந்தது, ஆன்ம அறிவைக் கடந்தது, அறிவே வடிவானது, உயிருக்கு உயிராய் விளங்குவது, குருவருளினுல் ஆன்மாக்களின் பக்குவ விசேடத்துக்குத்தக அருள்செய்வதாம் என்க. இதனை ''மறையினுல் அயனுன் மாலான்'' (சித்தியார்) என்பதனுல் அறிக.

34. எண் திகழ் உரு - நினைத்தற்குரியதாய வடிவம்; எட்டாகத் திகழும் வடிவம் எனினுமாம். அவை: மண் நீர் அனல் வளி வான் சூரியன் சந்திரன் ஆன்மா என்பன. மேம்பட்ட வடிவமும் பெயரும் நமக்கு வேறல்லவாம் என்றபடி.

35. நீரும் அதில் குளிர்ச்சியும்போல. புத்தியும் முத்தியும் - போகமும் வீடும். உயிர்களுக்குப் போகமும் வீடும் கொடுத்தற்பொருட்டே பலவகையான வடிவமும் செயலும் மேற்கொண்டோம்.

36. ஆதிநாயகி - உமாதேவியார். அமலன் - சிவபெருமான்.

மதிகொள் வேணியாய் புவியிடை மருவுறு தலங்கட்
கதிக மாய்ச்சுரர் போற்றநீ யகமகிழ்ந் தினிது
வதிவ தெத்தலங் காட்டுதி மற்றதூஉ மென்றுள்
பதம கிழ்ந்துநன் றென்றன னெழுந்தனன் பரைமுன். 38

ஐந்து ருக்கொடத் தொகைத்தொழி னடாத்திடெம் மையன்
சிந்தை யான்மகிழ் வுற்றுமை தெளிந்திட நன்கு
முந்தை யாகமத் துட்பொரு ளுரைத்திடு முறையி
தந்த ணீரினி யவன்விளை யாடலீண் டறைவாம். 39

உபதேசச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 236

---

38. மதி கொள் வேணியாய் - சந்திரனைத் தரித்த சடையையுடைய வரே. புவி - பூமி. சுரர் - தேவர். வதிவது - தங்கியிருப்பது. பதி - சிவபெருமான். பரை - உமை. அதிகம் - மேன்மை.

39. ஐந்து உரு - பிரமன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன். அத்தொகைத் தொழில் - ஐந்தொழில்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. முந்தை ஆகமம் - முற்பட்ட ஆகமங்கள்.

மூன்றாவது

# திருவிளையாடற்சருக்கம்

---

[சிவபெருமான் நந்தியை நினைத்தருளினர். உடனே நந்தி ஒரு வைர மலைபோன்று வந்தது. சிவபெருமான் உமாதேவியாருடன் அதன்மேல் ஏறினர். திருக்கயிலாயத்தினின்று தென்திசை நோக்கி, அதனை ஆகாய வழியே செலுத்தினர்; வழியிலுள்ள மலை, காடு, தலம், ஆறு முதலியவை களையும் அவைகளின் பெருமைகளையும் உமாதேவியாருக்குக் காட்டிச் சொல்லிக்கொண்டே வருவாராயினர். காவேரிநதிக்கரையை அடைந்தார். காவேரிதீரத்தில் விளங்கும் தலங்களைப்பற்றி எடுத்துரைத்தார். இடபம் காவேரியின் தென்கரையில் உள்ள மருதவனம் என்னும் தலத்துக்கு நேராக வந்து சேர்ந்தது. கயிலாயமலையே இத்தலத்தில் மருதமரமாக வந்திருத்தலை உணர்த்தி, இடபத்தை அதன் நிழலில் நிறுத்தினர். மேலே சொல்லத்தொடங்கினர். இந்தத் தலம் அநாதியாயுள்ளது. உலகத்திலே நமக்கு இத்தலம்போல இனியதொரு தலம் வேறொன்றிலது; சோலைகள் வாவிகளால் சூழப்பெற்றுள்ள இதன் அழகினைக் காண்பாயாக என்றரு ளினர். முன்னரே உபமன்னியு முதலிய நல்ல தவத்தினர் செய்துள்ள தவமும், தெய்விகத்தன்மையுமுடைய, சம்பகங்கள் சூழ்ந்த கானகத்தையும் உமாதேவியார் கண்ணுற்றனர். அவைகளைக் கண்டு அம்மையார் நெஞ்சம் நெக்குருக, கண்களினின்று ஆனந்த அருவிநீர் பாயத்தொடங்கியது. அக்கண்ணீரருவி கீழ்த்திசையிலே மேன்மைபொருந்திய காருணியாமிர்த தீர்த்தம் என்னும் பெயரால் விளங்கியது. சிவபெருமானுடைய கண்களி னின்றும் கருணைநீர் பொழியத் தொடங்கியது. அஃது இருகூறாய்ப் பொன்னிறமுடையதாய் வாயு திக்கினும், தெற்குத் திசையினும் உள்ள தடாகத்தைச் சார்ந்து தங்கியது. வாயு திக்கிலுள்ள தடாகத்தில் முன்பு நீர் இல்லாமையால் உயிர் நீங்கி உலர்ந்து கிடக்கும் நீர்வாழ்வன யாவும் உயிர்த்தெழுந்தன; உருவம் வேறுபட்டன; உருத்திரர் வடிவமுற்றன; கோடிசூரியப் பிரகாசத்துடன்கூடிய விமானத்தின்மேல் ஏறிச் சென்றன.

விமானத்திலே ஏறிய உருத்திரர் கணமும் விண்ணோர் கூட்டமும் சிவபெருமானை வலம்வந்து வணங்கின. மலர்களால் சமைத்த விமானம் ஒன்றைச் சாத்தி மலர்களால் அருச்சித்துப் போற்றின. இவ்வாறு

முனிவர்கள் அறியாதபடி இறைவன் ஒருமுகூர்த்தகாலம் அங்கே எழுந்தருளியிருந்தார். அப்பொழுது அகத்திய முனிவர் அவ்விடத்துக்கு வந்தார். அவரைக் கண்ட முனிவர்கள் எழுந்து வணங்கினர்; ஆதனத்திலிருத்தினர், அவருடன் அளவளாவியிருந்தனர். எங்கள் புண்ணியப்பயனாய் எழுந்தருளினீர்கள் என முகமன் கூறினர். பின் முனிவர்கள் அகத்தியரை நோக்கி, அருட்கடலே! வேள்வி முதலிய நல்வினைகளைச் செய்யின் பயன் அளித்தல் அந்த நல்வினையோ? அன்றிப் பரம்பொருளோ? என்பதை விளங்க அருளிச்செய்ய வேண்டும் என வேண்டினர். அதைக் கேட்ட மலையமுனி முனிவர்களைப் பார்த்து, மற்றும் உங்கட்கெல்லாம் மனத்திலுள்ள ஐயங்கள் எல்லாவற்றையும் கூறுக என்றார். முனிவர்கள் வேதங்களில் விதிக்கப்பட்ட வேள்வி தவம் முதலியவற்றைச் செய்யின், பரம்பொருள் எதிரே தோன்றும் என்பதில் ஐயமுண்டு. மனம் முதலிய கரணங்களால் காணப்படாமையின் பரமன் என்றொரு பொருளில்லை. இவ்வுலகத்தில் செய்த நல்வினைப்பயனை உயிர்கள் தாமே அவ்வுலகத்திலே சென்று அநுபவிக்கும் என உலகோர் சொல்வர். இதுபோலும் பற்பல ஆசங்கைகளுள என்றனர். இதனைக்கேட்ட அகத்தியர், முனிவர்களே! உயர்ந்த அமுதத்தைக் கமரில் கொட்டிய செயலை ஒத்தது உங்கள்நிலை. வினைகளும் உடலும் அறிவில்லாதனவாகும். அந்த வினைகளை ஒருவர் கூட்டுவித்தாலன்றிக் கூடா. உயிர்களும் அவ்வினைப் பயன்களைத் தெரிந்து அருந்தமாட்டா, சிற்றறிவும் சிறுதொழிலும் உடையன ஆதலால். தவம் வேள்வி முதலியவற்றைச் செய்யின் பயன் உண்டு. அப்பயனை நுகர்வது உயிரே. தநு கரண புவன போகங்களை ஆராய்ந்து, உயிருக்குத் தவறாமல் அருளுபவன் சிவபெருமானே. உயிரும், வினையும் விண்ணுலகம் முதலியவற்றை அடைந்து பயன்கொள்ளுமென ஒருவன் கூறுவானாயின், பிறவிக் குருடனாகிய ஒரு முடவன் மகாமேருமலையின் உச்சிக்குத் தனியே சென்று பசுந்தேனை எடுத்துச் சுவைத்தான், அதனை நான் கண்டேன் என்பதனை ஒக்கும். அன்றியும், அரசனைச் சூழ்ந்த வீரனொருவன் வெற்றி பெற்றானாயின் அவனைச் சிறப்புச் செய்வார் யாவர்? தக்கன் செய்த வேள்வியும், திரிபுரமும், பிரமன் தலையும், சண்டேசுரர் பெற்ற வாழ்வும், மார்க்கண்டேய முனிவர் பேறும், என் கைத்திறமும் சிந்தித்தறிவீராக என்றார்.

சிவபெருமானைப் பரம்பொருள் எனத் துணியா மனம் வெளிச்சமில்லாத இருட்டறையும், சூரியனில்லாத ஆகாயமும், நீதிமன்னன் இல்லாத நாடும், நீரில்லாத பயிரும், நாயகனில்லாத மங்கையரும் போல்வதாம். சிவபெருமானை மனம் முதலியன கண்டில என்றீர். அப்பெருமான் 'உளன் என்பார்பால் உளன்' ஆகலின், முன்னை வினையாற்பெற்ற உம்முடைய

இயல்பனைத்தும் விடுமின் ; இந்தத் திவ்விய தலத்திலே சிவபெருமானை மனத்திலே வைத்துத் தியானித்துத் தவம் புரிமின் ; சிறந்த பயனைப் பெறுவீர் இது சத்தியம் என அகத்தியமுனிவர் அருளிச்செய்தனர். தவ முனிவர் மகிழ்ந்தனர். இறைவன் ஒருவன் உளன் என உள்ளம் தேறினர். இறைவனை வணங்கி உய்யாமல், இத்துணை நாட்கள் வீணுகக் கழித்தோம் என்று இரங்கினர். இருவினையொப்பு சத்திநிபாதம் பெற்றனர். முகமன் கூறினர். தவஞ்செய்யும்நெறியை விதித்தருளுக என வேண்டினர். பத்தி யில்லாருக்குப் பரம்பொருள் தோன்றுமாறில்லை. அப்பத்தியும் தவமின்றி விளையாது. கண்ணில்லான் மணிக்குணம் அறிதலும், விதை முதலிய இல்லாதான் பயிர் செய்ய விரும்புதலும் எவ்வாறு இயலாததோ? அவ்வாறே பத்தியில்லார் பரம்பொருளைக் காண விரும்புதலுமாம்.

அளவை முதலியவற்ருல் அளத்தற்கியலாத அப்பரம்பொருளை அவனருளால் காண முயற்சிக்க வேண்டும். கண்ணிருந்தாலும் ஒளியின் உதவியின்றிப் பொருளையறிய இயலாது. ஆகலின், பராசத்தியின் துணை கொண்டே சிவபெருமானை அடைய வேண்டும். இன்றேல், சிவனருளை அடைதல் இன்ரும். சிவபெருமான் அருளால் உருத்திரன் மால் அயன் தோன்றினர். பராசத்தியின் அருளால் உமை திரு வாணி என்னும் மூவரும் தோன்றினர். இம்மூன்று சத்திகளும் உருத்திரன் முதலிய மூவருக்கும் முறையே சத்திகளாயினர். அச்சத்திகளுள் வாணி சுருதி முதற்கலைகளெல்லாம் தோற்றுவிக்கும். திருமகள் தருமங்களுடன் பல வகைச் செல்வங்களையும் தரும். உமை அரனைக் காட்டும். ஆகலின், இவர்களைப் பூசித்தால் எளிதில் இறையருள் கிடைக்கும் எனக் குறு முனிவர் கட்டளையிட்டருளினர்.

அகத்தியமுனிவர் கூறியதனையும், ஏனைய முனிவர்களின் நினைவை யும் அறிந்து உமாதேவியார் சிவபெருமானை நோக்கி இவர்கள் முன்னே தோன்றுவோம் என்றனள். சிவபெருமான் அம்மையாரைப் பார்த்து, 'அகத்தியன் உரைக்கு விரோதமாய்த் தோன்றுதல் கூடாது. அன்றியும், வருத்தமுறத் தேடியவர்கட்கே பொருளின் அருமை தெரியும். அகத்தியன் விதித்தவாறே முனிவர்கள் உன்னை நோக்கித் தவஞ்செய்யட்டும். அவர் தவங்கண்டு நீ முன்னர்த்தோன்றுவாயாக. நாமும் விரைவில் வெளிப்பட்டு அவர்கட்குக் காட்சி தருவோம்' என்றனர். இவற்றையெல்லாம் கேட்ட நந்திதேவர் சிரமசைத்தார். மணியும் கலீர் என ஒலித்தது. விண்ணும் மண்ணும் பாதலமும் துளங்கின. முனிவர்கள் வியந்தனர். சிவபெருமான் புன்முறுவல் செய்தருளினர். அதனைக் கண்ட உமையம்மையார் உமது

*திருவிளையாடலை எவர் அறியவல்லவர் என்றாள். போற்றி வணங்கினள். சிவபெருமான் உமாதேவியாருடன் இடபமூர்ந்து கயிலையை அடைந்தார். பின்பு, உமாதேவியார் இடைமருதூரையடைந்து அவ்விடத்தே தவம்புரிந்த செய்தியை இனிச் சொல்வோம் எனச் சூதமுனிவர் நைமிச முனிவருக்குக் கூறியருளினர்.]*

கலிநிலைத்துறை

ஆதி நந்தியை நினைத்தன னதுவொரு வயிர
ஓதி மத்தின்வந் துற்றதாங் குமையவ ளுடனும்
மீதி வர்ந்தன னதிலொரு மாணிக்க வெற்பும்
சோதி நீலமால் வரையொன்றுந் தோன்றிய தென்ன. 1

வென்றி மால்விடை யதுதனை விசும்புற நெறியாய்த்
தென்றி சைப்படச் செலுத்தினன் மெல்லெனச் செலுங்கால்
குன்றும் கானமும் நதிகளுங் குலவுயர் தலனும்
மின்ற யங்கிடை யுணர்ந்திட விளம்பினன் சென்று. 2

அன்னை யாகியிவ் வுலகினுக் கறைதரு கவேரன்
கன்னி யாய்க்கயல் விழிகளாய்க் கமலமே முகமாய்ப்
பன்னி டுஞ்சுழி யுந்தியாய்ப் பயோதரஞ் சகோரம்
என்னும் புட்களா யிலங்கிடுந் துறைவள னிசைத்து. 3

பின்னு மந்நதி யீறதா யிசைந்தவும் பிறவும்
இன்ன தின்னதென் றோகையோ டிலங்கிடக் காட்டி
மன்னு தென்கரை வளரிடை மருதினை ருறுங்கால்
உன்னு மோர்மரு தாகியாங் குற்றது கயிலை. 4

---

*1. ஆதி நந்தி - திருமால். ஓதிமம் - அன்னப்பறவை. இன்: ஐந்தனுருபு; ஓது இமத்தின் - சொல்லுகின்ற இமயமலையில் எனினுமாம். மீது இவர்ந்தனன். இவர்தல் - மேலேறிச் செலுத்துதல். மாணிக்க வெற்பு - மாணிக்கமலை; சிவபெருமான். நீல மால்வரை - நீலமலை; உமாதேவியார்.*

*2. மால்விடை - திருமாலாகிய இடபம். விசும்பு உற நெறியாய் - ஆகாயத்திலே பொருந்தும் வழியாய். மின் தயங்கு இடை - மின்னலைப் போலவிளங்கும் மருங்குலையுடைய உமாதேவியார்; அன்மொழித்தொகை.*

*3. கவேரன் கன்னி ஆய் - கவேர முனிவன் புதல்வியாய்: ''தவாநீர்க் காவிரிப் பாவைதன் தாதை, கவேரன்''; ''கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய'' (மணிமே: 3: 55-6; 9: 52). கயல் விழி, கமலம் முகம், சுழி உந்தி, சகோரம் பயோதரம்; உருவகவணி. பயோதரம் - நகில்.*

*4. இன்னதென்று ஓகையோடு இலங்கிட.*

எங்கு முற்றுநின் றியாவையு முணர்ந்திடு மெங்கள்
சங்க ரன்தனிக் கயிலையா மருதிடைச் சார்ந்து
பொங்கு மத்தரு நீழலிற் பொருந்துறு விசும்பில்
தங்க மால்விடை நிறுத்திநின் றின்னது சொல்வான். 5

இனைய மாதல மநாதியா யிருப்பது நமக்கீ
தனைய மாதலம் பரவைசூ ழகிலத்தி னில்லை
நனைய மாமலர்ச் சோலையும் வாவியும் நன்கு
புனையு மீடுறு மிதனெழில் பாரெனப் புகன்றான். 6

மற்ற தற்குமுன் ஞங்குப மன்னிய ஞதி
நற்ற வத்தினே ரநேகர்க ணவிலுறு தவமும்
உற்ற தெய்விகத் தன்மையு முயர்ந்தசம் பகங்கள்
பெற்ற கானமும் பார்த்தன ளுமையவள் பெரிதும். 7

கண்டு நெஞ்சநெக் குருகிடுங் காலையிற் கண்கள்
வண்டு ளிக்கணம் விடுத்தன மற்றது குணபால்
மண்டு பொற்பினே டுலகெலாம் வணங்கிடு மேன்மை
கொண்டு காருணி யாமுத தீர்த்தமாய்க் குலவும். 8

செய்ய வாள்வரித் தடங்கணீர் சிந்துத னேக்கிக்
கையின் மான்மழு வெடுத்தவன் கண்டனை கொல்லோ
வைய முற்றிடு புதுமையென் றுரைத்தனன் வணங்கி
ஐய கண்டன னென்றன ளகிலமு மீன்றாள். 9

எங்க ளன்னையீ தியம்பலு மெழின்மதிச் சடிலப்
புங்க வன்திரு நயனமும் கருணைநீர் பொழிந்த
தங்க தோரிரண் டாகிப்பொன் னிறத்ததா யனிலன்
தங்கு திக்கினும் தெற்கினும் சார்ந்தது தடத்துள். 10

---

6. பரவை - கடல். அகிலம் - உலகம். நனைய - அரும்புகளையுடைய. வாவி - குளம். ஈடு உறும் - ஒப்பாகும்.

7. ஆங்கு உபமன்னியன் ஆதி. அனேகர்கள் நவிலுறு தவமும். சம்பகம் - சண்பகமரங்கள்.

8. குணபால் - கிழக்குப்பக்கம். மண்டு பொற்பு - நிறைந்த அழகு.

9. வையம் - உலகம். அகிலமும் ஈன்றாள் - உமாதேவியார். வாள் - ஒளி; வாளாயுதம் எனினுமாம். வரி - கருவரி செவ்வரிகள்.

10. சடிலம் - சடை. புங்கவன் - சிவபெருமான். நயனமும் - கண்களும்; உம்மை இறந்தததுதழீஇயது. அங்கு அது ஓர் இரண்டு ஆகி. பொன்

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சார்ந்திடு வடமேற் றடத்ததின் முன்னர்த் தண்புன லிலாமையி னுவி
தீர்ந்துலர்ந் துற்ற சலசர மனைத்தும் சிவபரஞ் சோதிதன் திருக்கண்
வார்ந்திடு மமிர்தம் படவுயிர் வாய்ந்து மருவுருத் திரிந்துருத் திரராய்
நேர்ந்திடும் கோடி தினகர ருதய நிகரொளி விமானமே றினவே. 11

இலகெழில் விமானத் தலர்மழை பொழிய வேறிய வுருத்திரர் கணமும்
வலனுறு மிமையோர் கணங்களும் கணிச்சி வலவனை வலங்கொடு வணங்கி
மலர்கொடு சமைத்த வொருதனி விமான மகிழ்வொடுஞ் சாத்தினர் நின்றுங்
கலகில்வண் போதா லருச்சனை புரிந்தா ரைவகை நாதமும் முழங்க. 12

இவ்வண முனிவ ரறிந்திடா தவர்க ளிசைத்திடு தர்க்கமுற் றறிவான்
அவ்வயி னிறைவ னிலங்கொரு முகூர்த்த மமர்ந்திட விந்தமுன் னடக்கும்
செவ்விய முனிவ னப்பொழு தவர்கள் திருமுனம் வந்தன னவர்கள்
பவ்வமொண்மதிகண் டாலெனமகிழ்ந்து பணிந்தெழுந் தவனொடுமிருந்தார்.

இருந்திடு முனிவ ரடைந்தமா தவன்ற னெழின்முகப் பங்கயம் நோக்கி
பொருந்திரைக் கடலை யருந்தருட் கடலே புண்ணிய மியற்றுபுண் ணியமே
திருந்திய வேள்வி யாதிநல் வினைகள் செய்திடிற் பலனினி தளித்தல்
புரிந்திடு வினையோ பரமனோ வெமக்குப் புலப்படப் புகல்கெனப் புகன்றார்.14

---

நிறத்தது ஆய் - பொன்மையான நிறத்தினை உடையதாய். அனிலன் - காற்று; அனிலன் தங்கு திக்கு - வாயு திசை. தடத்துள் - தடாகத்தினுள்.

11. புனல் - நீர். ஆவி - உயிர். சலசரம் - நீர்வாழ்வன. வார்ந்திடும் - ஒழுகும். மருவு உரு திரிந்து - பொருந்தும் வடிவம் வேறுபட்டு. நேர்ந்திடும் - எதிர்ப்பட்ட. தினகரர் - சூரியர். சலசரம் அனைத்தும் ஏறின என முடிக்க.

12. அலர் மழை - மலர்மாரி. வலன் - வெற்றி. இமையோர் - தேவர். கணிச்சி வலவன் - பரசு என்னும் படைக்கலத்தை வலக்கரத்திலுடைய பெருமான்; பரசு - மழு. சமைத்த - செய்த. வண் போதால் - வளப்பம் பொருந்திய மலர்களால். போது - மலரும்பருவத்து அரும்பு: ''மொட்டறு மலர்பறித்திறைஞ்சி'' (திருவாசக). ஐவகை நாதம் - பஞ்சவாத்திய ஒலிகள்: தேவதுந்துபி என்க. இரண்டாம் அடி மடக்கு.

13. அறிந்திடாது அவர்கள். விந்தம் முன் அடக்கும் செவ்விய முனிவன் - அகத்தியர். முற்று அறிவான் - முழுவதும் அறியும்பொருட்டு. உற்று அறிவான் எனினுமாம். பவ்வம்-கடல். பூரண சந்திரனைக்கண்டால் கடல் மகிழ்வால் பொங்கும் என்பர். அவனொடும் - அகத்தியனொடும்.

14. முகப் பங்கயம் - முகமாகிய பங்கயம். அருந்து அருட்கடலே. கடலை அருந்திய கடல் என்பது ஒருநயம்.

தண்டமிழ் முனிவ னின்னுநும் மனத்திற் சார்ந்திடு சங்கைக ளியாவும்
விண்டிடு மெனமற் றவர்மறைக் குலங்கள் விதித்திடு வேள்விகள் தவங்கள்
எண்டர வியற்றிற் பரனெதிர் தோன்று மெனுமுறை யிசைவதன் றுகும்
கண்டிடா மையினுன் மனுதியாங் கரணங் கண்ணுதற் பரமன்மற் றில்லை. 15

இம்பரிற் புரிந்த நல்வினைப் பயனை யெய்திமற் றிவருயிர் தாமே
உம்பரி னருந்து மென்னவிவ் வுலகோ ருரைப்பர்க ளின்னவும் புகல்வாய்
பம்பிட வினவு பொருள்களுண் டின்னும் பார்க்கிலிந் நெறியவே யென்றூர்
கும்பசம் பவனீர் தெளிவுற வுரைப்பன் குறிப்புறக் கேண்மெனக் கூறும். 16

முனிவிர்கா ளென்கண் முனிவுரு தொழிமின் மொழியுநுங் குலத்தொடு தவமும்
நனியுய ரமுதைப் புவியுறு கமரி னண்ணின ருகுத்தது போன்ற
வினைகளு முடலும் சடமெனக் கலைகள் விளம்பிடு மாதலா லொருவன்
அனையதொல் வினையைக் கூட்டுவித் தன்றி யாருயி ரருந்திடா தாகும். 17

தவமுறு வேள்வி யாதிக ளியற்றிற் றகுபல னடைகுவ துயிரே
நவிலுறு தனுவும் கரணமு மிடமும் நண்ணிடு போகமு மான
திவளுறு பலனைத் தெரிந்துயிர்க் கெங்கும் செறிந்தினி துறைந்திடு மெங்கள்
சிவபரஞ் சோதி யெனுமிறை யவனே திறம்பிடா தடைவினி லருள்வோன். 18

ஆவியும் கரும மதுவும்விண் ணுதி யடைந்துறு பலன்கொளு மென்னின்
மேவுறு குருட னுகுமோர் முடவன் மேருவின் முடித்தனிச் சென்று
நாவுறப் பசுந்தே னெடுத்தருந் தியது நானெதிர் கண்டன னெனலாம்
காவலன் றனைச்சூழ் மறவர்வென் றனரேற் கருதிடு வரிசையார் கொடுப்பார்.

---

15. சங்கைகள் - சந்தேகங்கள். விண்டிடும் - சொல்லுங்கள். எண் தர இயற்றில். இசைவது அன்றுகும் - பொருந்துவதன்றும்.

16. இம்பர் - இவ்வுலகம். உம்பர் - மேலுலகம். கும்ப சம்பவன் - அகத்தியர்; கலசத்திற் பிறந்தோன் என்க.

17. முனிவு உருது - கோபியாது. முனிவிர்காள் என்கண் முனிவுருது: ''கொன்னே முனியு முனிக்கினி'' (வில்லிபார - ஆரணி - துருவாச செ 8). முதலடி மடக்கு. நனி உயர் அமுது - மிகவுயர்ந்த தேவருணவு. புவி - பூமி. கமர் - வெடிப்பு. உகுத்தது - சிந்தியது. 'பாலைக் கமரில் ஊற்றினுற்போல' என்பது பழமொழி. சடம் - அறிவில்லாதது. கலைகள் - நூல்கள். இறுதியடி, ''செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும், மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்'' (பெரிய - சாக்கிய - 5) என்பதனைச் சிந்திக்கச்செய்வது. அடுத்தபாடலினும் காண்க.

18. தனு - உடம்பு. கரணம் - அகக்கருவி புறக்கருவிகள்.

19. ஆவி - உயிர். காவலர் - அரசர். மறவர் - வீரர். வரிசை-சிறப்பு.

கலிவிருத்தம்

அண்டர்பிரான் தனைப்பணியாச் சிறுவிதியி னணிமகமும்
மிண்டுபுரி யிராக்கதர்கள் திரிபுரமும் விதிதலையும்
தொண்டுபடு சண்டீசன் துன்னுபெருஞ் சிறப்பொடுமார்க்
கண்டனடை பேறுமென்றன் கைத்திறமும் கருதிடுமின். 20

பரசிவனைக் குறியாதார் மனமெவையும் பகர்சுடரில்
இருளறையும் பகலவனி லிருவிசும்பு மனுமுறைதேர்
புரவலனில் பேருலகும் புனல்வறந்த பைங்கூழும்
வரனிழந்த தனிமுல்லை மடந்தையரு நிகராகும். 21

மனமாதி கண்டிலவான் மதிமுடியோன் றனையென்றீர்
அனையனுள னென்றவர்பா லுளனுவ னுதலின்முன்
வினைதருநும் மியல்பனைத்தும் விடுத்தினைய வியன்றலத்தில்
தனிமுதலை மனத்திருத்தித் தவம்புரிமி னெதிர்தோன்றும். 22

இத்தகைமை சரதமென மலையமுனி யிசைத்திடலும்
அத்தவர்கள் மிகமகிழ்வுற் றிறையுளனென் றகந்தேறி
எத்துணை நா ளிவற்பணியா தேகினவென் றிரங்கிவினை
ஒத்திடச்சத் திநிபாத முதித்துமுனி வனைவணங்கி. 23

---

20. அண்டர் பிரான் - தேவதேவன்: சிவபெருமான். அண்டர் - தேவர். சிறுவிதி - தக்கன். மிண்டு - இடுக்கண். விதி தலை - பிரமதேவருடைய சிரம். அணி மகம் - அழகிய (தக்ஷ)யாகம். என்றன் கைத்திறம் - விந்தமலையை அடக்குதல், கடல்நீரை உழுந்து அமிழ்ந்து நீராகச்செய்து ஆசமித்தல் என்பன: அகத்தியர் கூற்று இது.

21. குறியாதார் - தியானிக்காதவர். சுடர் இல் - விளக்கில்லாத. சுடர் - விளக்கு, பிரகாசம். பகலவன் - சூரியன். இரு விசும்பு - பெரிய ஆகாயம். புரவலன் - அரசன். பைங்கூழ் - பயிர். வரன் - கணவன். முல்லை மடந்தையர் - கற்பினையுடைய பெண்கள்: முல்லை கற்பிற்குரியது.

22. மனம் ஆதி - மனம் முதலியன. அனையன் உளன் என்றவர்பால் உளன் ஆவன். வியன் தலம் - சிறந்ததலம். தனி முதலை - ஒப்பற்ற முழு முதற்கடவுளாகிய சிவபெருமானை. மனத்து இருத்தி - மனத்திலே வைத்துத் தியானித்து.

23. சரதம் என - சத்தியம் என்று. மலையமுனி - அகத்தியர்: மலையம்- பொதியில். அ தவர்கள் - அந்தத் தவத்தையுடைய முனிவர்கள்: தவர் - தவத்தையுடையவர். அகம் தேறி - மனந்தெளிந்து. இவன் பணியாது - இச்சிவபெருமானை வணங்காமல். எத்துணைநாள் இவற்பணியாது ஏகின:

நல்குரவி லுறுநிதியும் நவில்வேனி லிடைச்சொரியும்
மல்குபெரு மழைமுகிலும் மானுறவெம் மெதிர்தோன்றிக்
கல்விதரு சுருதிகொடு கத்துருநிச் சயஞ்செய்தாய்
ஒல்லுறுமா தவமுனியா முளுற்றுநெறி விதிக்கென்ருர். 24

விற்பெருநன் மணிக்குணங்கள் விழியில்லான் காண்பதுவும்
பொற்புறுவித் தாதியிலான் பயிர்விருப்பும் புரைவாகும்
சொற்படுமெய்ப் பரம்பொருளைத் தொகுபத்தி யிலாரறிதல்
பற்பலமா தவத்தன்றித் தோன்ருதப் பத்தியுமே. 25

இன்னுமொரு வழியுரைப்ப னியலளவைக் கடங்காத
சின்மயனை யவனருளால் தெரிசித்தல் வேண்டுங்கண்
முன்னிருந்து மொளியின்றி மொழிபொருள்கள் தெரிவுறுமோ
அன்னதனுற் பராபரையா லறியமுயன் றிடல்வேண்டும். 26

ஓதுபர னருளதனி லுருத்திரன்மால் விதிதோன்றத்
தீதில்பரை யிடத்திலுமை திருவினெடு வாணியென
மாதருறு மூவர்களும் வந்துதித்தம் மூவருக்கும்
காதலுறு தேவியராய்க் கலந்தனர்க ணிரைநிரையே. 27

---

''எத்தனையோ காலமெல்லாம் பாழுக்கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே'' (திருவாச - திருத்தோணே.) வினை ஒத்திட - இருவினையொப்புப் பிறக்க. சத்தி நிபாதம் - திருவருட்சத்தி பதிதல். நிபாதம் - வீழ்ச்சி.

24. நல்குரவில் உறு நிதி - வறுமைக்காலத்திலே பெற்ற செல்வம்: ''இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டா லென'' (பரஞ்சோதி. திருவிளை.) வேனில் - வெயிற்காலம். மழை முகில் - மழைபெய்யும் மேகம். மானுற - ஒப்ப. கத்துரு நிச்சயம் - கடவுள் நிச்சயம். உளுற்றும் - செய்யும்.

25. வில் - ஒளி. மணிக்குணங்கள் - இரத்தினங்களுடைய குணங்களை. வித்து ஆதி இலான் - விதை முதலியன இல்லாதவன். பரம்பொருளைத் தொகுபத்தியிலார் அறிதல் காண்பதுவும் விருப்பும் புரைவாகும் என்க.

26. இயல் அளவைக்கு அடங்காத சின்மயன் - இலக்கணம் அளவை முதலியவைகளால் கட்டுப்படுத்த இயலாத ஞானவடிவினன். சித் - ஞானம். ''மறையினு லயனுன் மாலான் மனத்தினுல் வாக்கான் மற்றும், குறைவிலா அளவினுலும் கூருெணுதாகி நின்ற இறைவனுர்' (சித்தி - அவையட - 4) அவனருளால் தரிசித்தல் கூடும்: 'அருளினல் ஆகமத்தே அறியலாம் அளவினுலும், தெருளலாம் சிவனை ஞானச் செய்தியால் சிந்தையுள்ளே, மருளெலாம் நீங்கக்கண்டு வாழலாம்' (சித்தி - பாயிரம். 5) ''அவனருளாலே அவன்ருள் வணங்கி'' (திருவாசகம்).

27. நிரை நிரையே - வரிசையாக, முறையாக. விதி - பிரமன். திரு - இலக்குமி. வாணி - சரசுவதி.

சுருதிமுதற் பலகலையும் தோற்றுவிக்கு முயர்வாணி
திருமகணால் லறத்திஞெடு பலதிருவும் திகழ்விக்கும்
அரணையுமை யவள்காட்டு மாதலினு லிவர்தம்மைப்
பரவிலிறை யெதிருமெனக் குறுமுனிவன் பகர்ந்திட்டான். 28

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நெடியபுகழ்க் குறுமுனிவ னிசைத்ததுவும்
அருந்தவத்தோர் நினைவு மோர்ந்து
விடமணிகண் டனைநோக்கி யுமையிவர்முன்
னெதிர்வமென மேவ லின்று
தொடர்தவத்தி னுமையருண்முற் பெறிலவள்செய்
திடுவள்பரன் றேன்ற வென்னக்
குடமுனிவ னிசைத்ததற்கு விரோதமாம்
முறையதுவே குறிக்கும் போதில். 29

அதுவுமன்றி வருத்தமுறத் தேடிஞெரு
பொருளதன்ற னருமை தோன்றும்
விதுவதனத் தாயெவர்க்கு மாதலினல்
மலையமுனி விதித்த வாறே
முதுமறைமா தவர்களுனைக் குறித்தியற்றும்
தவத்தானீ முன்னர் நின்றால்
கதுமெனத்தோன் றுதுநாமும் நீயினிதி
ஞற்றுதவங் கண்டு பின்னர். 30

என்றிறைவ னசைத்தனனுங் கிருந்தவர்கள்
அசைத்ததுவு மிலங்கு மின்பத்
தென்றமிழ்மா தவனசைத்த திறனுமுமை
அசைத்ததுவும் சிலவே டன்னை

---

28. பராசத்தியின் திருவருளால் பரமசிவனை அடைதல்வேண்டும் எனக்கூறிபடி. குறுமுனிவன் - அகத்தியர்.

29. ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. விடம் அணி கண்டன் - ஆலகால விடத்தைத் தரித்த கண்டத்தையுடைய சிவபிரான். விடம் மணி கண்டன் எனினுமாம். மணிகண்டன் - நீலகண்டன்; மணி - நீலமணி: நீலமணி போலும் கண்டத்தையுடையவன்: விடம்பொருந்திய அழகிய கண்டத்தை யுடையவன் என்றும் கொள்ளலாம்: ''கறை நிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்'' (பரஞ்சோதி - திருவிளை.) மணிகண்டன்: ''மணிமிடற்றுத் தேசன்', ''நீலமணிக்கண்டன்'' (தஞ்சைப்பெரு - உலா: 131, 170).

30. விது வதனத்தாய் - சந்திரன்போன்ற முகத்தினையுடையாய். கதும் என - விரைவாக. இனிதின் ஆற்று தவம் கண்டு.

வென்றவன்ற னசைப்புமிடை மருதினியற்
கையுமெண்ணி விடப தேவன்
தன்தலையை யசைத்திடத்தன் மணியசைந்து
கணீரென்னத் தயங்கிற் றன்றே. 31

மண்ணுலக மதிர்ந்ததுகட் செவியுலகம்
அதிர்ந்ததிமை மருவி டாதோர்
விண்ணுலக மதிர்ந்ததிது வென்கொலெனத்
தபோதனர்கள் வியத்தல் கண்டு
கண்ணுதலோன் சிறுநகைசெய் திறைவிதனை
நோக்கவவள் கருணை மூர்த்தி
எண்ணுறுநின் திருவிளையாட் டுலகிலெவர்
அறிவரென விசைத்தாள் போற்றி. 32

அவ்வுரைகேட் டுளமகிழ்வுற் றினிவருகென்
றவளுடனு மடலே றூர்ந்து
செவ்வியல்வெண் கயிலையடைந் தினிதிருந்தான்
இறைவனிது தேவி காண
நவ்வியங்கைப் பரனிழைத்த விளையாடல்
இனித்தேவர் நகரி னெங்கும்
மவ்வன்மணங் கமழ்பொழில்சூ ழிடைமருதின்
உமைதவஞ்செய் வளமை சொல்வாம். 33

திருவிளையாடற்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 269

---

31. அசைத்தனன் - சொல்லியருளினன். இரும் தவர்கள் - பெரிய தவத்தையுடையோர். சிலை வேள் தன்னை - கரும்புவில்லையுடைய மன்மதனை. தயங்கிற்று - விளங்கியது.

32. கட்செவி உலகம் - நாகலோகம்: பாதலம். கட்செவி - பாம்பு. கண்ணுதலோன் - சிவபெருமான். சிறுநகை - புன்சிரிப்பு: மந்தகாசம்.

33. அடல் ஏறு - வலிய இடபம். நவ்வி - மான். மவ்வல் - மல்லிகை.

நான்காவது

# தவநிலைச் சருக்கம்

---

[அகத்தியமுனிவர் அருளிச்செய்தபடியே முனிவர்கள் கலைமகளை நோக்கித் தவஞ்செய்வாராயினர். கலைமகள் முனிவர்களுடைய தவத்துக்கு இரங்கி, எதிரில் தோன்றிக் காட்சி கொடுத்தனள். மயக்கமில்லாமல் எவற்றையும் உணர்விராக என வரமும் தந்தருளினள். கலைமகளின் அருளால் மெய்ஞ்ஞானத்தைக் குறைவறப் பெற்ற முனிவர் அனைவரும் யாகஞ்செய்தற்கு வேண்டிய பொருள்கள் யாவும் குறைவறப் பெருக வேண்டித் திருமகளை வேண்டினர்; தவம் புரிந்தார். திருமகள் முனிவர் வேண்டுகோளின்படி தடாகம், மண்டபம், பூஞ்சோலை, நவமணிக் குவியல், காமதேனு, கற்பகம் முதலியவற்றையும் அருளினள். அவைகளைப் பெற்று மகிழ்ந்த முனிவர்கள் அம்மையே! இத்தலத்தில் வாழ்வோருக்குப் பெருஞ் செல்வம் அளித்தருள்க; நீயும் மனமகிழ்ந்து இங்கே வசித்தல்வேண்டும் எனக் குறையிரந்தனர். மலர்மகளும் அவ்வாறே வரமளித்தருளினள்.

பின்பு, முனிவர்களுடன் அகத்தியரும் உமாதேவியாரை நினைந்து அந்தச் சண்பகமலர்ச் சோலையில் இருந்து தவம் செய்யத்தொடங்கினர். சிவபெருமானைப் பூசித்தனர்; யாகம் புரிந்தனர்; அந்தணர்க்கும் சிவனடியாருக்கும் அன்னம் முதலியன மகிழ்ந்தளித்தனர். எப்போதும் உமாதேவியாருடைய திருவடிகளை நினைந்து பலநாட்கள் தவம்புரிந்தனர். அம்மையார் வெளிப்பட்டிலள். அகத்தியமுனிவர் மிகமிக வருந்தினர். இதுவரையில் அம்மையார் தோன்றிக் காட்சியளியாமைக்கு யான் என்ன பாவம் புரிந்தேனோ? முனிவர்கட்கு யான் கூறிய மொழிதான் என்னாம்? என நினைந்து வருத்தமுற்றார். திருவருள் கூட்டினாலன்றி, எவ்வித முயற்சியும் பயன் தராதன்றோ? பின்பு, அகத்தியர் உமாதேவியார் அருளாமை குறித்துச் சிவபெருமான்பால் வேண்டித் துதித்து நின்றார். இறைவர் அம்பிகையை நோக்கி, 'நீ முன்னே செல்க' எனப் பணித்தருளி அம்பிகை செல்வதன்முன் தாமும் இடைமருதணைந்து யாவரும் அறியாதபடி வீற்றிருந்தார்.

அம்மையார் வேள்விச்சாலையில் தோன்றிக் காட்சியளித்து நின்றாள். முனிவர்கள் அம்பிகை வடிவத்தைத் தரிசித்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள். ஆடினர், பாடினர், அதிசயித்தனர். பின்பு, அம்மையாரை

ஓர் சிறந்த ஆசனத்திலிருத்திப் பூசையாற்றினர். இறைவரையும் காண அருள் புரியவேண்டும் என்று குறையிரந்தனர். அம்மையார் முனிவர்கள் வேண்டுகோளுக்குத் திருச்செவிசாய்த்தனர்.

உம்முடைய விருப்பப்படி முன்னர் வாணியும் மலர்மகளும் தோன்றினர்; நாமும் வெளிப்பட்டோம்; சிவபெருமானும் வந்தருளுவர் என அருளிச் செய்தனள். சந்திரனில்லாத வானும், மதியமைச்சரில்லாத அரசும் விளக்கமுறாததுபோல ஆசாரியனில்லாத எந்தக் காரியமும் பயன் தர மாட்டா. ஆகலின், சிவபெருமானைக் காணும்பொருட்டு நாமும் தவஞ் செய்கின்ரும், நீவிரும் தவஞ்செய்விராக என்றருளினள். அதனைக் கேட்ட முனிவர்கள் அம்மையே! சிவபிரானும் தேவரீரும் வேறில்லையே! மலரும் மணமும் போன்றவர்கள் நீங்கள் இருவீரும் அன்ரே? குழந்தையின் பொருட்டுத் தாய் மருந்து உட்கொள்ளல்போல் சிற்றறிவுடைய எங்கள்பொருட்டுத் தேவரீரும் தவஞ்செய்தருளுகின்றீர்போலும்; நாங்கள் தவஞ்செய்யுமாறு இவ்வாறெனக் காட்டியருளுகின்றீர்; உம்முடைய அருளினல் இறைவரையும் காண்போம் என்று உபசாரமொழிகள் பலவற்றையும் கூறினர்.

இவ்வாறு கூறி வேள்வியாற்றித் தவம் புரிவாராயினர். நன்னிமித்தங்கள் பல தோன்றின. வேள்வித் தீ வலஞ்சுழித்தெழுந்தது. பசுக் கூட்டங்கள் தம்மை அறியாமலே தம் மடியினின்று பால் சொரிந்தன. பகைமையையுடைய விலங்குகளும் பறவைகளும் பகைமையின்றி நட்புற்று மகிழ்ந்தன. சோலையின் நடுவிலே இளந்தென்றற்காற்று வீசியது. அது கண்டு முனிவருடைய பத்தினிகள் அம்மையாருக்கு விண்ணப்பித்தனர். அம்மையார் புன்னகையுற்ருர். பின்னர், உமாதேவியார் காவிரி நீராடி, நித்திய கன்மங்களை முடித்து, திருவைந்தெழுத்தை விதிப்படி கணித்து, பூசனைக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் சேகரித்து வைத்துக் கொண்டு ஐவகைச் சுத்தியும்செய்து, சிவபெருமானை அகத்தும் புறத்தும் பூசித்து வணங்கித் துதித்தனர். பின்பு, அக்கினியிலும் பூசித்தனர். இவ்வாறு அம்மையார் பூசனையைச் செய்து முடித்து, இறைவனைத் தியானித்து மோனநிலையினையடைந்து, சிவோகம்பாவனையில் திளைத்தனர். இந்தத் திருவுருவே மூகாம்பிகை என வழங்கப்படுவது.

சிவபெருமான் உமாதேவியின் இதயகமலத்தில் சோதி வடிவாகத் தரிசனம் கொடுத்து, யாவரும்காண வெளிப்பட்டும் தரிசனம் தந்தருளினர். இலிங்க வடிவாக விளங்கினர். மான் மழு வரத அபயங்களுடனும், பிறை

சூடிய முடியுடனும் தரிசனம் தந்து ஏகநாயகராயினர். தேவர்கள் மலர் மாரி சொரிந்தனர். கந்தருவர் இசைமாரி பொழிந்தனர். பூதகணங்கள் துந்துபி முழங்கினர். கண்டோர் யாவரும் கண்ணீர் சொரிந்தனர். முனிவ ரும் அம்மையாரும் ஆனந்தக்கடலில் அழுந்தினர்.

இத்தலத்திலே உமாதேவியாருடைய தவத்துக்கு இரங்கிய சிவ பெருமான் ஸ்ரீ மகாலிங்கேசுர வடிவிலும், அவயவங்களோடு கூடி ஏகநாயக வடிவிலும் அருட்கோலங்கொண்டு தம்மைத் தரிசித்துப் போற்றி வணங்கு கின்றவர்களுக்கு இம்மை மறுமைச் செல்வங்களையெல்லாம் எளிதிலே கொடுத்தருளுகின்றார்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மலையமுறு தவமுனிவ னுரைத்தபடி தபோதனரு மகிழ்வி னோடு
நிலைதருமெய்ஞ் ஞானமுறத் தவம்புரிந்தார் கலைமகளை நினைந்து முன்னர்ச்
சிலைநுதல்வேற் கருந்தடங்கட் கலைமகள்வெள் ளனமதனிற் சிறக்கத்தோன்றி
அலைவறநீ ரெவையுமுணர்ந் திடுகவென வரங்கொடுத்தா ளகில முய்ய. 1

ஞானமுறச் சகலமுமிக் குணர்ந்ததற்பின் மகமினிது நவிலுங் காலை
தானமுத லியற்றுதற்குப் பொருளாதி வேண்டினர்செஞ் சலச மின்னை
மானமுறக் குறித்தரிய தவமியற்றக் கருடன்மிசை வந்து நின்று
தேனமிர்த மெனுஞ்சொல்லாள் வேண்டுவதென் னெனவேண்டுஞ் செல்வ
மென்றார். 2

கானுலவு மலர்த்தடமுங் கனகமணி மண்டபமுங் களிவண் டுண்ணுத்
தேனுலவு சண்பகத்தண் பொழிலுநவ மணிக்குவையுந் தேவர் சூழும்
வானுலவு தேனுவுமொண் கற்பகமும் பிறவுமெங்கும் வயங்கச் செய்தாள்
மீனுலவு கமலநிகர் வதனமுறு கமலையெனும் விமலை மன்னே. 3

---

1. மலையம் - பொதியில்மலை. தவமுனிவன் - அகத்தியர். தபோதனர் - தவச்செல்வத்தையுடைய ஏனை முனிவர்கள். கலைமகள் - சரசுவதி. வெள் அனம் அதனில்: அனம் - அன்னம்: தொகுத்தல். அலைவு அற - சஞ்சல மின்றி.

2. மகம் - யாகம், வேள்வி. செம் சலச மின்னை - இலக்குமிதேவியை; சலசம் - தாமரை; செஞ்சலசம் - செந்தாமரை. மானம் உற - பெருமை பொருந்த. குறித்து - தியானித்து. தேனமிர்தம் - தேனையும் அமிர்தத் தையும். செல்வம் வேண்டும் என்றார் என மாறுக.

3. கான் உலவு - மணம் வீசும். கனகம் - பொன். சண்பகமலரில் வண்டுகள் மொய்யா. மணிக்குவை-இரத்தினக்குவியல். வான்-ஆகாயம்.

முத்தநகைப் பவளவிதழ்க் கமலையெழின் முகநோக்கி முனிவ ரின்னும்
இத்தலம்வாழ் குநரெவர்க்கு மினியபெருஞ் செல்வமளித் தென்று நீயும்
சித்தமகிழ்ந் திவணுறைதல் வேண்டுமென்று ரவளுமிது செய்து மென்றுள்
அத்தினந்தொட் டந்நகரந் திருவளர்மா நகரான தவனி மீது. 4

பொன்னுருவச் சண்பகத்தண் மலர்ச்சோலை யெங்குமிகப் பொலித லேக்கி
மன்னுசண்ப காரணிய மாகியதித் தலமிந்த வைக லாதி
என்னவதற் கொருநாமங் கொடுத்தனன்பின் னருந்தவர்க ளிருந்துளோரும்
தென்மலைய முனிவரனு முமையைநினைந் தரியதவஞ் செய்ய லுற்றார். 5

கந்தமலர் வேணியனைப் பூசித்தும் மகம்புரிந்துங் கல்வி நீடும்
அந்தணர்க்குஞ் சிவனடியா ரெவர்க்குமன்ன மாதிமகிழ்ந் தளித்து நெஞ்சில்
சந்ததமு முமையவள்பொற் றுள்குறித்தும் பற்பலநாள் தவங்கள் செய்தும்
வந்திலளாங் குமையவள்கண் டகத்தியனு முனிவன்மிக வருந்து கின்றான். 6

பனிவரைக்கொம் பருளாதிவ் வாறிருக்க நாமென்ன பவஞ்செய் தோமோ
முனிவரர்க்கு நாமிசைத்த மொழியென்னு மினியென்ன முன்னி முன்னித்
துனிவருத்த மிகவுற்று னெதுவுமிறை யவனருளாற் றேற்றுங் காலம்
நனிவரத்தோன் றிடுமன்றி யிடையொருவர் முயற்சியினு னண்ணாற் பாற்றே.

---

தேனு - காமதேனு. வயங்க - விளங்கும்படி. மீன் உலவு - கயல்மீன்போலும் கண்கள் உலாவுகின்ற. மீன் என்றது கண்களை; உருவகம். கமலம் நிகர் வதனம் - தாமரைமலர்போலும் திருமுகத்தையுடைய. கமலை - திருமகள். விமலை - தூயவள்.

4. முத்தம் போன்ற நகையினையும் பவளம் போன்ற இதழினையும் உடைய கமலை என்க. நகை - பற்கள். இதழ் - உதடுகள். முத்த நகை, பவள இதழ்: உவமத்தொகை.

5. பொன் உருவம் சண்பகம்; உரு - நிறம். இந்த வைகல் ஆதி - இந்நாள் முதலாக.

6. கந்தம் மலர் வேணியன் - மணம் பொருந்திய (கொன்றை) மலரையணிந்த சிவபெருமான். வேணி - சடை. மகம் புரிந்தும் - வேள்வி யாற்றியும். சந்ததமும் - எப்பொழுதும். ஆங்கு உமையவள் வந்திலள்.

7. பனிவரைக் கொம்பு - உமாதேவியார். பனிவரை - இமயமலை. கொம்பு: உவமத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பவம்-பாவம். முன்னி முன்னி-நினைந்து நினைந்து: அடுக்கு. துனிவருத்தம்-மிக்க வருத்தம்: மீமிசைச்சொல். மூன்று நான்கு அடிகள்: ''அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா'' என்பதனை நினைவுறுத்துவன. திருவருளாலன்றி முயற்சிக்குப் பயன் கைகூடாதென வலியுறுத்தல் காண்க.

அம்பிகையா தியைநோக்கி யரியதவ மிகவியற்றி யன்பின் மிக்க
கும்பமுனி வருந்துவதுன் றிருவுளத்தி லிசைந்திலைகொல் கோமா னென்ன
வெம்புலியி னதளுடுத்தோன் முன்படர்தி யென்றினிது மொழிந்தா னன்னுன்
செம்பதுமத் தாள்பணிந்து சென்றனள்விண் ணின்றெருமின் செல்வ
தென்ன. 8

சத்திதனைப் பிரிந்துநொடிப் பொழுதுதனித் திருப்பதற்குச் சத்தி யேதாங்
கத்திதனை யுரித்தபிரா னவள்வருமு னிடைமருதி னணைவுற் றந்தப்
பத்திமிகு முனிவர்முத லெவருமறி யாதிருந்தான் பரையும் வந்து
முத்தியல்வெண் ணகைத்துவர்வாய்ச் சேடியர்சூழ் வரமுனிவர் முன்னர்
நின்றாள். 9

கலிவிருத்தம்

செந்தழலி னின்றுருகு செம்பொன்வரை யென்ன
வந்தலகில் செங்கதிர்கள் மண்டியெழ லென்ன
நந்தலறு மின்கள்முனர் நன்கொளிர்வ தென்ன
அந்தணர்க ணின்றொளிர்தல் கண்டனர்க ளம்மா. 10

வானவர்க ணங்கள்சொரி மாமலர்கள் கண்டார்
கானமுறு மைந்தொழில்கள் காதின்வழி கொண்டார்
மேனிலவு மிந்தவொளி மேவுமெது வென்றார்
மானலது துங்கமுற வாய்வெருவி நின்றார். 11

---

8. கும்பமுனி - அகத்தியர். கோமான் என்றது சிவபெருமானை. அதள் - தோல். படர்தி - செல்வாய். செம்பதுமத்தாள் - சிவந்த தாமரை மலர்போலும் திருவடிகள். செம்பதுமத்தாள் - இலக்குமி எனத் தொனிப்பொருளில் வந்தது நயம். மின் - மின்னற்கொடி.

9. சத்தி ஏது - ஆற்றல் யாதாம். ஆங்கு அத்திதனை உரித்தபிரான். அத்தி - யானை: தாருகவனமுனிவர் ஏவிய யானை என்க. நகை - பற்கள். துவர் வாய் - சிவந்த வாய். சேடியர் - தோழிகள்.

10. வந்து அலகு இல், நந்தல் அறு மின்கள். நந்தல் அறு - கேடில் லாத. அந்தணர்கள் - முனிவர்கள். செம்பொன்வரை - மேருமலை. ஒளிர்தல் அந்தணர்கள் கண்டனர்கள் என முடிக்க. அம்மா: அசை.

11. கானம் - இசை. யாழின்கண் பாலைகளைப் பண்ணிப்படுத்தும் பொருட்டுப் புரியப்படும் தொழில்கள் எண்வகையாம். பின்னர்ப் பாலை களை இசைக்கும்பொருட்டு அஃதாவது யாழ்வாசிக்கும்பொழுது புரியப் படும் தொழில்களும் எண்வகையாம். இவ்விரு வேறு வகையான எண் வகைத் தொழில்களும் யாழ் என்னும் நரப்புக்கருவிக்கே உரியனவாகும். மிடற்றின்கண் முதன்முதலாகச் செய்யப்படும் தொழில்கள் ஐந்தேயாம்.

இந்தவொளி நீடுமிவ ணென்றுமுள தேயோ
மந்திரமன் வேள்வியினின் வந்தவிட மீதோ
விந்தைமிகு மாதவமும் வெங்கனவு தானே
வந்தவைமுன் யாவையெது வந்திடுவ தன்றே. 12

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

என்னவுரைத் தலமரலுற் றிருப்பதுவு நிற்பதுவு மியக்கந் தானும்
பன்னுவது முணர்ந்திலரா யுழல்வேலை யருந்தவர்கள் பயின்ற வேள்வி
தன்னிலெழும் புகைமுகிலிற் புலவர்சொரி மலர்மழையிற் றனு மோங்கும்
மின்னெனநின் றவள்புவிமேற் பெண்வடிவந் தோன்றவுற்றாள் வேள்விச்
சாலை. 13

எழுதரிய வவயவமு முரகமணி முதலவற்றி னிலகு பூணும்
முழுதுலகும் விலையிலெனுங் கலையுமிரு ளகற்றுமணி முடியுஞ் செய்ய
செழுமலர்க்கை யபயமொடு வரதமுநீ டகமகிழ்வுஞ் செம்பொற் கச்சும்
பழுதகல்விண் ணுலகமலர்த் தொடையலுநற் றிருவருளின் பண்புந் தாங்கி.

---

*அவை: எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம் (அசைவு), குடிலம் (வளை தல்) என்னும் ஐந்தாகச் சிறப்புற நின்று, பின்னர்ப் பத்துவகைத் தொழி லாக மாறுதலடையும் என்பர் இசைவல்லார். இவ் ஐவகைத் தொழில் களும் எடுத்தல்: ஆரோசை அல்லது ஆரோகணம் எனவும், படுத்தல்: அமரோசை அல்லது அவரோகணம் எனவும், நலிதல்: வகையுடையதான ஐந்து இசைகளை ஒவ்வொன்றாகத் தனித்து நலிந்து பிடிக்கும் முறை மையில் நடுக்கம் எனவும், கம்பிதம்: மேற்கூறிய ஐந்து இசைகளை ஒவ் வொன்றாகத் தனித்து அசைத்துச் சுவைபடப் பாடிக்காட்டும் முறைமை யில் கமகம் எனவும், குடிலம்: இசைகளை ஒன்றிலிருந்து தொடங்கி இரண்டு முதல் ஏழுவரை திரும்பத் திரும்பத் தொடங்கிய இடத்துக்கு வந்து வந்து வளைந்து வளைந்து செல்வது போன்று செய்யப்படும் தொழில் முறையில் வளைவு அல்லது கோணம் எனவும் வழங்கப்பெறுகிறது. இம் மிடற்றுக்கண் நிகழும் ஐவகைத் தொழிலினையே 'கானம் உறும் ஐந்தொ ழில்' எனச் சிறப்பித்தார்.*

*12. மந்திரம் மன் வேள்வி - மந்திரங்கள் நிலைபெற்ற வேள்வி.*

*13. அலமரல் உற்று - மனம் சுழன்று: ''அலமரல் தெருமரல் ஆயிரண்டுஞ் சுழற்சி'' (தொல் - சொல்). உழல் வேலை - வருந்தும்போது. முகிலின் - மேகம்போல. புலவர் - தேவர்கள். வடிவம்தோன்ற வேள்விச் சாலையுற்றாள்.*

*14. பாம்பினின்று கிடைத்த மாணிக்கமாதலின் உரக மணி என்றார். பூண் - அணிகலங்கள். விலை இல் எனும் கலையும்.*

தும்புருநா ரதரிசைத்தேன் சொரியமலர் மடந்தைநிதி சொரிய வில்லின்
அம்புருவக் குமரியொடு காளியுடை வாளேந்த வமர்செய் வேற்கட்
கொம்புருவச் சிறுமருங்குற் புலோமிசைவெள் ளிலைமடித்துக் கொடுப்ப மேவும்
வம்புருவத் தனதடத்து வாக்கணங்கு புகழிசைப்ப மறைகள் வாழ்த்த. 15

தென்மலையிற் பணைத்தெழுந்து வடமலையுற் றிலகுமுலைத் தேவ மாதர்
பொன்மலிவெண் துகிலிரட்டக் கமலினிவெண் குடைநிழற்றப் பூவை யன்ன
சின்மொழிச்சிற் றிடைக்கயற்கட் டிலோத்தமைமென் னடம்புரியத் தீர்த்த
வின்மருவு கவரிபுடை வீசிடமுன் னுரமுனிவர் விளங்கக் கண்டார். [மின்னூர்

கண்டனர்கள் மகிழ்ந்துகுதி குதித்தனர்முன்
வணங்கினர்கள் கரையி லார்வம்
கொண்டனர்கள் விழுந்தனர்பின் னெழுந்தனர்மெய்
விதிர்ப்பிஞெடு குலவு கண்ணீர்
விண்டனர்கள் குதித்தனர்கள் பதைத்தனர்கள்
அரற்றினர்கள் வெம்பே யாற்பற்
றுண்டனர்க ளெனத்திகைத்து நின்றனர்கள்
அனைவர்களு மொருவ ரென்ன. 17

---

15. இசைத்தேன் - இசையாகிய தேன்: பண்புத்தொகை. மலர் மடந்தை - திருமகள். வில்லின் அம் புருவம். வில்லின்: இன் ஐந்தாவது ஒப்புப்பொருள்: 'கரும்புருவச்சிலை' என்றார் பரஞ்சோதி முனிவரும். வில் லின் அம்புருவ என்றது ஒரு நயம். அமர்செய் வேற்கண் கொம்பு உருவச் சிறுமருங்குல்: மருங்குல் - இடை. புலோமிசை - இந்திராணி. வெள்ளிலை - வெற்றிலை. வம்பு உருவு அ தன தடத்து. வாக்கணங்கு - நாமகள்.

16. தென்மலையின் - பொதியில் மலைபோல. பணைத்து - பருத்து. வடம் அலையுற்று இலகு; வடம் - முத்துமாலை. தென்மலையின் வடமலை யுற்று என்பது ஒரு நயம். துகில் இரட்ட - மெல்லிய ஆடைகளை மாறி மாறி வீச: இது மங்கலமரபு. கமலினி - ஒருதோழி. பூவை - நாகண வாய்ப்புள். மொழியையும் இடையையும் கண்களையும் உடைய திலோத் தமை. தீர்த்த மின்னார் - தீர்த்தங்களுக்குரிய அதிதெய்வப் பெண்கள். வில் மருவு - ஒளி பொருந்திய. முன் உர முனிவர் - முற்பட்ட ஞானத்தை யுடைய முனிவர்கள். உரம் - ஞானம்.

17. குதி குதித்தனர் - மிகக்களிப்புற்றனர்: குதுகலித்தல், குதுகுலித் தல் எனவும் இச்சொல் வழங்கும். கரை இல் ஆர்வம் - எல்லையில்லாத அன்பு. மெய் விதிர்ப்பு - உடல் நடுக்கம், வெம் பேயால் பற்றுண்டனர் கள் என - கொடிய பேயால் பீடிக்கப்பட்டோர்போல.

ஆங்கதன்பின் னகமதனை யொருவழிக்கொண் டொல்லையினி லருகி லெய்தி
ஓங்குபர னியற்றிடுமைந் தொழிலுக்குங் காரணமா மொருத்தி தன்னைப்
பூங்கமலத் தவிசினிடை யிருத்திமல ராதிகளாற் பூசை யாற்றி
நாங்களிறை யவன்றனையுங் கண்டுபணிந் திடக்கருணை நல்கு கென்றார். 18

இந்தவித முரைத்தமறை முனிவர்மகிழ்ந் திடவுமையா ளிசைக்கு நீடு
சந்தனமென் பரிமளமு மாயதென வந்தணரு மவரு மானீர்
முந்திரவி தன்னையும்விண் ணுலகினையும் விளங்கிடச்செய் முறைமை யென்னச்
சிந்துபுடை சூழுலகில் நீவிருமேற் பிறவியருந் திகழச் செய்தீர். 19

குணதிசைக்க ணெடுத்தவொளி யிரவியரு கினிலடைந்த குறிய தென்ன
உணர்வுதரு வாணியொடு கமலையுமுன் னுதித்தனர்நீ ருவகை யெய்த
மணமருவு மலர்க்கூந்தற் பாவையர்சூழ்ந் திடநாமும் வந்தோ மீண்டுப்
பணவரவப் பணியிறையும் வருவனினி யையமிலை பயப்ப டேன்மின். 20

மாமதியில் விசும்பெனவு மதியமைச்சி லரசெனவும் வயங்குங் கல்வி
ஏமமுறுங் குரவரின்றித் தாமேநின் றியற்றுவினை யிலங்கி டாது
தாமமுறு மிவணுமக்கச் சிந்தனைவேண் டுவதிலைமேற் றலைவற் காண
நாமுமருந் தவம்புரிது நீவிருநின் றரியதவ நவிற்று கென்றாள். 21

ஆற்றுதவப் பாவனையு மதின்பலனீந் தருள்பவளு மாகி நிற்பாள்
சாற்றுதவம் புரிவதற்குத் தொடங்குவதுங் குறிப்பினிருந் தவர்க டேறப்
போற்றுதவ பேதத்தி னியல்பறிவித் தவர்க்குறுதி பூட்ட வுற்ற
தோற்றமெனத் தகுமதுவு மன்னவர்முன் புரிதவத்தின் றேற்ற மேயாம். 22

---

18. அகம் அதனை - மனத்தை. தவிசினிடை - ஆசனத்தில். நல்குக என்றார்: அகரவீறு தொக்கது.

19. இரவி - சூரியன். சிந்து - கடல்.

20. குண திசை - கீழ்த்திசை. வாணி - நாமகள். கமலை - பூமகள். பண அரவப் பணி - படத்தையுடைய பாம்பை ஆபரணமாகக்கொண்ட. இறை - சிவபெருமான். பணம் - பாம்பினது படம். பணி - ஆபரணம். பயப்படேன்மின் - அஞ்சற்க.

21. மதி இல் விசும்பு - சந்திரனில்லாதவானம். மதி அமைச்சு இல் - நுட்ப புத்தியினையுடைய அமைச்சரில்லாத. அமைச்சு, அரசு: அஃறிணைச் சொற்கள். ஏமம் - பாதுகாப்பு. தலைவன் காண - தலைவனைக் காணும் பொருட்டு. நவிற்றுக - செய்க.

22. குறிப்பின் - குறித்துச்சொல்லுமிடத்து. இருந்தவர்கள் தேற - பெரிய தவசிகள் தேறும்பொருட்டு.

அன்னைதவம் புரிந்திடுது மென்னலுமா தவர்வணங்கி யமரர் நாட்டில்
துன்னிடுகற் பகமலராற் சண்பகத்தண் சோலையிடை துலங்கச் செய்தார்
பன்னுமெழின் மண்டபமொன் றதனைநவ மணிகளினுற் பதுமக் கோயிற்
பொன்னினிதி னலங்கரித்து நான்கிரட்டி மங்கலமும் பொருந்தச் செய்தார்.

அந்தமணி மண்டபத்திற் புகுந்துவட திசைநோக்கி யணிகொள் பீடத்
திந்துமுக வரமகளிர் பணிவிடைசெய் திடுவனசத் திருவ ரோடு
சந்தமுறு கைலைமலை மாதர்வழி படுவடுகன் சயமின் காளி
வந்தகங்காத் திடவயன்மா லுருத்திரர்கள் புறங்காப்ப மகிழ்வோ டுற்றாள். 24

நற்றவர்கள் போற்றிமகப் பிணிதவிர்ப்பத் தாய்மருந்து நனிதின் றுங்கு
சிற்றறிவி னேம்பொருட்டுத் தவம்புரிதி நீயுமுயர் சிவனும் வேறன்
றுற்றமண நீயவன்போ துனைக்கண்டா மவற்காண்பா னுடையோங் காதல்
மற்றவற்காண் பருவமெமக் கென்றுறுங்கொ லென்றுரைத்தார் வணங்கி
நின்று. 25

---

23. பதுமக் கோயிற்பொன் - தாமரையாகிய கோயிலில் எழுந்தருளியுள்ள இலக்குமிதேவி. பொன் இனிதின் அலங்கரித்து. நான்கு இரட்டி மங்கலம் - எண்வகைமங்கலப் பொருள்கள்: இதனை அட்டமங்கலமென்பர். அவை: கண்ணாடி, பூரணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், ஸ்ரீவற்சம், சுவஸ்திகம், சங்கம், தீபம் என்பன; எண்வகைத் தேவமங்கலங்களாம். ''செங்கய லிரட்டைதிரு வார்சுடர்க ணாடி, பொங்குகொடி வார்முரசம் தோட்டிபுணர் கும்பம், மங்கலங்களெட்டும்'' (சீவகசிந்தாமணி - 2487) என்பர்; ''மங்கலம் பொறித்த மகர வாசிகை'' (சிலப் - இந்திரவி - 151) உரையும் பார்க்க.

24. இந்து முக அரமகளிர். இந்து முகம் - சந்திரன்போன்ற முகம். வனசத்து இருவர் - வெண்டாமரை மலரிலுள்ள நாமகளும், செந்தாமரை மலரிலுள்ள திருமகளும். வனசம் - தாமரை. வடுகன் - வைரவக்கடவுள். சயமின் - கொற்றவை. வந்து அகம் காத்திட. அகம் - உள்ளிடம்.

25 மகப்பிணி தவிர்ப்பத் தாய் மருந்து தின்றுங்கு - குழந்தையின் பொருட்டுத் தாய்மருந்து உட்கொள்ளுதல்: ''இளங்குழவிப் பிணிக்கீன்ற தாய் மருந்து நுகர்வதுபோல் இருளின் மாண்ட, களங்குலவு மலமுயிர்கட் கொழியவருள் நடங்காணும் கடன் மீக்கொண்டு, வளங்குலவு தனதுபெருங் கற்புமொரு கணவரிறை மாண்பும் தோன்ற, விளங்குமிர ணியமன்றில் நின்றருளு மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்'' (திருவானைக்காப்பு - கடவுள் - 7); ''நோயுண்மருந்து தாயுண்டாங்கு'' (சிதம்பரமும்மணி - 1); ''புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போலத் தொழுதெழுவார் வினைக்குத் தான்நீறணிந்தான் என்பாருமுளர்'' (சிற்றம் - 118, பேரா.); ''நீற்றினை அணிந்ததுவென் நின்னிறைவ னென்றே, சாற்றினை யுயிர்க் கிடர் தணிப்பதென எண்ணாய், தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறு

நிகரின்முனி மடந்தையர்க ளுமையவள்பால் நின்றுரைப்பார் நிலவெ மன்னே
பகருமணி முடிக்கதிரு மொளிர்வதன மதியுமண்டப் பரப்பி னெங்கும்
இகலுமிருட் கணமகற்றப் பரிதியெனத் திங்களென விளங்கு வேறு
திகழுறுவ தெனவிசும்பிற் றிங்களின்முன் னுடுக்கணங்க டிகழ்வ தென்ன. 26

வரித்தடங்க ணுலகனைத்தும் படைத்தளிப்ப நான்முகனு மாலு மென்றே
விரித்தவருட் கடல்சூழத் திரைக்கடலென் விளங்குகுண வெற்பு நீடித்
தரித்திருக்கப் புவனமெலாம் பூதரமென் றிலகுபல சயில மென்றே
தெரித்திடுமிப் பொருளிவ்வா றிலங்கலிவள் விளையாடற் செய்தி யன்றே. 27

பரிவினுறு மிவடனைவிட் டொருகணமும் பிரிவுபொருப் பரனுக் காங்குத்
தரிதருங்கொ லின்னுமிவ ணெய்தாத பரிசென்றே தயங்கு மீண்டு
வரியளிகள் சண்பகத்தே னருந்துகின்ற திரைக்கரத்தால் வயங்கு பொன்னி
விரிகதிர்ப்பொன் மணியெறிந்த துறவான பகையான விலங்கும் புள்ளும். 28

கந்தமிகுந் தெதிரோமக் கனலும்வலன் சுழித்தெழுந்த கரந்தி டாது
சந்தமுறு மானினங்கள் பால்சொரிந்த களிநிறைந்த தண்கா வெங்கும்
மந்தமருத் தினிதெழுந்த தினியகுறி யிறைவனிங்கு வருதற் கேது
வந்தனவென் றுரைக்கின்ற பூவைகிளி யென்றனர்கள் மகிழ்ச்சி யெய்தி. 29

---

மந்நோய், மாற்றும்வகை அன்னையர் அருந்திய மருந்தாம்'' (திருவாதவூரர். புத்தரை வாதில் - 76). நீ மணம், அவன் போது. காண் பருவம் - காண்கின்றகாலம்

26. நிலவு எம் அன்னை. மணி முடிக் கதிர் - இரத்தின கிரீடத்தின் கிரணம். வதனமதி - முகமாகிய சந்திரன். உடு கணங்கள் - நட்சத்திரக் கூட்டங்கள்.

27. வரி தடம் கண் - வரிகள் பொருந்திய பெரிய கண்களையுடைய உமாதேவியார்: அன்மொழித்தொகை. குண வெற்பு - குணமாகிய மலை: பண்புத்தொகை. கிழக்குத் திசையில் உள்ள மலை எனத் தொனித்தல் காண்க. பூதரம் - மலை. சயிலம் - மலை. இவ்வாறு இலங்கல் - இப்படி விளங்குந் தன்மை.

28. பரிவின் - அன்பினுல். அளிகள் அருந்துகின்ற, திரைக்கரத்தால் எறிந்தது. விலங்கும் புள்ளும் உறவான. பிரிவு பொரு - பிரிந்திருப்பதனைப் பொருத. தரிதருங்கொல் - நிலைபெறுமோ; பெருது என்றபடி.

29. கந்தம் - வாசனை. ஓமக்கனல் - வேள்வித்தீ. கரந்திடாது - ஒளியாமல். சந்தம் உறும் ஆன் இனங்கள். தண் கா - குளிர்ந்த சோலைகள். மந்த மருத்து - மந்தமாருதம்: இளந்தென்றல்: மருத்து - காற்று. இனிய குறி - நல்ல சகுனங்கள்: நன்னிமித்தம். பூவை - நாகணவாய்ப்புள்.

இவை இரண்டு பாட்டானும் நன்னிமித்தங்கள் கூறப்பட்டன.

பரவுமொழி யிவையனைத்தும் பற்றமுழு துலகளித்த பாவை கேளா
விரவியெழுந் திடுஞ்சமயஞ் சிலகுறியா லறிகுதல்போ லீண்டு வள்ளல்
வரவதுவுஞ் சிலகுறியா லறிந்தனர்க ளிவரென்ன மனத்துட் கொண்டு
விரவுசிறு நகைசெய்து மகிழ்வினொடு தவம்புரிய மேவ லுற்றாள். 30

பொன்னிநதி யிடத்தணைந்து புனல்படிந்து சந்திவினை போற்றி வந்து
பன்னிடுமைந் தெழுத்தோதிப் பூசனைக்கு வேண்டுவன பலவுங் கொண்டு
நன்னளினத் திருவர்களு முதவிடவை வகைச்சுத்தி நவிற்றி யாரும்
மன்னுமகத் தினும்புறத்தும் பரம்பொருளைப் பூசித்து வாழ்த்திப் பின்னர். 31

மேவுதழ லிடந்தனிலும் வந்தனஞ்செய் தவியினிது வீசுங் காலைப்
பாவகன்வெய் தெனக்கொள்வன் றிருமுகத்திற் குருவெயர்வை படுமு னஞ்சி
தாவியினைப் பகற்றிடுங்காற் றிறையொருகாற் பதமலர்கள் தன்மீ துற்றுற்
பூவதென விருந்துமன மகிழ்ந்திடுவள் பூவென்னப் புகலு மன்னாள். 32

இவர்களிவை புரிவனவும் பிறருமவ ரவர்க்கிசைந்த தியற்று மாறும்
சிவனதரு ளெவளவென நினைந்துபிற செய்வனவுஞ் செய்து பின்னர்
மவுனநிலை யடைந்துதனித் தியானமுற்றா ளிவ்வாறு வருங்கா லத்து
நவநவமா யெழுந்தன்பு நீடவிறை யவனருளும் நணுகிற் றன்றே. 33

---

30. பாவை - உமாதேவியார். இரவி எழுந்திடும் சமயம் - சூரியன் தோன்றும் காலத்தை. வரவு அதுவும்: அது பகுதிப் பொருள் விகுதி. விரவு சிறு நகை - பொருந்திய புன்னகை: என்றது மந்தகாசத்தை. நகை - சிரிப்பு.

31. பொன்னிநதி - காவிரியாறு. புனல்படிந்து - நீராடி. சந்திவினை - சந்தியாவந்தன முதலிய கருமங்கள். நல் நளினத்து இருவர்களும் - சிறந்த தாமரைமலரில் வசிக்கும் பூமகளும் நாமகளும். ஐவகைச்சுத்தி - பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. நவிற்றி - செய்துமுடித்து; அகப்பூசை புறப்பூசைகளைச் செய்து என்றபடி.

32. மேவுதழல் இடம் தனிலும் - பொருந்திய யாகாக்கினியிலும். அவி - அவிப்பாகம்: தேவருணவு. பாவகன் - அக்கினிதேவன். வெய்தென - விரைவாக. காற்று இறை – வாயுதேவன். பூ அது என: அது பகுதிப் பொருள் விகுதி. பூ என்னப் புகலும் அன்னாள் - பூதேவி: நிலமகள்.

33. சிவனது அருள் எ அளவு என. நவ நவமாய் - புதிதுபுதிதாக. நீட - பெருக. நணுகிற்று - கிட்டியது. நீடநணுகிற்று: முரண்தொடை.

ஓதரிய மறைப்பொருளாய்ப் பூரணமாய்த் தெளிவினிடை யுதிக்கு மொன்ருய்ப்
பேதுருகே வலசகலந் துரியமிவை கடந்ததுவாய்ப் பிரிவி லாதாய்
ஆதிநடு விறிலதாய்ச் சிற்பரமாய் நிற்குணமா யனுதி யாகி
நாதமதின் முடிவினதா யிலங்குபரன் றிருவுருவை நண்ணி நின்ருள். 34

அன்னையசஞ் சலையாகிப் பரமசுகத் திடைநிற்க வமல மான
தன்னிதயத் திடைவிளங்குஞ் சுடருருவா யெழுந்திறைவன் றயங்கு மன்னுள்
முன்னரெவர் களுங்காண வெளிநின்ரு னீடண்ட முகடு கீறித்
துன்னிடுமச் சுடரினள விவளவென விதிதனக்கும் சொல்ல வற்ருே. 35

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இறுதியிற் பரமன் பதம்புகு துயிர்க ளியாவையு மொடுங்குவ தென்ன
மறுவறு தவத்துப் பனிவரைக் கொடியு மாதவர் கணங்களும் பிறரும்
உறுதிசை யனைத்துஞ் சூழ்சுட ரொளியி லொன்றினர் திசைகளும் பிறவும்
அறிகில ராகித் திகைத்தனர் நின்ரு ரம்பிகை தெளிந்தனள் பின்னர். 36

விழித்தனர் விழித்தே நிற்றலு முகிழ்த்தோர் மேலுமந் நிலையினின் றிடலும்
மழுத்தனிப் படையோ னெடுத்தபே ரொளியின் வடிவமு னேக்கிநின் றிறையை
வழுத்திமுன் னின்று விழிகொடு நோக்கும் வடிவுகொண் டருளுதி யென்ருள்
மொழித்திற னிதனைக் கேட்டலு மெவர்க்கு முன்னவன் றிருவுள மகிழ்ந்து. 37

ஓங்கருள் வடிவ மாகிய விலிங்க வுருவம தாகவோ ருருக்கொண்
டாங்கத னிடைநின் றெழில்கனிந் தொழுகு மவயவங் களுநனி முடிக்கண்
வாங்கிளம் பிறையுந் தடக்கைமான் மழுவும் வரதமு மபயமும் பிறவும்
தாங்கியோர் பவள மலையெழுந் தென்னத் தயங்கொரு வடிவுகொண்
டெழுந்தான். 38.

---

34. ஓத அரிய. பேது உரு கேவல சகலம். பேது - பேதைமை; அறியாமை. நிற்குணம் ஆய் - மாயாகுணங்கள் இல்லாததாய். நாத தத்துவத்தின் முடிவில் உள்ளதாய்.

35. அன்னை - உமாதேவியார். அசஞ்சலை - சஞ்சலமில்லாதவளாய். அமலம் - குற்றமில்லாமை. இதயத்திடை விளங்கும் இறைவன் வெளி நின்ருன். சுடரின் அளவு என. விதி - பிரமதேவன். சொல்லவற்ருே - சொல்லவல்லதோ.

36. மறு அறு தவத்து - குற்றமில்லாத தவத்தினையுடைய. பனி வரைக் கொடி - உமாதேவியார். பனிவரை - இமையமலை. திகைத்தனர் நின்ருர் - திகைத்துநின்ருர்: முற்றெச்சம்.

37. வடிவம் முன் நோக்கி. முகிழ்த்தோர் - கண்களை மூடிக்கொண் டோர். முன்னவன் - சிவபெருமான்.

38. ஓங்கு அருள் வடிவம். வாங்கு இளம்பிறை. வாங்கு - வளைந்த.

பரவிடு மிமையோர் சொரிமலர் மழைகள் பாரிட மறைத்தன நிதிக்கோன்
இருநிதி மழைகள் வரைக்குல மறைத்த வெண்ணில்கந் தருவர்க ளிசைக்கும்
கருவியி னிசையும் வியன்மிகு பூத கணுதிபர் துந்துபி முழக்கும்
அருமறை யொலியுந் துதித்திடு மார்ப்பு மார்கலி தனைமறைத் தனவே. 39

உணர்வின்மிக் குயிர்க ளுணர்ந்திட வடிவுற் றுதித்தரு ளேகநா யகனுங்
கிணையின்மெய் யன்பி னுமையவள் காண வெதிருற மற்றவண் மகிழ்ந்து
துணைமல ரடியிற் பணிந்தனர் தொழுது துதித்தனர் முனிவரும் பிறரும்
அணுகினர் கமல மலரினை வனத்தி னகற்றிய பதம்பணிந் தேத்தி. 40

பெருகுமா னந்தச் சலதியுட் படிந்து பிறைநறுங் கண்ணியஞ் சடிலக்
கருமிடற் றிறையோன் வடிவெழி லமுதைக் கண்களா லருந்திமுன் னேங்கும்
பருவரற் பசிதீர்ந் துரைப்பதொன் றின்றிப் பரவச மடைந்தெதிர் நின்றார்
கருதிய தடையப் புரிதரு முயற்சி கனித்திடு தவத்தின்வே றுண்டோ. 41

கலிநிலைத்துறை

பனிவ ரைக்கொடி யருந்தவம் புரிந்துநீள் பரிவின்
முனிவ ரீசனைக் கண்டிடச் செய்தது மொழிந்தேம்
இனிய ரன்றனைத் தானருச் சனையினி தியற்றித்
தனிமை யுற்றிடு பெருங்கதை சாற்றுதுங் கேண்மின். 42

**தவநிலைச்சருக்கம் முற்றிற்று**

ஆகத் திருவிருத்தம் — 311

---

39. பார் இடம் - பூமியாகிய இடம். நிதிக்கோன் - குபேரன். வரைக்குலம் - மலைகளின் கூட்டம். ஆர்கலி - கடல்.

40. ஏகநாயகன் ஆங்கு. இணை இல் மெய்யன்பின் - ஒப்பு இல்லாத மெய்யன்புடைய. வனத்தின் அகற்றிய. வனம் - காடு, நீர். தோற்றவரைக் காட்டிலோட்டிவிடுதல் மரபு.

41. ஆனந்தச் சலதி - ஆனந்தக்கடல். கண்ணி - முடிமாலை. பிறை நறுங்கண்ணி: மாதர்பிறைக்கண்ணி. சடிலம் – சடை. எழிலாகிய அமுது. பருவரல் - துன்பம்.

ஐந்தாவது

# தம்மைத்தாமருச்சனைச்சருக்கம்

---

உமாதேவியாரைப்பார்த்து ஏகநாயகராகிய சிவபெருமான் அருளிச் செய்வாராயினர். உமையே! நீ நம்மைப் பிரிந்து இவ்விடத்துக்கு வந்து மிக்க அருந்தவத்தைப் புரிந்தாய்; மெய் இளைத்தனைபோலும். அகத்திய முனிவன் வாய்மொழி பொய்யாதபடி நாமும் இத்தபோதனர் மகிழ்வுற இங்கே வடிவுகொண்டு வந்தோம். பாலில் நெய் தோன்றுதிருப்பதுபோலத் தேவர்கள்பால் நாம் விளங்கித் தோன்றுதிருந்தோம். தயிரினிடத்து வெண்ணெய் விளங்கித் தோன்றுதல்போன்று அருந்தவர்பால் அவர் அன்புக்கு எளிதாய் நீ நம்மைப் புலப்படக் காட்டினுய். உலகம் முழுதும் புகழ் விளங்கும்படி நிற்பவளே! நீ எவ்வாறு தவம் புரிந்தாய்? எங்கே பொருந்தியிருந்தாய்? உனக்கு உணவு யாது? நம்மைப் பிரிந்தபின்னர் மனத்தில் எண்ணியது யாது? உன் தவத்துக்கு நாம் மிகமகிழ்ந்தோம். அதற்கு அறிகுறியாகக் கயிலையைத் தருவோமென்னில், நீ மகிழ்ந்துறையு மிடம் அது; ஆகலின், அஃது நின்னுடையதேயாம். மற்றுள்ள பொருள் களோ என்னில், அவை உன் ஏவல்வழி நிற்பனவாம். மாயையை நீக்குவம் என்னில், உன்மேனி ஞானவடிவம். காமம் முதலிய அகப்பகையை நீக்குவ மென்னில், அவை உன்பாலில்லை. அன்புடையோர்க்கெல்லாம் இம்மைப் பேறு மறுமைப் பேறுகளை நீயே தரவல்லாய். ஆகலின், உனக்கு நாம் தரும் வரம் ஒன்றில்லை. உன் சொல்லமுதினை நாம் நுகர்வேம் என்று பலபடியாகக் கூறினர்.

அதுகேட்ட கௌரி மகிழ்ச்சிமிக்கார்; சிவபெருமானைத் துதித்தார். தேவரீர் எல்லாம் அறிபவர்; தேவரீர் அறியாததொன்றில்லை. ஆயினும் சொல்வேன், கேட்டருள்க. பரமானந்தக்கடலிலே மூழ்கியிருந்தேன், அதனை விட்டு நான் நீங்கிலேன், அதனையே நுகர்ந்து இன்புற்றேன். மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாத மறைப்பொருளாய்ப் பேரொளிப் பிழம்பாய் உள்ள அப்பரம்பொருளை மலர் முதலியன கொண்டு அகத்தும் புறத்தும் உம் முடைய மெய்யடியார்போல விடாது பூசித்திருந்தேன். நினைத்தது யாதெனு அருளினீர். மறப்பினன்றே நினைத்தல்வேண்டும். தேவரீர் மனத்திலே விளங்கித் தோன்றியபடியையும் நன்குணர்வேன். தவஞ்செய்யுங்காலத்துக் கேவல சகல நிலைகளில் நில்லாமல் சுத்தாவத்தையில் இருந்துகொண்டு

இன்பத்தைத் துய்த்தேன். என்னைத் தனியே கண்டேன்; தேவரீரை அன்றும் கண்டேன், இன்றும் கண்டேன். ஆகாயத்திலே அடங்கித் தோன்றும் வாயுவைப்போலவும், சூரியனிடத்து அடங்கித்தோன்றும் சந்திரன்போலவும் உம்மிடத்தில் யான் அடங்கித் தோன்றினேன் என உமாதேவியார் விண்ணப்பித்தனர்.

அவ்விண்ணப்பத்தைக்கேட்டு உவந்த சிவபெருமான் உமாதேவியாரை நோக்கி, நீ செய்த தவத்தின் உண்மையைக் காணவே இதுவரை வெளிப்படாதிருந்தோம். தவத்தின் பெருமையைக் கண்டோம். சோதியாக வெளிப்பட்டுநின்றோம். இவ்வாறு வெளிப்பட்டுநின்ற இச்சோதிலிங்கத்தை எவருங்காண நாமே பூசிப்போம். கற்பகம் விரும்பியவற்றைத் தருதல்போல இச்சோதிலிங்கத்தைப் பூசிக்க எண்ணி முற்படும்போதே அவருக்கு அநாதி காலந்தொட்டு வரும் வினைகளையெல்லாம் போக்கியருளுவோம். ஒருவர் அன்புநிறைந்த மனத்துடன் ஒருநாள் பூசித்தாலும் இம்மையில் கல்வி, செல்வம், அழகு, மனை, மனைவி, மைந்தர், சேனைகள், நாடு முதலிய எல்லா வளங்களையும் பெற்று வாழ்வர். பின்பு பாசப்பற்றுநீங்கிப் பரமுத்தியைப் பெறுவர். மற்றும், ஒருகால் இச்சோதிலிங்கத்தைத் தரிசனம்செய்யினும் மாபாதகம் அனைத்தும் தியிடைப்பட்ட பஞ்சுப் போலவும், சூரியன்முன் இருள் போலவும் நீங்கும். அன்றி, பகை பிணி முதலியனவும் அகலும். எண்ணிய பொருள்கள் எல்லாம் எண்ணியவாறே கைகூடும் என்று அருளினர். பின்னர் அப்பெருமான் சோதிலிங்கத்தைப் பூசிக்கும்பொருட்டு அணுகினர்.

உடனே பூமிதேவி மணிப்பொற்பீடத்தை அளித்தாள். மயன் மணிகளிழைத்த விமானம் ஒன்றை நல்கினன். பிரமன் பூணூலையும் பவித்திரத்தையும் தந்தான். வருணன் திருமஞ்சனக்குடம் ஏந்திநின்றான். வாயுதேவன் மணம் மிக்க மலர்களை ஏந்தினன். சந்திரன் பட்டாடைகளைத் தந்தான். பொதியில்மலை சந்தனம் தந்தது. குபேரன், ஈசானன் இரத்தினக் குவியல்களைக் கொடுத்தனர். அக்கினிதேவன் தூப தீபங்களை ஏந்தி நின்றான். புவனேசை பால் தயிர் நெய் முதலியன தந்தாள். இந்திரன் தாம்பூலம் நல்கினன். நிருதி கண்ணாடி குடை சாமரம் தந்தனன். சூரியர்கள் எங்கெங்கும் தீபம் ஏற்றினர். இயமன் சேனையுடன் எல்லாத் திசைகளிலும் காவல்புரிந்தான். வேதங்கள் மந்திரமோதின. வசுக்கள் பல்லாண்டுகூறினர். வீணையர் கீதம் பாடினர். முனிவர்கள் வாழ்த்தெடுத்தனர். அரம்பையர் ஆடினர். தேவர் மலர்மாரி பொழிந்தனர். பூதகணத்தலைவர் பல்லியம் முழக்கினர். திருமால் ஏனையோர்கொடுக்கும் பொருள்களையெல்லாம் ஏற்று

இறைவன்பால் நின்று ஏவின செய்தனர். இவ்வாறாக இறைவன் ஆகம விதிப்படி தம்மைத்தாமே பூசித்து அனைவருக்கும் காட்டியருளினர்.

பின்னர் இறைவன் தம் ஏவல்வழிநின்ற தேவர்கள் அனைவருக்கும் வேண்டிய வரங்களைத்தந்தனர்; அவரவர் பதவிகளுக்குச் செல்ல விடையும் அருளினர். பின்பு, உமாதேவியார் சிவபெருமானைப் பார்த்து, சுவாமீ! பிரமன் முதலிய தேவர்கள் உம்மைப் பூசிப்பதன்றோ முறை. அங்ஙனமாக, இந்த மூர்த்தியினிடத்து எவரைப் பூசித்தீர் என்று வினவினள். அந்த வினவினைக்கேட்ட விமலன், உமையே! பூசித்தோனும் பூசனையை ஏற்றுக் கொண்ட பரம்பொருளும் நாமே; நம்மை நாமே பூசித்தற்குக் காரணம் என்னையோ? என்னில், இம்முனிவர்கள் நம்மைப் பூசித்தலை மறந்தனர்; அவர்கள் அதனை அறிந்துகோடற்பொருட்டேயாம் என்றனர். அம்மையார் அதனைக் கேட்டு ஐயனே! தேவருங்காண உம்முடைய அருள்வடிவத்தை முனிவர்கட்குக் காட்டினீர். அதனைப் பூசிக்கும் முறையையும் அருளினீர். முனிவர்கள் மகிழுமாறு உமது திருவாக்கால் ஏதேனும் சொல்லியருளுக என்றாள். சிவபிரான் முனிவர்களைநோக்கி, முனிவிர்காள்! உம்மிடம் பத்தி என்னும் கற்பகம் உளது. அது எதனையும் அளிக்கவல்லது. அப்பத்தியே மால் பிரமர்கட்கு அரிய நம்மை உங்கள்முன் நல்கிற்று. நாம் பத்திக்கு எளியேம். பத்தியுள்ளோர்க்கு எவற்றையும் நல்குவோம் என்றனர். முனிவர் மீண்டும் இறைவனை நோக்கி, சுவாமி! அடியேங்கட்குப் பத்தியை உண்டு பண்ணுவதும், அப்பத்தியை ஏற்றுக்கொள்ளுவதும், எங்கள் துயர்நீங்கக் கருணைபுரிவதும் ஆகிய யாவும் நீரே. நாங்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையோம். ஆயினும் உம் அருளால் உயர்வு பெற்றோம். உம்முடைய தரிசனம் எங்கட்கு எளிதாகக்கிட்டியதற்குக் காரணம் உமாதேவியாருடைய கருணையும், அகத்தியமுனிவருடைய அருளுமேயாம் என உபசாரமொழி கூறி வணங்கினர். சிவபெருமான் தவஞ்செய்தோருக்கும் தவமின்றி வறிதே காலங்கழித்தோருக்கும் கல்வி செல்வம் முதலியவைகளை நிறையக் கொடுத்தருளினர். பின்னும் முனிவர்களை நோக்கி மற்றும் உமக்கு வேண்டியது யாது? அதனையும் கொடுத்தருளுவோம் என்றனர்.

பின்பு, முனிவர்கள் வணங்கி எல்லாம் உமதருளே; சிவஞானம் பெருக அருள்புரிக என வேண்டினர். இறைவன் முனிவர்களே! பிரணவப் பொருளின் வடிவாயிருக்கும் இந்த இலிங்கத்தில் பொருந்தும் நம்மை அறிதற்குரிய சிவஞானம், வணங்கிப் போற்றுவோர்க்குக் கிடைக்கும்; அதனை உமக்கு அருளினோம் என்றார். கேட்ட முனிவர் மீண்டும் சிவ பெருமானை நோக்கி, பிரணவத்தின் வடிவம் என்றீர்; அதனையும் அருளுக



இறைவன் தம்மைத்தாம் அருச்சனை செய்தல்

என இரந்துவேண்டினர். குடிலே என்னும் பிரணவம் ஓருருவாய் விளங்கினும், அயன் மால் உருத்திரன் என்னும் மூவருடைய வடிவாம் அது. அப்பிரணவம் அநாதியே நம்மைப் பிரியாதது. முற்காலத்துப் பிரமன் ஒரு வேள்வியாற்ற எண்ணினுன்; வேதமுடிவை நினைந்தான். அஃது தோன்றிலது. விளங்குதற்பொருட்டுத் தவம்பண்ணினுன். அத்தவத்தைக் கண்டு நாம் அவனுக்கு வெளிப்பட்டோம். பிரணவத்தை உபதேசித்தோம். அவன் அதனை நன்கு தியானித்துத் தனதாக்கினுன். அதில் வியாகிருதி தோன்றியது; அதில் காயத்திரி உதித்தது; அதில் வேதங்கள் எழுந்தன; அதில் காரணர் மூவரும் தோற்றினர். அவரைக்கொண்டு அவன் அந்த வேள்வியை நன்ருற்றினுன். அதில் பதினுலுலகமும் விளங்கித்தோன்றின. அதனுல் சிவஞானம் உதித்தது. சிவஞானம் வாயிலாக எமது தரிசனமும் அவனுக்கு உண்டாயிற்று. ஆகலின் அப்பிரணவமே நம்மை அறிதற்கு ஏதுவாம். முத்தியைத் தருவதும் அதுவே. பிரணவத்தியானம் செய்யும் உம்மைப்புண்ணியம் உடையோருக்குச் சோகமும் மோகமும் பொருந்தா என்றருளினர்.

சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்யக் கேட்ட முனிவர்கள் மேலும் சொல்லத் தொடங்கினர். இச்சோதி மகாலிங்கத்தின் பெருமை யாவும் அறிந்தோம். உலகத்தில் மகாலிங்கவடிவம் ஒன்ருே? அன்றி வேறு வடிவங்களும் உளவோ? செய்யும் பூசையை ஏற்றுக்கொண்டு அருள் செய்யும் மூர்த்திகள் உளதாயின் அதனையும், அதில் அன்பினுல் பூசை செய்யும் முறையையும் அருளிச்செய்யவேண்டும் எனவேண்டினர். இடபம் எழுதிக்கட்டிய கொடியினையுடைய இறைவன், முனிவர்களைப் பார்த்து, எம்மைப் பூசிப்பதற்குப் பாவனையும், வடிவும், மனப்பற்றும், மிகுத்த கொள்கைகளும், அவைகளைக் கூறும் நூல்களும் மிகப்பலவாம். வைதிக பூசை, ஆகமபூசை, இரண்டும் விரவிய பூசை என மூவகைப்படும். அவற்றுள்ளும் பலவகையுண்டு. விரிவாகக் கூறப்படும் இவற்றுள் ஏதேனும் ஒரு வடிவத்திலே ஏதேனும் ஒருவிதியை மேற்கொண்டு பூசனைசெய்தோர் சிவன்முத்தராவர். எந்த வடிவத்தில் எம்மைப் பூசித்தாலும் சில இன்றியமையாத விதிகள் உள்ளன. அவைகளையும் கூறுகின்ருேம். நாடோறும் விடியற்காலேயிலெழுந்து நீராடுதல், சந்திமுடித்தல், பூசைசெய்யுமிடத்திற் சென்று விதிப்படி திருவைந்தெழுத்தைக் கணித்தல் செய்துகொண்டு பின்பு ஐவகைச் சுத்திகளும் இயற்றவேண்டும். அதன்பின்பு அகப்பூசனையைச்செய்து புறத்தினும் பூசிக்கவேண்டும். புறத்தினிற் பூசிக்கின்றபோது அந்த மூர்த்தியில் ஆவாகனம் ஸ்தாபனம் முதலியன பொருந்தச்செய்து, பாத்தியம் ஆசமனம் அர்க்கியங்கள் கொடுத்து, அன்புடன் அபிடேகம்

பண்ணல்வேண்டும். பின் திருவொற்றுடைசாத்திப் பரிவட்டம் சந்தனம் நறுமலர் வில்வம் இவைகளை நன்றாக அணிதல் வேண்டும். அன்னம் முதலியன நிவேதித்துத் தூப தீபங்கள் காட்டி வணங்கித் தோத்திரம் பண்ணல்வேண்டும். இவைகளை நியமத்துடன் செய்க. செல்வம் முதலிய ஆற்றல்படைத்தோர் செய்யும்பூசையிற் குறைவு செய்வாராயின் வறுமை அவரை வந்தடையும். எவரும் அவரவர் ஆற்றலுக்கேற்பப் பூசிக்கலாம். நம்மை அன்போடு பூசித்தோர் இம்மையிலே எண்ணில்லாத இன்பம் அடைவர், மறுமையில் முத்தியையும் பெறுவர்.

பூசை புரிந்தோர் சுகமுனிவனைப் போல்வர். அன்புடனே பூசனை செய்யாதவர் விலங்கு பறவை முதலியவைகளை நிகர்ப்பர். ஒருமலராயினும் கொண்டு பூசித்தோருக்கு வேறு விரதம், தவம், தருமம் வேண்டியதின்று. சிவபூசைப்பயனை எவரே சொல்லவல்லர் என ஏகநாயகர் கூறியருளினர்.

அதுகேட்ட தேவரும், அகத்தியர் முதலிய முனிவரும் சோதி மகாலிங்கேசுரரை நாடோறும் பூசித்துவர எண்ணினர். மயனை அழைத்து இறைவருக்கு ஆலயம் சமைக்க என்றனர். மயனும் மிக்க பக்தி சிரத்தை யுடன் சிற்பவிதிப்படி கோயிலை நிருமித்தான். பரிவார தேவர்களுக்கும் ஆலயம் அமைத்தான். கோபுரங்களும் சமைத்தான். வலப்பக்கத்திலே உமாதேவியாருக்கும் ஒரு திருக்கோயிலை நிருமித்து மகிழ்ந்தான். யாவரும் மயனமைத்த கோயிலைக்கண்டு வியந்தனர். பின்பு, ஏகநாயகக்கடவுளையும் உமாதேவியாரையும் வணங்கி, இக்கோயிலில் தேவரீர் என்றும் சாந்நித்திய முடையராய் வீற்றிருந்து யாங்கள் செய்யும் பூசனையை ஏற்றுக்கொண்டு எல்லோருக்கும் அருள்புரியவேண்டும் என இரந்து விண்ணப்பித்தனர். அவ்வாறே இறைவன் அருள்பெற்றனர். காமிகாகமவிதிப்படி பூசித்துக் களிப்புற்றனர். இறைவனும் முனிவர்கள் வேண்டியவாறே யாவர்களுக்கும் வேண்டிய வரங்களை நல்கி வீற்றிருந்தருளுகின்றனர்.]

கலிநிலைத்துறை

மேக நாண்மலர்க் குவளைவெஞ் சிலைகுமிழ் மிலைந்தோர்
மாக மாமதி பூத்தபூங் கொம்பரின் வயங்கும்
பாகு நேர்மொழி யுமைமுகம் பார்த்தக மகிழ்வுற்(று)
ஏக நாயக னருளுட னின்னன விளம்பும். 1

---

1. மாகம் மா மதி - ஆகாயத்திலுள்ள பெருமை தங்கிய சந்திரன். மாகம் - ஆகாயம். பூங்கொம்பரின் - பூங்கொம்பினைப்போல: இன்;

வண்ண வண்பிறை நுதல்வரி மதர்விழி வந்திண்
டெண்ணின் மாதவ மியற்றிமெய் யிளைத்தனை போலும்
நண்ணு முத்தமிழ் முனியுரை பயன்பெற நாமும்
அண்ண லுற்றன முருவுகொண் டருந்தவர் மகிழ. 2

திருந்தி டும்பர்முன் பாலிடை நெய்யெனத் திகழா
திருந்தி டெந்தமைக் காட்டினை யெளிமையாய்ப் புவியோர்க்
கருந்த வம்புரிந் தவரிடத் தன்பினு லதனைப்
பொருந்து றக்கடைந் தெடுத்தெதிர் வைத்தது போல. 3

புவன மெங்குநின் மகிமையே பொருந்திட நிற்பாய்
தவமி யற்றிய தெவ்விதம் சார்ந்தெவ ணிருந்தாய்
அவண ருந்திய தெதுநமைப் பிரிந்தனை யதன்பின்
உவகை பூத்திடு மனத்திடை நினைத்ததீண் டுளதோ. 4

நாம கிழ்ச்சியுற் றனமினி நவில்வர மாக
நாம மிக்கசிர்க் கைலையை நல்குவோ மென்னின்
நீம கிழ்ந்துறைந் திடுமது நின்னதே யாகும்
நீம முற்றசெல் வங்களும் நிற்குநின் னேவல். 5

---

ஐந்தனுருபு: கொம்பர் இறுதிப்போலி. மேகம் கூந்தல், குவளை கண்கள், சிலை புருவம், குமிழ் மூக்கு, மதி முகம். வயங்கும் - விளங்கும். மேகம், குவளை, சிலை, குமிழ், மதி என்பன உருவகம். இவை பூத்த கொம்பரின் வயங்கும் என்பது இல்பொருளுவமை.

2. வண்ணம் - அழகிய. விழி - விழியினையுடையாய்; விளி: அன்மொழித்தொகை. நுதலினையும் விழியினையும் உடையவளேஎன்க: என்றது உமாதேவியாரை. எண் இல் - அளவில்லாத. முத்தமிழ் - இயல் இசை நாடகம். முனி என்றது அகத்தியரை. அண்ணல் உற்றனம் - அணுகலுற்றோம். நாமும் மகிழ அண்ணலுற்றனம் எனக் கூட்டுக.

3. திருந்திடு உம்பர்: உம்பர் - தேவர்கள். பாலிடை-பாலினிடத்து. திகழாது - விளங்காமல். இருந்திடு எந்தமை. புவியோர்க்கு எளிமையாய்க் காட்டினை. அதனை என்றது பாலை. மெய்யடியார்கட்குத் தயிரில் வெண்ணெய்போலவும், அன்பில்லாதாருக்குப் பாலில் நெய்போலவும் முறையே வெளிப்பட்டும் வெளிப்படாமலும் இறைவன் இருப்பன் என்றபடி.

4. புவனம் - உலகம். மகிமை - பெருமை. உவகை பூத்திடும் - மகிழ்ச்சி பொருந்தும். ஈண்டு - இவ்விடத்தில்.

5. நாமம் மிக்க - கீர்த்தி மிகுந்த. அது என்றது கயிலாயத்தை. நீமம் - ஒளி. நின் ஏவல் நிற்கும்.

மாயை நீக்குவ மெனில்வித்தை வடிவநின் மேனி
மேய காமமா தியபகை விலக்குவ மென்னில்
ஆய வுட்பகை யுனக்கிலை யன்பினே ரெவர்க்கும்
பாய வின்பமு முத்தியும் பரிவினீ தருதி. 6

மற்று நின்றனக் கியான்றரு வரமொன்று மில்லை
உற்றி டுன்மொழி யமுதையுட் கொண்டுநா முவப்பான்
இற்றை நந்தமக் கொருவரந் தருதிநீ யென்னக்
கற்றை வார்சடை யவன்சொலக் கவுரிமிக் குவந்து. 7

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சங்கர நீல கண்ட சம்பக வனேச நீடு
பொங்கர வணிந்த வேணிப் புண்ணிய மூர்த்தி யெங்குந்
தங்கர வுலக நாத சம்புவே மறிமா னேந்தும்
அங்கர மருதி னீழ லமர்ந்திடு முதல்வ போற்றி. 8

மன்னுற வுணர்வை யாவு மற்றினி யெனைவி னுதல்
என்னையான் வினுவி லுண்மை யிசைத்திட வேண்டு மன்றே
பன்னுறு பரமா னந்தப் பரவையுள் மூழ்கி யாங்கே
துன்னிநின் றதனைத் தானே தொடர்ந்தினி தருந்தல் செய்து. 9

வாசக மனத்திற் கெட்டா மறைத்தனிப் பொருளா யோங்கும்
தேசினைப் பொருந்தி டன்பிற் செழுமல ராதி கொண்டு
பூசனை யகத்தி னுள்ளும் புறத்துஞ்செய் திருந்தே னுன்பால்
நேசமிக் குடைய ராகி நிலவுநின் னடிய ரென்ன. 10

---

6. வித்தை - ஞானம். காமம் ஆதிய. உட்பகை - காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் என்பன. பாய - பரவிய. பரிவில் - அன்புடன். தருதி - தருகின்றாய்.

7. உற்றிடு உன் மொழி அமுதை. மொழியமுது : பண்புத்தொகை. உவப்பான் - மகிழும்பொருட்டு : பானீற்று வினையெச்சம். இற்றை - இன்று, இப்பொழுது. மிக்கு உவந்து.

8. பொங்கு அரவு அணிந்த. வேணி - சடை. எங்கும் தங்கு அர. மான் ஏந்தும் அம் கர.

9. யாவும் உணர்வை. இசைத்திட - சொல்ல. பரவை - கடல். துன்னி - பொருந்தி. நின்று அதனை. தொடர்ந்து இனிது. பரமானந்தப் பரவை : பண்புத்தொகை.

10. வாசகம் மனத்திற்கு எட்டா - வாக்கு மனத்துக்கு எட்டாத. தேசினை - ஒளியை. பொருந்திடு அன்பில். அகத்தினுள்ளும் : எதிரது

நினைத்ததை யுளதோ வென்ருய் நினைப்பன்யான் மறப்பி னீயம்
மனத்திலீ துணர வந்து வதிந்ததூஉ மறிவே னன்ருய்
வினைப்படு தவஞ்செய் காலை விளங்கிராப் பகலே காணேன்
எனைத்தனி யின்று கண்டே னுனைமுன்னு மின்றுங் கண்டேன். 11

சாற்றிடு விசும்பி னூடு தம்பித மாகி நிற்கும்
காற்றென விரவி யின்பாற் கலந்திடு திங்க ளென்னப்
போற்றிடங் குன்பா னின்றே னெனவுமை புகல லுற்ருள்
மாற்றமின் னவைகட் கண்ணல் மகிழ்ச்சிகூர்ந் திசைக்கு மன்னே. 12

---

தழீஇய எச்சவும்மை. புறத்தும்: இறந்தது தழீஇயது. அகப்பூசையும் புறப்பூசையும் சிவோகம்பாவனைக்கு அங்கமாம். அகப்பூசை என்றது அந்தரியாகபூசையை. மலர் ஆதி என்றது நீர் அமுது முதலியவைகளையும் தழுவியது. நின் அடியர் என்ன - உன்னுடைய மெய்யடியார் என்று சொல்லும்படி.

11. யான் மறப்பின் நினைப்பன். ஈது உணர வந்து. வதிந்ததூஉம் - பொருந்தினமையும். இராப்பகல் - கேவல சகலநிலைகள். காலை இராப் பகல் என்றது நயம். இராப்பகல் காணேன் என்றமையால் சகல கேவலங் களற்ற நின்மல துரியாதீதம். இதனை, ''இராப்பகலற்ற விடத்தே யிருந்து, பராக்கற ஆனந்தத் தேறல் பருகி, இராப்பக லற்ற இறையடி யின்பத், திராப்பகல் மாயை இரண்டிடத்தேனே'' (திருமந்திரம் - 1856); ''எழுதரு மறைகள் தேரு இறைவனை எல்லிற் கங்குற், பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து'' (பரஞ்சோதி. திருவிளை). ஈற்றடி: ''ஞான நாட்டம் பெற்றபின் யானும், நின்பெருந்தன்மையும் கண்டேன் காண்ட லும், என்னையுங்கண்டேன் பிறரையும்கண்டேன், நின்னிலை யனைத்தையும் கண்டேன் என்னை, நின்னைக்காணு மாந்தர், தன்னையுங்காணுத் தன்மை யோரே.'' (திருவிடை - மும்மணிக்கோவை - 13 செய். 30-35 வரிகள்); ''வள்ளமையால், தன்னைத் தெரிவித்துத் தன் தாளினுட்கிடந்த, என்னைத் தெரிவித்த எல்லைக்கண்—மின் ஆரும், வண்ணம் உருவம் மருவும் குண மயக்கம், எண்ணும் கலை காலம் எப்பொருளும்—முன்னம் எனக்கு, இல்லாமை காட்டிப் பின்பு எய்தியவாகாட்டி இனி, செல்லாமை காட்டும் செயல் போற்றி'' (போற்றிப்பஃருெடை. கண்ணி 85 - 87).

12. விசும்பினூடு - ஆகாயத்தில். தம்பிதம்=ஸ்தம்பிதம் - அசைவு இல்லாமை. போற்றிடு அங்கு உன்பால் நின்றேன். மாற்றம் - விடை. இன்னவைகட்கு - மேலே கூறிய இவைகளுக்கு. இசைக்கும் - சொல்லும். அண்ணல் இசைக்கும் என்க.

ஆற்றுநின் தவத்தி னுண்மை யறியவே யின்று காறும்
தோற்றிடா திருந்தேங் கண்டேந் தோற்றினஞ் சோதியாகச்
சாற்றிடு மினைய சோதி யுருவமா மிலிங்கந் தன்னைப்
போற்றிடு மெவருங் காண வீண்டுநாம் பூசிக் கின்றேம். 13

கற்பகம் வாளா நின்று கருதிய துதவு மாபோல்
தற்பர மாகி நீடு சயம்புவா யினிது மேவும்
பொற்புறிவ் விலிங்கந் தன்னைப் பூசனை புரிதற் கெண்ணி
முற்படு பொழுதில் தானே முற்படு வினைகள் தீர்ப்பாம். 14

அகத்துறு மன்பு நீட வருச்சனை யொருநாட் செய்யில்
இகத்தினிற் கல்வி செம்பொ னெழின்மனை மனைவி மைந்தர்
தொகுத்திடு சேனை நாடு தொடர்வளம் பிறவு மெய்திப்
பகுத்திடு பாசந் தீர்ந்து பரமுத்தி யடைவர் மன்னே. 15

தெரிசனஞ் செயினு மோர்கால் தீயபா தகமென் றேதும்
துரிசுக ளவையுந் தீயில் தோய்ந்தநுண் பஞ்சி யென்ன
விரிசுட ரிரவி தோன்ற வெவ்விருட் குலங்கள் நீங்கும்
பரிசென வகலு மாங்கே பகையொடு பிணியுந் தீரும். 16

எண்ணிய பொருள்க ளியாவு மெய்திடு மென்ன வோதி
அண்ணலம் மூர்த்தி யின்பா லணுகினன் புவன மீது
வண்ணமென் மணிப்பொற் பீட மகிதல மடந்தை யீந்தாள்
விண்ணவர்க் குரிய தச்சன் வெயின்மணி விமான மீந்தான். 17

---

13. இருந்தேம் கண்டேம் - இருந்தேமாகிக் கண்டேம்: முற்றெச்சம். சோதியாகத் தோற்றினம்.

14. வாளா - சும்மா; ஒருசெயலுமின்றி: வீணுக என்றபடி. தற்பரம் - தனக்குத்தானே பரம்: பரம் - மேலானது. பொற்பு உறு இ இலிங்கம். முற்படு பொழுதில் - தொடங்குகின்ற காலத்திலே. முற்படுவினை - அநாதி காலந்தொட்டு இடையறுது வந்துகொண்டிருக்கும் வினை.

15. அன்பு நீட - அன்பு பெருக. எழில்-அழகு. சோதியிலிங்கத்தை ஒருநாட்பூசை செய்வோருக்கு இம்மை மறுமைகளில் கிடைக்கும் பேறு கூறியபடி.

16. ஓர்கால் - ஒருதரம். துரிசுகள் - குற்றங்கள். துரிசுகள் அகலும் என்க. தரிசனப்பேறு கூறியது இச்செய்யுள்.

17. வண்ணம் - அழகு. மகிதல மடந்தை - பூமிதேவி. தச்சன் - ஈண்டு மயன். வெயில் மணி - ஒளி வீசும் இரத்தினங்கள்.

இரணிய கருப்பன் முந்நூல் பவித்திர மணைவுற் றீந்தான்
வருணன்மிக் குவந்து தீர்த்த மணித்தசும் பேந்தி நின்றான்
அருணமூ ரனில தேவ னணிமலர் வருக்க மீந்தான்
தெருண்மலி சோமன் தாழ்ந்து சிறந்தபட் டாடை யீந்தான். 18

தடமுறு மலைய வெற்புச் சந்தன முதவிற் றாங்கே
வடதிசைச் செம்ம லிசர் மணிக்குலக் குவைக ளீந்தார்
திடமுறு வன்னி தூப தீபமும் விரைவி னீந்தான்
நெடிதுபால் தயிரன் னாதி புவனேசை நிறைத்திட் டாளால். 19

மருவுவெள் ளிலைகா யாதி மகபதி யினிது நல்க
நிருதிதண் குடைகண் ணூடி நிலவுறு கவரி வீசப்
பரிதிகள் மகிழ்வி னெங்குஞ் சுடரிடு பணியி னிற்பக்
கருதிடு மியமன் சேனை திசைதொறுங் காவ லாற்ற. 20

மந்திர மறைக ளோத வசுக்கள்பல் லாண்டு கூறத்
தந்திரர் கீதம் பாடத் தவமிகு முனிவர் வாழ்த்தச்
சுந்தர மகளி ராடச் சுரர்குல மலர்கள் தூவ
முந்துறு பூத நாதர் தூரிய முழக்கஞ் செய்ய. 21

தருபவர் தருவ யாவுந் தடக்கையின் வாங்கி நல்கித்
திருவளர் மார்ப னண்ண லேவின செய்து நிற்ப
அருமறை யாக மங்க ளறைதரு விதிகொண் டந்தப்
பொருவரு மூர்த்தி தன்னைப் பூசையங் கினிது செய்து. 22

---

18. இரணிய கருப்பன் - பிரமன். மிக்கு உவந்து. மணித்தசும்பு - இரத்தினங்கள் பதித்த குடம். அருணம் - மான்: அரிணம் எனவும் வழங்கும். அனிலதேவன்-வாயுதேவன்: இவன் ஊர்தி மான் ஆம். தெருள் மலி சோமன் - தெளிவுமிக்க சந்திரன்.

19. தடம் - மலைப்பக்கம். வடதிசைச் செம்மல் - குபேரன். வன்னி- அக்கினிதேவன். பால் தயிர் அன்(னம்) ஆதி. அம் சாரியை தொக்கது.

20. வெள்ளிலை - வெற்றிலை. காய் - அடைக்காய். மகபதி - இந்திரன். பரிதிகள் - சூரியர்கள்.

21. தந்திரர் - யாழ் நரம்புடையோர்: தந்திரி - யாழ் நரம்பு. சுரர் குலம் - தேவர் குழு. தூரியம் - வாத்தியம்.

22. திருவளர் மார்பன் - திருமால். அரு மறை ஆகமங்கள். பொரு அரு மூர்த்தி - ஒப்பற்ற சோதிலிங்கம்

ஆங்கதன் பின்ன ரேவ லாற்றிய வமர ரியார்க்கும்
ஓங்கிடு வரமு மன்னே ருலகமு மருளிச் செய்து
பாங்குறு மிமய வல்லி பங்கய வதன நோக்கித்
தேங்கிள முறுவல் செய்யத் தேவிநே ரின்ன சொல்வாள். 23

பொன்னிறக் கடவு ளாதிப் புலவரும் பிறரு மெய்தி
நின்னையர்ச் சிப்ப தன்றே நீதிநீ யிந்த மூர்த்தி
தன்னிடை யெவரைப் பூசை புரிந்தனை சாற்று கென்றுள்
முன்னவன் கருணை யுற்று மொழிகுவ னெவருங் கேட்ப. 24

ஓதுமர்ச் சனைசெய் தோனும் உகந்தது கொண்ட தேவும்
போதுறு கோதை வேற்கட் பொற்றெடி நாமே யாகும்
ஏதுவென் நம்மை நாமே யருச்சித்தற் கென்னி லிந்த
மாதவர் நமைப்பூ சித்தல் மறந்ததீண் டறிதற் காமால். 25

என்னவோ திடலு மன்னை யிமைத்திடோர் குழுவுங் காண
நின்னரு ளுருவந் தன்னை நிகழுமா தவர்க்குக் காட்டி
முன்னதைப் பூசை செய்யு முறைமையுங் காட்ட லுற்றாய்
அன்னவ ரிடத்தி லுற்ற அளவிலாக் கருணை தன்னல். 26

---

23. ஏவல் ஆற்றிய அமரர் - பூசனைக்குரிய பணிவிடைகளைச் செய்து நின்ற தேவர்கள்: 17 முதல் 20 ஆம் பாடல்களில் காண்க. இமயவல்லி - இமயமலையரையன் புதல்வியாகிய பார்வதிதேவியார். பங்கய வதனம் - தாமரை மலர்போலும் முகத்தை. தேங்கு இளமுறுவல் - நிறைந்த புன்னகை.

24. பொன் நிறக் கடவுள் - பிரமதேவர். பொன்னை நிறத்திலே உடைய கடவுள் எனக்கொண்டு திருமால் எனினுமாம். பொன்-இலக்குமி. நிறம்-மார்பு. புலவரும்-தேவர்களும். நீதி-நியாயம். நியதி எனினுமாம். சாற்றுக என்றுள் - சொல்லியருளுக என்றுள். முன்னவன் - முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்.

25. போது உறு கோதை - மலர்களை யணிந்த கூந்தல். வேல் கண் - வேற்படைபோலும் கண்கள். பொற்றெடி - பொன்னாலாகிய வளையலை யணிந்தவளே: விளி: அன்மொழித்தொகை. ஏது என் - காரணம் என்னை. ஏது என் என்னில். மறந்தது - மறந்த செயலை.

26. இமைத்திடோர் குழு - விண்ணோர் கூட்டம். அருளுருவம் - அருளினாற்கொண்ட வடிவத்தை. முன் - முற்பட. அதை - அந்தச் சோதி லிங்கத்தை.

அவர்களை நோக்கி மேலுன் னருட்டிரு வாக்கி னாலும்
உவகையிற் படுத்த வேண்டு முரைக்குமுன் னதுவு நீயே
நவிலுவை யெனினு மியானு நண்ணுவ ரிடத்தன் பாலும்
தவநின துரிமை யாலுஞ் சாற்றின னென்றாள் மன்னோ. 27

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சத்தியிது மொழிந்திடலு நித்தனுவந் தருந்தவர்க டம்மை நோக்கிப்
பத்தியெனுங் கற்பகமொன் றுங்களிடத் திருந்தெவையும் பயக்கு மாற்றால்
நத்தனயன் றனக்கரிய நம்மையுங்கட் கழைத்தெளிதி னல்கிற் றன்ன(து)
எத்தகையோர்க் குளதவர்கட் கெளியமியா மவர்வேண்டு மெவையு மீவோம்.

என்றிறைவ னிசைத்திடலு முனிவரெங்கட் குமதிடத்தி னிலகு பத்தி
துன்றிடச்செய் வதுவுமதைக் கொள்வதுவுங் கொண்டுவினைத் துயரி னீக்கி
நன்றிதரு கருணைபுரிந் தருளுவது மியாவையுநீர் நாங்க ளிங்கே
ஒன்றுமுணர்ந் திலமெமைநீ ரன்புடைய ரென்றதனு லுயர்வு பெற்றோம். 29

எங்கடமக் குமதுதெரி சனங்கிடைத்திட் டதற்கெழில்கூ ரிமயச் செல்வி
துங்கமுறு கருணையுமுத் தமிழ்முனியு மேதுவெனச் சொல்ல லாகும்
இங்கணினி தெனவுரைத்தா ரிறைவன்மகிழ்ந் தரியதவ மியற்றி னோர்க்கும்
அங்குவறி திருந்தவர்க்குங் கல்விசெல்வ மெனும்பொருள்க ளருளிச்
செய்து. 30

---

27. அவர்களை-அம்முனிவர்களை. நண் உவரிடத்து. தவ-மிகுதியாக.

28. நித்தன் - சிவபெருமான். பத்தியைக் கற்பகமாக உருவகித்தார். எவையும் பயக்கும் ஆற்றால் - எப்பொருள்களையும் கொடுக்கும் தன்மையினால். நத்தன் - பாஞ்சசன்னியம் என்னும் சங்கையுடைய திருமால்: நத்து - சங்கு. நத்தன் அயன். கற்பகம் எளிதில் நல்கிற்று என்க. எ தகையோர்க்கு உளது அவர்கட்கு எளியம். ''எனைத்துயிர்க்கும் உறுதி இகபர மென்ப; அவை கொடுப்பான் எல்லாந் தானாய், அனைத்துயிர்க்கும் உயிராகும் அரன் என்ப; அவன் அறிவார்க்(கு) அங்கம் வாக்கு, மனத்துறும் மெய்ப் பத்தி வழி வரும் என்ப; அப்பத்தி வழி நிற்பார்க்கு வினைத்துயர் தீர்த் திடஎடுத்த வடிவென்ப தவனடியார் வேடமன்றோ'' (பரஞ்சோதி. திருவிளை.) என அடியார்மேல் வைத்துக் கூறியவாறறிக.

29. எங்கட்கு உமதிடத்தின் இலகு பத்தி. துன்றிட - பொருந்த.

30. எங்கள் தமக்கு உமது. துங்கம் - பரிசுத்தம். முனி - அகத்தியர். ஏது - காரணம். இங்கண் இனிது. வறிது இருந்தவர்க்கும்.

முன்னமிருந் தமிழ்மலையக் குறுமுனிவன் பலன்றருவோன் முக்க ணனே
என்னவுங்கட் கிசைத்ததுண்மை யாயினதே யின்னமுமக் கியாது வேண்டும்
அன்னதுவுங் கேண்மினென்று னவர்களெல்லா முமதருளேயடியோங்கட்குத்
துன்னுசிவ ஞானமினி வேண்டுமஃ துதவுமிடஞ் சொல்க வென்றார். 31

எண்ணலுறு பிரணவத்தின் பொருள்வடிவா யிலங்குமிந்த விலிங்க மேனின்
றண்ணலுறு மெமையறியுஞ் சிவஞானம் பணிந்தோர்கட் கருளிச் செய்யும்
திண்ணமுறு மஃதுமக்குங் கொடுத்திட்டோ மெனப்பரமன் றெரித்தான நந்தப்
பண்ணவர்கள்பிரணவத்தி னுருவமென்றி ரதன்சிறப்பென்பகர்கென்றார்கள்.

முனிவரிதுபகர்ந்திடலும் தனிமுதல்வன் புகல்கிற்பான் மொழிதுங்கேண்மின்
நினைவரிய குடிலையெனும் பிரணவமீண் டோருருவாய் நிகழு மேனும்
வனைவனசத் தவனவனைத் தந்தவனு மெனுமூவர் வடிவ மாகும்
அனையதிற லுடையதுநந் தமைப்பிரியா திருக்கின்ற தநாதி யாக. 33

ஆதியினிற் போதகத்தி லுறைந்திடுவோ னொருவேள்வி யாற்றற் கெண்ணி
வேதமுடி வினைக்குறித்தா னதுசிறிதும் தோன்றிலதால் விளங்கக் காண்பான்
மாதவஞ்செய்தனன்வெகுநா ளெமைக்கருதி யாமவன்முன் வயங்கத்தோன்றி
ஓதிடுமந் திரங்கடமக் குயிராகும் பிரணவத்தை யுபதே சித்தோம். 34

---

*31.* குறு முனிவன் - அகத்திய முனிவர். அவர்கள் எல்லாம் - முனிவர்கள் யாவரும்.

*32.* அண்ணல் உறும் - பொருந்தும். அஃது என்றது சிவஞானத்தை. பண்ணவர்கள் - தேவர்கள். ''அவனருளாலே அவன்றாள் வணங்கி'' எனவும், ''ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்'' எனவும் வரும் திருவாக்குக்கள் சிந்தித்தற்குரியன.

*33.* புகல்கிற்பான் - சொல்லுவான்: கில் ஆற்றலுணர்த்தும் இடைச் சொல். கேண்மின் நினைவு அரிய. குடிலை - பிரணவம். வனை வனசத் தவன் அவனைத் தந்தவன் நாம். வனை - படைத்தற்றொழிலினையுடைய. வசனத்தவன் - பிரமதேவன். வனசம் - தாமரை. தந்தவன் - திருமால். நாம் என்றது சிவபெருமானை.

*34.* போதகத்தில் - தாமரைப்பூவில்: போது - மலரும் பருவத்து அரும்பு: ஈண்டுத் திருமால் உந்தித்தாமரையை உணர்த்தியது. வேத முடிவு - வேத சிரசாகிய உபநிடதம். காண்பான் - காணும்பொருட்டு: பானீற்று வினையெச்சம். வயங்க-விளங்குமாறு. பிரணவமே மந்திரங்கட்கு உயிராம் என்பது.

மலரின்மிசை யிருந்திடுநான் முகத்தொருவன் பிரணவமாம் வாரி தன்னை
உலவுமதி மந்தரத்தாற் கடைந்திடலும் வியாகிருதி யுதித்த தாங்கே
இலகிடுகா யத்திரியன் னதிற்றேன்றிற் றதிற்சுருதி யெழுந்து நின்ற(து)
அலகில்புக ழுறுமதனிற் காரணர்மூ வருந்தோற்ற மாகி னூர்கள். 35

தோற்றமுறு மூவரையுங் கொண்டுநினை ந் திடுவேள்வி துலங்கச் செய்தான்
ஆற்றிடுமற் றதினுலக மேழிரண்டும் வடிவினுட னமையத் தோன்றிற்(று)
ஏற்றமுறு மனையதெரி சனத்தினுற் சிவஞான மெய்திற் ருங்குப்
போற்றுமத னுலெமது தெரிசனமன் னவற்கினிது பொருந்திற் றம்ம. 36

ஆதலினுற் பிரணவமே நமையறிதற் கேதுவென வறைய லாகும்
ஏதமறு முத்திதனைக் கொடுப்பதுவு மிஃதேயா மிதனைக் கூறும்
மாதவர்க்குச் சோகமொடு மோகமுத லானவையு மருவா தென்றுன்
நாதனிது மொழிந்திடலு மருந்தவத்தோர் மகிழ்ந்தினைய நவில்கின் ருர்கள்.

தேசுறுமிவ் விலிங்கமதின் மான்மியமிங் கெமக்கெவையுந் தெரிந்த வின்னும்
பேசுபுக ழுலகினிடத் திலிங்கவடி வொன்றேயோ பிறவு முண்டோ
பூசையுகந் தருள்புரியு மூர்த்தியுள தேலதுவும் புகல லுற்று
நேசமுட னதிற்பூசை புரியுமுறை மையுமுணர நிகழ்த்து கென்ருர். 38

சேவுயர்வெல் கொடிப்பரம னிசைத்திடுவா னெமைப்பூசை செய்வ தற்குப்
பாவனையும் வடிவுமனப் பற்றுமிக வுறுமதமும் பகரு நூலும்
மேவலுறு மனந்தவிதம் வைதிகந்தாந் திரிகமிவை விரவ லென்ன
மூவிதமுற் றிடும்பூசை யவற்றுள்ளு மனந்தவித மொழியுங் காலே. 39

---

35. பிரணவம் ஆம் வாரி - பிரணவமாகிய கடல். மதி மந்தரம் - புத்தியாகிய மந்தர மலே. வியாகிருதி - சத்தம், ஒலி. சுருதி - வேதம். காரணர் மூவர் - பிரம விஷ்ணு உருத்திரர்கள்.

36. உலகம் ஏழ் இரண்டும் - பதினுலு உலகங்களும். சிவஞானத்தால் சிவ தரிசனம் பொருந்துமாறு கூறப்பட்டது.

37. ஏது என - காரணமாம் என்று. ஏதம் அறு - குற்றமற்ற; சோகம் - வாட்டம். மருவாது - பொருந்தாது.

38. தேசு உறும் - ஒளி பொருந்தும். மான்மியம் - மகத்துவம், பெருமை. ஒன்றேயோ - ஒன்ருே. பூசை உகந்து - செய்யும் பூசனையை ஏற்றுக்கொண்டு. அதில் - அம்மூர்த்தியினிடத்து.

39. சே - இடபம். ஏவல் உறு - கட்டளையிடும். வைதிக பூசை, தாந்திரிக பூசை, வைதிகமும் தாந்திரிகமும் கலப்புற்ற பூசை. வேத சம்பந்தம் வைதிகம். தந்திர சம்பந்தம் தாந்திரிகம்: தந்திரம் - ஆகமம். விரவல் - கலத்தல். அனந்தவிதம் - பலவகை.

விரிந்திடிவற் றியாதேனு மொருவடிவி லொருவிதியின் மேவும் பூசை
புரிந்தவர்கள் சீவன்முத்த ராவரெந்த வடிவினிடைப் பூசித் தாலும்
பரிந்துசில வின்றியமை யாதவெனக் கொள்கென்று பகரு நூல்கள்
தெரிந்திடமற் றவையுமுங்க ளிடத்தினில்வைத் திடுமன்பாற் செப்புகின்றேம்.

காலைநறும் புனல்மூழ்கிச் சந்திமுடித் தருச்சிக்குங் கவினு ளெய்தி
ஏலுமெழுத் தஞ்சோதிப் பஞ்சசுத் தியும்மியற்றி யிதயந் தன்னில்
சீலமுட னருச்சித்துப் புறத்துமொரு வடிவினருச் சித்தல் செய்வான்
சால்பினெமை யதனிடையா வாகனதா பனங்களினுற் சாரச் செய்து. 41

பாத்தியத்தோ டாசமன மருக்கியமீந் தபிடேகம் பரிவிற் செய்து
வாய்த்ததுகி லொடுசாந்தங் கூவிளமொண் மலர்களிவை வயங்கச் சாத்திக்
கூர்த்தவெழி லனமாதி நிவேதித்துத் தூபாதி கொடுத்தி றைஞ்சித்
தோத்திரஞ்செய் திடலாகு மவையினைய நியமமதாய்த் தொடங்க வேண்டும்.

செல்வமுட னுற்றவுடை யவர்புரிபூ சையிற்குறைவு செய்திட் டாரேல்
நல்குரவெய் திடுமெவரு மவரவராற் றலுக்கிசைய நவில வேண்டும்
சொல்லுறுமன் பொடுபூசை புரிந்தவரெண் ணின்பமெலாஞ் சுகித்து வாழ்ந்து
மல்லலுறு சாத்தியமாம் பேரின்ப மினிதடைவர் மறுமைக் கண்ணே. 43

பூசைபுரிந் திடுபவர்க ளெவரேனுஞ் சுகர்களெனப் புகலு நூல்கள்
ஆசையுட னஃதியற்று ரெவரேனும் விலங்கொடுபுள் ளனைய ராகும்
தேசுறுநந் தமைப்பூசை யொருமலரா யினுங்கொண்டு செய்வோர் கட்கு
வீசுபுகழ் விரதமோடு தவந்தருமம் வேறென்றும் வேண்ட லின்றே. 44

---

40. விரிந்திடு இவற்று. பரிந்து-அன்போடு கூடி. இன்றியமையாத-இல்லாமல் முடியாத. என கொள்க என்று.

41. காலையில் நீரில் மூழ்குதல், சந்தி முடித்தல், திருவைந்தெழுத்தைக் கணித்தல், பஞ்சசுத்தி செய்தல், அகத்திற்பூசித்தல், பின்பு புறத்தில் பூசிக்கும்பொருட்டு ஆவாகனம் தாபனம் முதலிய செய்தல்.

42. பாத்தியம் ஆசமனம் அர்க்கியம் கொடுத்தல், அன்பினல் திருமஞ்சனம் செய்தல், திருவொற்றுடை சாத்தல், பரிவட்டம் சாத்தல், சந்தனம் வில்வம் நறுமலர் சாத்தல், அன்னம் முதலிய நிவேதித்தல், தூபம் தீபம் முதலிய உபசாரங்கள், தாம்பூலம், கருப்பூரம், அட்டபுட்பம் சாத்துதல், தோத்திரம், அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் என்பன நியமமாகச் செய்வனவாம். கூவிளம் - வில்வம்.

43. நல்குரவு - வறுமை. சாத்தியம் - பேறு: முத்தி என்க.

44. எவரேனும் - யாராயினும். விலங்கு - மிருகம். புள் - பறவை.

துன்றுபுக ழருச்சனைசெய் தவர்பெருமை தனையெவரே சொல்ல வல்லார்
என்றுசுடர் விழிநுதற்செஞ் சடைக்கடவு ளிசைத்திட்டா னிமையோர் தாமும்
நின்றவகத் தியனாதி முனிவரரும் பூசிப்பா னிதமு மெண்ணி
இன்றிறைவற் காலயஞ்செய் திடுகவென மயனையழைத் தியம்பி னார்கள். 45

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அற்புறு மயன்வா னவருமா தவரு மறைந்தசொற் செவிபுகுந் திடுமுன்
சிற்பநூ லதனிற் சிறந்திடு விதியைச் சிந்தையிற் குறித்தன னதன்முன்
சொற்பயில் கனகச் சினகர மாங்கே தோன்றிய தஃதனை யவன்முன்
கற்றிடுதிறத்திற்சமைந்ததோ விறையோன்கருணையிற் சமைந்ததுகொல்லோ.

திருத்தகு பதும மண்டப மணிகள் சேர்ந்தொளி ரருத்தமண் டபமேல்
நிருத்தமண் டபமா மண்டபஞ் சிகையி னில்வுறு வசந்தமண் டபத்தோ(டு)
உரைத்திடு வேள்வி நடத்துறு சாலை யோங்கிய திருமடைப் பள்ளி
விரித்திடு மிரட்டை மாளிகைப் பத்தி மேவிய நெடுந்திரு மதில்கள். 47

ஆகுவா கனத்த னாதியர் சூழ வமர்ந்துறை தேவரா லயங்கள்
வாகுறு மேரு வினைத்துணைத் தடிமேல் வயங்குற நிறுத்திய தென்ன
மாகமுற் றுயர்ந்த சிகரகோ புரங்கள் வலவயி னுமையவள் கோயில்
பாகுறு மிவைக ளனைத்துமோர் கணத்திற் பார்த்தன ரெவர்களும்வியந்தார்.

---

45. துன்று புகழ் - நிறைந்த புகழ். சுடர்விழி நுதல் - அக்கினியாகிய கண் பொருந்திய நெற்றியினையும். பூசிப்பான் - பூசிக்கும்பொருட்டு. நுதலினையும் சடையினையும் உடைய கடவுள் என்க. இன்று இறைவற்கு ஆலயம் செய்திடுக. நிதமும் பூசிப்பான் எண்ணி எனக் கூட்டுக. மயன் - தெய்வத்தச்சன்.

46. அற்பு உறும் மயன். அற்பு - அன்பு. கனகச் சினகரம் - பொன் மயமான கோயில்: பொற்கோயில். அஃது - அக்கோயில். அனையவன் - மயன். சமைந்ததோ - பொருந்தியதோ.

47. திருத்தகு - அழகு மிக்க. பதும மண்டபம் - கருப்பக் கிருகம். அர்த்த மண்டபம், நிருத்த மண்டபம், மகா மண்டபம், வசந்த மண்டபம், யாகசாலை, திருமடைப்பள்ளி, இரட்டை மாளிகைப்பத்தி, திருமதில்கள்.

48. ஆகு வாகனத்தன் - விநாயகக் கடவுள். ஆதியர் - சுப்பிரமணியக் கடவுள் முதலிய பரிவாரங்கள்; மாகேசுர மூர்த்தங்கள் எனினுமாம். மாகம் முற்றுற - ஆகாயத்தை முழுவதும் பொருந்த. சிகரம் - உச்சி: கலசங்கள். வலவயின் - வலப்புறத்தில்: வயின் - இடம். பாகு உறும் - பாகுபாடுகள் பொருந்தும்: வகைவகையானமைந்த என்க.

வியந்தன ரேக நாயகக் கடவுள் வியனுறு முமையெனு மிவர்கள்
வயங்கெழிற்றுணைத்தாள் வணங்கியங்கவர்கள் மலர்முக நோக்கிநீ ரென்றும்
இயைந்திடு மிணைய வாலயத் துறைவுற் றியாங்கள்செய் பூசையுங் கொண்டு
நயந்தருள் புரிய வேண்டுமென் றிரந்தார் நவிலுமன் னவர்களு மிசைந்தார்.

மொழிதருஞ் சோதி மயமகா லிங்க மூர்த்தியைப் பெருநல முலையைப்
பொழிதருங் கருணை யேகநா யகனைப் புறத்துள தேவர்க டம்மை
எழின்மிகுந் திலங்கு மவரவர் கோயி லிடங்களிற் காமிகா கமத்தின்
உழிபெரு விதியி னுடொறும் பூசித் துவகையுற் றிருந்தனர் மாதோ. 50

பன்னக மதனைப் பணியெனப் புனைந்த பரமனு முமையவ ளுடனே
இன்னண முனிவர் கணங்களும் விசும்பி னிலங்கிடு தேவர்தங் கணமும்
கின்னரர் கணமும் பூசனை புரியக் கிளர்தரு பேரருள் தாங்கி
அன்னவர் வேண்டும் வரங்களீந் திருக்கு மணிதிக ழாலய மதனில். 51

பாகுறு நறுஞ்சொ லுமையுமா தவரு பரிந்தெதிர் போதிணை யில்லா
மாகவின் வடிவும் கருணையின் திறமும் வயங்கிட நோக்கியுண் மகிழ்வுற்(று)
ஏகநா யகவென் றிறைஞ்சவிற் றிருந்தோ னருச்சனை யியற்றிய திசைத்தேம்
காகமொன் றுங்குற் றுருத்திர னுன கதையுள தொன்றினிச் சொல்வாம். 52

தம்மைத்தாமருச்சனைச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 363

---

49. அங்கு அவர்கள். இரந்தார் - வேண்டிக்கொண்டனர். அன்னவர்களும் - சிவபெருமானும் அம்பிகையும்.

50. சோதிமய மகாலிங்கம், பெருநலமா முலையம்மை இவர்கள் மூலமூர்த்திகள். ஏகநாயகர் - இத்தலத்தில் உள்ள சோமாஸ்கந்தமூர்த்தி. காமிகாகமவிதி இத்தலத்துக்குரியது.

51. பன்னகம் - பாம்பு. பணி - ஆபரணம். விசும்பின் இலங்கிடு: விசும்பு - ஆகாயம். பேர் அருள் தாங்கி.

52. பாகு - வெல்லப்பாகு. மா கவின் வடிவும்: கவின் - அழகு. இசைத்தேம் - சொன்னேம். ஒன்று ஆங்கு உற்று.

ஆருவது

# காகமான்மியச் சருக்கம்

———

[தம்மைத்தாம் அருச்சனைசெய்த மகிமையை உரைத்தோம். இனி, காகமொன்று உருத்திரன் ஆகிய செய்தியைச் சொல்லத்தொடங்குவோம்.

மனுக்கள் பலர் இறக்கின் சந்திரசூரியர் முடிவர். சந்திரசூரியர் பலர் இறக்கின் தேவேந்திரன் முடிவன். இந்திரர் பலர் இறந்துபடின் பிரமன் இறப்பன். பிரமர் பலர் இறந்தால் மாலின்நாள் தொலையும். திருமால் பலர் மடியின் ஒருமுனிவன் உடலிலுள்ள மயிர்களில் ஒன்று உதிரும். அம் முனிவன் உடம்பிலுள்ள மயிர்கள் முழுவதும் உதிர்ந்தபின்னர் உமை யொருபாகர் திருவடிநிழலை அடைவான். செருக்கும், கருதிய எவற்றையும் முடிப்பதும் பொருளால் ஆம். பொருள்களையடைவது திருவினுல் ஆம். ஆகலின், அவர் பலரை ஆக்கித்தரும் வன்மை பொருந்திய தவத்திருவை உடையான் அம்முனிவன். அவன் வைதிக சைவநெறிகளை உணர்ந்தவன். கால இயல்புகளையறிந்தவன். இறைவன் ஒருவன் உளன்; அவ்விறைவன் உயிர்கட்குப் போகமும் முத்தியும் தரவல்லான்; அப்பெருமான் உமையை யொருபாலுடையான்; அவனையன்றி உயிர்த்தலைவர் யாவருமிலர் எனத் தெளிந்தோன். அம்முனிவனே உரோமசன் என்போன்.

உரோமசமுனிவர் வீட்டின்பத்தை அடைதல் எளிதன்று எனக் கொண்டனர். தவத்தோர் பலருடன் சிவதல யாத்திரை செய்தார். தீர்த் தங்கள் பலவற்றில் மூழ்கினர். இவ்வாறு செய்துவரும் நியமத்தராய்க் காவிரிதீர்த்தத்தில் வந்து நீராடினர். இடைமருதினுள் புகுந்தார். அப் பொழுது ஒரு காகமானது இடைமருதிலுள்ள கனகதீர்த்தத்திலே முழுகி எழுவதைக் கண்டார். அக்காக்கை முழுகி எழுந்தது; ஒரு மருதமரத்தில் உட்கார்ந்தது; தன்னுடைய கரிய வடிவம் நீங்கிப் பசும்பொன் மயமாக விளங்குதலை நோக்கி வியப்பெய்தியது. நிலவுலகில் காவிரிநாட்டைப்போல ஒரு நாடில்லை, திருவிடைமருதூரையொத்த ஒரு தலமுமில்லை, இவ்விடை மருதில் விளங்கும் இறைவனையொப்பதொரு தெய்வமுமில்லை, இக்கனக தீர்த்தத்தினை யொக்கும் இனிய தீர்த்தமுமில்லை, இது மெய்ம்மையே. கொடிய வினைகளைத் தீர்க்கும் மருந்தாக விரிசடைக்கடவுள் அமைத்த திவ்விய தீர்த்தம் இதுவாம். பரமேசுவரனும் திருவுளமகிழ்ந்து இங்கே விற்றிருக்கின்றார். புண்ணியம் புரிந்தோரே இவ்விடைமருதினை அடைவர்.

மிக்க கீழோர் இத்தலத்தை வந்தடையினும் அப்பொழுதே மேன்மை யுறுவர். அதனை நம்மிடத்திலேயே அறிந்தோம் என அக்காக்கை கூறிக் கொண்டது. அதுகேட்ட உரோமசர் காக்கையை நோக்கி, காக்கையே! வருக; நீ முனிவனோ, தேவனோ, மாயையோ, பறவையோ? அதனை எனக்கு அறிவிப்பாய் என்றார். காக்கை முனிவரைப்பார்த்து, முனிவர்தலைவ! முழுதுணர்ந்தவனே! கேட்பாய். நான் அந்தணர் குலத்தினன். வேதாகமங்கள் அருங்கலைகள் புராணம் முழுவதும் நன்குணர்ந்தேன். செல்வமும் மிக்குடையேன். ஒருநாள் சூரியகிரகணம் வந்தது. எல்லோரும் புண்ணிய தீர்த்தத்தில்நீராடி, இயன்ற தான தருமங்களைச் செய்தனர். யான் கொடிய வினைகளைச் செய்தேன். முனிவர் தேவர் மனிதர் முதலியோர் இறைவனை நோக்கி நின்று முன்னே வேண்டியவரம் பெற்றனர். அரக்கர்களும் கூடி நின்று இறைவரிடத்து வரம் வேண்டினர். இறைவன், அரக்கரைநோக்கிச் சூரியகிரகணமுதலிய புண்ணிய நாட்களில் விரும்பிச்செய்யும் தவங்கட்குக் குற்றம் வந்து நேரின் அவற்றை நீங்கள் கொள்ளுவீராக என்றருளினர். அவ்வரலாறும் நான் நன்கறிந்துவைத்துளேன். புண்ணியப்பயன் எவரையும் உயர்த்தும், பாவப்பயன் யாவராயினும் கீழே வீழ்த்தும், அக்கினி நரகத்திலேகொண்டு சேர்க்கும், மிக்க துயருறுத்தும் எனவும்; கீழோரும் மேலோரைச் சேரின் தாமும் பெருமை பெறுவர் எனவும், அதற்குக் காரணம் நல்ல தவமும் தருமமுமேயாம் எனவும் நன்றாகத் தெரிந்துளேன். ஆயினும் ஊழ்வினை வலிது, அது வந்துறின் எவரே தடுக்க வல்லார்?

அறமில்லாதாரிடத்துப் பாவவினை தொடரின் அவர் தேவராயினும் யாவராயினும் துறந்தோராயினும், உண்மை புகழ் தூய்மை பதவி அறிவு ஆகிய யாவையும் பிறழுமாறு மயக்கி எவரும் இகழுமாறு பெரிதும் வருத்தும். அவ்வினை என்னைமட்டும் விலக்குமோ? யான் செய்த கொடுவினை என்னை? என்னில், நானும் அப்புண்ணிய தீர்த்தக்கரையை நண்ணினேன். அங்கே செய்யவேண்டிய கடன்களை எல்லாம் சொல்லிச் செய்வித்து ஒரு அரசன்பால் தானம் ஏற்றேன். உடனே மற்றொரு மன்னன்பாலும் சென்று தானம் ஏற்றேன். அவன் என் மார்பில் பொருந்தும் சந்தனத்தைக் கண்டான்; இதற்கு முன்னும் தானம் ஏற்றனைகொல் என்றான். நான் உண்டென உண்மையைச் சொன்னேன். 'விரைந்து வீடுகள்தோறும் இரை கவரும் காகத்தைப்போன்றவனே! முன்பு ஓரிடத்தில் நீ தானம் ஏற்று, உடன் என்னிடத்தும் ஏற்க வந்தனை. நீ காகம் ஆகுக' எனச் சபித்தான். மீட்டு அரசனைச் சபிக்க என் உள்ளம் துடிதுடித்தது. அதனை அவன் புரோகிதன் சுசங்கியன் கண்டான்; பணிந்து என்பால் இரந்து இதனைச் சொல்வானாயினன்.

ஊழ் வினையால் இக்கதி உனக்கு நேர்ந்தது. ஒரு நாளில் இரண்டு இடத்துப் பெற்ற தானத்தால் வந்த வல்வினை பொல்லாதது. அரசன் சபியானுயினும் காகவுரு உனக்கு வந்தெய்தும். பொறுமையுடன் இரு. நீ எதிராகச் சபித்தனையேல் இக்காகவுரு உனக்கு என்றும் ஒழியாது. சபியாதிருந்தனையாயின் ஒரு புண்ணிய தீர்த்தத்தை எய்தின் இவ்வுருவம் நீங்கும். பின்பு, சிவபெருமான் அருளும் உண்டாம். அரசன் உன்னைச் சபித்ததால் அவனுக்குத் தானம் செய்த பலன் இல்லாதொழிந்தது. அரசன் வாழ்வுறின் உலகம் வாழும் என்று கூறினன். நான் சினம் தவிர்ந்தேன். காக வடிவம் பெற்றேன். முன் நினைவுடன் கண்ணீர் மாருமல் சொரிந்துகொண்டு பறவைகளுடன் கூடித் திரியலானேன். குன்றமும் வனமும் நாடும் நகரும் பல கடந்தேன். அங்கங்குள்ள தீர்த்தங்களில் படிந்தேன். கனி, காய், கோயில்முன் இடுபலி இவைகளையே உண்டேன். இவ்வாறு பல காலம் உழன்றேன். இன்று சிறு தவத்தால் இங்கு வந்தேன். இத்தீர்த்தத்தில் மூழ்கினேன். பொன்னுருவம் பெற்றேன். உம்மையும் தரிசித்தேன். இதுவே என் வரலாறு என்ருன். இறைவன் திருவருளால் பொன்விமானம் தோன்றியது. உருத்திர வடிவம் பெற்று விமானத்தில் ஏறி, கயிலையை அடைந்தான்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

முன்னுறு மனுக்க ளநேகர்க ளிறக்கின் முடிவர்க ளிருசுட ரவரும்
அன்னவ ரநேக ரிறந்திடி லிறக்கு மமரர்கோ னவர்களெண் ணிலர்நாள்
பின்னிடின் மலரோ னிறந்திடு மவர்கள் பெயர்ந்திடி லநேகர்மா லிறக்கும்
இன்னவ ரநேக ரிறந்திடின் மயிரொன் றிறந்திடு முடலினு ளொருவன். 1

இத்திற மவன்றன் னுடலுறு முரோம மியாவையும் புவியிலொவ் வொன்ருய்
உய்த்திட வுதிர்ந்த பின்னர்வா ளரவு முயரிளம் பிறையும்வாழ் வேணி
நித்தன்மற்றிசைக்குஞ் சராசரமெவையு நிறைந்தினி துறைந்திடுமிறையோன்
சத்தியோர் பாகத் திலங்கிடு பரமன் சரணபங் கயநிழ லுறுவோன். 2

---

1. முன் உறு - முற்பட்ட; முன்னுறு - நினையத்தக்க. இரு சுடர் அவரும் - சூரிய சந்திரர்களாகிய அவரும். அமரர்கோன் - தேவேந்திரன். நாள் பின் இடின் - நாட்கள் பிற்பட்டால்; நாட்கள் கழிந்தால் என்றபடி. மலரோன் - பிரமதேவர். மால் - விஷ்ணுமூர்த்தி. இறந்திடும் உடலினை யுடைய ஒருவன் என்க; எத்தனையோ திருமால்கள் இறந்தால் ஒருவன் உடலிலுள்ள மயிர்களில் ஒன்று உதிரும் எனறபடி: இதனுல் ஆயுள் மிகுதி கூறப்பட்டது. மாயூரப்புராணம் காகபூசை உரைத்தபடலம் காண்க.

2. புவியில் - பூமியில். வாள் அரவு - ஒளி பொருந்திய பாம்பு.

இருள்மிடற் றிறைவ னெதிரினு மதியா திருந்திடு மதமுமற் றொருவன்
கருதிடு மெவையு முடிப்பதும் பொருளாற் கருதுமப் பொருளடை வதுசெந்
திருவினலெனலா லவர்களெண்ணிலரைச் செய்துதன் னடியடைந்தோர்க்குத்
தருதிற லுடையோன் தானள வில்லாத் தவமெனுந் திருவுட னுறைவோன்.3

இலகிடு சைவ வைதிக நெறியி னியல்புட னிறப்பெதிர் நிகழ்வாய்ப்
பொலிதரு காலத் தியல்புமெவ் வுயிர்க்கும் போகமும் விடுநன் குதவும்
நலனுறுமிறையோ னொருவனுண் டன்றே னவின்றிடு முமையொரு புறத்தோ
னலதுவே றில்லை யென்பதுந் தெளிந்தோ னவன்பெய ரோமச னாகும். 4

நவிலவ னுயர்வீ டெளிதல வென்னு நற்றவர் சூழ்ந்திடச் சென்று
சிவனுறை பதிகள் வணங்கிநற் றீர்த்தஞ் செழும்புன லாடினன் வருவான்
புவனமேத் தினிய பொன்னிநீர் படிந்து புகழிடை மருதிடைப் புகுங்கால்
அவணொரு காகம் வந்துபொற் றீர்த்த மணைந்ததிற் படிந்தினி தெழுந்து. 5

பாங்குயர்ந் திலங்கு மருதினுற் றிருந்து பகரிரு ளிரவியா னதுபோல்
ஆங்குறு தனது கறைவடி வேகி யம்பொனின் விளங்குத னோக்கி
ஈங்குறு தீர்த்தம் பகுத்திடு மிரத மென்னினம் முடலிரும் பன்றும்
ஓங்குபொன் வரையு மன்றிது நாமிவ் வுருப்பெற வெனவியப் பெய்தி. 6

பூவுல கிடத்திற் சிறந்திடு மினைய பொன்னிநா டெனப்பொலி நாடும்
பாவுறு மினைய விடைமரு தினைப்போற் பதியுமிப் பதியினில் விளங்கும்
தேவனை யனைய தெய்வமு மிந்தச் செய்யபொற் றீர்த்தநே ராகி
மேவிடு மினிய தீர்த்தமுங் கருதின் வேறிலை யாகுமீ துண்மை. 7

---

3. இருள் மிடற்று இறைவன்-நஞ்சுண்டமையால் கறுத்த கண்டத்தை யுடைய சிவபெருமான். எதிரினும் - எதிர்ப்பட்டாலும். மதம் - செருக்கு. செந்திருவினல் - இலக்குமிதேவியால். திறல் - வன்மை.

4. இயல்புடன், இயல்பும், என்பதும் தெளிந்தோன் எனக் கூட்டுக.

5. நல் தவர் - நல்ல தவத்தினையுடையோர். சிவன் உறை பதிகள் - சிவ தலங்கள். என்னு ஆடினன் வருவான் எங்க. ஆடினன்: முற்றெச்சம். வருவான்: வினையாலணையும் பெயர். பொன்னி நீர் - காவிரித் தீர்த்தம். படிந்து - முழுகி. பொற்றீர்த்தம் - கனக தீர்த்தம்; இது வாயுதிக்கில் உள்ளது: காக்கைக்குளம் என வழங்கும்.

6. பாங்கு உயர்ந்து இலங்கும். மருதின் - மருத மரத்தின்மேல். கறை வடிவு - கரிய நிறம் பொருந்திய உடம்பு. இரதம் என்னில் - இரச குளிகையாயின். பொன்வரை - மகாமேருமலை.

7. பா உறும் - பரவுதலுற்ற; பாக்கள் பெற்ற எனினுமாம்: புகழ்ந்து பாடப்பெற்ற என்றபடி. நேர் ஆகி - ஒப்பாகி.

வெவ்வினை துலைத்தற் கொருமருந் தாக விரிசடைப் பண்ணவ னமைத்த
திவ்விய தீர்த்த மாமிது பரனுந் திருவுள மகிழ்ந்திவ ணுறையும்
இவ்விடை மருதிற் புண்ணியம் புரிந்தோ ரெய்துவ ரீனர்வந் திடினும்
அவ்வியற் பொழுதே மேன்மையுற் றிடுவ ரஃதுநம் மிடத்தறிந் தனமால். 8

என்றுரைத் திடலு முரோமச ஞேக்கி யியம்புவான் காகமே வருதி
மன்றநீ முனியோ தேவனே வன்றி மாயையோ பறவைதா னேயோ
துன்றவெற் கறைதி யாரெனக் காகம் துரிசுறு சினமுதற் பகையை
வென்றிடு முனிவர் தலைவமுற் றுணர்ந்தோய் விளம்புவன் கேட்டியென்
றியம்பும். 9

ஆதிநான்மறையோன் சுருதியாகமங்க ளருங்கலை புராணமுற்றுணர்ந்தோன்
கோதிலாச் செல்வ முடையவ னொருநாட் கோளராப் பரிதியை விழுங்கிற்
றேதிடக் காலை யெவருநற் றீர்த்தத் துவப்பொடு நானமுன் னியற்றி
மீதியன் றிடுநற் றானமுஞ் செய்தார் வெவ்வினை செய்தன னெளியேன். 10

நற்றவ முனிவோர் மனிதர்க ளிமையோர் நல்வர மேற்குநாள் முன்னர்ச்
சுற்றிநின் றரக்க ரெங்கட்கென் னென்னச் சுடர்க்கணன் கதிர்தனை யரவம்
பற்றிட லாதி புண்ணிய தினத்திற் பரிந்துசெய் தவங்களா திகட்கோர்
குற்றமெய் திடிலங் கவற்றினை நீவிர் கொண்மினென் றிசைத்ததூஉந்
தெரியும். 11

---

8. வெவ்வினை - கொடிய பாவங்கள். துலைத்தற்கு - போக்குதற்கு. விரிசடைப் பண்ணவன் - சிவபெருமான். திவ்விய தீர்த்தம் - தெய்வத் தன்மை பொருந்திய தீர்த்தம். இ இடைமருதில் புரிந்தோர். இடை மருதில் எய்துவர் - இடைமருதினை அடைவர்: உருபு மயக்கம். ஈனர் - சண்டாளர்; இழிந்தோர் என்றபடி. நம்மிடத்து என்றது காகத்தின் கூற்று. முன் நாம் என்றதும் அது.

9. வருதி - வருவாய். மன்ற: இடைச்சொல். துன்ற எற்கு அறைதி. துன்ற - பொருந்துமாறு. துரிசு உறும் - குற்றம் பொருந்திய. சினம் முதல் பகையை - கோபம் முதலாகவுள்ள உட்பகைகளை. கேட்டி - கேட்பாயாக. உரோமச முனிவரை நோக்கிக் காகம் தன் வரலாற்றைச் சொல்லத் தொடங்குகிறது.

10. ஆதி - முற்பிறப்பில். நான்மறையோன் - பிராமணன். கோள் அரா பரிதியை விழுங்கிற்று - சூரிய கிரகணம் உண்டாயது. நானம் - ஸ்நானம். வெவ்வினை - கொடிய செயல்: யாவரும் நற்செயல் செய்ய எளியேன் பாவச்செயலைச் செய்தேன்.

11. சுடர்க்கணன் - சிவபெருமான்.

புண்ணிய முயர்த்து மெவரையும் பாவம் புகைந்தழ னரகில்விழ்த் துழலப்
பண்ணிடு மெனவுஞ் சிறியவர் பெரியோர் பாங்குறின் தாங்களும் பெருமை
நண்ணுவ ரெனவு மன்னதற் கேது நற்றவந் தருமமே யெனவும்
எண்ணமுண் டூழ்வந் துற்றிடி லதனை யாவரே விலக்கிடற் பாலார். 12

அறந்தொடர்ந் திலர்பாற் பாவவூழ் தொடரி லங்கவர் தேவரே யெனினும்
துறந்தவ ரெனினும் வாய்மையும் புகழும் தூய்மையு நிலைமையு மதியும்
பிறழ்ந்திட மயக்கி யாவரு மிகழப் பெரிதலைத் திடுமெனி லென்னை
மறந்துவிட் டிடுமோ தனியனே னிழைத்த வல்வினை யென்னவாங் கென்னில்.

நானுமங் கணைந்து நவில்கட னவையு நவிற்றியோர் மன்னவன் தன்பால்
தானமேற் றுடனே மற்றையோர் மன்னன் தன்னிடத் தினுமணைந் தேற்றேன்
மானவே லன்னுன் குறிப்பிலென் னுரத்தின் மருவுசந் தனத்தினை நோக்கி
ஈனமின் றிதற்கு முன்னுமேற் றனைகொ லென்றன னுண்டென விசைத்தேன்.

கடுத்தகந் தோறு மணைந்திரை கவருங் காகமே யொத்துமுன் னொருவர்
இடத்தினேற் றுடனென் னிடத்துமேற் றதனு லிலங்குநீ காகமா கென்னக்
கொடுத்தனன் சாபங் கரகநீர் தன்னைக் கொண்டுநா னவன்றனைச் சபிக்கத்
துடித்தன னவன்றன் புரோகித னென்னுஞ் சுசங்கிய னெனைப்பணிந்
துரைக்கும். 15

---

12. புகைந்து அழல் நரகில். அழல் நரகில் - அக்கினி நிரயத்தில். உழல - வருந்திச் சுழல. பெரியோர் பாங்கு உறில் - பெரியோருடைய சார்பினைப் பெற்றால். அன்னதற்கு ஏது - நற்சார்பைப் பெறுதற்குக் காரணம். இறுதியடி ''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான்முந் துறும்.'' (குறள்-380) ஊழ் - 'இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கேதுவாகிய நியதி' என்பர் பரிமேலழகர். ''தாந்தா முன் செய்தவினை தாமே யநுபவிப்பர், பூந்தா மரையோன் பொறிவழியே — வேந்தே, ஒறுத்தாரை யென்செயலாம் ஊரெல்லா மொன்று, வெறுத் தாலும் போமோ விதி.'' ''வினைப் பயனை வெல்வதற்கு வேத முதலாம், அனைத்தாய நூலகத்து மில்லை'' (நல்வழி — 30, 37).

13. அறம் - தருமம். பாவ ஊழ் - பாவத்தாலாகிய இழவூழ்: போ கூழ் என்பதும் அது. வாய்மை - உண்மை. தூய்மை - பரிசுத்தம். நிலைமை - தாம் நிற்கும் நிலை. மதி - புத்தி. பிறந்திட - மாறுபட. பெரிது அலைத்திடும் எனில். வல் வினை - போக்குதற்கரிய கொடிய வினை.

14. நவிற்றி - சொல்லி. அணைந்து - அணுகி. மான வேல் - பெருமை பொருந்திய வேல். உரத்தின் - மார்பினிடத்து. இசைத்தேன் - சொன்னேன்.

15. கடுத்து - விரைந்து. அகம் - வீடு. காகம் ஆகுக என்ன. கரகநீர் - கமண்டலத்திலுள்ள நீர். அவன்தன்னை - அம்மன்னவனை.

என்னிழைத் திடுதி யையவூழ் வினையா லிங்ஙனம் விளைந்ததுன் றனக்குப்
பின்னரு மொருநா ளினில்இரண் டிடத்திற் பெற்றிடு தானவல் வினையால்
மன்னவன் சபியா திருக்கினும் காக வடிவுனக் கெய்திடு நீமற்(று)
இன்னது சகியா தெதிர்சபித் தனையே லிவ்வுரு வொழிந்திடா தென்றும். 16

அருள்புரிந் தெதிர்நீ சபித்திடா தொழியி லறைந்திடோர் புண்ணியதீர்த்தம்
மருவுற வகலும் கடிதினிற் பின்னர் மழுவலான் கருணையுங் கிடைக்கும்
புரவல னுன்னைச் சபித்ததால் தானம் புரிபலன் பொருந்திடா னுகும்
தெருளுறு மரச னிலகிடி னுலகம் செழிக்குமென் ருன்சினம்வி டுத்தேன். 17

நின்றனன் காக வடிவுபெற் றனன்முன் நினைவொடுஞ் சொரிகணீ ருடனும்
குன்றமும் வனமு நாடுநன் னகரும் குழுவுறும் பறவைக ளோடும்
சென்றடைந் திடுவன் தீர்த்தங்கள் படிவேன் திகழ்வுறு காய்கனி கோயில்
முன்றிலி னுதவு பலியருந் திடுவேன் முயல்வனிவ் வாறலைந் துழன்றேன். 18

இற்றைநாண் முன்னர்த் தவஞ்சிறி துளதா லிவ்விடை மருதில்வந் தினைய
பொற்றனித் தீர்த்த மூழ்கினன் வடிவம் பொன்னெழி லுருவதா யிலங்கப்
பெற்றன னின்னைக் கண்டிறைஞ் சிடவும் பெற்றன னின்னதென் னியல்பும்
மற்றுனைக் காணப் பெற்றதாற் கதியு மருவுமே லென்பதூஉந் துணிந்தேன்.

பிறரினுக் கின்னு முற்பக லியற்றின் பிழைத்திடா தவ்வினைத் தாமே
உறவருந் தமக்குப் பிற்பக லெனலா லுற்றிடத் துயரினை யருந்தும்
திறனெளி தலவே யென்றதைச் சிந்தை செய்துதற் காத்திட மதித்தோர்
அறைதருஞ் சினமும் பிறர்பொருள் கவரு மவாவுநன் கவித்திட வேண்டும்.

---

16. என் இழைத்திடுதி - என்ன காரியம் செய்கின்றாய். சகியாது - பொறாமல். ஒரு நாளில் ஒன்றுக்கு மேற்பட்ட இடத்தில் தானம் வாங்கினேன் 'காகமாகப் பிறந்துழல்வன்' என்னும் நீதி கூறிற்று இச்செய்யுள்.

17. அறைந்திடு ஓர் புண்ணிய தீர்த்தம். கடிதினில் அகலும் - விரைவினில் நீங்கும். மழுவலான் - சிவபெருமான். புரவலன் - அரசன்.

19. இற்றை நாள் - இன்று; இத்தினம் என்றபடி. பொன் தனி தீர்த்தம் - ஒப்பற்ற கனக தீர்த்தம்: கனகம் - பொன். நின்னை என்றது உரோமச முனிவனை. இன்னது என் இயல்பு; இயல்பு - தன்மை: வரலாறு என்றபடி. மேல் கதியும் மருவும். கதி - முத்தி.

20. 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்' (கொன்றைவேந்தன்); ''மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு'' (குறள்-204). பிழைத்திடாது - தப்பாமல். இன்னு=இனு - துன்பம்: தொகுத்தல். உற்றிட - வந்து பொருந்த. அருந்தும் - அநுபவிக்கும். தற்காத்திட - தன்னைக்காத்துக்கொள்ள. அவித்திட - போக்கிட.

எனவிரித் துரைத்த துரைத்திடு மேல்வை யிறையவன் திருவரு ளதனல்
தினகர கோடி நிகரொரு விமான ந் தேவர்தங் கண த்தொடங் கெய்த
வினைதவிர் காக மவ்வுரு வொழித்து விளங்குநாற் ரேளுட னிலங்கு
தனிவிழி நுதல்பெற் றுருத்திர ஞகிச் சார்ந்திடு விமானமீ தேறி. 21

வந்தர மகளி ரெதிர்நடம் புரிய மருங்கெழில் கவரிக ளிரட்டத்
துந்துபி முழங்கக் கணதிபர் சூழச் சுரர்கண மலர்மழை சொரியச்
சுந்தர வதன வனிதையோர் பாகன் துணைமலர்ப் பதமுளத் திருத்தி
அந்தமி லின்ப மருவிநீள் கைலை யடைந்துவீற் றிருந்தது மாதோ. 22

திருத்தகு குடபால் வீதியிற் குணபால் திகழ்ந்திடு தடத்தினிற் காகம்
அருத்தியிற் படிந்து தமனிய வடிவா யணிமரு திடத்திருந் ததுவும்
உருத்திர ஞகிக் கைலையின் விமானத் துற்றதூஉம் வியப்புற நோக்கிக்
கருத்தினி லடங்கா மகிழ்வொடுந் தவத்தோர் கணத்தொடு முரோமச
னின்ருன். 23

இத்தகைத் தாமோர் காகமத் தலத்தி னிலங்கிடு மனிலதிக் குறையும்
உத்தம தீர்த்தம் படிந்துபொன் னுருவுற் றுருத்திர ஞகிய வளமை
சத்திய ஞான னந்தமே வடிவாய்த் தயங்கிடு முரோமசன் பின்னர்
நித்தியன் றன்னைப் பூசைசெய் திருந்த நிகழ்ச்சியுஞ் சிறிதெடுத் திசைப்பாம்.

காகமான்மியச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 387

---

21. உரைத்தது உரைத்திடும் ஏல்வை. ஏல்வை - பொழுது. தினகர கோடி - கோடி சூரியர். கணத்தொடு அங்கு எய்த. வினை தவிர் காகம் - தீவினை விட்டகன்ற காகம். காகம் உருத்திரசாரூபம்பெற்றதென்க.

22. இரட்ட - மாறிமாறி அசைக்க. வதனம் - முகம். சுந்தர வதன வனிதை - உமாதேவியார். துணை மலர்ப் பதம் - இரண்டு மலர் போன்ற திருவடிகளையும். அந்தம் இல் இன்பம் - முடிவில்லாத பேரின்பம்.

23. குட பால் வீதி - மேலை வீதி. குணபால் - கிழக்குப் பக்கம். தடத்தினில் - குளத்தில். அருத்தியில் படிந்து - விருப்புடன் முழுகி. தமனியம் - பொன்.

24. இ தகைத்து ஆம் ஓர் காகம். அனில திக்கு - வாயு திக்கு: அனிலம் - காற்று. உருத்திரன் ஆகிய வளமை இத்தகைத்து ஆம் எனக் கூட்டுக. சத்திய ஞானனந்தம் - உண்மை யறிவானந்தம். தயங்கிடும் - விளங்கும். நித்தியன் - சோதி மகாலிங்கேசர்.

ஏழாவது

# உரோமசச் சருக்கம்

---

[உரோமசமுனிவர் கனகதீர்த்தக் கரையிலேகண்ட அற்புத நிகழ்ச்சியின் பின்பு அவ்விடத்தை விட்டகன்ருர். மகாலிங்கேசரைத் தரிசிக்கக் கோயிலுக்குச் சென்ருர். பலவகைவாத்தியங்கள் முழங்குவதைக்கேட்டார். முனிவர்கூட்டத்துடன் உள்ளே புகுந்தார். கோயிலினுள் பலவகைத் தீப வரிசைகளையும், மலர்மாலைகளையும், தோரணங்களையும், மேற்கட்டிகளையும் கண்ணுற்ருர். மனிதரியக்கத்தைக் கண்டிலர், மகாலிங்கேசர் சந்நிதியை அடைந்தார். அன்று அங்கு அருச்சனை செய்திருந்தமையையும் கண்டு அதிசயித்தார். உச்சிமேல் கரங்கூப்பினர், துதிகள் செய்தனர், வணங்கினர். மெய்ம்மயிர் பொடித்தன. எளியேனையும் உமக்கு அடிமையாகக் கொள்ளுவீர் என இரந்தார். ஒருபுறமாக ஒதுங்கி வந்தார். இங்குள்ள அற்புதங்களைச் சொல்வதற்கு எவரும் இங்கு இல்லையே எனக்கவன்ருர். பின்பு சிவபெருமானைத் தியானித்தார். அப்போது சிவந்ததிருமேனியில் வெண்பொடிப்பூச்சும், வேத்திரப்படையும், உடைவாளும், மானும், மழுவும் கொண்ட திருக்கரங்களோடு பூணூலணிந்த மார்பினராய் நெற்றிக்கண்ணுடையராய்த் திருநந்திதேவர் முனிவர்முன் காட்சிதந்தருளினர். முனிவர் திருநந்திதேவரை வணங்கினர்; துதித்தனர்; திருக்கோயிலில் எவரையும் காணப்பெருமைக்குக் காரணம் யாது? என வேண்டினர்.

திருநந்திதேவர் அதனைக்கேட்டு முனிவ! படைப்புத்தொடக்கத்தில் உமாதேவியார் இறைவனைப் பூசித்தனர். முக்கண்ணுடைய அப்பெருமான் வெளிப்பட்டுக் காட்சியளித்து முனிவர்கட்கும் தேவர்கட்கும் வேண்டிய வரங்களை அளித்தருளினர். சண்பகச்சோலையாகிய அவ்விடத்திலே வீற்றிருந்தார். அகத்தியர் முதலிய முனிவர்கள் பெருமானைச் சிவாகம விதி வழாமல் வழிபாடாற்றிப் பலநாட்கள் தங்கியிருந்தார்கள். அப்போது சில முனிவர்கள் அகத்தியரிடம் வந்து தாம் திருவெண்காட்டிலே தொடங்கும் வேள்வியைக் காண வரவேண்டுமென இரந்து அழைத்தனர். அகத்தியர் இத்தலத்தை விட்டு எக்காரணத்தானும் பிரியேன் என்றனர். முனிவர் சிவபெருமானை வணங்கித்துதித்து, அகத்தியர் அந்த வேள்விக்கு வருவாராயின் நன்ரும் என வேண்டி நின்றனர். சிவபெருமான் முனிவர்களின் விண்ணப்பத்தைக் கேட்டு, அகத்திய முனிவரை அங்கே செல்லுமாறு

பணித்தருளினர். அகத்தியனே! வேள்வி முடிந்தபின் நீ இங்கே வருவதை விருப்புடன் எதிர்நோக்கியிருப்போம் எனவும் அருளிச்செய்தனர். சிவ பெருமான் கட்டளைப்படியே முனிவர்கூட்டத்துடன் அகத்தியர் வணங்கிப் பிரியாவிடைபெற்றுச்சென்ருர். அகத்தியர் திருவெண்காட்டுக்குச்சென்று நாட்கள் சில ஆயின. ஆகலின், பூசித்தற்குரிய சிவாசாரியர் எவருமிலர். சரியை கிரியா யோகம் ஞானம் என்னும் நாற்பாதத்தின் இயன்ற சைவ வைதிக சமயங்கள் குன்றின. பௌத்தமதம் சமணமதங்கள் மேலிட்டுப் பரவத்தொடங்கின. சோழனும் பிறமதம் மேற்கொண்டான். பாண்டியன் சோழனுடன் போர்செய்து வென்ருன்; மகிழ்ந்து மதுரையையடைந்தான். சிலகாலம் சென்றன. அப்பாண்டியனும் அமண்குண்டரின் போதனைக் குட்பட்டு அமணன் ஆனுன். செங்கோல்செலுத்திய பாண்டியமன்னனும் கொடுங்கோலன் ஆயினன். இதனை அறிந்த ஒருவேடுவன் பாண்டியனைப் போரில்வென்று நாட்டைக் கைப்பற்றினுன். பாண்டியன் காட்டில் ஓடி ஒளித்துக்கொண்டான். அவனைச்சார்ந்த அமணரும் கானகம் ஏகினர்.

இவ்வாறு நாடு சமணர்வசப்பட்டுச் சைவம் குன்றியதை விநாயக மூர்த்தி திருவுள்ளங்கொண்டனர். சிவபெருமானை வணங்கி, சிருட்டித் தொடக்கத்திலேயே சமணர்குழாம் பெருகிப் பரவினவே! எம்பெருமானு டைய கோயிற்பூசைகளும் முட்டுப்பட்டனவே!! இதற்குக் காரணம் யாது? எனக் குறையிரந்தனர். சிவபெருமான் மூத்த பிள்ளையாரை அருகழைத் தார், உச்சிமோந்தார். பின்பு விநாயகரை நோக்கி, இப்படி நம் சமய ஆற்றலினையும் பெருமையையும் எவரும் உணருமாறு நாமே செய்தோம். சிலநாளில் இந்த அமணரை வென்று தொலைத்திட ஒருவன் வருவான். அவன் உருவில் சிறியனுயினும் அன்பில் பெரியன், தவத்தால் பெரியன். அவன் இங்கே வந்து நம்மைப் பூசிப்பன். அவன் வருமளவும் நீ நம்மைப் பூசித்திருப்பாயாக. அம்முனிவன் நம்மைப் பூசனை செய்து இங்கிருக்குங் காலத்து ஒருசோழன் வருவான்; அவன்நமது பூசனையை இத்தலத்தும் எத்தலத்தும் விளங்கச்செய்வான்; நீ வருந்தற்க என்று அருளினர். அந்த நாள் முதலாக விநாயகர் இறைவனைப் பூசித்து வருகின்ருர் என்று திருநந்திதேவர் கூறியருளினர்.

அதனைக்கேட்ட உரோமசமுனிவர் மகிழ்ந்தார். விநாயகக்கடவுள், சிவபெருமான் அருளியபடி ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியைப் பூசித்துவந்தார்; குன்றியிருந்த சைவத்தையும் பரிபாலித்து வந்தனர். நாடோறும் காலம் தவருமல் வேதம் நான்கினும் மெய்ப்பொருளாய் விளங்கும் நாதன் நாம மாகிய பஞ்சாக்கரத்தை விதிப்படி கணித்தார். மனத்தினுல் எவ்வளவு

பூசனை செய்யமுடியுமோ அவ்வளவில் அகப்பூசையை முடித்தனர்; பின்பு, தேவகணங்கள் கொண்டுவந்து குறையாமல் உபகரிக்கும் பூசைப்பொருள் களைக்கொண்டு பூசனையாற்றி வருகின்றனர். இஃது உலகமக்கட்குப் புலப் படாது. மனிதசஞ்சாரமும் இங்கில்லை. நீதிமன்னர் ஆட்சியின்றி உயிர்கள் துன்புறுதபடி தமது அருட்சத்தியினால் விநாயகக்கடவுள் உலகத்தையும் ஆண்டுவந்தனர். ஆகலின், அந்த விநாயகமூர்த்திக்கு ஆண்டபிள்ளையார் என்னும் காரணப்பெயரும் தோன்றியது என்று உரோமசமுனிவருக்கு நந்திதேவர் கூறியருளினர். மேலும், அவர் அருளிச்செய்தமை வருமாறு:-

உரோமசரே! இத்தலத்துக்கு மருதமரம் உரியது. ஒருகாலத்துக் கயிலாயமலையே இங்கு வந்து தானும் ஒரு மருதமரமாகத் தழைத்தது. மருதமரம் அடர்ந்த காடாகப் பெருகியது. பௌத்தருடன் கூடியிருக்கும் தருமசேனன் என்னும் சோழ அரசன்பால் ஒரு புத்திரன் தோன்றுவான்; அவன் விக்கிரமன் என்னும் பெயருடையான்; தரும வடிவினன்; ஆட்சி செலுத்தத் தொடங்கியதும் அவன் இங்கே வருவான். அவ்விக்கிரமனுக்கு வீரசோழன் என்னும் பெயர்தந்து அரசமுடியினையும் அணிந்தருளுவீராக. மருதநாயகர் பெருமையினையும் நீர் அவனுக்குக் கூறுவீராக. மகாலிங்க மூர்த்தியின் பெருமையைக் கேட்டதும் அவன் பணிவிடைசெய்யும் கருத் துடையனாய்ப் பணி செய்வான். ஏனைய முனிவருடனிருந்து நீரும் இத் தலத்திலேயே தவம் புரியும். இறைவன் விரைவில்தோன்றி அருள்புரிவார். அகத்தியமுனிவர்போன்று நீவிர் இத்தலத்தை விளக்கஞ்செய்வீராக எனக் கட்டளையிட்டு நந்திதேவர் மறைந்தருளினர்.

திருநந்திதேவர் கட்டளையைச் சிரமேற்கொண்ட உரோமசர் கோயி லின் வடபால் ஒருபர்ணசாலை ஏற்படுத்தினர். பொன்னிநீரில் முப்போதும் மூழ்கினர். நாட்கடன்களை முடித்தார். திருமஞ்சனம் முதலியவற்றை எடுத் துக்கொண்டு கோயிலினுள் சென்றார். சிவாகமவிதி வழுவாமல் சிறப்புறப் பூசனையைச் செய்துவருவாராயினர்.

அவர் காய் கனி முதலியவற்றையுண்டு, இறைவன் வெளிப்பட்டருள வேண்டித் தவங்கிடப்பாராயினர். முனிவர்களும் உடன் தவம்புரிந்தனர். இறைவர் வெளிப்பட்டாரிலர். ஆகலின், கடுமையான நிட்டை கூடினர். இந்திரன் முதலியோர் தோன்றினர். வேண்டியது யாது எனக்கேட்டனர். முனிவர் சிறிதும் சலித்திலர். பின்பு அவருடைய தவத்தைக் கெடுத்தற் பொருட்டுத் தேவமாதர்களைத் தூண்டினர். அவர்களும் முனிவர்பால் சென்று தம்முடைய ஆடலால் பாடலால் அபிநயத்தால் மிக முயன்றும்

பயன் பெருதவராய்த் திரும்பி வெள்கிச் சென்ருர்கள். சிவபெருமான் முனிவர் தவத்தின் உறுதியைக்கண்டு மிக மகிழ்ந்து உமாதேவியாருடன் காட்சியளித்தருளினர். ஆலநீழலின்கீழ் அம்மையாருடன் தட்சிணமூர்த்தி வடிவுடன் காட்சிதரவேண்டினர்; தரிசித்துப் பேரானந்தமுற்று அசைவற நின்றனர். பின்னர் முனிவர் உணர்ச்சிவரத் தோத்திரங்கள் கூறித் துதித்தனர்.

பெருமானே! தேவரீர் இந்தத் தலத்திலேயே இக்கோலத்துடன் விளங்கி அன்புடையார்களுக்கு அருள்புரியவேண்டும்; எளியேனுக்கும் உம்பால் பத்தி மிக வேண்டும்; உலகம் இன்பமடைதல்வேண்டும்; சைவ நெறியும் வைதிக நெறியும் தழைத்தோங்கவேண்டும்; எல்லாத் தலங்களி னும் உம்முடைய பூசை முட்டுப்பாடின்றிச் சிறப்பாக நடைபெறுதல் வேண்டும் என விண்ணப்பஞ்செய்து மீட்டும் வணங்கினர்.

சிவபெருமான் முனிவர் விண்ணப்பத்துக்கு இரங்கி அவ்வாறே அருள் சுரந்து, முனிவனே! சிலநாட்களில் ஒருசோழன் இங்கே வருவான்; உனக்கு ஏவல் புரிவான்; நீ சிவஞானம் பெறுவாய்; நீ எண்ணிய யாவும் கைகூடும் என்று கூறியருளினர். பின்பு, அம்மையப்பரை இரத்தினசிங்கா தனத்திலே எழுந்தருளுவித்தார். மருதநாயகரையும் பெருநலமாமுலை யம்மையையும் விநாயகக்கடவுளையும் பூசித்துவருவாராயினர். இங்ஙனமாக புத்தசமயத்தைச் சார்ந்துநின்ற அறிவிலியாகிய அவ்வளவன்பால் சேற்றில் முளைத்த தாமரை போலவும் அரவினிடத்துத் தோன்றிய மாணிக்கம் போலவும் ஒருபுத்திரன் உதித்தான். சிவபெருமான் திருவருளால் காஞ்சி புரத்தில் வதிந்திருந்து பரமசிவன்பால் பத்தி மிக்கவன் ஆயினன்; மிகச் சிறந்தான். பகையரசர்களுக்குச் சிங்கஏருய், கல்விக்கடலாய், உயிர்கட்கு உயிராய் விளங்கினன். குடிகள்பால் ஆறிலொரு கடமைகொண்டு நன்கு பரிபாலித்து வந்தான்.

இடைமருதில் காகம் பொன்னுருப் பெற்றமையையும் உருத்திர வடிவம்பெற்று அது விமானத்திலேறிச் சென்றமையையும் கேள்வியுற்ருன்; உரோமசமுனிவர் மருதவனத்தில் தவம் புரிந்திருப்பதையும் அறிந்தான். விரைவில் சென்று சோதி மகாலிங்கேசரை வணங்குவேன் என்று சேனை களுடன் காவிரிநாட்டை அடைந்தான். அங்கங்கே உள்ள சிவதலங்களையும் வழிபட்டான், வந்து பொன்னிநதியில் நீராடினன், நியமங்களை முடித்தான், உரோமசமுனிவரைத் தரிசித்து வணங்கினன், மனம் உருகி நின்ருன். முனிவர், முன்பு இறைவன் அருளிச்செய்தமையை நினைந்து மன்னனை

வருக என முகமன்கூறி ஆசிமொழிகள் பகர்ந்தார். வீரசோழன் என்னும் பெயரும் சூட்டினர். முனிவர்களோடு மன்னனையும் உடனழைத்துக் கொண்டு திருக்கோயிலை அடைந்தார் உரோமசமுனிவர். திருக்கோயிலை அடைந்த வீரசோழன் சிவபெருமானை வணங்கித் துதித்தான். பெருநலமா முலையம்மையையும் தரிசித்துவணங்கினன். அகத்தியமுனிவர் பூசித்திருந்த வரலாற்றையும் அறிந்தான். உரோமசமுனிவரொடு புறத்துச்சென்றான். அளவளாவியிருந்தான். செய்யவேண்டிய பணிவிடைகள் யாவை என்றான். முனிவர் அரசனை நோக்கி, செல்வம் இளமை யாக்கை முதலியன நிலை யுள்ளனவல்ல, புண்ணியமே அழிவற்றது, சிவபுண்ணியமே மேலானது, இவை யாவும் தவத்தாலேயே பொருந்துவன, தவங்களிலெல்லாம் சிவ பூசையே மிகச்சிறந்தது. திருமால் பிரமன் இந்திரன் முதலியோரின் செல்வங்களும் பதவிகளும் சிவபூசைப்பயனால் விளைந்தவை. தன் கையினால் பூசிப்பது ஆன்மார்த்தபூசை. பரார்த்தபூசை சிவாசாரியரைக்கொண்டு செய்விப்பது. சுயம்புலிங்கமே மூர்த்திகளுள் சிறந்தது. அதனைப் பூசித்தல் அளவிறந்த பயனைத் தருவதாம். ஒருவன் புதிதாக இயற்றும் தருமத்தினும் முன்புள்ள தருமம் கெடாமல் பாதுகாப்பானாயின் எண்மடங்கு பயன் அதிகமாம். முன்புள்ள தருமம் கெட்டவிடத்துத் தன் பொருள்கொண்டு முயற்சியுடன் அத்தருமத்தை நடாத்துவனாயின் நூறுமடங்கு பயன்மிகும். சிவனடியார்கட்குச் செய்தவை யாவும் சிவபெருமானுக்குச் செய்தவையே. ஆகலின், அரசனே! நீ இத்தூயதலத்திலே சிவபெருமான் திருக்கோயிலைத் திருப்பணிபண்ணுக; கோயிற்பூசை முட்டின்றி நடைபெறுதற்கு ஆவன வெல்லாம் அமைக்க; அடியார்களையும் போற்றுக; சிவபெருமான் அருள் உனக்கு எளிதாம் என்றனர்.

முனிவர் கூறியதைக்கேட்ட வீரசோழன் காடு கெடுத்து நாடாக்குவித்தான், நகரம் சமைத்தான். மருதவனேசர்கோயிலை மயன் அமைத்தது போன்று அழகுறப் புதுக்குவித்தான். திருப்பணிகள் பலவும் செய்வித்தான். பின்னர் நகரத்துக்குச் சாந்திசெய்தான். அவரவர் தங்குதற்குரிய அழகிய இருப்பிடங்களையும் அமைத்து மகிழ்ந்தான். மருதநாயகருக்கு வேண்டிய நிபந்தங்களையெல்லாம் கொடுத்தான். தானும் அந்நகரத்தில் ஒரு மாளிகை அமைத்து வசித்திருந்தான். சிவாசாரியர்களைக்கொண்டு மூன்றுகால பூசையும் வழாமல் விதிப்படி செய்துவரக் கட்டளையிட்டான். முனிவரிடம் மன்னன்சென்று வணங்கி மருதநாயகருக்குத் திருவிழாநடத்த வேண்டுமென விண்ணப்பித்தான். முனிவர் அரசனைநோக்கி, தைமாதத் துப் பூசநாளைத் தீர்த்தநாளாகக்கொண்டு விழாச்செய்க. பூசநாளில் இந்தத் தலத்துச்செய்யும் தானதருமம் அணுத்துணையாயினும் பலமடங்கு பயனைத்

தரும். பூசத் திருவிழாவினைத் தரிசித்தோர், சிவபெருமானை வழிபட்டோர் யாவரும் சிவனருளைப்பெற்று வாழ்வார். அந்தப் பூசநாளும் தைமாதத்திலே வியாழக்கிழமையில் பூரணைத்திதியிலே ஒத்துவருமாயின் உத்தமமாகும். அதுவும் இப்போது உள்ளதாம். ஆகலின் திருவிழாவினை நீ சிறப்புற நடாத்துக என்றருளினர்.

அரசன் திருவிழாவைத் தரிசிக்கவருமாறு யாவருக்கும் திருமுகம் விடுத்தான். வீதியை அலங்கரித்து விழாக்கொண்டாடுமாறு முரசறை வித்தான். மக்கள் ஊரை அலங்கரித்தனர். எவ்விடங்களிலிருந்தும் விழாக் காண மக்கள் வந்து குழுமினர். முனிவர் ஆணைப்படி ஊர்க்காவல் தெய்வங் களுக்கு முன்னர் விழாச்செய்வித்து, விநாயகக்கடவுள் முதலியோருக்கும் தனித்தனி விழா நடத்துவித்தான். பின்பு இடபக்கொடி யேற்றுவித்து அந்நாள் முதற்கொண்டு பல்லியம் முழங்க ஏகநாயகரையும், உமாதேவி யாரையும் திருவீதியில் எழுந்தருளிவரச்செய்து தரிசித்து மகிழ்ந்தான். புனர்பூசநாளில் தேர்த்திருவிழாவையும் சிறக்கச் செய்வித்தான். பூசநாளில் இடபவாகனத்தில் எழுந்தருளச்செய்து காவிரியிலே தீர்த்தவாரியையும் நடத்தினன். மண்டபத்திலே இறைவர் எழுந்தருளிக் காட்சி அளித்து யாவருக்கும் வேண்டிய வரங்களைக் கொடுத்தருளினர். அதன்பின் திருக் கோயிலுக்கு இறைவரை எழுந்தருளச்செய்து இடபக்கொடியை இறக்கு வித்தான். ஏகநாயகரை அம்மையாருடன் சிங்காதனத்தில் எழுந்தருளு வித்து வணங்கி மகிழ்ந்து போற்றினன். முனிவரைப் புகழ்ந்தான். முனி வரும் மன்னனுக்கு ஆசிகூறி மகிழ்வித்தார். இவ்வாறு அரசன் பலகாலம் பெருவிழாச்செய்தான். சிவபெருமான் அருளால் ஒரு புத்திரனைப்பெற்றான். புத்திரனுக்குத் தக்க பிராயம் வந்தபின் அரசாட்சியை அவன்பால் ஒப்பு வித்தான். இறைவன் திருவடிநிழலை அடைந்தான். உரோமசமுனிவரும் மருதவனேசர்திருவடிகளைப்போற்றி நீண்ட தவத்தைச் செய்திருந்தார்.]

கலிநிலைத்துறை

ஓது மாயிடை நின்றுபின் னுரோமச முனிவன்
வேத நாயகன் கோயிலின் மேவலுற் றிடுங்கால்
கீத வோசையும் தூரிய முழக்கமும் கேளா
மாத வத்தினோர் குழாத்தொடும் வல்லையுட் புகுந்தான். 1

---

1. ஆயிடை - அவ்விடத்து: என்றது காக்கைக் குளக்கரையை (கனக தீர்த்தம்). தூரியம் - வாத்தியம். வல்லை - விரைவாக.

தங்கு பற்பல தீபமும் விதானமும் தாழ்வில்
கொங்கு லாமலர்த் தொடைகளும் குலவுதோ ரணமும்
எங்கு முற்றிடக் கண்டன னெவரையுங் காணான்
பொங்கு மற்புதத் தொடுபரஞ் சுடரிடைப் போனான். 2

அண்ணல் தன்னையர்ச் சனைபுரிந் திருந்திடு மழகும்
கண்ணி னோக்கினன் முடிமிசைக் கரமலர் குவித்துப்
பண்ணி னீடிய துதிபல பணித்தனன் பணியா
உண்ணெ கிழ்ந்திடப் புளகித முற்றன னுடலம். 3

எனையு நின்னடிக் கடிமையாய்க் கோடியென் றிரந்து
தனைம றந்துநின் றொருவகைபுறஞ் சார்ந்தான்
இனைய வற்புத மெவர்நமக் குணர்த்துவ ரென்னும்
நினைவு தன்னொடு நிற்பவ னிமலனை நினைந்தான். 4

செய்ய மேனியில் பூசும்வெண் ணீற்றொளி திகழத்
துய்ய வேத்திரம் சுரிகைமான் மழுவொடு துலங்கும்
கையன் முப்புரி நூலினன் கண்ணுறு நுதலான்
ஐய னந்திநா யகனணை வுற்றன னவன்முன். 5

மருவு நந்தியைப் பணிந்தெதிர் முனிவரன் வாழ்த்தித்
திரும லிந்திடு மினையபொற் சினகரந் தன்னில்
ஒருவர் தம்மையுங் காண்கில மென்னென வுகந்து
தரும மாதவ கேளென மற்றவன் சாற்றும். 6

---

2. விதானம் - மேற்கட்டி. தாழ்வு இல். கொங்கு - வாசனை: தேன் எனினுமாம். தொடை - மாலை. அற்புதம் - ஆச்சரியம். பரஞ்சுடரிடை - சோதிமகாலிங்கத்தின்பால்.

3. பண்ணின் நீடிய துதி. பணித்தனன் - சொல்லி: முற்றெச்சம். பணியா - வணங்கி. உள் நெகிழ்ந்திட - மனமுருக. புளகிதம் - உரோமாஞ்சம்: மயிர்க்குச்செறிதல்: மயிர் சிலிர்த்தல் என்க.

4. கோடி - கொள்ளுவாய்.

5. வேத்திரம் - பொற்பிரம்பு. சுரிகை - உடைவாள். துலங்கும் - விளங்கும். கண் உறு நுதலான் - கண் பொருந்திய நெற்றியையுடையான்: நெற்றிக்கண்ணினன் என்றபடி. ஐயன் - தலைவன். நந்தி நாயகன்: பண்புத்தொகை.

6. முனிவரன் - உரோமசன். சினகரம் - கோயில். காண்கிலம் என் என: என் என - யாது காரணம் என்று கேட்க.

சிருட்டி யாதியீண் டுமைதவஞ் செய்தன ளவடன்
பொருட்டி யாவையு மாகிய புனிதனேர் மூன்று
திருட்டி யானெதிர் தோன்றினன் தேவர்மா தவர்கட்(கு)
அருட்டி யாகமும் வரங்களும் கொடுத்தினி தமர்ந்தான். 7

சம்ப கத்தனி வனமது சாற்றுமக் காலை
கும்ப சம்பவ னுதியாந் தவத்தினேர் குழுமி
எம்பி ரான்றனை நியதியால் பூசனை யியற்றி
நம்பி னேடிவ ணிருந்தனர் நடந்தன பலநாள். 8

ஆய காலையி லந்தண்மா தவர்சில ரணைந்து
பாய வேலையுண் டவன்றனைப் பணிந்துநீ யெளியேம்
தூயர் போற்றிடும் சுவேதகா னத்திடைத் தொடங்கும்
ஏய வேள்விநோக் கிடவர வேண்டுமென் றிரந்தார். 9

விந்த மாய்த்தவ னுலகெலாம் விளிந்திட வரினும்
இந்த மாதலந் தன்னைவிட் டகன்றிடே னென்றுன்
வந்த மாதவ ரீசனை வணங்கிநின் மகத்திற்(கு)
அந்த மாங்குறு முனிவனங் கணைந்திடி னென்றுர். 10

பரம னன்பொடு மகத்திய படர்திநீ யென்று
விரைவின் மீதெமைத் தொழவிவண் மேவுறு நாளுன்
வரவு பார்த்தெதிர் நிற்குது மென்னலும் வாழ்த்திப்
பொருவின் மாதவ ரொடுமவன் போயின னுங்கே. 11

---

7. சிருட்டி ஆதி - சிருட்டியின் தொடக்கத்தில். ஈண்டு உமை தவம் செய்தனள். மூன்று திருட்டியான் - மூன்று கண்களையுடைய சிவ பெருமான்.

8. சம்பகத் தனி வனம் – சம்பகமரக்காடு. கும்பசம்பவன் - அகத்திய முனிவர். நியதியால் - ஆகமவிதிப்படி. நம்பினேடு: நம்பு - நம்பிக்கை.

9. பாய வேலை - பரவிய கடல். வேலையுண்டவன் - கடல்நீரைக் குடித்தருளிய அகத்தியர். சுவேதகானம் - திருவெண்காடு.

10. விந்தம் மாய்த்தவன் - விந்தமலையினது செருக்கை அடக்கிய அகத்தியர். விளிந்திட - அழிய. நின் மகத்திற்கு அந்தம் ஆம் : மகம் - யாகம். அந்தம் - அழகு. குறு முனிவன் - குறுகிய வடிவத்தையுடைய அகத்தியர்.

11. படர்தி - செல்வாய். பொரு இல் - ஒப்பில்லாத.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

குரவ ரின்மையால் சிலபக லகன்றிடக் குலவும்நாட் டிடைநீடும்
சரியை யாதிநாற் பதத்தொடும் நடந்தன சைவவை திகமெல்லாம்
இரவி நீங்கிடத் திருடருங் கூகையு மிலங்கலொத் துலகெங்கும்
பரவ லுற்றனர் ஞானசூ டன்முதற் பவுத்தர்சீ வகர்மாதோ. 12

மதியி ழந்துநின் புலிக்கொடி நிருபனு மருவிட மதமுற்றுன்
பொதிய வெற்பனீ தறிந்துவந் தவன்றனைப் பொருதுவென் றுவப்பெய்தி
மதுரை யுற்றினி திருந்தன னவனையும் வளைத்தன ரமண்குண்டர்
விதியை வெல்குவ தெளிதுகொ லவனுமவ் வீணர்க ளொடுசேர்ந்தான். 13

பாண்டி நாடனு மமணரின் மூழ்கிய பரிசுதேர்ந் தொருவேடன்
தூண்டு சேனையோ டெய்திவெம் போர்செயத் தோற்றுமீ னவனோடிக்
காண்ட முற்றொளித் தானமண் குண்டருங் கதழ்வுகொண் டவன்பின்னர்
ஆண்ட ளைந்தன ருலகிய லித்திற மாகமுற் றியதம்மா. 14

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இங்குமுன் னரசன் சமணர்தங் குழுவோ டியைதலு மீசனைப் போற்றி
ஐங்கரக் கடவுள் சங்கர சிருட்டி யாகிய வடியினிற் றுனே
எங்குமிவ் வுலகி லமணர்தங் குழாங்க ளியைந்ததென் னிருபனு மதிகெட்(டு)
அங்கவ ரான தென்கொனின் பூசை யருகிய தென்னென வினவ. 15

---

12. குரவர் - ஆசாரியர். சரியையாதி நாற்பதம் - சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு பாதங்கள். நடந்தனவாகிய சைவ வைதிகமெல்லாம் அகன்றிட. இரவி - சூரியன். நீங்கு இடத்து இருள் தரும் கூகையும். கூகை - கோட்டான். கூகையும் என்பதில் உம்மை இழிவின்கண் வந்தது. ஞானசூடன்: பெயர். பவுத்தர் - புத்தசமயத்தினர். சீவகர் - ஆருகதர்: தலைக்குறை.

13. மதி இழந்து - அறிவிழந்து. புலிக்கொடி நிருபன் - புலிக்கொடியினையுடைய சோழன். பொதிய வெற்பன் - பொதியில் மலையையுடைய பாண்டியன். அவன்தனைப் பொருது - அவனோடு போர் செய்து: உருபு மயக்கம். அமண் குண்டர் - அமணர்களாகிய கீழோர். அவனும் - அப் பாண்டியனும்.

14. பரிசு தேர்ந்து-தன்மையை அறிந்து. மீனவன்-மீனக்கொடியை யுயர்த்த பாண்டியன். காண்டம் - காடு. கதழ்வு - கோபம்.

15. முன் அரசன் - முன்னேயுள்ள அரசன். ஐங்கரக் கடவுள் - விநாயகக்கடவுள். சங்கர: விளி. சிருட்டியாகிய அடியினில் - சிருட்டித்

முன்னவ னவனை யருகழைத் தணைத்து மொழிதரு முச்சிமோ ந்தருள்கூர் ந்(து)
இன்னண நமது சமயவாற் றலினை யெவர்களு முணர் ந்திடச் செய்தோம்
துன்னுமிவ் வமணர் தமையெலாம் வென்று தொலைத்திட வருஞ்சில நாளில்
பின்னர்நம் மிடத்தி லன்பினில் துதியில் பெரியனும் சிறியனீங் கொருவன். 16

அருந்தவ முனிவ னொருவனீண் டணையு மவனெமை யருச்சனை புரிவன்
பொருந்துற மீதென் றவன்வருந் துணையும் பூசனை புரிதிநீ யனைய
திருந்திடு தவத்தோன் வழிபடுங் காலோர் சென்னியிப் புவிதனக் கினிய
விருந்தென வருவன் வந்துநம் பூசை விளக்குவ னெங்குமித் தலத்தும். 17

நீயிதற் கிரங்க லெனவகுத் துரைத்தா னீடுறு துதிக்கையோன் மகிழ்வுற்(று)
ஏயுமத் தினந்தொட் டருச்சனை புரியு மென்றன னுரோமச னுவகை
மேயின னாகிப் பூசனை புரியும் விதஞ்சிறி துரைத்திடு கென்றான்
மாயிரு டுணிக்கும் வேத்திரப் படையோன் வகுத்தது மொழிந்திடுமன்னே. 18

தினந்திகழ் நியதி யாய்மறைப் பொருளாய்ச் சிறந்திடஞ் செழுத்தினிதறைந்து
மனந்தரு பொருள்கொண் டகிலகா ரணனை மானத பூசைமுன் னியற்றி[ணம்
அனந்தரம் புறத்து வேண்டிடும் பொருள்கொண் டவனியோ ரறிந்திடா வண்
இனந்தரு கணங்க ளேவல்செய் திடநின் றிசைத்திடு பூசனை புரியும். 19

---

தொடக்கத்தில். இயைந்தது என். நிருபனும் - அரசனும். அங்கு அவர் ஆனது என்கொல். அவர் என்றது சமணரை. நின் பூசை அருகியது என்.

*16. முன்னவன் - சிவபெருமான். அவனை - விநாயகக் கடவுளை. முன்னவனாகிய அவனை எனக்கொண்டு மூத்த பிள்ளையாகிய விநாயகக் கடவுளை எனினுமாம். இன்னணம் - இவ்வாறு. துன்னும் - நெருங்கிய: குழுவாகவுள்ள என்றபடி. சிறியன் ஒருவன் சிலநாளின் பின்னர் வரும். பெரியனும் சிறியன்: முரண்டொடை.*

*17. ஈண்டு அணையும் - இவ்விடம் வருவான். மீது - மேல். வருந் துணையும் - வருமளவும். நீ பூசனை புரிதி. ஓர் சென்னி - ஒரு சோழன். விருந்து - புதுமை. இத்தலத்தும் எங்கும் விளக்குவன்.*

*18. இரங்கல் - வருந்தாதே. துதிக்கையோன் - விநாயகக் கடவுள். நீடு உறு துதிக்கையோன்: மிக்க புகழினையுடையோனாகிய விநாயகர் எனினுமாம். மேயினன் ஆகி - பொருந்தினவனாய். மா இருள் துணிக்கும் - மிக்க இருளைக் கெடுக்கும். உரோமசன் உரைத்திடுக என்றான். வேத்திரப் படையோன் - திருநந்திதேவர். வகுத்து அது மொழிந்திடும்.*

*19. நியதியாய் - விதிப்படி. மறைப்பொருள் ஆய் சிறந்திடு அஞ்செழுத்து: ''வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது, நாதன் நாமம் நமச்சிவாயவே'' (ஞானசம்: தேவாரம்). அஞ்செழுத்து - பஞ்சாக்கரம். அகில*

ஆதலான் மனித ரில்லையிங் கிறைவ னவன்செயும் பூசனைக் குகந்து
கோதில்சீர் வரங்கள் வேண்டிய தளித்தான் குலவுமைங் கரனுமுண் மகிழ்ந்து
நீதிமன் னவர்க ளின்மையால் தனது நீடருள் கொண்டுயிர்த் தொகுதி
ஓதிடு ந் துயருற் றிடாவகை யினைய வுலகையுங் காத்தினி திருக்கும். 20

இந்தநன் னிலத்தின் கருப்பொருண் மருத மெனச்சொலு ந் திறத்தினு லென்
சந்தமுற் றிடுமன் னதுசில சூழத் தழை ந்துறை தகைமையோர் ந் தீண்டு[றும்
முந்துவெண் கைலை வந்தொரு மருதாய் முன்னவன் புடைநிழல் விரித்துச்
சுந்தர மருவி நின்றதிப் பொழுது தொடர்மரு தடவியா யினதே. 21

இன்னுமொன் றிசைப்பன் பவுத்தரோடியையுற் றிப்பொழு துலகினைப்புரக்கும்
சென்னிதன் குலத்துத் தருமசே னனுக்கோர் சிறுவனுற் றிடுஞ்சில நாளில்
அன்னவன் தரும வடிவமே யனையா னவனைவிக் கிரமனென் றெவரும்
பன்னுவ ரவனிவ் வுலகினைப் புரக்கும் பதத்தினி லிங்ஙனம் வருவன். 22

துணையிலா வரசன் தன்னைநீர் வீர சோழனென் றணிமுடி கவித்து
மணிவளர் மிடற்று மருதநா யகன்றன் வளமையுஞ் சிறிதிசைத் திடுவீர்
கணிதரு மவனீ ரிசைத்திடு வண்ணங் கதிர்மதி வேணியன் றனக்குப்
பணிவிடை புரிவ னீருமித் தலத்தே பயிலுறு முனிவரோ டிருந்து. 23

நற்றவம் புரியி னிறைவனும் விரைவி னண்ணிவேண் டியவர மளிப்பன்
சொற்றமிழ் முனிவ னென்னவித் தலத்தைத் துலக்குவீ ரென்றிசைத் தகன்றுன்
குற்றமில் தவத்து முனிவனச் செம்மல் குளிர்மலர்ப் பதம்பணி ந் துவகை
உற்றுநீ டிறையோன் கோயிலின் வடபா லுறையிட ந் தழையினுென் றமைத்து.

---

காரணன் - உலகுக்கு நிமித்த காரணன் ஆகிய சிவபெருமான். மானத பூசை - அகப்பூசை: அந்தரியாக பூசை என்க. அனந்தரம் - பின்பு. அவனியோர் - பூமியிலுள்ளோர். இசைத்திடு - சிவாகமங்களிற்சொல்லிய.

20. அவன் - விநாயகக்கடவுள். நீடு அருள் கொண்டு.

21. தகைமை ஓர்ந்து - தன்மையை ஆராய்ந்து. மருது ஆய் - மருத மரமாய். மருத அடவி ஆயினது. அடவி - காடு.

22. சென்னி - சோழன். விக்கிரமன் - தருமசேனன் மகன்.

23. விக்கிரமனுக்கு வீரசோழன் என்னும் பெயர் முடிசூட்டின பொழுது கிடைத்தது. மணி வளர் மிடறு - நீலகண்டம்: நீரும் என்றது உரோமசமுனிவரை.

24. தமிழ்முனிவன் என்ன - அகத்தியமுனிவர் என்று சொல்லும்படி. அ செம்மல் - திருநந்திதேவர். பணிந்து உவகை உற்று. கோயிலின் வடபால் ஒரு பர்னசாலை அமைத்தென்க.

ஆர்புனை வளவர் நாட்டினிற் கால மறிந்துவந் துதவிடும் பொன்னி
நீரின்முப் பொழுதும் படிந்தவ ணியற்று நியதிக ளியாவையு முடித்துச்
சீருறு மலர்மஞ் சனுதிகொண் டிலங்குஞ் செய்யபொற் கோயிலின் மேவிக்
காருறு மிடற்று மருதவா ணனையுங் கணுதிபன் றன்னையும் பணியா. 25

ஆய்தருஞ் சுருதி யாகம விதிகொண் டருச்சனை புரிந்துசென் றினிய
காய்கனி கிழங்கு கிடைத்தன வருந்திக் கவுரிதன் னெடும்வட நீழல்
மேயசீர்க் குரவ னுகியெம் மிறையோன் வெளிப்படக் கருத்தினிற் குறித்துத்
தூயருந் தவத்தி லுறைந்தனன் பன்னுள் சூழ்முனி வருந்தவத் துறைந்தார்.

பயிலுமத் தவத்தி னிறைவனுற் றிடாத பரிசுகண் டுரையுணர் வின்றி
இயலுறு சுவாச மதனையு மடக்கி யிசைத்திடு நிருவிகற் பமதாம்
வியலுறு சமாதி யடைந்தொரு தம்ப மேவிய தெனவிருந் தனன்பின்
மயலொடு வெகுளி காமமொன் றுருத மாதவ வுரோமசன் மாதோ. 27

இன்னணம் வலிய நிட்டையி லிவன்மற் றிருத்தல்கண் டரிமுத லிமையோர்
முன்னர்வந் துனக்கு வேண்டிய வரங்கள் மொழிகென முன்னவ னிடத்தில்
துன்னுறு மனத்தோ னென்றுமோ திலனச் சுராதிபர் தவத்தினை யலைப்பான்
மின்னிடை யரம்பை மாதர்கள் பலரை விடுத்தனன் கின்னர ருடனே. 28

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வந்தரம்பை மடமாதர் முழாவினெடு சிலம்பொலிப்ப மருங்குல் தன்னே(டு)
அந்தளிர்ச்சீ றடிவருந்த வாடாத நாடகமு மாடித் தீர்த்தார்
கந்தருவ ரிசைபாடி வாயினெடு மனமிளைப்பக் கையி னேடு
தந்திரியுஞ் சோர்வுபெற நின்றனர்பின் னெவரும்வெள்கித் தமதூ ருற்றூர்.29

---

25. ஆர் - ஆத்திப்பூ மாலை. வளவர் - சோழர். ஆத்தி சோழர்க்கு உரிய அடையாளப் பூமாலை. காலம் அறிந்து வந்து உதவிடும். படிந்து - முழுகி. நியதிகள் - கடன்கள். மஞ்சனம் - அபிடேகத்துக்குரிய நீர். மருதவாணன் - இடைமருதீசர்.

26. வட நீழல் - கல்லாலின் நீழல். தூய் அருந்தவத்தில். தவத்து உறைந்தார்.

27. பயிலும் - இடைவிடாது செய்யும். உரை உணர்வு இன்றி. சுவாசம் - மூச்சு. வியல் உறு - மேம்பட்ட. தம்பம் - தூண்.

28. முன்னவன் - முழுமுதற்கடவுள். தவத்தினை அலைப்பான் - தவத்தைக் கலைக்கும்பொருட்டு. அரம்பைமாதர்கள் - தெய்வமகளிர்.

29. மருங்குல் - இடை. ஆடாத நாடகமும் - இதுவரையில் ஆடியறியாத நடனவகைகளும். தந்திரியும் - யாழ்வாசிப்போரும்.

பரவிதற்கு மனஞ்சலியா தொருநிலையி லிருக்கின்ற பரிசோர்ந் தன்னுன்
கருதியவா றிலகுமுல கனைத்தையுமீன் றளிக்குமெழிற் கவுரி யோர்பால்
மரகதவெற் பெனவிளங்கத் தான்பதும ராகநெடு வரைபோ னின்றான்
அரவமணிந் திடுமருத நாயகன்வந் துரோமசனு மவன்றன் முன்னர். 30

மானமுறு பாரிடங்கள் புடைசூழப் புகழ்ந்திமையோர் மந்தா ரத்தின்
தேனிமிரு மலர்மாரி சொரியமறை வாழ்த்திடக்கந் திருவர் தேவ
கானமிசைத் திடவெதிர்நின் றிடுபரம குரவனைத்தன் கண்ணிற் கண்டான்
ஈனமில்சீர்த் தவமுனிவன் பாவகமுற் றோவியமே யென்ன நின்றான். 31

நின்றுணர்வு கொண்டதற்பி னிமயமயி லொடுநிற்கு நிமலன் பாத [ணீர்
மன்றல்கமழ் சரோருகத்தண் மலர்த்துணையிற் பணிந்தெழுந்து மாறில் கண்
குன்றருவி யெனச்சொரிய மனமுருகிக் கரஞ்சிரமேற் குவித்து மேன்மேல்
ஒன்றியபே ருவகையொடு முரைதடுமா றிடப்பரவ லுற்றா னம்மா. 32

பதுமமல ரடிநினைந்தோ ருறுதுயரங் கடிதகற்றும் பரம போற்றி
விதுமவுலி யிறைபோற்றி திரிபுரந்தீ யெழநகைத்த விமல போற்றி
முதுமறையுட் பொருள்போற்றி யெவரெதுவேண் டினுமுதவு முதல்வ போற்றி
மதுமலிதண் மலர்க்கூந்த லுமையவனு யகமருத வாண போற்றி. 33

---

30. பரவு இதற்கு. பரிசு ஓர்ந்து - தன்மையை ஆராய்ந்து. மரகத வெற்பு என - மரகதமலை என்று சொல்லும்படி.

31. மானம் - பெருமை. பாரிடங்கள் - பூதகணங்கள். இமிரும் - ஒலிக்கும். பரமகுரவன் - பரமாசாரியன்: முதற்குரு என்றபடி. இதனை, ''திருமாலிந் திரன்பிரம னுபமனியன் தபனனந்தி செவ்வே ளாதித், தரும முது குரவருக்கும் தனதருளால் ஆசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கும் முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த, உரு வழகும் குறுநகையும் காட்டியருள் தருஞ்சிவனை யுளத்துள் வைப்பாம்'' என்னும் சிவதத்துவ விவேகச் செய்யுளான் உணர்க. பாவகம் - மனத்தின் அன்பை வெளிப்படுத்தல். ஓவியம் - சித்திரப்பிரதிமை.

32. மன்றல் கமழ் - வாசனை வீசும். சரோருகம் - தாமரை. மாறு இல் - மாறுதலில்லாத: நீங்காத. உரை தடுமாறிட - வாக்குக் குழற. பரவல் உற்றான் - தோத்திரம் செய்தான். அன்பினாலுண்டாகிய மெய்ப் பாடுகள் கூறியது இச்செய்யுள்.

33. பதும மலர் - தாமரைமலர். கடிது அகற்றும் - விரைவில் நீக்கும். விது மவுலி - சந்திரனைத் தரித்த முடி. எவர் எது வேண்டினும் உதவும் முதல்வ: '' வேண்டத் தக்கதறிவோய் நீ வேண்ட முழுதுந்தருவோய் நீ''; ''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' என்னும் திருவாக்குக்கள் சிந்தித்தற்குரியன. மது மலி - தேன் நிறைந்த.

எனத்துதித்த முனிவரனை நோக்கியருள் கூர்ந்திறைவ னிமைப்பி லோரும்
பனிப்புறநீ வருந்திமிகப் புரிந்ததவங் கண்டுவந்தோம் பரிந்து மேலுன் [ருன்
தனக்கிவண்வேண் டியவரங்கள் கேட்டிமகிழ்ந் திவையனைத்துந் தருதுமென்
கனத்தபுகழ்ப் பெருந்தவத்தோர் தலைவனிவை விளம்புகின்ருன் களிப்புமேவி.

சுராதிபவிவ் வடிவொடுநீ யென்றுமிந்தத் தலத்திருந்து தூய பொற்ருள்
பராவுதல்செய் பவர்தமைக்காத் திடவேண்டு மெனக்குமுன்பாற் பத்திவேண்
தராதலமின் புறவேண்டும் சைவமொடு வைதிகமுந் தழைக்க வேண்டும் [டும்
விராவுபுக ழெத்தலத்து நின்பூசை பொலிவெய்த வேண்டு மென்ருன். 35

தேமலர்ச்செஞ் சடையவனித் திறங்கேளா முனிவரநீ தெரித்த வாறே
நாமுமிவ ணுறைகின்ருேம் பிறவரமு மினிதளித்தோம் நவில்சின் ஞளில்
ஏமமுறு மொருவளவன் வருமிவண்வந் துனக்கேவ லெதுவுஞ் செய்வான்
மாமருவு மெய்யுணர்வும் பெறுகுவைமே லெண்ணியவு மருவு மென்ருன். 36

விதிதருமிவ் வரமேற்றுக் களித்துவர மளித்தானும் வெற்பின் மின்னும்
கதிருமிழோர் மணிச்சிங்கா தனத்தினுறப் பூசித்துக் கருத்தி னூடு
முதிருமன் பொடுமருத நாயகனைப் பெருநலமா முலையி னுளைச்
சதிருறுமைங் கரனவனைப் பூசித்து முனிவர்பிரான் தங்கு நாளில். 37

சேற்றினிடைத் தாமரைதோன் றியதென்ன விடமுதவு சீற்ற ராவின்
பாற்றிகழுஞ் சுடர்மணிதோன் றியதென்ன வறிவிலியாய்ப் பவுத்த ஞகி
வீற்றிருக்கும் புரவலன்பாற் சென்னிகுலத் துடனுலகம் விளங்க வந்து
தோற்றியரன் திருவருளால் காஞ்சிதனில் விக்கிரமச் சோழன் மாதோ. 38

விடையுகைத்தா னிடத்தினிலன் புருவாகிப் பிறைமதியின் விரைவி னேங்கிப்
படைகுடிகூ ழமைச்சொடுநட் பரணுறின் வலியெய்திப் பகைவேந் தர்க்கோர்
அடலேருய்க் கல்வியருட் சாகரமாய் மன்னுயிர்கட் கனைய கொற்றக்
குடைநிழலுற் ருறினிலொன் றிறைகொண்டு திறையினெடு கூடி வாழ்வான்.39

---

34. முனிவரனை - உரோமசனை. அருள் கூர்ந்து - அருள் மிகுந்து. இமைப்பிலோர் - தேவர். பனிப்பு உற - நடுங்க. கனத்தபுகழ் - மிக்க புகழ்.

35. சுராதிப - தேவதேவ: மகாதேவ என்றபடி. தராதலம் - பூமி.

37. மணிச்சிங்காதானம் - இரத்தினமிழைத்த அரியணை. வெற்பின் மின் - உமாதேவியார். சதிர் உறும் - சதுரப்பாடுடைய.

38. சீற்ற அரா - சினமுடைய பாம்பு. புரவலன் - தருமசேனன்.

39. விடையுகைத்தான் - இடபவாகனத்தையுடைய சிவபெருமான். பிறைமதியின் - பிறைச்சந்திரன்போல: இன்: ஐந்தனுருபு. ''படை குடி கூழமைச்சு நட்பர ணுறும், உடையான் அரசருளேறு'' (திருக்குறள் 381)

இத்தலத்திற் காகம்பொன் னுருவாகிப் பேசிமகிழ்ந் திருந்த வாறும்
மெய்த்தவரோ டுரோமசமா முனிவரன்மா தவம்புரியும் விதமுங் கேளா
அத்தலமுற் றிப்பொழுதே பரஞ்சுடரைப் பணிவேனென் றவாவி னேடு
மொய்த்தபெருஞ் சேனையொடு மெழுந்தெழிற்கா விரிநாட்டின் முன்னுற்
றுறுஞல். 40

கயலினங்க ளுயர்தெங்கி னிளங்காயிற் பாய்ந்துடைக்கக் காலுந்தெண்ணீர்
வயலினிடைப் பொன்னியினீர் வடிந்திடினும் வடியாத வளத்தாற் செந்நெல்
இயல்பினெழு கன்னலெனக் கன்னல்கமு கெனக்கமுக மெழிற்றெங் கென்னப்
பயில்வளமை பார்த்துமகிழ்ந் தரன்பதிகள் வழியுறைவ பணிந்து போற்றி. 41

ஆசினிமட் டெழுந்திலகு சையவரை தனிற்பொலியு மாரத் தோடு
தேசுமிகு மரகதம்வச் சிரமாதி கொடுதேக்கித் திரைநீள் வேலை
காசினிக்க ணரதனு கரமாகி விளங்கிடச்செய் கவினுற் றேங்கும்
வாசநெடும் புனற்பொன்னி யடைந்துபடிந் தெதிர்நியம வகைக ளாற்றி. 42

மருதவனத் திடைமேவி யுடுக்கணத்தி னடுவொளிரு மதியே போன்று
கருதுமுயர் தவமுனிவ ரிடைவிளங்கு முரோமசனைக் கண்டு தாழ்வுற்(று)
உருகிடுமன் பொடுநின்றான் முனிவரன்பார்த் திறைவனரு ளுன்னி மன்ன
வருகவென வியந்தினிய முகமனளித் தாசிபல வகுத்துப் பின்னர். 43

---

அடல் - வலிமை. சாகரம் - கடல். கல்விக்கடல், அருட்கடல் என்க. ஆறினுளொன்று இறை - ஆறிலொரு கடமை. திறை - கப்பம். ''அளவை கண் டாறி லொன்று, கொற்றவர் கடமை கொள்ள....'' (பரஞ்சோதி - திருநாட்டு. 28).

40. மொய்த்த - நெருங்கிய. மெய்த்தவர் - உண்மைத் தவமுடை யோர். காவிரி நாடு - காவிரியாறு பாயும் நாடு.

41. காலும் - ஒழுகும். தெண்ணீர்- தெளிந்தநீர்: இளநீர். கன்னல் - கரும்பு. ''நெற்க ரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன, வர்க்க வான்கமு கொலிகலித் தெங்கெனவளர்ந்த'' (பரஞ்சோதி - திருநகர. 6). பொன்னி - காவிரி. கமுகு - பாக்குமரம். தெங்கு - தென்னைமரம்.

42. ஆசினி - பலா. மட்டு - தேன். ஆரம் - முத்து. தேசு - ஒளி. காசினி - பூமி. அரதனகரம்=அரதன ஆகரம் - இரத்தினங்கட்கு உறை விடம். கவின் - அழகு. நெடும் புனல் - மிக்க நீர்.

43. உடுக்கணம் - விண்மீன் குழு. தாழ்வுற்று - வணங்கி. இறைவன்- சிவபெருமான். அருள் உன்னி - கருணையை நினைந்து. முகமன் - உபசார மொழி.

நவிலுமவன் றனக்குரிமை யுடன்வீர சோழனென நாமஞ் சாற்றி
அவனிபுகழ் மருதவனத் திறைவனவன் றனைநினைத்த வருளை மோதித்
தவமுனிவ ரொடுமவன்ற னெடுமெழுந்து பொற்கோயில் சார்ந்து மன்னும்
சிவபரன்முன் விடுத்தனனுங் கவன்வணங்கித் துதியனந்தஞ் செய்தான்
மன்னே. 44

அவ்வயினின் றவ்வரச னம்முனிவர் தலைவனெடு மன்பி னேடும்
கொவ்வையிதழ்க் கருநெடுங்கட் பெருநலமா முலையுமையாள் கோயி லெய்திச்
செவ்வனசத் தாட்பணிந்து மற்றுமுள தேவர்தமைத் தெரிசித் தேத்திக்
கவ்வைநெடுங் கடல்குடித்தோன் செய்தவமா தியுங்கேளாக் களிப்பு நீடி. 45

பொன்பயிலுந் திருக்கோயிற் புறத்தினிலுற் றிருந்துமுனி பொற்றாள் போற்றி
அன்பிலெளி யேனையுமோர் பொருளாகக் கொண்டருள்செய் யறத்தின்மூர்த்தி
கொன்பயிலுந் தவச்சுடரே யானியற்றும் பணிவிடையென் கூறு கென்றான்
மின்பயிலுந் தனிவேலான் றனைநோக்கி முனிவர்பிரான் விளம்பு வானால். 46

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எண்ணிடுஞ் செல்வ மிளமைமெய் கணத்தி லியல்பதா யழிந்திடு மென்றும்
புண்ணிய மதனுக் கழிவிலை யதனிற் புகல்சிவ புண்ணிய மதிகம்
பண்ணிடுந் தவத்தா லியாவையு மருவும் பயின்றிடு மனையமா தவத்தில்
கண்ணுதற் பிறைச்செஞ் சடைமணி மிடற்றுக் கடவுடன் பூசனை யதிகம். 47

---

44. நாமம் சாற்றி - பெயரினைச் சொல்லி. அவன்தனை - விக்கிரமனை. அனந்தம் - பல.

45. அவ்வயின் - அவ்விடம். செவ்வனசத்தாள் - சிவந்த தாமரை மலர்போலும் திருவடி. கவ்வை - ஒலி. கடல் குடித்தோன் - அகத்திய முனிவர். களிப்பு நீடி - மகிழ்ச்சி மிக்கு.

46. 'முனிவரராயினும் கோயிலினுள் எவரும் வணங்கலாகாது, புறத்தே வந்து அவரை வணங்குதலே விதி' என முதலடி கூறியது. அன்பு இல் - அன்பில்லாத. அறத்தின் மூர்த்தி - தரும வடிவே. கூறுக என்றான். மின் பயிலும் - ஒளி வீசும். வேலான் - வீரசோழன். முனிவர்பிரான் - உரோமச முனிவர்.

47. கணத்தில் - நொடிப்பொழுதில். செல்வம் இளமை யாக்கை நிலையாமையை உணர்ந்து புண்ணியம் செய்தல்வேண்டும். சிவபுண்ணி யமே புண்ணியச் செயல்களில் மேலானது. சிவபூசையே சிவபுண்ணியங் களுள் சிறந்தது என்பது. கண்ணுதல்: நுதற்கண் என மாறுக. நுதல் - நெற்றி. நுதலையும் சடையையும் மிடற்றையும் உடைய கடவுள்.

மருத்துள வணிமான் முதலினோர் பதமு மற்றவர் செல்வமும் பிறவும்
நிருத்தனைப் பூசை புரிந்திடு பயனே நிலவுமப் பூசைதன் கையால்
அருத்தியிற் செயலே யமையுமான் மார்த்த மன்றியன் னியவடி வதனில்
ஒருத்தராற் செய்வித் திடலுமா மவற்று ளுயர்ந்தது சுயம்புவா மிலிங்கம். 48

இன்புற வொருவன் தான்புதி தாக வியற்றிடு மறத்தினு மொருவன்
முன்புசெய் திருந்த வறத்தினுக் கிறுதி முந்துறச் செய்திடா திருக்கின்
கொன்பயில் பலனங் கெண்மடங் கினிது கூடுநீ டறனழிந் திடுகால்
தன்பொருள் முயற்சி கொண்டதை விளங்கச் சமைத்திடிற் சதமடங் கெய்தும்.

அரனடி யவர்கட் களித்திடு மெவையு மரன்கையி லளித்ததே யாகும்
நிருபநீ யினைய புனிதமா தலத்து நித்தன்வாழ் சினகர மெங்கும்
பரிவுட னீடு திருப்பணி யியற்றிப் பரன்மகிழ் பூசையுஞ் செய்வித்(து)
உரியமெய் யடியார் தம்மையும் போற்றி யுமாபதி யருளடை கென்றான். 50

இத்திற முனிவ னிசைத்தசொற் சென்னி யெழின்முடிச் சென்னிதாழ்ந் தேற்று
மெய்த்திற லமைச்சர்க் கிசைத்திட வவர்கள் விரைவினே வலர்களைத்துறைதோ
றுய்த்திட வனஞ்செற் றணிநகர் வகுத்தற் குரியவர் சிற்பநூ லுணர்ந்தோர்
அத்தொழிற் குரிய கருவிக ளுடன்வந் தளவிலர் சூழ்ந்துகா டெறிந்தார். 51

---

48. மரு துளவு அணி மால். மரு - வாசனை. நிருத்தன் - சிவ பெருமான். முதலிரண்டடிகள் : ''வண்டுளரும் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும், புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும், அண்டர் தொழ வாழுன் இறுமாப்பும் ஆலாலம், உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்'' (பரஞ்சோதி – வெள்ளையானை சாப. 14). என்னும் கருத்தை உணர்த்துவன. அருத்தியின் - விருப்பத்துடன். அமையும் - பொருந்தும். ஆன்மார்த்தம் - தனக்கே பயன் தருவது. சுயம்பு ஆம் இலிங்கம் - தானே தோன்றியது.

49. ஒருவர் தாம் புதிதாகச் செய்யும் தருமத்தினும் முன்னுள்ள தருமம் கெடாமல் பாதுகாப்பது எண்மடங்கு அதிக பலன்தரும். முன்பு உள்ள தருமம் அழியுங்காலத்துத் தன் பொருளைக்கொண்டு முயன்று பாதுகாப்பின் நூறு மடங்கு அதிக பலனைத் தரும் என்க. நீடு அறன் அழிந்திடுகால்.

50. நிருப - அரசனே : விளி. பரிவுடன் - அன்புடன். உமாபதி - சிவபெருமான்.

51. சென்னி தாழ்ந்து - தலை வணங்கி. துறை தோறு உய்த்திட - இடந்தொறும் செலுத்த. வனம் செற்று - காடு கெடுத்து. அணி நகர் - அழகிய நகரம். அளவிலர் - அளவில்லாதவர் : எண்ணிலர் என்க.

செறிதரு கருங்கால் வினைஞர்வாள் நவியத் திண்படை யெறிதலு மாங்கே
அறைதரு மருத வனத்துறை யிறையோ னடிதொழு மன்பர்பல் வினைபோல்
பறவையும் விலங்கு மெறிந்தன வவர்கள் பவத்தொடக் கென்னவே ரோடு
முறிதர லுற்று வீழ்ந்தன போலு மொழிந்திடு தருக்குல மெங்கும். 52

வனமறப் போக்கி நிலனுறத் திருத்தி மருதநா யகப்பெருங் கடவுள்
சினகரந் தனைமுன் மயனினி திலங்கச் செய்தவா றெழில்படப் புதுக்கிக்
கனமுறப் பின்னுந் திருப்பணி பலவுங் கண்டுநன் னகரமேற் காண்பான்
இனமுகி லுறங்கு நேமிமால் வரைநே ரெயிலுட னகழிசூ ழமைத்து. 53

மாகமார் குடுமி மாடநீண் மறுகு வகைபடு மாவணங் கவலை
ஏகநா யகன்வந் தனுதினம் பவனி யியங்கிடு பெருந்திரு வீதி
வாகுறு தெற்றி சாளர வொழுக்க மன்றுபொன் மேடையா டரங்கு
பாகுறு கழக முயர்மணிக் குலங்கள் பரந்தினி தொளிர்நிலா முற்றம். 54

மாதவர் மடங்கள் பயிலறச் சாலை மருவுறச் செய்துமற் றனந்தம்
கோதில்சீர்த் தெருவு மியற்றிவெங் களிறு குலவெழில் தேர்பரி நிலையும்
தாதுறு மலர்ப்பூஞ் சோலைபைங் கமுகு தழைந்தெழு தெங்குவண் கதலி
சூதநீள் வருக்கை கூவல்பூந் தடாகத் தொகுதியு மிலங்கிட வமைத்தார். 55

---

52. கருங்கால் - கரிய காலினையுடைய. வினைஞர் - வேலையாட்கள். நவியம் - கோடரி. பவவினை - பாவச்செயல். பவத்தொடக்கு - பிறவியாகிய பந்தம். தருக்குலம் - மரக்கூட்டங்கள்.

53. வனம் அற போக்கி - காட்டினை முற்றும் அழித்து. மயன் - தெய்வத் தச்சன். கனம் உற - பெருமை பொருந்த. இனம் முகில் - கூட்டமாகிய மேகங்கள். உறங்கும் - வந்து தங்கும். நேமி மால் வரை - சக்கரவாளகிரி. எயில் - மதில். சூழ் அமைத்து - சுற்றிலும் அமைத்து.

54. மாகம் ஆர் குடுமி - ஆகாயத்தைப் பொருந்தும் உச்சி. மறுகு - தெருக்கள். ஆவணம் - கடைத்தெரு. கவலை - கவர்த்த இடங்கள். பவனி - திருவுலா. வாகு உறு தெற்றி: தெற்றி - திண்ணை. சாளரம் - காலதர், சாலேகம்: 'மானின் கண்போலக் கோணஞ்செய்த சாளரம்' என்பர் அடியார்க்கு நல்லார். மன்று - அம்பலம். ஆடு அரங்கு - நடனசாலைகள். மணிக்குலம் - மணிகளின் கூட்டம். பரந்து - பரவி.

55. குலவு எழில் தேர். களிற்றுநிலை, தேர்நிலை, பரிநிலை என்க. தாது - மகரந்தம், தேன் எனினுமாம். கதலி - வாழை. சூதம் - மா. வருக்கை - பலா. கூவல் - கிணறு.

அறைகழ லரச னேக்கியுண் மகிழ்வுற் றணிநகர் சாந்திசெய் தோங்கும்
மறையவர் மன்னர் வணிகர்வே ளாளர் மற்றைய சாதிய ரெவர்க்கும்
முறைபெற வீடு வகுத்தினி தளித்து முந்துபொன் முதலிய வுதவித்
துறைபயில் வேணி மருதநா யகர்க்குச் சூழ்ந்திடு பதியெலாங் கொடுத்து. 56

அலகில்பொற் கலையு முயர்நிதிக் குவையு மணிமணிப் பணிகளு மீந்து
கலைபயி லாதி சைவராற் பூசை கருதியே மூன்றுகா லையிலும்
இலகிடச் செய்து தானுமந் நகரத் திலங்கொரு மாளிகை யிடத்துச்
சுலவுறுஞ் சேனை நெருங்கவிற் றிருந்தான் துன்னல ருள்ளமு நடுங்க. 57

இருந்திடு வளவன் மற்றைநாள் முனிவ னிருக்கையுற் றடிமல ரிறைஞ்சித்
திருந்தெழின் மருத நாயகன் றனக்குத் திருவிழாச் செய்திடுகென்னப்[யா(து)
பொருந்துமென் னெஞ்சம் புகலுமீண் டதற்குப் பொருந்திய மதியெது நாள்
அருந்தவர் தலைவ வென்றனன் முனிவ னவன்றனைப் புகழ்ந்தினி திசைக்கும்.

மாயிரு ஞாலத் திருந்துளோர் பாவ வலியெலாந் தொலைத்திடு மெவர்க்கும்
தூயதாக் கிடுமங் கலந்தனை வளர்க்குந் தொடர்ந்திடு முத்தர நெறியில்
ஆயிரங் கதிரோ னடைமுதன் மதிமற் றன்னதி லுயர்ந்திடு பூச
மேயநா ளதனைத் தீர்த்தநா ளாக்கி விழாவினி தியற்றிட லாகும். 59

---

56. அறை கழல் அரசன் - ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த வீரசோழ மன்னன். அணிநகர் - அழகுடன்விளங்கும் நகரம்.

57. அலகு இல் - எண்ணில்லாத; அளவிறந்த என்றபடி. பொற்கலை - பொன்னுடை. அணி மணிப்பணிகள் - அழகிய இரத்தினபரணங்கள். கலை பயில் - கலைகளில் நன்கு பழகிய ; எனவே. வேதசிவாகமங்களை நன்கு ஓதியுணர்ந்து ஏனைய கலைகளில் நன்ருகப் பயிற்சிபெற்ற என்க. அன்றியும், மந்திரகலை, தந்திரகலை, உபதேசகலைகளில் நன்கு பயின்ற எனினுமாம். ஆதிசைவர் - சிவாசாரியர் : இவர்கள் சதாசிவமூர்த்தியின் ஐம்முகங்களி னின்று தோன்றிய ஐந்து ரிஷி கோத்திரத்திலே தோன்றிப் பரார்த்த பூசைக்குரியவர்கள். மூன்று காலையினும் - மூன்று காலத்தினும் : காலை, உச்சி, மாலை என்ற இம்மூன்று காலங்களிலும். இலகிடச்செய்து - நன்கு நடைபெறச்செய்து. சுலவுறும் - சூழும். துன்னலர் - பகைவர்கள். நடுங்க மாளிகையிடத்து வீற்றிருந்தான்.

58. வளவன் - சோழன்; வீரசோழன். உற்று அடிமலர். திருந்து எழில் - பேரழகு. செய்திடுக என்ன. இசைக்கும் - கூறுவான்.

59. மா இரு ஞாலம் - மிகப் பெரிய நிலவுலகம். தூயது ஆக்கிடும் மங்கலம். உத்தரநெறி - உத்தராயனம். முதல் மதி - முதல் மாதம் : தைத்திங்கள். பூசம் மேய நாள் - பூச நட்சத்திரம்.

பேசிடு மேனைத் தலத்தொரு கோடி பிறங்குநற் பசும்பொனீந் ததுவாம்
பூசநா ளினிலீண் டணுவள வதனிற் பூசுரர்க் களித்திடு தானம்
மாசில்போ னகமெண் கோடியந் தணர்க்கு மற்றைய தலத்தளித் திடும்பே(று)
ஈசனன் பருக்கித் தலத்தினத் தினத்தி லீந்திடு பிடியன முதவும். 60

உடையவர் பூச நாளிலுண் மகிழ்வுற் றுதவில ரென்னில்யா தேனும்
கடைபடு மவர்கள் வாழ்வுசின் னாளிற் கள்வராற் பகைவர்க டம்மால்
இடைமரு தென்னு மிதனிடை விளங்கு மெழில்விழாக் கண்டுள மகிழ்ந்தோர்
விடையவன் மலர்த்தாள் பணிந்துளோ ரிவர்கள் வியன்சிவ புரியினில் வாழ்வார். 61

விழவுநோக் கிடுவா னெழுந்தொரு தடையான் மீண்டவர் மேவுறநினைந்தோர்
முழவொலி கேட்போர் நோக்கமுற் றடைந்தோர் முன்னுறக் கண்டவ ரவரை
எழில்விழாச் சிறப்பு வினவினோர் வருவோ ரிடத்தினி லெம்பிரான் றனக்கு
மொழிதரு பொருள்யா தேனுமீந் தவர்கள் முதியசீர்த் தேவராய்த் திகழ்வார்.

அத்தகை மதியு மடுத்ததன் னதனி லமரர்தங் குரவனா ளதுவும்
உய்த்திடு மவன்றன் வாரமுங் கலையா லுடுபதி நிறைந்திடு திதியும்
ஒத்தணை கின்ற தின்னதுத் தமமா மொளிர்விழாத் தொடங்குக வென்றான்
மெய்த்திற லரச னுவகைமீக் கூர்ந்து விருப்புட னவ்வண ந் தொடங்கும். 63

மருவளர் மலர்ப்பூம் பொழிலிடை மருதூர் மருதநா யகனெழிற் பூசத்
திருவிழா வினுக்கு வந்திருந் திறையோன் திருவரு ளடைந்துசெல் கென்னக்
கருநடந் தெலுங்க மாரிய மராடங் கவுடமா தியவுயர் நாட்டு
நிருபர்க டமக்கு மனமகிழ் வோடு நேர்தர வரைந்துமுன் விடுத்தான். 64

---

60. ஈண்டு - இத்தலத்தில். பூசுரர் - பிராமணர். போனகம் - உணவு. ஈசன் அன்பருக்கு இ தலத்தின் அ தினத்தில். பிடி அனம் - ஒருபிடி சோறு. அனம்: தொகுத்தல். பிடி அனம் என்றது ஒரு நயம்.

61. உடையவர் - செல்வமுள்ளார். உள் மகிழ்வு உற்று உதவிலர் என்னில். யாதேனும் - எவ்வளவினவேனும். வாழ்வு சின்னாளில் கடைபடும் என்க. விடையவன் - சிவபெருமான்.

62. முதிய சீர் - பெருஞ்சிறப்புள்ள.

63. அத்தகை மதி - தை மாதம். அமரர்தம் குரவன் நாள்- வியாழ பகவானுக்குரிய பூச நாள். அவன் தன் வாரம் - வியாழக்கிழமை. உடுபதி - சந்திரன்; உடு - விண்மீன். கலையால் நிறைந்திடு திதி - பூரணை. ஒத்து அணைதலாவது தைத்திங்கள் பூரணை திதி வியாழக்கிழமை பூசநாள் ஆம். திறல் - வல்லமை. மீக்கூர்ந்து - அதிகரித்து.

64. மருவளர் - மணமிகும். நிருபர் - அரசர். நேர்தர - முன்னிலையில். வரைந்து - எழுதுவித்து என்க: விவ்விகுதி தொக்கது.

ஓங்கெழிற் கனக வரைக்குல மென்ன வுயர்மணித் தேர்கள்செய் வித்துத்
தேங்கமழ் மருத நிழலுறை யிறையோன் சினகர மெங்கணும் விதானம்
பூங்கொடி மகர தோரணந் தொடலைப் புகழ்நடைக் காவண மாக்கி
தாங்குபொன் வீதி யலங்கரித் திடுவான் தழங்கொலி முரசறை வித்தான். 65

வாரண மிசைநின் றறைந்திடு முரசின் வளரொலி கேட்டுள மகிழ்ந்து
தாரண வுறுபூங் கோதையர் மனுளர் கவின்மனை தொறுமுளை வளைத்த
பூரண கும்ப மினியபொற் கொடிகள் பொலிவுறச் செய்துவீ திகளில்
தோரண மலர்ப்பூம் பந்தர்கள் விரித்துச் சுடர்மணிப் படலைக ணிரைத்தார்.

மணிவிளக் கெடுத்த தமனியப் பாவை வாயில்க டொறுமுற நிரைத்தார்
கணிதரு கமுகு தெங்கினெண் குலைகள் கதலிபைங் கன்னல்கள் விளைத்தார்
அணிபணி யுரிஞ்ச வுதிர்ந்தபொற்பொடிக ளடங்கிடப் பனிப்புன லிறைத்தார்
திணிதரு தத்த மனைதொறும் வதுவை செய்தலிற் பிறவுமே லமைத்தார். 67

துன்னிடு மோலை கண்டிடு செங்கோற் றுங்கவெண் குடைப்புர வலர்கள்
இன்னிய முழக்குங் கடகரிச் சுறவு மிவுளிவண் டரங்கமு மெழிற்றேர்
என்னுமொண் கலனும் பரந்திடு சேனை யிருங்கடல் சூழ்ந்திட வெழுந்து
மன்னிடு மகிழ்ச்சி யுடன்றிசை தோறும் வந்திடை மருதினிற் புகுந்தார். 68

---

*65. கனக வரைக்குலம் - மேருமலையின் கூட்டம். மணித்தேர்கள் - மணிகள் கட்டப்பட்ட தேர்கள். இறையோன் - சிவபெருமான்: மகாலிங் கேசர். சினகரம் - கோயில். விதானம் - மேற்கட்டி. தொடலை - இலை விரவத் தொடுத்த மாலை. நடைக்காவணம் - நடைப்பந்தர். தழங்கு ஒலி முரசு - பேரொலியையுடைய பேரிகை. தழங்கொலி : மீமிசைச்சொல்.*

*66. வாரணம் - யானை. யானையின் பிடரியிலேறி முரசு அறைதல்: '' வச்சிரக்கோட்டத்து மணங்கெழு முரசம், கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி, ஏற்றுரி போர்த்த இடியுறு முழக்கிற், கூற்றுக்கண் விளிக்கும் குருதி வேட்கை, முரசு கடிப்பிடூஉம் முதுக்குடிப் பிறந்தோன்......'' (மணிமேகலை - விழாவறை – 27 - 31). தார் அணவு உறு. கோதையர் - பெண்கள்.*

*67. மணி விளக்கு - இரத்தின தீபம். தமனியப் பாவை - பொற் பாவை. தமனியம் - பொன். பாவை - பிரதிமை: படிவம். விழாக்காலங் களில் வீதிகளை அலங்கரித்தல்: மணிமேகலை விழாவறை காதை வரிகள் 43–53 காண்க. கமுகு - பாக்கு. கன்னல்கள் - கரும்புகள். அணி பணி - அணிந்துள்ள அணிகலங்கள். உரிஞ்ச - ஒன்றோடொன்று தேய்க்க. பனிப் புனல் - பன்னீர்: பனிநீர். வதுவை - கலியாணம்.*

*68. ஓலை - விழாத்திருமுகம். செங்கோலையும் குடையையும் உடைய புரவலர். புரவலர் - அரசர். இன்னியம் - இனிய வாத்தியங்கள்.*

வளவன்மற் றவரை யெதிர்கொடு மருத வனத்திறை மலர்ப்பதம்பணிவித்(து)
உளமகிழ் சிறப்பும் வசதியு மவர்கட் குதவினு னுயர்விழா நடக்கும்
வளமையோர்ந் தவனித் தலத்துறை பிறரும் வானநா டுரகநாட் டினரும்
அளவில்பே ருவகை தன்னுட னீடு மவரவ ரூர்திமேல் வந்தார். 69

சென்னியுண் மகிழ்ந்து மாதவற் குறுகிச் செய்தவுஞ் செய்பவு முரைத்து
முன்னகர் காவற் சாத்தன்மா காளி முதலியோர்க் கணிவிழா நடாத்தி
என்னைய னென்னு மைங்கரக் கடவுட் கெழில்விழாத் தனியினி தியற்றி
மன்னனு ளிடபத் துவசமேற் றுவித்தான் மருதநா யகனுள மகிழ. 70

அத்தின முதற்கொண் டேகநா யகனீ டணிதரு பொற்கலை மகுடம்
நித்தில வடங்கள் கதிர்மணிப் பதக்க நிலவுமிழ் மகரகுண் டலங்கள்
சித்திர மணிக்கங் கணங்கள்கே யூரந் திகழ்மணி நூபுர மாதி
மொய்த்திடு பணிபூண் டெழில்கொள்வா கனத்தின் முற்றிழை யுமையுட
னெழுந்து. 71

நாரணன் பிரமன் புரந்தர னாதி நவிலுமெண் டிசைபுரந் திடுவோர்
தாரணி வசுக்கள் வைரவ ரியக்கர் தண்மதிக் கடவுளா தித்தர்
போரணி நெடுவேற் றானவ ரிமையோர் போற்றுகந் தருவர்விஞ் சையர்கள்
பாரிடத் தலைவர் சித்தர்மா தவர்கள் பார்த்திப ராதிமா னிடர்கள். 72

---

சேனையைக் கடலாக உருவகம் செய்தற்கேற்ப இயமுழக்கு, கரிச்சுறவு, இவுளித் தரங்கம், தேர்க்கலன் எனக் கூறினர். இயம் - வாத்தியம். சுறவு - சுறு மீன். இவுளி - குதிரை.

69. ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. அவனி - நிலவுலகம். உரகம் - பாம்பு. ஊர்தி - வாகனம். உரகநாடு - பாதலம், நாகருலகம்.

70. சென்னி - சோழன். மாதவன் - உரோமச முனிவர். சிவ பெருமானுக்குத் திருவிழாச் செய்தற்குமுன் நகரில் காவற்றெய்வங்கட்கு விழா எடுத்தல் மரபு. சாத்தன் - ஐயனர். ஐங்கரக் கடவுள் - விநாயகர். இடபத்துவசம் - இடபக்கொடி.

71. பொற்கலை - பொன்னுடை. மகுடம் - முடி. நித்தில வடங்கள் - முத்து மாலைகள். கதிர் - கிரணம், ஒளி. மணி - இரத்தினம். மணிக் கங்கணம் - இரத்தின கடகம். கேயூரம் - தோள்வளை. நூபுரம் - காலணி. மொய்த்திடு பணி - நெருங்கிய ஆபரணம். முற்றிழை - திருத்தமாகச் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிந்த.

72. புரந்தரன் - இந்திரன். புரந்திடுவோர் - காப்போர். ஆதித்தர் - சூரியர். தானவர் - அரக்கர். பாரிடத் தலைவர் - பூதத் தலைவர்கள். பார்த்திபர் - அரசர்.

வம்பவிழ் கோதை யரம்பைய ருரக மடந்தையர் வயங்கெழு மாதர்
அம்புவி யிடத்துப் பேதைய ராதி யணியிழை வனிதைய ரெவரும்
பைம்பொ னீள்வீதி யிடத்தினும் புயல்கண் படுசிகை மண்டப மீதும்
கம்பயில் சிகரி மணிமதி லிடத்துங் கணங்கொடு நின்றுபோற் றிசைப்ப. 73

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

படகமொண் சங்கம் வீணை பகர்ந்திடு தகுணி பேரி
குடமுழா முரவ மொந்தை கொக்கரை தடாரி தாளம்
தடமுறு முருடு தக்கை சல்லரி குழல்யா ழாதி
திடனுறு கொண்ட லோடு திரைகடன் முழக்கஞ் செய்ய. 74

தருமமால் விடையோன் வந்தான் சம்பக வனேசன் வந்தான்
பெருநல முலையாள் மன்னும் பிறங்கெழி லிடத்தான் வந்தான்
இருணிற மிடற்றோன் வந்தா னேகநா யகன்வந் தானென்(று)
உருவளர் மலரியிற் செய்த வுபயசின் னங்க ளார்ப்ப. 75

கவினுறு பாடற் பண்பு காந்தளொண் கரத்திற் காட்டிச்
சுவையுற வதனப் போதில் துணைவிழிக் கயலு லாவத்
தவறில்சீர்ச் சதியி னேரத் தளிரடி பெயர்த்து வைத்துக்
குவிமுலை மலர்ப்பூங் கோதைக் கொம்பனார் நடனஞ் செய்ய. 76

எண்ணில்வெண் மதிகள் வெய்யோ ரெதிருற்ற தென்ன வெண்ணில்
வண்ணவெண் தரளத் தொங்கல் வயங்குபொற் குடைகள் சூழத்
தண்ணுடுத் திரளுற் றென்னத் தரளவொண் பந்த ரோங்க
விண்ணிற்புள் ளினஞ்சூழ்ந் தென்ன வியன்கொடிக் குலங்க ணீட. 77

---

73. வம்பு அவிழ் கோதை - வாசனை விரியும் மாலை. உரக மடந்தையர் - நாக கன்னிகள். வனிதையர் - மகளிர். புயல் கண்படு சிகை - மேகம் படிந்து உறங்கும் உச்சியையுடைய. கம் பயில் சிகரி - மேகங்கள் உலாவும் கோபுரம்.

74. இப்பாடலில் வாத்தியங்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. கொண்டல் - மேகம்.

75. தரும விடையோன், மால் விடையோன் எனத் தனித்தனி இயைக்க. உபய சின்னங்கள் - இரட்டைச் சின்னங்கள்.

76. காந்தள்மலர் போன்ற கரம். வதனமாகிய போது. வதனம் - முகம். போது - மலர். விழியாகிய கயல். தளிர்போன்ற அடி. கொம்பனார் - பூங்கொம்புபோலும் மகளிர்.

77. வெய்யோர் - பன்னிரு சூரியர். தரளத்தொங்கல் - முத்து மாலை. உடுத்திரள் - நட்சத்திரக் கூட்டம். புள் இனம் - பறவைக் கூட்டம்.

ஆவண மென்னும் வேலை யதிலெழு திரைக ளென்னக்
காவணக் கூந்த லார்கைக் கற்றைவெண் கவரி துள்ள
மாவணத் திலங்கவ் வேலை மலர்ந்திடு செம்பொற் கஞ்சப்
பூவண மெனத்தீ பங்கள் பொலிந்தவெண் ணிலாத வெங்கும். 78

தந்தியின் குழாமும் பாய்மாத் தானையு மருங்கு போத
மைந்தர்கள் முன்பு செல்ல வண்புகழ்த் தண்டி பின்னர்
வந்திட மறுகி னூடு மருவுபோ திரண்டும் வானோர்
சுந்தர மலரின் மாரி சொரிந்திடப் பவனி யுற்று. 79

மின்னுபொன் வரையி னேங்கு வெயின்மணித் தேரி னேறிப்
பன்னிடு புனர்த நாளிற் படரெழிற் பவனி வந்து
மன்னிடு பூச நாளின் மால்விடை யேறி நீடு
பொன்னியுற் றினிய தீர்த்தம் பொருந்திய வெவர்க்கு மீந்து. 80

காவிரித் தென்சா ரோங்குங் கவின்மணி மண்ட பத்தின்
மேவிவீற் றிருந்தன் னோர்க்கு வேண்டிய வரங்க ளீந்து
கோவிலுற் றினிது நீடு கொடியுகந் திறக்கிச் சூழ்ந்த
தேவர்கள் முதலி னோர்க்குத் திகழுறு விடையு மீந்து. 81

மாற்றருஞ் சிறப்பின் மிக்க மடங்கலா தனத்து மீது
விற்றிருந் தனன்மற் றிப்பால் வேந்தனுண் மகிழ்ந்து சென்று
போற்றினன் முனிவன் றன்னைப் புகழ்ந்தன னவனுக் காசி
சாற்றிவெண் ணீறு நெற்றி தரித்தன னுவகை கூர்ந்து. 82

---

78. ஆவணம் - கடைவீதி. வேலை - கடல். வெண் கவரி - வெண் சாமரம். திரைகளென்னக் கவரி துள்ள. மா வண்ணத்து இலங்கு அ வேலை. மா - கருமை. வண்ணம் - நிறம். கஞ்சப் பூ வண்ணம் என: கஞ்சம் - தாமரை.

79. தந்தி - யானை. பாய் மா - குதிரை. மருங்கு போத - பக்கத்திலே செல்ல. பவனி - திருவுலா.

80. மின்னு பொன்வரை - விளங்குகின்ற மேருமலை. இன் : ஐந்த னுருபு. புனர்த நாள் - புனர்பூச நட்சத்திரம்.

81. தென்சார் - தெற்குப்பக்கம் : தென்கரை என்க. கவின் - அழகு. இருந்து அன்னோர்க்கு. கொடி இறக்கி - முன் ஏற்றிய இடபக்கொடியைக் கீழேயிறக்குவித்து.

82. மடங்கல் ஆதனம் - சிங்காதனம்.

சென்னிதன் னிருக்கை யெய்தித் தேவர்மன் னவர்க ளியார்க்கும்
துன்னுறு வரிசை நல்கித் தொகுமவர் தன்னை யேவி
மன்னர னருளி னுலோர் மகப்பய ந் துவகை யெய்திப்
பின்வரும் வருட ந் தோறும் பெருவிழா நடத்தல் செய்து. 83

பிறங்குபல் காலம் வாழ்ந்து பின்புதன் னரசு தன்னை
மறங்கிளர் நெடுவேற் செங்கை மைந்தனுக் குதவித் தான்சென்(று)
அறங்கிளர் சிவலோ கத்தி லமர்ந்திடு புனிதன் செய்ய
நிறங்கிளர் பதார விந்த நிழலின்வீற் றிருந்தான் மன்னே. 84

உரோமசன் பின்னு மாங்கே வுயர்மரு திறையோன் பாத
சரோருகம் போற்றி நீடு தவம்புரிந் திருந்தா னிப்பால்
விரோதமில் லருந்த வத்து மிருகண்டு வென்னு மேலோன்
வரோதய னென்ன வோது மார்க்கண்டன் பேறு சொல்வாம். 85

உரோமசச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 472

---

83. சென்னி - வீரசோழன்.

எட்டாவது

# மார்க்கண்டேயச் சருக்கம்

---

[தவத்திற் சிறந்த மார்க்கண்டேயமுனிவர் திருக்கடவூரில் கோயில் கொண்டருளும் அமுதகடேசரைப் பூசித்துக் காலனைத் தடிந்திடச் செய்தார். என்றும் பதினாறுவயதென ஆயுளையும் பெற்றார். பின்பு பல தலங்களினும் சென்று வழிபாடாற்றினார். உமையொரு கூறுடைய திருமேனியைத் தரிசிக்க வேணவாவுற்றார். எங்கும் கண்டிலர், கவன்றார், தவம் புரிந்து இளைப்புற்றார். திருவிடைமருதூரை அடைந்தார். காவிரியிலே மூழ்கினார்; மருதநாயகர் மலரடிகளை மனத்தில் வைத்துப் பன்னாள் தவங் கிடந்தார். மார்க்கண்டேயருடைய தவத்தினுக்கிரங்கிய மருதவனேசர் அவர் விருப்பின்படியே உமையொரு கூறுடைய தமது (அர்த்தநாரீசுர) திருக்கோலத்துடன் காட்சிகொடுத்தருளினர்.

ஒருவடிவத்திலே ஒருபுறத்துத் தமது பாதியும், ஒருபுறத்து உமையுருப்பாதியுமாக ஒளிர்ந்தமை கண்டார். அரனுருப்பாதியில் வெண்ணீற்றொளி, பிறையணிந்தசடை, நீலமிடறு, மார்பில் பாம்பாபரணம், முப்புரிநூல், புலித்தோலாடை, மழுப்படைதரித்த கரம், சிலம்பு ஒளிரும் மலர்த்தாள், வீரக்கழல் முதலிய விளங்கின. மற்றைப் பாதியாகிய உமை வடிவத்திலே பச்சை வண்ணம், மலர்க்கூந்தல், குங்குமச் சாந்தணிந்த கழுத்து, கச்சணிந்த நகில்கள், பட்டாடை அணிந்த நுண்ணிடை, தொடிக்கரம், மணிகள்பதித்த பாடகம் சதங்கையணிந்த திருவடி முதலியன ஒளிர்ந்தன. இவ்வாறு முறையே வலப்பாதியும் இடப்பாதியும் அமைந்த திருமேனியைக் கண்குளிரக்கண்டு தரிசித்தார் மார்க்கண்டேயமுனிவர். பரவசமடைந்தார், உள்ளம் உருகினார், கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். கைகளும் தலைமீதேறின. பின்னர்த் தெளிவு பெற்றார்; துதித்தார்.

மார்க்கண்டேயருடைய துதிகளைக்கேட்ட மருதநாயகர், முனிவர்கள் தலைவ! உன்தவமும் பத்தியும் துதியும் கண்டு மகிழ்ந்தோம். நீ கருதிய வரம் கேள் என அருளினர். மார்க்கண்டேயர் மகிழ்ந்து சுவாமீ! தேவரீர் அம்மையாரோடு வெளிப்பட்டு நின்று அருள்செய்தீர். இதனைவிட யான் வேண்டும் வரம் யாதுளது? இத்தலத்திலே வந்து உமது திருவடிகளை அன்புடன் வணங்கிப் போற்றுவோருக்கு வேண்டிய வரங்களையெல்லாம்



மார்க்கண்டேயருக்கு மாதொருபாதியனைக் காட்சியளித்தல்

கொடுத்து ஆண்டிடவேண்டும். அடியனேன் உம்மிடத்து வைத்த அன்பு என்றென்றும் மாருதிருக்கவும், முடிவில் உம்முடைய திருவடியில் வந்து பொருந்தி இன்புறவும் அருள்செய்க. உமது பணிவிடைகள் செய்வோரும், நின்னடியார்கட்கு வேண்டிய உதவிசெய்வோரும் அழிவில்லாத நிலைப்பதம் பெற அருளுக என வேண்டினர். இறைவரும் அவ்வாறுகுக என்றருளினர். மார்க்கண்டேயரும் பலநாள் பூசித்திருந்தார்.]

கலிநிலைத்துறை

மாத வப்பெரு வாழ்வுறு மார்க்கண்ட முனிவன்
வேத நாதமுந் திரைகடன் முழக்கமும் விரவும்
கோதில் சீர்க்கட வூருறை யிறையவன் குளிர்பொற்
பாத பங்கயங் கூற்றின்மேற் படப்புரிந் ததற்பின். 1

வேலை சூழ்புவி யிடைப்பல தலங்களின் மேவிப்
பால லோசன னுமைக்கொரு பாகமுன் னளித்த
கோல மின்புறக் காணிய வுளத்திடைக் குறித்துச்
சீல மாதவம் பலபகல் செய்துசெய் திளைத்தான். 2

ஒருத லத்துமத் திறனெதி ருற்றிடக் காணுன்
கருது வண்புக ழிடைமரு திடத்தினிற் கலந்து
பொருத ரங்கமொண் மணியெறி பொன்னிநீர் படிந்து
மருத நாயக னடிமலர் வணங்கிநின் றேத்தி. 3

பரிவி னேடொரு சிறையிருந் தெதிர்வரப் பன்னுள்
அரிய மாதவ மியற்றின னவனும்வந் தன்பர்க்(கு)
உரிய நாயக னுமையுடன் கருணையுற் றும்பர்
விரிகொ ணுண்மலர் சொரிதர மேவிமுன் னின்றுன். 4

---

1. வேதநாதம் - வேதவொலி. கடவூர்: மாயூரமிருந்து தரங்கம்பாடி செல்லும் இருப்புப்பாதையில் உள்ளது. இது புகைவண்டி நிலையம். சுவாமி அமுதலிங்கேசர்; அம்மையார் அபிராமியம்மை. தேவாரம் பெற்ற தலம். பாத பங்கயம் - திருவடித் தாமரை. கூற்று - இயமன்.

2. வேலை சூழ் புவி - கடலால் சூழப்பெற்ற நிலவுலகு. பால லோசனன் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான்: பாலம் - நெற்றி: லோசனம் - கண். காணிய - காணும்பொருட்டு: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். குறித்து - கருதி. செய்து இளைத்தான்.

3. தரங்கம் - அலைகள். மணி - மாணிக்கம் முத்து முதலிய கற்கள்.

4. பரிவு - அன்பு. ஒரு சிறை - ஒரு பக்கம். உம்பர் - தேவர்கள். விரி கொள் நாள் மலர். நாயகன் உமையுடன் முன்நின்றுன்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஒருவடி வதனி லொருபுறத் தரன்மற் றெருபுற முயரெழி லுமையாள்
மருவுதன் புறநீற் றணியுறு தவள மலர்ச்சடை நீலவொண் மிடறு
பரவெழின் மார்பிற் பணியணி பூணூல் பகர்புலித் தோலுடைப் பரசு
விரவுறு தடக்கைச் சிலம்புறு மலர்த்தாள் வீரவொண் மணிவட மதின்மேல். 5

நவிலுறு முமைதன் வடிவெழிற் பசுமை நாண்மலர் நிறைதருங் கூந்தல்
கவினுறு முயர்குங் குமமொளிர் மிடறு கச்சொடு கதிர்மணிக் கவண்சூழ் [கை
குவிமுலை வளர்மார் பிலங்கெழிற் பட்டுக் குலவுநுண் ணிடைமணித் தொடிக்
திவளொளி மணிப்பொற் பாடகஞ் சதங்கை திகழ்ந்திடு சீறடிப் போது. 6

என்னவோ திடுமின் னிவைவல னிடமா விலங்கிடக் கணுதிபர் சூழ
முன்னர்நின் றிடலும் கண்டுகந் தெழுந்து முளரிநாண் மலர்ப்பத மிறைஞ்சி
மன்னுள முருகிப் பரவச மடைய மலர்க்கணீர் சொரிதரக் கரங்கள்
சென்னிமேற் குவித்து நின்றனன் பின்னர் தெளிவுபெற் றிங்ஙன ந் துதிக்கும்.

நீலமார் மிடற்றாய் பவளமால் வடிவி னீறணி நிருத்தனே போற்றி
வேலினை நிகர்க்கும் விழியுமை யொருபால் விளங்கவந் தெளியனேன் காணப்
பாலுமின் சுவையும் வேறுவே றிருக்கும் பரிசென நின்றனை போற்றி
ஏலுமெய் யன்பர்க் கெளியனே பொழில்சூ ழிடைமரு திறைவனே போற்றி. 8

---

5. தவளம் - வெண்மை. மிடறு - கழுத்து. பணி அணி - பாம்பாபரணம். இப்பாடல் சிவபெருமான் பாதி வடிவநிலை கூறுகிறது. ஒரு வடிவதனில் ஒருபுறத்து அரன், ஒருபுறம் உயர் எழில் உமையாள்: ''செங்கண் அரவும் பைங்கண் ஆமையும் கேழற்கோடும் வீழ்திரள் அக்கும், நுடங்கு நூலும் இடங்கொண்டு புனைந்து, தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன, ஒளியுடன் திகழும் ஒருபால் ஆகம்; வாரும் வடமும் ஏர்பெறப் புனைந்து, செஞ்சாந் தணிந்து குங்குமம் எழுதிப், பொற்றா மரையின் முற்றா முகிழென, உலகே ழீன்றும் நிலையில் தளரா, முலையுடன் பொலியும் ஒருபால் ஆகம்'' (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை: செய்யுள் 1: வரி 24–33). மற்றும், மும்மணிக்கோவை முதற்செய்யுள் முழுவதும் மாதொரு கூறனை மனத்திடை வைத்துத் தியானித்தற்குரிய தம் அநுபவத்தைப் பட்டினத்தடிகள் அருளிச்செய்த அருமை காண்க.

6. குங்குமம் - குங்குமச் சாந்து. திவள் ஒளி - விளங்கும் ஒளி: விட்டுவிட்டு விளங்கும் ஒளி என்க. 'விலகி வில்லுமிழ் மணி' என்றார் பிறரும். பாடகம், சதங்கை என்பன காலணிகள்.

8. பாலும் அதன் சுவையும் வேறற உள்ளன, அவை 'வேறு வேறு இருக்கும் பரிசு' என்றது இல்பொருளுவமை. பாலும் சுவையும் அத்துவிதக் கலப்பு. பரிசு - தன்மை.

அன்றுநா னுன்பா லடைக்கலம் புகுத வடற்படை கொண்டெனைப் பிடிப்பான்
கன்றிவந் திடுவெங் காலனைக் கறுவு கொண்டுதைத் துயிர்தனைக் குடித்தாய்
இன்றுமென் கருத்து முடிந்திட வுமையா ளிலங்கொரு புறத்துட னின்றாய்
என்றுமென் றனைக்காத் தருள்வதுன் னியல்பே யிடைமரு துறைபரஞ் சுடரே.

எனத்துதித் திடலு மெதிருறு மிறைவ னியம்புவான் முனிவர்க டலைவ
வினைத்துய ரகற்று முனதருந் தவமு மிகுந்தநின் பத்தியுந் துதியும்
கனக்கநா முளத்தின் மகிழ்ச்சிசெய் தனநீ கருதிய வரங்கள்கே ளென்றான்
சினக்களை களைந்து தவப்பயிர் வளர்க்குந் திறலினு னின்னவை பகரும். 10

நிலவுறு மிமையோர் தலைவரு முனைர நின்னருு டன்னெடு நீயும்
இலகிட வெளிநின் றென்னையாண் டனைமற் றினிவர மிதனில்வே றென்னே
குலவுறு மினைய தலத்தில்வந் துன்றன் குரைகழற் பதமலர் பணிவோர்க்(கு)
அலகிலெவ் வரமு மளித்தருள் புரிந்தீண் டவர்களை யாண்டிட வேண்டும்.11

கொடியதிக் கயங்க ளிலைப்பிறழ்ந் திடினுங் குளிர்கட லந்தரத் துறினும்
அடியனே னின்பாற் சிறிதுவைத் திருக்கு மன்பினிற் குறைவுறா தருளிக்
கடிகமழ் கடுக்கைத் தொடைபுனை வேணிக் கண்ணுதற் பராபர வெனக்கு
முடிவினி லுன்றன் மறைச்சிலம் பரற்று முண்டகப் பதத்துணை தருவாய். 12

நின்பணி விடைகள் புரிந்துளோ ரடிசில் நிதியொடு கலைமுத லியநின்
அன்பர்கட் கினைய தலத்திடை யளித்தோ ரழிவிலா நிலைப்பத மருவி
இன்பமுற் றிடவும் புரிதியென் றிசைத்தா னிசைத்திடு வரமெலா முதவி
மின்பயில் வேணி வரதனந் நிலையே விமலைதன் னெடுமகிழ்ந் திருந்தான்.13

---

9. அடற்படை - வலிய ஆயுதம்: என்றது சூலப்படையை. கன்றி - கோபித்து. கறுவு கொண்டு - சினங்கொண்டு. உமையாள் இலங்கு ஒரு புறத்துடன்.

10. உனது அரும் தவமும். சினம் - கோபம். சினக்களை - சினமாகிய களை: தவப்பயிர் - தவமாகிய பயிர்: பண்புத்தொகைகள்.

11. அருள் தன்னொடு - திருவருட்சத்தியோடு: ''அருளது சத்தியாகும் அரன் தனக்கு'' (சித்தியார்). அலகு இல் எ வரமும்.

12. திக்கயங்கள் - திசைக்களிறுகள். அந்தரத்து - ஆகாயத்தின்கண். கடி - வாசனை. கடுக்கைத் தொடை - கொன்றை மலர் மாலை. வேணி - சடை. மறைச்சிலம்பு - வேதங்களாகிய சிலம்பு. அரற்றும் - ஒலிக்கும். முண்டகப் பதம் - தாமரைமலர்போலும் திருவடி. முண்டகம் - தாமரை.

13. அடிசில் - உணவு, சோறு. நிதி - பொன். கலை - ஆடை. வரதன் அ நிலையே: வரதன் - வரங்களைக் கொடுப்பவன்.

விற்றிருந் தருளும் பிறைமதிச் சடில விமலனைப் பெருநல முலையைப்
போற்றிவந் தனஞ்செய் தனுதின மினிது பூசனை புரிந்துபல் காலம்
மாற்றருங் காதல் கொண்டுமார்க் கண்ட மாதவன் பின்னுமாங் கிருந்தான்
மேற்றனிச் செங்கோற் சுகீர்த்திமன் னவன்றன் வியனுறு சரிதைகூ றிடுவாம்.

மார்க்கண்டேயச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 486

---

14. சடிலம் - சடை.

ஒன்பதாவது

# சுகீர்த்திமன் சருக்கம்

[சுகிர்த்தி என்பவன் அரசர்களுட்சிறந்தவன். புலிக்கொடியுடையான், மன்னவர்திலகன், கச்சிப்பதியினன், காமன்போன்ற அழகன், இரவலரைப் போற்றும் புரவலன், கலைகளில் வல்லவன், நீதி தவறாதவன். சிவபெரு மானையும், சிவனடியார்களையும் சொல்லும் பொருளுமெனக் கொண்டு வழிபடும் செல்வத்தோன். பகைவரை வெல்லும் ஒப்பற்ற வீரன். துன்புறு வோரைக் காணின் பெரிதும் இரங்கித் துன்பத்தைத் துடைக்கும் அருளா ளன். பொல்லாதவர்களைத் தண்டித்துத் திருத்தி நல்வழியில் ஒழுகச் செய்பவன். தருமத்தைச் செழிக்கச் செய்வோன். இத்தகைய மன்னனுக்கு மைந்தன் இல்லாக்குறையொன்றே மனத்தை வாட்டியது. புத்திரப்பேறு கருதித் தான தருமங்கள் பல செய்தான். அந்தணர்பூசை ஆற்றினன், விரதங்கள்பல அநுட்டித்தான், பல தீர்த்தங்களிலும் சென்று சென்று மூழ்கினன். சாந்திகள் பலவற்றையும் செய்துவந்தான், மகப்பேறின்றி மனம்மாழ்கினன். அகத்தியரை வழிபட்டுக் குறையைச் சொல்லின் அவர் அருளால் மகப்பேறுண்டாம் என முனிவர் பலர் அவனுக்குக் கூறினர். திருவெண்காட்டிலிருந்த செந்தமிழ் முனிவரைச் சரணடைந்தான். அகத் தியர் அரசனுக்கு ஆசிகள்பல மொழிந்தார். மன்னவன் குறையை அறிந் தார். அரசனே! அஞ்சற்க என அபயம் தந்தார்.

'நீ திருவிடைமருதூர் என்னும் தலத்தை அடைந்து சிவபெருமானை வழிபாடாற்றுக. பிதிரர்களுக்குச் சிரார்த்தம் செய்க' என்று அரசனுக்குக் கட்டளையிட்டருளினர் அகத்தியமுனிவர். கேட்ட அரசன், சிவபெருமானை வழிபட்டால் புத்திரப்பேறுண்டாகுமே; பிதிரர்கட்குச் சிரார்த்தம் செய்வா னேன்? என்றான். அகத்தியமுனிவர், மீட்டும் அரசனைநோக்கி அரசனே! ஏதாவதொரு துர்மரணமடைந்து பிசாசபதத்திலிருப்போர் நரகிலே துன் புறுவோர் பசியால் வருந்திப் பூமியில் தம்வருக்கத்தோருக்கு 'மகப்பேறில் லாதொழிக' எனச்சபிப்பார்கள். அவ்வாறு துன்புற்று வருந்துவோருக்குத் தலைவர் பிதிரர்களேயாவார். அவரைப்பூசித்தால் துன்புறுவோர் பசியைத் தீர்த்து இவர்களுக்கும் புத்திரப்பேறு தருவர். இவ்வதிகாரத்தைச் சிவ பெருமானே பிதிரர்களுக்கு அருளினர். தருமஞ்செய்து இறந்தோர் அப் பயனால் சுவர்க்கம் அடைவர். அவர்கட்கு முதல்வர் தேவபிதிரர். முன்பு

சொன்னோருக்குத் தலைவர் பிரேதபிதிரராவார். இப்பிதிரர்கட்குப் பூசை யாற்றுதலும், சூரியபூசை சந்திரபூசைகளும் இறைவரைச் சாரும். சந்திரன் அம்பிகையின் அம்சம்; சூரியன் சிவபெருமான் அம்சம். ஆகலின், பிதிரர் பூசை புறம்பன்ரும். சிவபெருமான் பூசனையை ஏற்றுக் கொண்டருளும் இடங்கள் பல. அவைகளுள் பிதிரர்களும் ஓரிடமாம். பிதிரர்கள் மகப்பேறு அருளிச்செய்வதும் சிவபெருமான் அருளாலேதான். பிதிரர் பூசனை மற்றத் தலங்களில் இயற்றுதலினும் இடைமருதிலே சென்று இயற்றுதல் மிக்க பயனும். அப்பயனும் விரைவிலெய்தும் என அருளிச்செய்தனர்.

இதற்கு ஒரு வரலாறும் உண்டு; அதனைச் சொல்லுகின்ரும்; நீ கேட்பாயாக. இடைமருதிலே எழுந்தருளியுள்ள மகாலிங்கேசரை வழிபா டாற்றக் காலந்தோறும் செல்லுவேன். சிவபெருமானும் அருள்செய்யும் பொருட்டு என் வரவை எதிர்நோக்கியிருந்தருளுவர். அப்படிச் செல்லும் போது ஒருநாட்பகலில் வழியிலே ஆகாயத்திலே அத்தா! ஐயா!! ஐயோ!!! அபயம்! அபயம்!! எனக் கதறும் ஒலி எழுந்தது. அவ்வொலியைக்கேட்டுச் ‘சிவ சிவ’ என்றேன். ஒருநொடிப்பொழுதிலே என்முன்னே பசாசவடிவம் பெற்ரேர் பலர் தோன்றினர். சிவந்த மயிரினர், குழிந்த கண்ணினர், பிளந்த வாயினர், நெடுங்கழுத்தினர், குருதிபாயும் உடம்பினர், கவலைமிக்க நெஞ்சினர், பாசத்தாற் கட்டுண்டவர், வெட்டுண்டவர், ஆருகக் கண்ணீர் பெருகுபவர் ஆகிய அவர்கள் என்னைத் துதித்து நின்றனர்.

அவர்களை நோக்கி நீங்கள் யார்? என்ன பாவம் செய்தீர்கள்? என வினவினேன். அப்பசாசவடிவம் பெற்ரேர் பலரும் தாம் தாம் முன்செய்த பாவங்களைமொழிந்தனர். அப்பாவத்துக்கு இயமன் கட்டளைப்படி தூதுவர் தண்டனைகள்செய்து இயமன்முன் எங்களைக் கொண்டுபோய்விட்டார்கள். இயமன்விசாரித்து, பலவகைநரகங்களிலும் செலுத்தித் துன்புறுத்தும்படி எங்களைக் கிங்கரர்பால் ஒப்புவித்தான். அந்த நரகவேதனைகள் எங்களால் சொல்லமுடியாதன. நினைந்தாலும் நெஞ்சம் வேகும். எங்களுக்கு விதித்த நரகங்களில் எங்களைக் கிடத்தித் தண்டனைகளையெல்லாம் கொடுத்து ஒரு நொடியில் உலகம் முழுதும் சுற்றித்திரிந்து எங்களிடம் அவர் வருவர். வந்து பின்னரும் என்ன துன்பம் செய்வார்களோ என்று ஏங்கிக் கதறிக் கொண்டிருந்தோம். நீங்கள் சொல்லிய ‘சிவ சிவ’ என்ற சத்தத்தைக்கேட்ட கிங்கரர் எங்களை விட்டிட்டு அகன்றனர். உடனே நாங்கள் தப்பிப்பிழைத்து இங்கு உமது அருளால் வந்தோம். இனி அவர்கள் தொடர்ந்து இவ்விடத் துக்கும் வந்து எங்களைப் பிடித்து வருத்தாதவண்ணம் அருள்செய்வீராக எனப் பிரார்த்தித்தனர்.

நான் அவர்களை அஞ்சாதிர்கள் எனக்கூறி, திருவிடைமருதூருக்கு அழைத்துச் சென்றேன். பொன்னிநீரில் மூழ்குவித்தேன். சிவபெருமானை வணங்கி வழிபடச்செய்தேன். அவரவர் கோத்திரங்களைச் சொல்லிப் பிதிரர்களுக்குத் திலதர்ப்பணமும் செய்வித்தேன். அப்போதே அலகையுருப் பெற்றிருந்தார் அனைவரும் தேவவடிவம் பெற்றனர். விமானத்திலேறிச் சுவர்க்கலோகம் புக்கனர். ஆகலின், அந்தத்தலத்தின் மகிமையும், பிதிரர் பூசனையால் பெறும்பேறும் உணர்ந்தாயன்றோ! இவ்வாறு பலர் அந்தத் தலத்தையடைந்து பெற்ற பேறுகள் அளவில்லாதன. நீயும் அத்தலத்தையடைந்து சிவபெருமானைப் பூசித்து, பிதிரர்கட்கும் சிரார்த்தம் முதலியன செய்து வழிபாடாற்றின் புத்திரன் தோன்றுவன். அதன்பின் கோயில் திருப்பணி முதலிவற்றைச் செய்வாயாக என்றருளினர்.

அரசன் அகத்தியமுனிவரை வணங்கி விடைபெற்றான். இடைமருதை அடைந்தான், பொன்னியிற்படிந்தான், சோதிமகாலிங்கத்தை வழிபட்டான், பிதிர்க்கள் பூசையும் விதிப்படி செய்தான். அப்பயனால் புதல்வன் ஒருவன் தோன்றினன். அரசன் திருப்பணிகள் பல செய்தான். விழாச்செய்தான், தன் புதல்வனிடம் அரசை ஒப்புவித்தான். சிவபதம் அடைந்தான்.]

கலிநிலைத்துறை

மந்த மாருதஞ் சூழ்பொழி லிடத்துறு மலர்கள்
சிந்து தேறலின் சிறுதுளிக் குலங்கொடு சிதறி
நந்த லில்லெழின் மாடவீ திகளெலா நறுந்தேன்
கந்த மோங்கிடு முயர்மதிற் கச்சியி லுறைவோன். 1

வன்ற னிப்புலிக் கொடியினன் மன்னவர் திலகன்
துன்று தெண்டிரைக் கடல்புரை சேனையன் சுகீர்த்தி
என்று ரைத்திடு பெயரினு னிரவலர்க் கென்ன
மன்ற தன்பொரு ளியாவையு மதித்துத விடுவோன். 2

1. மந்த மாருதம் - இளந்தென்றல். பொழில் - சோலை. தேறல் - தேன். நந்தல் இல் - கெடுதலில்லாத. கந்தம் - நறுமணம். கச்சி - காஞ்சீபுரம்.

2. புலிக் கொடி சோழ அரசர்க்குரியது. திலகன் - நெற்றிப் பொட்டினை ஒத்தவன். கடல் புரை - கடலையொத்த. இரவலர் - யாசகர்.

காம னேயெனு மெழிலினன் கலையெலா முணர்ந்தோன்
நாம வேற்கையான் மகளிர்தந் நயனவண் டினமும்
தாம மார்தரு வரிகளும் தயங்கிடு புயத்தோன்
மாம திக்குடை நிழலினில் வையகம் புரப்போன். 3

அல்லி னேருறு கண்டனு மவனடி யவரும்
சொல்லு மன்னதன் பொருளுமென் றிறைஞ்சிடு தூயோன்
வல்ல வஞ்சகப் பகைவர்தங் களுக்கொரு மறவோன்
நல்ல வர்க்கவர் புதல்வரி னெழுகுறு நண்பன். 4

புன்க ணுற்றிடி னெளியவர் புவியிடைப் பொருந்து
தன்க ணிற்கொடு நோயுறு மவரெனத் தளரும்
வன்க ணுளரைத் தண்டனை மருவுவித் தவர்மேல்
நன்க ணுற்றிட வியற்றுவோ னல்லறம் வளர்ப்போன். 5

இந்த நீர்மையி னின்பமுற் றிருந்திடு நாளில்
மைந்த னின்மையால் சிறியதோர் மனக்குறை யெய்தி
அந்த ணுளர்தம் பூசனை விரதங்க ளாற்றி
முந்து தீர்த்தங்கள் படிந்துசாந் திகள்பல முயன்றுன். 6

இனைய வாற்றியு மகவுதித் திடாமைகண் டிரங்கி
அனைய நீடவை மருவிடு மவனுயிர் போல்வார்
புனையு முத்தமிழ் முனிவரன் பொன்னடி வணங்கின்
தனைய னீவனின் றேல்வழி சாற்றுவ னென்றுர். 7

---

3. நாமவேல் - அச்சத்தைத் தரும் வேற்படை. நயன வண்டு - கண்களாகிய வண்டு: பண்புத்தொகை. தாமம் - மாலை. வரி - ரேகைகள். வையகம் - நிலவுலகம்.

4. அல்லின் நேர் உறு கண்டன். அல் - இருட்டு. இறைவனும் அவனடியாரும் சொல்லும் பொருளும் என. வல்ல - வலிய. மறவோன் - வீரன். புதல்வரின்: இன்: ஐந்தனுருபு உவமைப்பொருள்.

5. புன்கண் - துன்பம். கண்ணில் கொடு நோய் உறும் அவர். கண்ணில்=கணில்: தொகுத்தல். வன்கணுளர் - வன்கண்மையுடையார்: துட்டர். அவர்மேல் நன்கண் உற்றிட. நன்கண் - இன்பம்.

6. நீர்மையின் - தன்மையின். படிந்து - முழுகி. சாந்திகள் - வினைகள் சாந்தமுறுதற்குரிய செயல்கள்.

7. மகவு உதித்திடாமை கண்டு. நீடு அவை மருவிடும்: அவை - சபை. முத்தமிழ் முனிவரன் - அகத்திய முனிவர். தனையன் - புத்திரன்.

சந்த வெண்குடைச் சுகிர்த்தியுந் தகுவதா மிஃதென்(று)
அந்த மாதவ னெங்குளா னெனவினி தாய்ந்து
கந்த நெய்தலொண் மகளிர்கண் காட்டுவெண் காட்டில்
வந்தம் மாதவ முனிவரன் மலர்ப்பதம் பணிந்தான். 8

மிக்க தென்வரைச் சிகாமணி யாகிய மேலோன்
தக்க வாசிக ளொடுபல முகமனுஞ் சாற்றி
மக்கள் மற்றுளார் நிகழ்ச்சியும் வினவலும் வளவன்
விக்கி னுனென நின்றனன் விழுமமீ தூர. 9

என்ன கத்திடைத் துயருனக் கென்றனன் முனிவன்
மன்ன னீரெனக் களவிலா வளங்கள்மற் றளித்தீர்
அன்ன வற்றினிற் பெருமகிழ் வெய்தின னவற்றோர்
இன்ன லுற்றனன் புதல்வர்க ளீந்திடா மையினுல். 10

அலகில் புண்ணிய தீர்த்தங்க ளாடினே னுடி
அலகி லந்தணர்க் கிசைவுறு தானமு மளித்தேன்
அலகி னேன்புக ளாற்றினேன் தவம்பல விழைத்தேன்
அலகில் சாந்திகள் செய்தன னுங்கும தருளால். 11

சிந்தி டப்பெரு தளகையோன் செல்வமு மதவேள்
அந்த மும்விதி மகிமையு மனந்தனீ டறிவும்
இந்தி ரன்பெறு போகமு மெய்திவாழ்ந் திடினும்
மைந்த ரின்றெனின் மற்றதோர் வாழ்வெனப் படுமோ. 12

கருணை யுற்றினி யேனுமோர் காதல னுதவி
இருமை தன்னினு மெளியனே னின்பமுற் றிடநீர்
புரிய வேண்டுமென் றுரைத்தனன் பொதியவெற் புறைவோன்
வெருவ ரேலுமை யிடத்தினே னருண்மென விளம்பும். 13

---

8. சந்தம் - அழகு. கந்தம் - வாசனை. வந்து அ மாதவ முனிவரன்.

9. தென் வரை - தென் திக்கில் உள்ள பொதியில் மலை. முகமன் - உபசாரமொழி. விழுமம் - துன்பம்.

11. அலகு இல் - எண்ணில்லாத. நோன்பு - விரதம். இழைத்தேன் - செய்தேன்.

12. அளகையோன் - குபேரன். மதவேள் - மன்மதன். விதி - பிரம தேவர். அனந்தன் - ஆதிசேடன். மற்றது ஓர் வாழ்வு எனப்படுமோ?

13. காதலன் - புத்திரன். வெருவரேல் - அஞ்சற்க. அருண்ம் என விளம்பும் : அருண்ம் - அருளும்.

செந்நெ லோங்கெழிற் கன்னலிற் செறிந்திடு மருதம்
துன்னு வேலியிற் சூழ்கமு கிலங்கிடை மருதம்
மன்னு செஞ்சடைச் சோதிபால் வயங்குமோர் மருதம்
அன்ன திற்படிந் திசைத்திடு மளிக்குல மருதம். 14

கருமை யுற்றிடஞ் சிறைவரிக் கணமிசைக் குறிஞ்சி
பரவு வானிடைச் செலவுறு பருவரைக் குறிஞ்சி
மருவு தேன்சொலார் கூந்தலை மானநன் குறிஞ்சி
உரவு தண்கடன் முகிற்குல முலவுமாங் குறிஞ்சி. 15

சொற்றி டாயிடைத் தூயபொன் னிழையினு னெய்தல்
உற்ற மென்கலை மாதரா ரொளிகொள்கண் ணெய்தல்
பற்று மாடவர் தங்கண்மேற் பார்வையி னெய்தல்
கற்ற தாமுல குயிர்கண்மேற் கணைமத னெய்தல். 16

நலங்கொ ளிந்திரன் கலைமக ணுயகன் முல்லை
நிலங்கொண் மாதவன் போற்றுமந் நெடும்பதி முல்லை
வலங்கொள் வேற்றடங் கட்பிறை வாணுதன் முல்லை
இலங்கு மூரலா ரிடைக்குடி யிருந்திடு முல்லை. 17

---

14. கன்னலின் - கரும்புபோல. கமுகு இலங்கு இடைமருதம். அளி - வண்டு. மருதம் - மருதநிலம், மருதமரம், மருதப்பண்.

15. உற்றிடு அம் சிறை. இசைக் குறிஞ்சி - குறிஞ்சிப் பண். வரைக் குறிஞ்சி - மலைகளையுடைய குறிஞ்சிநிலம். தேன் - இனிமை. மான நன்கு உறிஞ்சி. கூந்தலை மான முகிற்குலம் உலாவும். குறிஞ்சி - குறிஞ்சி மரம்.

16. சொற்றிடு ஆயிடை. இழை - நூல். நெய்தலுற்ற - நெசவு செய்த. மென்கலை - மெல்லியஆடை. கண் நெய்தல்: நெய்தல் - கருவிளை. பார்வையின் எய்தல். மதன் எய்தல். கணை - அம்பு.

17. நலம் - போகம். இந்திரபோகம் சிறத்தற்குக் காரணம்: அமுதம், உச்சைசிரவம், காமதேனு, நவநிதி, இந்திராணி, அரமகளிர், அமராவதி, அயிராவதம், சுதன்மை, கற்பகமாலை, பஞ்சதருக்கள், சயந்தமண்டபம், வசந்தமாளிகை, மேகவாகனம், சயந்தகுமாரன், சிந்தாமணி என்பன உடைமையால். பதுமநிதி சங்கநிதி எனினுமாம். முல்லை நிலம் - காடும் காடு சார்ந்த இடமும். பதி முல்லை - தலமாகிய வடதிருமுல்லைவாயில்: ''தொண்டைமான் கடக்களிற்றினை முல்லையாற் றொடக்கி, அண்டர் தம்பிரான் வெளிப்படக் காட்சிதந்தருள்சீர், கொண்டவான் பதி'' (காஞ்சிப் புராணம்). வலம் - வெற்றி. தடங்கண்களையும் நுதலையும் மூரலையும் உடையார். முல்லை - முல்லையரும்பு. மூரல் - பற்கள். இடைக்குடி - ஆயர்குலம். முல்லை - முல்லைநிலம்.

ஏகி யங்குநீ விரைவினி லிசைத்திடும் பாலை
மேக மென்மொழிக் கூந்தலாள் விளங்கொரு பாலை
பாக முற்றிடு பரமனைப் பணிந்திடப் பாலை
யாகி லுன்மனத் துயரெலா மடைந்திடும் பாலை. 18

முன்ப னிக்கதிர் சூடிதன் பூசனை முடித்துத்
தென்பு லத்தவர் பூசையாஞ் சிராத்தமு மியற்றில்
இன்ப மைந்தனுற் றிடுமென்று னிறைவனே யெவையும்
அன்பி னீவனே பிதிர்க்களென் னென்றன னரசன். 19

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பகரொருகா ரணத்தாற்றுன் மரண மெய்திப்
பசாசபதத் திருந்திடுவோர் நரகி னுற்ருேர்
இகலுறுவெம் பசியதனி லுணவி லாமல்
இடருறுங்காற் புவியிடைத்தம் வருக்கத் தோர்க்கு
மகவிலையா குகவென்னச் சபித்தல் செய்வார்
மற்றவர்தங் களுக்கிறைவர் பிதிர்க்க ளாகும்
புகழவரைப் பூசித்தா லன்னோர் தம்மைப்
பொருபசிதீர்த் திவர்களுக்கும் புதல்வ ரீவர். 20

---

18. அங்கு நீ விரைவினில் ஏகி. பால் ஐ மென் மொழி - பால்போலும் அழகிய இனிய மென்மொழி. மேகம் என் கூந்தலாள். மொழியினையும் கூந்தலையும் உடையாள் என்க. விளங்கு ஒருபாலை: என்றது பாலாம் பிகையை. பணிந்திடப்பாலை = பணிந்திடற்பாலை - பணிந்திடக்கடவாய். பாலை அடைந்திடும் - பிரிவையுற்றிடும்: நீங்கும் என்க. பாலைநிலத்து உரிப்பொருள் பிரிதல்.

இவ்வைந்து செய்யுட்களும் மருதம் குறிஞ்சி நெய்தல் முல்லை பாலை என இறுதிமடக்காய் அமைந்தமை காண்க.

19. பனிக்கதிர் சூடி-குளிர்ந்த கிரணங்களையுடைய பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமான். கதிர்: ஆகுபெயர். சூடி: பெயர். தென் புலத்தவர் - பிதிரர்:'பிதிரராவார் படைப்புக்காலத்து அயனுற் படைக்கப் பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கு இடம் தென்திசை ஆதலின், தென் புலத்தார் என்ருர்' (குறள் 43) என உரை விளக்கம் காட்டினர் பரிமே லழகர். சிரத்தையோடு செய்யத் தக்கது யாது? அது சிரார்த்தம் எனப் படும். எனவே, பிதிரர்கடன் சிரத்தையோடு செய்யத்தக்கதென்க. சிவ பூசை செய்தபின்னரே பிதிர்க்கடன் செய்யத்தகும் என்ற விதியினையும் அறிக.

20. துன் மரணம் - தகாதவகையில் சாதல்: தூக்கிட்டுக்கொள்ளல் போன்றன. இகல் உறு வெம் பசி - மிக்க கொடிய பசி. மகவு இ(ல்)லை

இந்தவகை யதிகார மிவர்கட் கீசன்
ஈந்ததுவே யிவர்பிரேத பிதிர்க்க ளாகும்
முந்தறஞ்செய் திறந்துசுர ராயி னோர்க்கு
முதல்வர்சில ரவர்தேவ பிதிர்க்க ளாகும்
வந்தமுறை யிவ்விருவ ரிடத்திற் பூசை
வளரிரவி பூசையொடு மதியின் பூசை
சந்திரனம் பிகையிரவி யீச னுகும்
சாற்றிதனுற் பிதிர்ப்பூசை புறம்பன் ருமால். 21

பரன்பூசை கொள்ளுமிட மநேக மாகும்
பகரவற்றுட் பிதிர்க்களுமோர் தான மாகும்
விரவுமவர் மகவருளிச் செய்தல் தானும்
விதுபுனேவோ னருளேயா முறையி தாகும்
மருவுமிந்த வகைப்பூசை புறஞ்செய் தற்கு
மருதவன ந் தனிலியற்ற லதிக மாகும்
கருதுபலன் விரைவினுறு மிதற்கோர் காதை
காவலகே ளெனமுனிவ னியம்பு மன்றே. 22

நத்துலவும் வயன்மருத வனத்தின் மேவும்
நம்பனடி தொழப்பருவந் தோறுஞ் செல்வேன்
நித்தனுமாங் கென்வரவு நோக்கி முன்னர்
நிறையருளி னெடுநிற்குஞ் செல்போ தெல்லாம்
இத்தகையிற் செல்காலத் தொருநாள் மார்க்கத்
திலங்குபகற் போதிலிரு விசும்பு தன்னில்
அத்தவென ஐயவென ஐயோ வென்ன
அபயமெனக் கதறுமொலி யெழுந்த தம்ம. 23

---

ஆகுக என. இறைவர் - தலைவர். அவரை - பிதிரர்களை. அன்னோர் - பசாசபதம் முதலியவற்றில் இருந்து பசி முதலியவற்றால் வருந்துவோர். இவர்களுக்கும் - வருக்கத்தோருக்கும் என்க: உம்மை இறந்தது தழீஇயது.

21. பிரேத பிதிரர், தேவ பிதிரர் என இருவகைப் பிதிரர்களாவார். சுரர் - தேவர். இரவி மதி - சூரிய சந்திரர். அம்பிகை சந்திரன், ஈசன் சூரியன். புறம்பு அன்றும் - வேறல்லவாம்.

22. பரன் - சிவபெருமான். ஓர் தானம் - ஓரிடம். மகவு அருளிச் செய்தல். விது - சந்திரன். முறை - விதி. புறம் செய்தற்கு - வேறு இடங்களில் செய்வதைவிட. பயன் அதிகமாம், விரைவிலுறும் என்க. காவல - அரசனே: விளி. முனிவன் - அகத்தியர்.

23. நத்து - சங்குகள். நம்பன் - சிவபெருமான். பருவந்தோறும் - காலந்தோறும். மார்க்கத்து - வழியில். விசும்பு - ஆகாயம். இரு விசும்பு

அவைசெவியிற் புகலுமென்னே வுலக மெல்லாம்
அல்லலுறு கின்றதென விரக்க மெய்திச்
சிவசிவவென் றனனின்றோர் கணத்தி லென்முன்
சிவந்தநிறச் சூறைமயிர்க் குழிக்கட் பேழ்வாய்
நவிலுநெடுங் கழுத்தினரா யலகை யென்ன
நண்ணினர்க ளநேகருட விரத்தம் பாயக்
கவலையுறு நெஞ்சினெடு பாசந் தன்னல்
கட்டுண்டு வெட்டுண்டு கண்ணீர் சோர. 24

ஓதுமவ ரெனைத்துதித்தா ரநேக மாக
உற்றவரை நோக்கியா னீவிர் யாவிர்
யாதுபவ மிழைத்திர்க ளென்றே னன்னர்
யாங்கள்பிற னில்விழைத லெளியோர்க் கின்னல்
வேதநிந்தை தெய்வநிந்தை மிக்கோர் நிந்தை
விளம்பிடுமே லவர்பசிக்க வுண்டல் பஞ்ச
பாதகங்க ளழிவழக்கு முதல வாய
பாவங்க ளெண்ணிறந்த வியற்றி னோர்கள். 25

எங்களைவந் துறப்பிடித்திவ் வுருவ நல்கி
எரிக்கண்ணா ரிதழ்கடிக்கு மெயிற்றி னோர்கள்
பொங்குகடுஞ் சினத்தரிடிக் குரலர் பானுட்
பொருந்துமிருள் வடிவினர்க ளியம னேவு

---

என்றது எல்லாப் பூதங்களும் ஒன்றிலொன்று ஒடுங்கித் தன்பால் யாவும் ஒடுங்குதற்கு இடந்தந்து நிற்றலின் என்க.

24. அவை என்றது கதறும் ஒலிகளை. அல்லல் - துன்பம். 'சிவசிவ' என்றது மகாமனுவை. ''சிவசிவ என்கிலர் தீவினையாளர், சிவசிவ என்றிடத் தீவினை மாளும், சிவசிவ என்றிடத் தேவருமாவர், சிவசிவ என்னச் சிவகதி தானே'' (திருமந்திரம் - 2716). ஓர் கணத்தில் - ஒருநொடிப் பொழுதில். அலகை - பேய். பேழ் வாய் - பிளந்த வாய். அலகை என்ன அநேகர் பாய சோர நண்ணினர்கள் என்க.

25. உற்றவரை - துன்பத்தோடு வந்தடைந்தோரை. பவம் இழைத்தீர் - பாவம் செய்தீர். பிறன் இல் விழைதல் - காம மயக்கத்தால் பிறனுடைய இல்லாளை விரும்புதல். இன்னல் - துன்பம். இச்செய்யுள் பாவ வகையினிற் சில கூறிற்று: பிறன் மனைவியை விரும்புதல், மெலியாரைத் துன்புறுத்தல், வேதசிவாகமங்களை இகழ்தல், தெய்வத்தை இகழ்தல், பெரியோர்களை இகழ்தல், பெரியோர்கள் பசித்திருக்கத் தான் உண்டல், புலாலுண்ணல் கொல்லுதல் திருடுதல் பொய்கூறல் கள்ளுண்டல்

கிங்கரர்க ளெண்ணிறந்தோர் பாசத் தார்த்துக்
கிளைத்திடுமூ விலைச்சூலம் வேல்வா ளாதி
அங்கைநெடும் படைகளினுற் குத்தி வெட்டி
அடித்தலற வலறவிழுத் தேகி னுர்கள். 26

ஏகிநமன் முன்விடுத்தா ரவன்மற் றங்ஙன்
எங்கள்சிரந் தனிற்கால தண்ட மேற்றிப்
பாகுறநின் றியாங்களுரைத் தனவு நீடு
பரிவுறுதன் கணக்கரிசைத் தனவுங் கேட்டு
வேகமுறு நரகினிடை யிவர்க டம்மை
விடுத்துமுறைப் படிதண்ட மியற்று கென்ரு
ஞகவெழுந் தனர்பின்னு மநேக ரங்கே
ஆலமென வளைந்தனர்கள் கொண்டு சென்ருர். 27

கலிநிலைத்துறை

மன்னு துச்சக நரகிடை மருவுற விடுத்திட்(டு)
அன்ன திற்பிறன் மனைவியை யணைத்தவெம் பவத்தால்
பன்னு செந்தழற் காய்ந்தசெப் பெழிலுறு பாவை
தன்னை மெய்யுறத் தழீஇக்கொடு தளர்ந்திடச் செய்தார். 28

விரும்ப லுற்றய லாடனைப் பார்த்ததான் மேவு
பெரும்ப வத்தினுற் புகலந்தத் தமத்திடைப் பிறங்கும்
இரும்பி னுக்கிய துண்டவெங் காக்கைக ளிகலுற்(று)
ஒருங்கு கண்களைக் கொத்தியிர்த் துலைத்திட விடுத்தார். 29

---

என்னும் ஐம்பெரும்பாதகங்களைச் செய்தல், அழிவழக்குப்பேசல் என்பன அப்பாவங்களின்வகைகளாம்.

26. பானுள் - நள்ளிரவு. கிங்கரர் - தூதர். ஆர்த்து - கட்டி. இயம கிங்கரர் வடிவும் செயலும் கூறியபடி. எயிறு - பல்.

27. தண்டம் - தண்டனை பண்ணுதல். காலதண்டம் - நமன் ஆயுதம். வேகம் உறு நரகு - கொடுமையான நரகங்கள். துச்சகம், தமம், எரிவாய் நிரயம் என்பன சில.

28. செப்பு எழில் உறு பாவை - செம்பினுலியன்ற அழகிய பெண்ணுரு. தளர்ந்திட - வருந்துமாறு.

29. துண்ட வெம் காக்கை - அலகுகளையுடைய கொடிய காக்கைகள். துண்டம் - மூக்கு. இகல் உற்று - வலிமை பொருந்தி.

விண்டி டிந்துவு மிரவியு மேவுநாள் பிறர்விட்(டு)
உண்ட பாதகத் தோங்குதுற் கடத்திடை யுற்று
மண்டு காக்கைக ளழலிடை வைத்தகூ ரிருப்புத்
துண்ட மிட்டுநா வினைத்துணித் திடவெதிர் தொடுத்தார். 30

தந்தை தாயர்கள் மூத்தவர் சாற்றிடு மொழியை
முந்து கேளுரு மதத்தினுன் மூண்டவல் வினையின்
வெந்த ழற்கொடுஞ் செக்கிலிட் டரைத்திட மெலிந்து
சிந்தை நொந்தறி வழிந்திடச் செய்தனர் பலநாள். 31

தனையர் தந்தைதாய் முதிர்ந்துளோர் சார்ந்திடு கிளைஞர்
இனையர் வெம்பசி யறிந்திருந் தினிதுறப் புசித்த
வினையி னுற்புகல் செம்பினை யுருக்கிவாய் விடுத்துப்
புனைகொள் பாசத்தி னடித்தனர் பொருந்துறப் பலநாள். 32

பெரியர் தங்களை நிந்தனை பேசிய வாய்ப்பல்
சரிய நீள்கவு ளடியுமென் றடித்தனர் சரித்தார்
தெரியு றும்பிறர் பொருள்களைக் கவர்ந்திடு திண்கை
அரியு மென்றரிந் திட்டன ரபயமிட் டலற. 33

உன்னு மீசர்தம் மடியவ ரெளியவர்க் குதவா(து)
இன்னல் செய்திடு தனுக்களா மிவைகளைப் பிடுங்கித்
தின்னு மென்றுநாய் நரிபுலி கழுகொடு தீய
பன்ன கங்களை விடுத்தனர் பதைபதைத் திரங்க. 34

கால சூத்திரங் கண்டகோ லாகலங் கரானை
மால்செய் கூடசான் மலியொடு வளர்கும்பி பாகம்
கோலி டுந்தழற் பிரானரோ தம்படர் கோரம்
ஓலி டின்னவை யாதிய நரகெலா முழன்றோம். 35

---

30. விண்டிடு இந்துவும் இரவியும் மேவும் நாள் - சூரிய சந்திர கிரகண புண்ணிய காலங்கள். துற்கடம் என்பது ஒரு நரகம்.

31. கேள் உரு மதத்தினுல் - கேளாத செருக்கினுல். நொந்து அறிவு அழிந்திட.

32. தனையர்=தனயர் - புத்திரர்.

33. கவுள் - கன்னம்.

34. தனு - உடம்பு. பன்னகம் - பாம்பு.

35. கால சூத்திரம், கண்ட கோலாகலம், கரானை, கூடசான்மலி, கும்பிபாகம், தழற்பிரான், அரோதம், கோரம் என்பன சில நரகங்கள்.

இலகு மொவ்வொரு நாள்களி னெம்மொடு மியற்றும்
வலிய தண்டனை தன்னெடு மனமுறு வேகத்(து)
உலக மியாவையுங் கணத்திடை யுலாவியங் குறுவார்
சுலவி யேகுதற் கின்றுமத் திறமிவண் சூழ்ந்தார். 36

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்னமுமென் செய்வர்களோ வறிந்தி லேமேல்
இவ்வுழிநீர் சிவசிவவென் றுரைத்த சத்தம்
அன்னவர்கா தினிற்புகலு மும்மை நோக்கி
அகன்றனர்க ளெமைவிடுத்து நாங்க ளிங்குத்

---

இனி, ''சாதாரண புடவி தத்துவமாகிய அண்டம் நூறுகோடி யோசனை ஆழ அகல நீளங்களை உடைத்து''. ''கீழண்டச் சுவர்க்கனம் கோடி யோசனை, அதன்மேல் காலாக்கினியுருத்திர புவனம் கோடி யோசனை'' ''காலாக்கினியுருத்திரர் திருமேனியின் மேல்நோக்கி எழுந்த சுடர்க் கொழுந்து காலாக்கினி யுருத்திரர் புவனத்துக்குமேல் பத்துக் கோடி யோசனை. அதன் புகைப் படலம் அதன்மேல் ஐந்து கோடி யோசனை. ஆக அண்டச் சுவர்க்கனமுள்படப் பதினேழு கோடி யோசனை. இந்தப் பதினேழு கோடி யோசனைக்குமேல் பாவிகள் சென்றடையும் இடமாகிய நரகலோகங்கள் ஒன்றன்மேல் ஒன்ருக ஒரோவொன்று தொண்ணூறு இலக்கம் யோசனை அளவுடைய முப்பத்துமூன்று தளங்களும், தனித்தனி நூருயிரம் யோசனை அளவுடைய முப்பத்திரண்டு இடைவெளியும் உடையவாயுள்ளன.''

''இந்த நரகங்கள் நரகமும், மாநரகமும், இராச நரகமும், இராச ராசேச்சுர நரகமும் என நான்கு வகைப்படும். அவற்றுள், நரகம்: இரௌரவமும், துவாந்தமும், சீதமும், வெப்பமும், சந்தாபமும், பதும மும், மாபதுமமும், காலசூத்திரமும் என எண் வகைப்படும்.'' ''மாநரகம்: சூசி முகமும், காலகட்கமும், குரதாரமும், அம்பரிடமும், தத்தாங்கார மும், மாதாகமும், சந்தாபமும், பீபற்சமும் என எண் வகைப்படும்.'' ''இராசநரகம்; இலாக்காப் பிரலேபமும், மாஞ்ச சதமும், நிருச்சுவாச வுச்சுவாசமும், யுக்குமாத்திரியும், சான்மலியும், உலோகப் பிரதீப்தமும், சூற்பி பாசமும், கிருமி நிசயமும் என எண்வகைப்படும்.'' ''இராச ராசேச்சுர நரகம்: உலோகத்தம்பமும், விண்மூத்திரமும், வைதரணியும், தாமிச்சிரமும், அந்ததாமிச்சிரமும், கும்பிபாகமும், மாரௌரவமும், அபீசியும் என எண்வகைப்படும்.'' ''இந்த நால்வேறு வகையின் எவ்வே முக்கு, ஒவ்வொன்று பிரதான நரகமாக இருக்கும்; ஆக முப்பத்திரண்டு நரகின்பெயரும் கண்டுகொள்க.'' இது சிவஞானமாபாடியத்திற்கண்டது. விரிவெல்லாம் சிவதருமோத்தரம் சுவர்க்கநரகவியலில் கண்டுதெளிக.

36. மனம் உறு வேகத்து - மனம் செல்லும் வேகத்தைப்போல: மனோவேகம்போல என்றபடி. அங்கு - அந்தநரகலோகத்தில். சுலவி-சுற்றி.

துன்னினமுற் றுமதருளா லினிமற் றன்னர்
தொடர்ந்தெம்மை வருத்தாமற் போற்று கென்னப்
பன்னினர்யா னவர்களையஞ் சேன்மி னென்று
பரவுமவ ருடனுமிடை மருதி னெய்தி. 37

முக்கணுறு பரஞ்சுடரை வணங்கச் செய்து
முதியபுகழ்ப் பொன்னியிடை மூழ்கு வித்துத்
தொக்கவர்கோத் திரமுரைத்துப் பிதிர்க்க ளுக்குத்
தூயதில தர்ப்பணமுஞ் செய்வித் தேன்மேல்
அக்கணத்தி னலகையுரு வாகி னோர்கள்
அமரர்களா யெழின்மருவி விமான மேறி
மிக்கசுர துந்துபிகள் முழங்க வானோர்
வியன்மலர்மா ரிகள்சொரியத் துறக்கம் புக்கார். 38

அனையதல மான்மியமும் பிதிர்பூசை தன்னால்
ஆகியது முணர்ந்தனையே யநேக ரின்னும்
இனையவகை யத்தலத்திற் கதியுற் றோர்கள்
இலங்கிலைவேற் சுகீர்த்திமன்ன நீயு மெய்திக்
கனைகடனஞ் சருந்திறையோன் பதம்ப ணிந்து
கட்டுரைத்த படியியற்றி னுலகம் போற்றுந்
தனையனுதித் திடுமதன்பி னிறையோன் கோயில்
தயங்குதிருப் பணியாதி செய்தி யென்றான். 39

கலிநிலைத்துறை

மன்ன வன்குறு முனிவனை வணங்கினன் விடைகொண்(டு)
அன்னம் வாழ்மலர்ப் பொழில்குலா மணியிடை மருது
தன்னை யெய்தினன் பொன்னியிற் படிந்தனன் சடைமேல்
பன்னி ளம்பிறை சூடிதன் பதயுகம் பணிந்தான். 40

---

37. இ உழி - இவ்விடத்து: உழி ஏழனுருபு. எமை விடுத்து அகன்றனர்கள். துன்னினம் - பொருந்தினோம். உற்று உமது அருளால். அன்னார் - இயம தூதர். போற்றுக என்ன. பன்னினர் - சொன்னார்கள்.

38. தில தர்ப்பணம் - எள்ளும் நீரும் இறைத்தல். சுர துந்துபிகள் - தேவ வாத்தியங்கள். துறக்கம் - சுவர்க்கலோகம்.

39. மான்மியம் - பெருமை. இலங்கு இலை வேல். கனை கடல் நஞ்சு அருந்து. கட்டுரைத்தபடி - உறுதியாகச் சொல்லியபடி.

40. பொழில் குலாம் - சோலை விளங்கும்: குலாவும் என்றது குலாம் என நின்றது. பன் இளம்பிறை சூடி.

மதித்தி டும்புக ழாதிநூல் வகுத்திடு முறையே
பிதிர்க்கள் பூசையும் புரிந்தனன் பிறங்குவே ளென்ன
உதித்த னன்தனிப் புதல்வன்றன் னுளத்திடை மகிழ்ச்சி
கதித்த னன்சொரிந் தான்முகி லெனவொளிர் கனகம். 41

காற்று மென்சரு கறல்பொசித் தெண்ணருங் காலம்
சாற்று மைங்கன லிடைக்கடந் தனிற்றலை கீழா
நோற் றிடுந்தவப் பேறெரு நொடியினிற் பெரியோர்
மாற்ற மொன்றினி லெளிதினிற் கிடைத்திடு மன்னே. 42

என்ப துண்மையே யெனமகிழ்ந் திறைவனு லயத்துள்
பொன்பி றங்கிடு திருப்பணி யலகில பொலிவித்(து)
அன்பி னேங்கிடு பூசனை யணிவிழா நடத்தி
மன்பெ ரும்பதி நிதிக்குவை வழங்கினன் மிகவும். 43

ஓது வேதியர் தமக்குநன் னிலம்பல வுதவி
மீதி லங்குபல் காலநீள் விருப்பொடு வாழ்ந்து
காதன் மைந்தனிப் பூதலங் காத்திடப் பின்னர்ச்
சோதி தன்மலர்ச் சரோருகத் துணைப்பத மடைந்தான். 44

---

41. ஆதி நூல் - வேதசிவாகமங்கள். பிறங்கு வேள் என்ன - விளங்குகின்ற மன்மதன் என்னும்படி: வேள் முருகவேள் எனினுமாம். கதித்தனன் - மீக்கூர்ந்தான். கனகம் சொரிந்தான். கனகம் - பொன். முகில் - மேகம்.

42. காற்றும் மென்சருகு - உதிர்க்கின்ற மென்மையான சருகுகள்; காலுதல் - வீழ்தல்; கால்: பகுதி. அறல் - நீர். ''காயிலை யுதிர்ந்த கனி சருகுபுனல் மண்டிய கடும்பசி தனக்கடைத்தும்'' ''கனியேனும் வறிய செங் காயேனும் உதிர்சருகு கந்தமூலங்களேனும் கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்து'' (தாயுமானவர் பாடல்). ஐங்கனல் - நாற்புறத்தும் தீச்சூழ்தர மேலே சூரியவெப்பம் தாக்க நிற்றல். கடம் - பாலைநிலம். நோற்றிடும் - தவம்புரியும். பெரியோர் மாற்றம் - பெரியோர் கூறும் வாய்மொழி; மாற்றம் - சொல். பெரியோர் - தவவொழுக்கமிக்கோர்.

43. அலகு இல - எண்ணிலாதன. நிதிக்குவை - பொற்குவியல்.

44. நல்நிலம் - நன்செய். நல்நிலமுதவுதல் - முற்றூட்டாகக் கொடுத்தல்; இறையிலி என்க. சரோருகமலர்த் துணைப்பதம் - தாமரைமலர் போன்ற இரண்டு திருவடிகள்.

எண்ண ரும்புகழ்ச் சுகீர்த்திம னிடைமரு தெய்தி
அண்ண லைப்பணிந் தெண்ணிய தடைந்தவா றிசைத்தேம்
புண்ணி யத்தனிக் காசிப னருந்தவம் புரிந்து
கண்ண னெய்திடப் பணிந்திடு காதைமே லிசைப்பாம். 45

சுகீர்த்திமன்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 531.

---

45. அண்ணல் - சிவபெருமான். கண்ணன் - கண்ணபிரான்.

பத்தாவது

# காசிபச் சருக்கம்

---

[ஒருகாலத்துக் காசிபமுனிவர், திருமால் ஆயர்சேரியில் குழவிப் பருவத்துடன் திருவிளையாடல் செய்தமையை நினைந்து அக்கோலத்தைத் தன் எதிரில் கண்டு தரிசிக்கவேண்டும் என வேணவாக்கொண்டார். அந்த வேணவா மிக்க கவலையை விளைத்தது. அதனால் பலகாலம் அவ்வெண்ணம் முறுகி முற்றியது. கண்ணனின் குழவி வடிவத்தைக் கண்டுகளிக்க வேண்டுமாயின் பெருந்தவத்தாலன்றிக் கிட்டுதலின்றாம்; அத்தவமும் இடைமருதிலே செய்தாலன்றி விரைவில் பயன்தருமாறில்லை என உறுதி கொண்டார். இடைமருதை அடைந்தார். பெருநலமுலையம்மையாரையும் சோதிமகாலிங்கத்தையும் வணங்கிப் போற்றினர்; இறைவர் திருவருட் செல்வத்தைப்பெற்று அவ்விடம் விட்டகன்றார். ஒரு பக்கத்தில் இருந்து தவம்புரியத்தொடங்கினர். காவிரித்திர்த்தத்தில் படிந்தார், நியதிகளை முடித்தார், உணவின்றித் துயிலின்றி இரவும் பகலும் கண்ணபிரானை மனத்திலிருத்திச் சிலநாள் தவங்கிடந்தார். அணிகலங்களையெல்லாம் அணிந்தவராய்க், குழவி வடிவினராய், உரலிடைக் கட்டுண்டவராய் அக் கண்ணபிரான், முனிவர் எண்ணியபடியே எதிரிலே தோன்றிக் காட்சி யளித்தார்.

முனிவர் கண்டார், எழுந்தார், வணங்கினர், அடங்கா மகிழ்ச்சி கொண்டார், எளியனேனையும் ஒரு பொருளாகக்கொண்டு எழுந்தருளி வந்திரே எனக்கூறித் துதித்தார். கண்ணபிரான் மகிழ்ந்து, முனிவனே! வேண்டிய வரங்கேள் என்றருளினர். நந்தநந்தன! தாமோதர!! முகுந்த!!! தேவரீர் இத்தலத்திலே எழுந்தருளியிருந்து, வந்து உம்மைத் தரிசித்து வணங்கினோருக்கு வேண்டிய வரங்களையெல்லாம் தந்தருள வேண்டுமென வேண்டினர்.

அதனைக்கேட்ட கண்ணபிரான் முனிவனே! அவ்வாறே ஆகுக. இத்தலம் போன்றதொருதலம் பூமியிலில்லை. இஃது உண்மை. அதனை யாமறிவோம். சிவபிரான் மகிழ்வுடன் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளார். அவரைப்போற்றி நினைத்தவுடனேயே நினைத்தனவெல்லாம் கைகூடும்.



காசிபமுனிவர் பாலகிருஷ்ணமூர்த்தியைத் தரிசித்தல்

இதனை ஆராய்ந்தறிக, யாவர்க்கும் கூறுக, நீ அவரை அடைந்து பூசிப்பா யாக என்றருளினர். பின்னர் முனிவர் கண்ணபிரானைப்பூசித்து அவரருளிய படியே மருதநாயகரை வணங்கிப் பூசித்து வரம் பெற்றிருந்தார். நீங்களும் திருவிடைமருதூரை அடைந்து வேள்வியியற்றுவீராயின் பெரும்பயனைப் பெற்றுய்யலாம் என முருகவேள் முனிவர்களுக்கு அருளிச்செய்தனர். பின்னர், முருகவேளும் வசிட்டர் முதலிய முனிவர்களும் இடைமருதை யடைந்து மருதநாயகரைப் பூசித்தவாறு கூறுவோம் என்றார்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எழிலுறு பிரமர் பதின்மரி லொருவ னெனப்புகழ் காசிப முனிவன்
அழலுமிழ் திகிரிப் பொருபடை முகுந்த னுயர்தஞ் சேரியிற் சிறிய
குழவியின் வடிவத் துடன்விளை யாடுங் கோதில்சீர்க் கோலமுன் னேக்கித்
தொழுதிட வேண்டு மெனவொரு கருத்துத் தொடர்ந்திடப் பற்பகல்
கழித்து. 1

கனத்திடு தவஞ்செய் தன்றியவ் வுருவங் காண்பரி தாகுமத் தவமும்
இனத்தடம் பொழில்சூ ழிடைமரு திடத்தி னியற்றிடி னெல்லையிற் றேன்றும்
எனக்குறித் தனைய தலத்தினுற் றெருசிற் றிடைப்பெரு நலமுலை யென்னும்
அனத்துடன் மருத நிழலுறை யிறையோ னடிமலர்ப் போற்றினன் பணிந்து.

பெருமகிழ் வெய்தி யரனருட் செல்வம் பெற்றகன் றெருசிறை குறித்துக்
கருதிய தியற்றத் திரைமணி கொழிக்குங் காவிரித் தண்புன லாடி
உரிமையி னியதி முடிப்பன முடித்தாங் குறைந்துண வொடுதுயி லகற்றி
இரவுநன் பகலுங் கண்ணனை மனத்தி லிருத்திநோற் றிட்டனன் சின்னாள். 3

---

1. அழல் - அக்கினி. திகிரி - சக்கராயுதம். முகுந்தன் - விஷ்ணு மூர்த்தி. ஆயர் - இடையர். பிரமர் பதின்மர் - பிருகு, புலத்தியர், கிரது, அங்கிரா, மரீசி, அத்திரி, தக்ஷன், வசிட்டர், நாரதர் என்பவருடன் பிரம தேவரும் ஆவர். பிரமதேவரையொழிந்த ஏனையோர் நவப்பிரமர் எனப் படுவர்; இவர் பிரமதேவருக்கு உதவியாகப் படைப்புத் தொழிலைச் செய் கின்றவர்கள். ''விதிபுரிந்திடு பிரமரோன் பதின்மரும்'' (கந்தபுராணம் - அயனைச் சிறைநீக்கு படலம் — 3 செய்).

2. கனத்திடுதவம் - பெருந்தவம்; கடுந்தவம் என்க. காண்பு அரிது ஆகும். குறித்து - மனத்திற்கொண்டு. சிற்றிடைப் பெருநலமுலை; முரண் தொடை. என்னும் அனத்துடன். அன்னம் - அனம்: தொகுத்தல்.

3. பெற்று அகன்று.

வண்ண நூ புரம்பட் டிகையொளிர் தரள மாலிகை மகரகுண் டலமேல்
தண்மணிச் சுடிகை சுடர்த்தொடி முதலாய்த் தரித்தொரு குழவியி னுருவாய்
ஒண்மதி வதன மிள நில வெறிப்ப வுரலிடை யசைத்தவ னுகக்
கண்ணனம் முனிவன் கருதிய படியே கண்ணுறத் தோன்றினன் மன்னே. 4

கண்டனன் முனிவன் பணிந்தன னெழுந்தான் கருத்தினி லடங்கிடா மகிழ்ச்சி
கொண்டன னெளியேன் றனையொரு பொருளாக் கொண்டெழுந் தருளினை
யென்னப்
பண்டரு சுருதி கொடுபல துதித்தான் பங்கயக் கண்ணனுன் தவத்தால்
விண்டிடு துதியா னகமிக மகிழ்ந்தேம் வேண்டிய வரங்கள்கே ளென்றான். 5

நந்தநந் தனதா மோதர முகுந்த நவிலுமிப் பதியுணீ யுறைந்து [ரெவர்க்கும்
வந்துனைக் கண்டு பணிந்துளோர் துதித்தோர் மனத்திடைக் குறித்தவ
சிந்தையி லவர்க ணினைத்திடு வரங்கள் சிறந்திட மகிழ்ந்திட வுடனே
தந்திட வேண்டு மென்றனன் முனிவன் சதுமுகன் தாதையி துரைப்பான். 6

மெய்த்தவ முனிவ நாமுமீண் டுறைது மேலுள வரங்களு மளித்தேம்
இத்தலம் போல்வ திசைத்திடு முலகத் தில்லையீ துண்மையா மறிவோம்
நித்தனுண்மகிழ்வுற் றிருக்குமீண்டவனை நினைக்குமுன் னினைத்தனவுறுமீ(து)
உய்த்துணர் வோர்க்குப் புகலுதிநீயு முற்றருச் சனைபுரி கென்றான். 7

முனிவர னிவ்வா றருளிவீற் றிருக்கு முகுந்தனைப் பணிந்தருச் சனைசெய்(து)
அனையவ னுரைத்த தன்பினே ரெவர்க்கு மறைந்தெழின் மருதநா யகனைக்
கனிவுறு மன்பி னுலகெலா மிறைஞ்சிக் கதியுறத் தானுமர்ச் சனைசெய்(து)
இனிதுறு வரம்பெற் றிருந்தனன் பன்னு ளிசைக்குமத் தலத்தின்மா
தவத்தீர். 8

---

4. தரள்மாலிகை - முத்துமாலை. மணிச்சுடிகை - இரத்தினச்சுட்டி. மதி வதனம் - சந்திரன்போலும் முகம். அசைத்தவன் ஆக - கட்டப்பட்டவனுக. கண்ணன் தோன்றினன் என்க.

5. பங்கயக்கண்ணன் - திருமால்.

6. நந்த நந்தன - நந்தகோபனுடைய புத்திரரே. இப்பதியுள் - இத் திருவிடைமருதூரில். குறித்தவர் - தியானித்தவர். சதுமுகன் தாதை - பிரமதேவருடைய தமப்பனுகிய திருமால்.

7. நித்தன் - சிவபெருமான். ஈண்டு அவனை நினைக்கும் முன் நினைத்தன உறும். உய்த்து உணர்வோர்க்கு.

8. முனிவரன் - காசிபன். முகுந்தன் - திருமால்.

நீவிரு மனைய விடைமரு தடைந்து நிகழ்த்திடு மகப்பயி ரியற்றின்
மேவுறு பலன்மற் றெல்லையின் மிகவும் விளையுமின் பெய்தலா மென்னச்
சேவலங் கொடியோன் முனிவர்க ளெவருந் தெளிவுற வுரைத்தனன் முனிவர்
யாவரு மகிழ்ந்தித் தலத்தினுக் கிணைவே றெங்குமின் றெனப்பணிந்
திசைத்தார். 9

மையறு குணத்துச் செழுந்தவ முனிவீர் மற்றினிச் சூருரம் பிளந்த
செய்யவேற் றடக்கைச் சரவண பவனுந் திகழ்வசிட் டாதிமா தவரும்
சையமால் வரையி னின்றிடை மருதிற் சார்ந்துசெஞ் சடையிலிந் துடனே
பையராப் புனைந்த மருதநா யகனைப் பணிந்தருச் சித்தவா றிசைப்பாம். 10

காசிபச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 541

---

9. மகப்பயிர் - யாகமாகிய பயிர். ஒல்லையின் - விரைவின். சேவலங் கொடியோன் - முருகவேள்.

10. மை அறு - குற்றமற்ற. சூர்உரம் - சூரன் மார்பை.

பதினொன்றாவது

# குமாரபூசைச் சருக்கம்

---

[முருகவேளும், வசிட்டர் முதலிய முனிவர்களும் சையமலையினின்று திருவிடைமருதூரை அடைந்தனர். வரும் வழியிலே முருகவேள் திருப்பரங்குன்றம், ஆவினன்குடி, திருச்செந்தூர், பழமுதிர்சோலை, ஏரகம்முதலிய தலங்களைக் காட்டியருள முனிவர்கள் வணங்கித் துதித்து மகிழ்ந்தனர். பின்னர், திருவிடைமருதூர்த் தலத்தை அணுகியவுடன் இதனைக் காண்பீராக எனக் கந்தசுவாமி காட்டினர். முனிவர்கள் மதில், மாடவரிசை, திருக்கோபுரம் முதலியவைகளின் அழகினைக் கண்ணுற்றனர். பெருமகிழ் வுற்றனர், வணங்கிப் பரவசப்பட்டனர், தோத்திரம் செய்தனர். குமாரக் கடவுளும் முனிவர்களை விடாமல் அழைத்துக்கொண்டு இடைமருதைச் சார்ந்தார். இடைமருதீசரின் திருவடிகளைக் குமாரக்கடவுள் வணங்கினர், கங்கையை வரக்கருதினர். கருதுமுன் கங்கையும் வந்து ஈசானியதிக்கில் அமர்ந்தாள். முருகக்கடவுள் அக்கங்கைநீர்கொண்டு சோதிலிங்கத்துக்குத் திருமஞ்சனம் செய்தார்; சிவாகமவிதிப்படி பூசித்தார்; பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். முனிவர்கள் காவிரித் தீர்த்தத்திலும், கங்கைநீரிலும் மூழ்கினர். பின் பெருநலமாமுலையம்மையையும், மருதவனேசரையும், ஆண்ட பிள்ளையாரையும் வணங்கித் துதித்தனர்; முருகக்கடவுளையும் பூசித்தனர்; திருவைந்தெழுத்தை விதிப்படி கணித்தனர்.

ஓரிடத்திலே தங்கியிருந்து முனிவர்கள் வேள்வி இயற்றுதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் சேமித்தனர். வேள்வியை முறைப்படி செய்தனர். சிவபெருமான் உமாதேவியாரோடு இடபவாகனத்தில் எழுந்தருளிக் காட்சியளித்தார்; வேண்டிய வரங்கள் யாவை? என்றருளினர். முனிவர்கள் சிவபெருமானை நோக்கி, ஐயனே! தேவரீருடைய திருவடிகளை என்றும் மறவாச் செல்வமும், உமது திருவடிகளை நியதியாய் பூசிக்கும் செல்வமும், அடியேங்கள் நினைத்தவை யாவும் பெறவும் அருள்வீராக என இரந்து வேண்டினர். இறைவன் முனிவர்கள் வேண்டிய வரங்களையெல்லாம் அருளி மறைந்தார். முனிவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர், அத்தலத்தை விட்டு நீங்காமல் உறைந்திருந்து நாடோறும் சோதிமகாலிங்கத்தைப் பூசித்து வருவாராயினர். சிவபெருமான் முனிவர்கட்கு அருளியபடியே எல்லாநலங்களும் பெற்றனர், அட்டமாசித்தியும் கைவரப்பெற்றனர்.]



குமாரக்கடவுள் பூசித்துக் கயிலைக்காட்சியைத் தரிசித்தல்

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மாகநா டவர்போற் றிடைமரு தடைந்து வளந்தரு மகம்புரி வதனுக்(கு)
ஏகமா தவத்தோர் தன்விடை மேற்கொண் டெழுதலு மிலங்குவேற் குகனும்
தோகைமேற் கொண்டாங் கெழுந்துவிண் ணெறியாய்த் தொடருமா
[தவர்களுஞ் சூழ
நாகமென் பணிவோ னுறைபதி யிடையி னண்ணினர் பணிந்தகன் றேகி. 1

தனதெனப் புலவர் துதிபரங் குன்று தாவிலா வினன்குடி செந்தூர்
இனமுகில் வதியும் பழமுதிர் சோலை யேரகப் பதிமுத லான
கனமுறு தலங்கள் யாவையு மணைந்து காட்டமுன் பணிந்தினி தேத்தி
மனமகிழ் முனிவோர்க் கிடைமரு தெதிரே வயங்கிடல் காண்மினென்
[றிசைத்தான். 2

கண்டனர் சேணி னேமிமால் வரைபோற் கதித்தெழு புரிசையி னழகும்
கொண்டலூர் பொழிலு மாடநீ ணிரையுங் கோபுரத் தெழிலுமா லயமும்
மண்டுபே ருவகை வாரியிற் படிந்தார் வணங்கினர் பரவச மடைந்தார்
விண்டனர் துதிகள் கண்டன ரவரை விடாதுகொண் டிடைமரு தணைந்தான்.

சங்குலா மருதஞ் சூழிடை மருதிற் சார்ந்திறை பதாம்புயம் பணிந்து
கங்கையைக் குறித்தான் குறித்திடு முன்னர்க் கதழ்வினி லெய்தின ளவளைத்
திங்கள்சூடிறையோற் காட்டுதற்பொருட்டுந் திளைப்பவர் பவந்தவிர் பொருட்
இங்குறைந் திடுக வென்றன னவளு மீசனுக் கீசதிக் கமர்ந்தாள். [டும்

---

1. மாகநாடு - விண்ணுலகம். மகம் - வேள்வி. தன்விடை - தன்பால் விடை; தன் என்றது முருகவேளை. குகன் - முருகவேள். தோகை - மயில். நாகம் என்பு அணிவோன் - சிவபெருமான்.

2. தா இல் - குற்றமில்லாத. ஆவினன்குடி - பழநிமலையின் அடிவாரத்திலுள்ள தலம்: காமதேனு சூரியன் பூமிதேவி அக்கினிதேவன் முதலியோர் பூசித்தமையால் வந்த பெயர். இனம் முகில் - கூட்டமாகிய மேகங்கள். வதியும் - தங்கும்.

3. சேணின் - ஆகாயத்தில். நேமி மால் வரை - சக்கரவாளகிரி. கதித்து - விளங்கி. புரிசை - மதில். கொண்டல் - மேகம். நீள் நிரையும்: நிரை - வரிசை. உவகை வாரி - களிப்புக்கடல். விண்டனர் - கூறினர்.

4. குறித்தான் - நினைந்தான். கதழ்வினில் - விரைவாக. இறையோற்கு ஆட்டுதற் பொருட்டும்; ஆட்டுதல் - திருமஞ்சனம் செய்தல். திளைப்பவர் பவம் - மூழ்குறுவோர் பாவங்கள். அவளும் - அந்தக் கங்காதேவியும். ஈசதிக்கு - ஈசானதிக்கு: வடகிழக்கு மூலையில்.

அறைதரு மினிய புனிதநீ ரெடுத்தாங் காரபி டேகமு மியற்றி
நறைவிரித் திடுபோ தாதியா லமல னலந்தரு சிவாகம விதியால்
முறையுயர் பூசை புரிந்துள மகிழ்ந்தான் முனிவர்க ளிலங்கெழிற் பொன்னித்
துறையினுங் கங்கைப் புனலினு மற்றைத் தூயதீர்த் தத்தினு மாடி. 5

கற்பனை கடந்த கருணைவா ரிதியைக் கண்ணுதற் பொருப்பினைப் பொருப்பு
விற்பிடித் திடுநாட் பங்கயச் செங்கை விமலனை மருதநா யகனை
அற்புதத் தொடிக்கைப் பெருநல முலையை யைங்கரக் கடவுளைப் பணிந்து
சொற்படு மலரா லருச்சனை புரிந்து துதித்தன ரளவிலாத் துதிகள். 6

வெயில்விரி மணிப்பொற் சிங்கவா தனத்தின் மீதுவீற் றிருந்திடு மெங்கள்
அயிலுறு தடக்கைக் குமரநா யகன்ற னடிமலர் பணிந்தருச் சித்தார்
பயிலுமஞ் செழுத்தைச் செபித்தனர் விதியிற் பரிவொடு மற்றதன் பின்னோர்
வயினுறைந் தெவரும் வேண்டுவ கொண்டு மகமினி தியற்றினர் மன்னோ. 7

பன்னகம் புனைவோ னெல்லையி லிமயப் பாவையி னுடனடல் விடைமேல்
முன்னர்நின் றனன்கண் டிறைஞ்சினர் நீவிர் முன்வரங் கேண்மினென் றிசைத்
நின்னடித் துணையை மறந்திடா தென்றும் நியதியா யருச்சனைசெயவும்[தான்
முன்னிய பெறவு மருள்கெனப் பணிந்தார் முன்னவ னீந்தனன் கரந்தான். 8

---

5. புனித நீர் - நன்னீர்; புனிதம் - தூய்மை. ஆர் அபிடேகம் - நிறைந்த அபிடேகம். நறை - தேன்; மணம் எனினுமாம். போது ஆதியால் - மலர் முதலியவற்றால். ஆதி என்றது ஐவகை வில்வங்கள், பத்திரங்கள் முதலியவற்றை. அமலன் நலம் தரு. பொன்னித்துறை என்றது பூசத்துறையை.

6. கற்பனை கடந்த - மாயாகருவிகளாகிய மனம் வாக்குக் காயங்களுக்கு அப்பாற்பட்ட. கருணைவாரிதி - கிருபாசமுத்திரம்; அருட்கடல். பொருப்புவில் - மகாமேருவாகிய வில். பங்கயம் - தாமரைமலர். விமலன் - மலரகிதர்; குற்றமில்லாதவர்.

7. வெயில் விரி - ஒளியைப் பரப்பும். சிங்க ஆதனம் - சிங்காசனம்; அரியணை. அயில் - வேல். அஞ்செழுத்தை விதியினிற் செபித்தனர். பரிவொடு - அன்போடு. வயின் - இடம். வேண்டுவ கொண்டு - யாகஞ்செய்தற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் சேமித்துவைத்துக்கொண்டு. வேண்டுவ - வேண்டும் பொருள்கள்; ஆகுபெயர். மகம் - யாகம்.

8. பன்னகம் - பாம்பு. ஒல்லையில் - விரைவிலே. நியதியாய் - விதிப்படி. முன்னிய - நினைத்தவைகளையெல்லாம். முன்னவன் - சிவபெருமான். கரந்தான் - மறைந்தருளினர்.

இவ்வர மேற்று மகிழ்ந்துமா தவர்கள் யாவரு முமையொரு புறத்து
நவ்வியங் கரத்தோன் பதசரோ ருகத்தி னுடொறு மருச்சனை யியற்றி
அவ்வியற் றலத்தை யகன்றிடா துறைந்தா ரத்தலத் தணைந்திடப் பெற்ற
செவ்வியோர் கருத்து மற்றொரு தலத்துச் சென்றிடக் குறிக்குமோ வம்மா. 9

இருந்திடுங் காலை மருதநா யகன்முன் னீந்தருள் வரத்தினல் தாங்கள்
வருந்துத லின்றிச் சித்தியோ ரெட்டு மனத்தினிற் குறித்தவை பிறவும்
பொருந்தினர் தமைவந் தடைந்துளோர் தமக்கும் புகழுற வுதவின ரென்னத்
திருந்துறு தலத்து முனிவரர் தமக்குச் செப்பினன் சூதமா முனிவன். 10

மாசறு தவத்திர் முனிவரர் சூழ வானவர் மிடையிடை மருதுற்(று)
ஈசனை மருத நீழலி னுறையு மிறைவனை யிலங்குவே லமலன்
பூசனை புரிந்த திறமிது மீது புகலுமை யருளுரு வாகித்
தேசுறு புகழ்க்கா ருண்ணிய தீர்த்தச் சிறப்பெடுத் தினிதிசைத் திடுவாம். 11

குமாரபூசைச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 552

---

9. நவ்வி-மான். பத சரோருகம் - திருவடித்தாமரை. செவ்வியோர் - பக்குவமுடையோர். குறிக்குமோ - நினைக்குமோ ? நினையாது என்றபடி.

10. சித்தி ஓர் எட்டு - அட்டமாசித்திகள்: அணிமா, லகிமா, மகிமா, பிராத்தி, கரிமா, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. திருந்துறு தலத்து முனிவரர் - நைமிசாரணிய முனிவர்கள்.

11. மிடைதல் - நெருங்குதல். வேல் அமலன் - வேற்படையை ஏந்திய முருகக்கடவுள். உமை அருள் உரு ஆகி - உமாதேவியாருடைய அருள் வடிவமாகி. தேசு - புகழ். காருண்ணிய தீர்த்தம் - காருணியாமிருத தீர்த்தம்.

பன்னிரண்டாவது

# காருண்ணியாமிர்தச் சருக்கம்

---

[சூதமகாமுனிவரை நோக்கிச் சவுனகமுனிவர், சையமலையினின்று வந்த முனிவர்கள் பொன்னிநதி காருண்ணியாமிர்த தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்களில் மூழ்கினர் எனச் சொன்னீர்கள்; அந்தத்தலத்தில் உள்ள தீர்த்தங்கள் எத்தனை? அவை எங்கெங்கே உள்ளன? அவைகளை அமைத்தோர் யாவர்? அத்தீர்த்தங்களில் முழுகிப் பயன் பெற்றோர் யாவர்? என்பதனையும் கூறுவீர்கள் என வினவினர். கிரேதாயுகத்திலே இந்தத் தலம் நான்கு யோசனை அளவினது; மற்றை யுகங்களில் முறையே மூன்று இரண்டு ஒன்று என்னும் யோசனையுடையதாம். அங்கே 66 கோடி தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் சில தீர்த்தங்களின் சிறப்பைக் கூறுவோம். அத்தீர்த்தங்களிலெல்லாம் காருண்ணியாமிர்த தீர்த்தமே மிகச் சிறப்புடையது. சூரியன் மேடராசியில் பிரவேசிக்கும் காலத்திலே முற்பகலில் அத்தீர்த்தத்தில் மூழ்கினால் மிக விசேடமாம். அத்தீர்த்தத்தின் ஈசான திக்கிலே அரசமரம் ஒன்றுண்டு. அரசமரம் பிரமன் திருமால் உருத்திரன் என்னும் மூன்று கடவுளரின் சொரூபமாம். அத்தீர்த்தத்திலே நீராடித் திங்கட்கிழமை அமாவாசைதிதியில் காலையில் ஏழுமுறை வலம் வந்தால் இவ்வுலகம் முழுதும் வலம் வந்த பயனைத்தரும். வேதம் ஓதாமல் விடுத்த பிராமணர், சிவலிங்கம் கன்னி இவர்களை விற்றோர், கள்ளுண்டோர், சிரார்த்தம் செய்யாது விடுத்தோர், பொன் முதலியவற்றைக் களவு செய்தோர், ஆசிரியரை இகழ்ந்தோர் ஆகிய இக்கொடியவர்கள் அத்தீர்த்தத்திலே மூழ்கின் முத்தராவார். மற்றும் அத்தீர்த்தத்திலே விதிப்படி மூழ்கினவர்கட்குப் பதினான்கு வித்தைகளும் மனத்திலேவந்து பொருந்தும். செல்வம் முதலியன உண்டாம். பகை பிணி முதலியன நீங்கும். உருத்திர சாரூபம் உண்டாம். காருண்ணியாமிர்ததீர்த்தத்தில் ஒருகால் மூழ்கினோர் புண்ணிய தீர்த்தங்கள் எல்லாவற்றினும் மூழ்கிய பயன் பெறுவர். அத்தீர்த்தத்தில் ஒருமுறை தருப்பணம் செய்தால் ஒரு ஆண்டில்செய்த தொண்ணூற்றாறு சிரார்த்தபலனை ஏற்றுப் பிதிர்க்கள் மகிழ்ச்சியடைவர்.

காருண்ணியாமிர்ததீர்த்தத்திலே மூழ்கிக் கங்கை, யமுனை, தாமிரபன்னி, காத்தியாயனி, வாணி, துங்கபத்திரை, கோதாவிரி, பவானி, சோணை முதலிய நதிகளின் அதிதெய்வங்கள் தங்கள் பாவங்களையெல்லாம்

இறைவர் அருளால் போக்கின. அந்தநாள் சித்திரை மாதம் முதல்நாள் கடக ஓரையாம் என்பர். அந்த நதிமாதர்கள் பின்பு சோதிமகாலிங்கேசரை வணங்கித்துதித்தனர்; தங்கள் தங்கள் இருப்பிடமடைந்தனர். அதுமுதல் நதிமாதர் அனைவரும் ஆண்டினுக்கொருமுறை அத்தீர்த்தத்தில் ஆடி, அதுவரை தம்மைப்பற்றிய கொடுவினைகளைப் போக்குவாராயினர்.

இஃது இவ்வாறாக, மிதிலை அரசன் இட்டரோமன் என்பவன் தன் மனைவி சுகேசி என்பவளுடன் அளவில்லாத தான தருமங்களைச் செய்து வந்தான். மைந்தன் இல்லாத குறையொன்றே மன்னனை வாட்டியது. மனம் வருந்தியிருந்த அம்மன்னன்பால் உதங்கன் என்னும் முனிவன் வந்தடைந்தான். தான் செய்யும் வேள்வியின்பொருட்டு, சில பொருள்களை வேண்டினான். அரசனும் முனிவனுக்கு அன்புடன் வேண்டியவற்றைத் தந்தான்; மைந்தனில்லாக் குறையையும் அம்முனிவனிடம் கூறினன். முனிவன் அரசனைநோக்கி, அரசே! திருவண்ணாமலை, திருவையாறு, மாயூரம் சப்தரிஷித்தலம், இடைமருது ஆகிய இத்தலங்களையடைந்து தீர்த்தத் திலே முழுகிச் சிவபெருமானுக்கு லட்சம் வில்வமும், தும்பை மலரும் நீ சாத்துதல்வேண்டும். உனக்குப் புத்திரன் உதிப்பான். இத்தலங்களில் திருவிடைமருதூரிற் சென்று கண்ணபிரானும், தசரத சக்கரவர்த்தியும் முன்பு வழிபட்டுப் புத்திரப்பேறு பெற்றனர். நீயும் அவ்வாறே சென்று மேலே கூறிய தலங்களைத் தரிசித்துச் சில நாட்கள் அங்கங்கே தங்கித் திருவிடைமருதூரை அடைக என்றனன் முனிவன். அரசன் அவ்வாறே மனைவியுடன் சென்று தீர்த்தங்களில் மூழ்கிச் சிவபெருமானை வழிபட்டிருந் தான். மனைவியும் கருத்தரித்தாள். ஒரு புத்திரனைப் பெற்றாள். அம்மக னுக்குப் பிருதுகீர்த்தி என்னும் பெயர்வைத்து வளர்த்தான். மிதிலைநகரம் சென்றான். புத்திரனுக்குப் பிராயம் பதினாறு நிரம்பியது. திருமணம் செய்விக்க எண்ணினான். ஸ்ரீ காசிமன்னன் புதல்வியாகிய சுபாங்கி என்ப வளே இக்குமரனுக்கு ஏற்றவள் என மந்திரத்தலைவர்கள் கூறினர். அரசே! புத்திரனுடன் காசிப்பதியை அடைந்து தங்கியிருந்தால் சுபாங்கி மணாள னாக வரித்து மணஞ்செய்துகொள்ளுவாள் என்றனர். அமைச்சர் கூறிய படியே மிதிலைமன்னன் புதல்வனுடன் காசியையடைந்தான். இதனை ஒற் றர்களால் அறிந்த காசிமன்னன் மிதிலைமன்னனை வரவேற்று ஓரிடத்தில் இருத்திப் பலவரிசைகளையும் நல்கினான். சில நாட்கள் தன் மைந்தனுடன் மன்னன் அங்கே தங்கியிருந்தான். இவ்வாறாக, சூரியன் மேடராசியை அடைந்தான். அப்புண்ணியகாலத்தில் நீராடும்பொருட்டு மிதிலைமன்னன் கங்கையை அடைந்தான். புத்திரனும் தனியேசென்று நீராடினான். அவன் நீராடுங்காலத்துக் கங்கை தன் பாவத்தைப் போக்கிக்கொள்ளும்பொருட்டு

அப்புண்ணியகாலத்தில் திருவிடைமருதூரையடைந்தாள். அந்தர்வாகினியாகக் காருண்ணியாமிர்த தீர்த்தத்திலே மிதிலைமன்னன் புதல்வனுகிய பிருதுகிர்த்தியுடன் அக்கங்கை மூழ்கிக் கரையேறினள். பிருதுகிர்த்தி மிக்க அழகுடன் விளங்கினுன்.

பிருதுகிர்த்தி இறைவனைப் பணிந்தான்; துதித்து மகிழ்ந்தான். அவனைக் கண்டோர் அனைவரும் இவன் காமனே என்ருர். சிலர் இவன் கையில் பூவில் இன்மையால் காமனல்லன், இவன் இலக்குமி கணவனே என்ருர். திருமகள் கேள்வனுயின் கரத்தில் சக்கரமிருக்குமே! அஃது இன்மையால் இவன் திருமால் அல்லன்; யாவனே? என்ருர் சிலர். சிலர் அவன்முன் அணுகி, நீ யார்? என்றனர். தான் முன்பு இந்தத் தலத்தை அடைந்ததும், பின் காசிக்குச் சென்றதும், அங்கே கங்கையில் மூழ்கியதும், இங்கே வந்தெழுந்ததுமாகிய செய்திகள் அனைத்தையும் அவன் கூறினன். சோழன் இதனைக் கேள்வியுற்று அவனைத் தன்பால்வைத்துப் பாதுகாத்து வந்தான்.

காசியில் கங்கைக்கரையில் தன்மகனைக் காணுமல் மிதிலைமன்னன் வருந்தினுன். கங்கைநீரில் விழுந்து உயிர்விடத் துணிந்தான். அரசனே! உன்மகன் கங்கையுடன் பாதலவழியே சென்று இடைமருதூரில் காருண்ணியாமிருத தீர்த்தமாடி அங்கே இருக்கின்ருன்; சென்ருல் காணலாம் என ஆகாயத்தில் ஒருவாக்கு எழுந்தது. கேட்ட மிதிலைமன்னன் காசியரசன்பால் சொல்லிவிட்டுச் சிலநாட்களில் திருவிடைமருதூருக்கு வந்து சேர்ந்தான்; தன் புதல்வனைக் கண்டான்; கண்டவுடன் கண்ணீர்வார அணைத்துத் தழுவிக்கொண்டான்; சோழன் தேற்றத் தேறினன்.

பின்னர் மிதிலைமன்னன் தனதுமகன் பிருதுகிர்த்தியுடன் சென்று காருண்ணியாமிர்த தீர்த்தத்தில் முழுகினுன்; செய்யவேண்டிய நாட்கடன்களை முடித்தான்; திருக்கோயிலுட் சென்ருன்; ஸ்ரீ சோதிமகாலிங்கேசரை வணங்கித்துதித்தான். இறைவன் ஆகாயவாணியால் அரசனே! வேண்டிய வரங்களைக் கேள் என அருளினர். மன்னன், இறைவனே! அடியேன் உம் திருவடிகளை மறவாத அன்பும் மனமும் தந்தருளுக என வேண்டினன். இறைவனும் அவ்வாருகுக என்றருள்செய்தார். பின் அரசன் சித்திரை மாதப்பிறப்பிலே திருவிழா நடத்தினன்; இறைவருக்கு அளவிறந்த அணிகலங்களையும் பொன்னையும் உதவினுன்; தீர்த்தத்தைச் சூழப் படித்துறை அமைத்தான். பின்பு மைந்தனுடன் அரசன் மிதிலையை அடைந்தான். மிதிலையரசன் மைந்தனுடன் காசிப்பதியை அடைந்திருந்தகாலத்தில் காசிமன்னன் மகள் மிதிலைமன்னன் மகனுக்கே மாலை சூட்டுவேன் என

உறுதிபூண்டிருந்தாள். இட்டரோமன் தனது மகன் பிருதுகிர்த்தியுடன் மிதிலையை அடைந்த செய்தியைக் காசியரசன் ஒற்றர்களாலுணர்ந்தான்; மகிழ்ந்தான்; தன்மகள் ஒப்புப்பெற்றுன்; மணவோலை எழுதி விடுத்தான். அரசர் யாவரும் வந்து நிறைந்தனர். காசிமன்னன் தன்மகளைப் பிருது கிர்த்திக்குச் சிறப்புமிக மணம் செய்வித்தான்.

இன்னும் இத்திர்த்தத்தில் முழுகிப் பயனுற்றோர் எண்ணிலாதார். பலர் துன்பங்கள் நீங்கப்பெற்று மனத்தில் நினைந்தவெல்லாம் பெற்று இன்புற்றார். இனிப் பாணதீர்த்தத்தின் பெருமையைச் சொல்லுகின்றோம் என்றார்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நவையறு தவத்துச் சூதமா முனிவ னகைமுகப் பங்கய நோக்கிச்
சவுனகர் மொழிவார் சையமால் விலங்கல் தன்னினின் றுங்கணை முனிவர்
பவமறு பொன்னி கங்கைபொன் கூபம் பரவுகா ருண்ணிய தீர்த்தம்
இவைகளின் மூழ்கி யேனைய தீர்த்த மெவற்றினு மாடின ரென்றீர். 1

இன்னுமத் தலத்தி லெத்துணைத் தீர்த்த மிலங்கிடு மவற்றிடம் யாவை
அன்னவை யமைத்தோர் யாவரங் கவற்றி னுடியின் புற்றவர் யாவர்
பன்னுக வெனவே வணங்கலும் சூதன் பகருநல் லிடைமரு தினுக்கு
முன்னுகத் தெல்லை நான்கியோ சனைமேன் மூன்றிற்கு மொவ்வொன்று
[குறைவே. 2

திகழுறு மிருமுப் பத்துமுக் கோடி தீர்த்தமு முறையுமத் தலத்தில்
பகருமன் னவற்றுட் சிலவெடுத் துரைப்பாம் பரவுகா ருண்ணிய வமிர்தம்
புகழுறு மவைக ளெவற்றினு மேலாய்ப் பொலிவுறு மதிற்கதி ரிரவி
தகரெனு மிராசி பொருந்துமுற் பகலில் தனிப்பகல் படிவது விசேடம். 3

---

1. நவை அறு - குற்றமில்லாத. முகப்பங்கயம் - முகமாகியதாமரை. மால் விலங்கல் - பெரிய மலை. பவம் அறு - பாவத்தைப் போக்கும்.

2. எ துணை - எவ்வளவு. அவற்று இடம் யாவை. அங்கு அவற்றின் ஆடி. முன் உகத்து எல்லை - கிரேதாயுகத்தின் அளவு.

3. அறுபத்தாறு கோடி தீர்த்தம் என்க. பரவு - துதிக்கப்படும். பொலிவு உறும் - விளங்கும். கதிர் இரவி - கிரணங்களையுடைய சூரியன். தகர் எனும் இராசி - மேடராசி: தகர் - ஆடு. படிவது - மூழ்குவது.

மருமலர்த் தலையோன் திருமகள் கொழுநன் வயங்குருத் திரனெனு மூவர்
உருவமா மச்சு வத்தமத் தீர்த்தத் தோங்குமீ சானதிக் கிலங்கும்
பொருவிலன் னதையத் தீர்த்தமுற் படிந்து புகழ்மதி வாரத்திற் காலை
வருதரி சத்தி லேழ்வலம் புரியி னுலகெலாம் வலம்புரி பலனும். 4

பன்னுநான் மறையை விடுத்திடு பனவர் பரகதி யருளிலிங் கத்தைக்
கன்னியர் தமைவிற் றவர்மது வுண்டார் கருதிடு சிரார்த்தம்விட் டவர்கள்
பொன்முதற் களவு கொலைபுரிந் திட்டோர் போற்றிடு குரவரை யிகழ்ந்தோர்
துன்னுமிக் கொடியோர் யாருமத் தீர்த்தம் தோய்ந்திடின் முத்தரா குவரால். 5

அறைந்திடு பதினன் காயவித் தைகளு மகத்தினி லவிருறாஉ மின்னும்
புறந்திகழ் செல்வ முதலவா மைசு வரியமும் குறித்திடின் பொருந்தும்
மறந்தரு பகையும் பிணிகளு நீங்கும் மாறிலா வரனுரு வெய்தும்
சிறந்தகா ருணிய வமிர்தமா மதனிற் சென்றினி தாடினர் தமக்கே. 6

மங்கல முறுகா ருண்ணிய வமிர்த வாவியிற் படிந்திடி னொருகால்
துங்கமா மினிய தீர்த்தங்க ளனைத்துந் தோய்ந்திடு பேறுவந் தெய்தும்
அங்கதி னொருகாற் றருப்பணஞ் செயினே ராண்டினிற் சார்பிதிர் தினங்கள்
பங்கமி ளெண்ணூற் றுறிற்செய் சிரார்த்த பலன்கொடு பிதிர்களுண் மகிழ்வார்.

---

4. மருமலர்த்தலையோன் - பிரமதேவர்; மரு - வாசனை. மலர்த்தலை; தலை ஏழனுருபு. கொழுநன் - கணவன். உருவம் ஆம் அச்சுவத்தம்: அச்சுவத்தம் - அரசு. அரசமரம் பிரம விஷ்ணு ருத்திர சொரூபம் என்க. பொரு இல் அன்னதை. பொரு இல் - ஒப்பில்லாத. மதிவாரத்தில் - திங்கட் கிழமையில். ''தரிசம் - அமாவாசை. இந்தத் திதியில் சூரிய சந்திரர்கள் ஒருங்கு கூடிவரக் காணப்பெறுதலின், அதற்கு இப்பெயர் போந்தவாறு காண்க. திருச் - காண், பார்.'' இக்குறிப்பு முற்பதிப்பு அடிக்குறிப்பில் கண்டது.

5. மறை - வேதம். பனவர் - பார்ப்பார். அருள் இலிங்கத்தை. மது - கள். சிரார்த்தம் - பிதிரர் கடன். களவு புரிந்திட்டோர், கொலை புரிந்திட்டோர் எனக் கூட்டுக. குரவரை - ஆசாரியரை: குரவர் - 'அரசன், உவாத்தியாயன், தாய், தந்தை, தம்முன் என ஐவர்' என நச்சினார்க்கினியர் கூறினர் (சீவகசிந் - நாமக - 223 செய்.) முத்தர் - வீடுபெறுவோர்.

6. வித்தை பதினன்கு - வேதம் நான்கு, அங்கம் ஆறு, மீமாஞ்சை, தருக்கம், புராணம், தருமநூல் என்பன. நிலவி இறாஉம் - பொருந்தித் தங்கும். அகம் - மனம். குறித்திடில் - நினைப்பின். மாறு இலா அரன் உரு. உருத்திர சாரூபம்.

7. பேறு - பயன். வாவி - குளம், தடாகம். ஒருகால் - ஒருதடவை. பங்கம் இல் - குற்றமில்லாத.

அங்கதிற் படிந்து துயர்தொலைத்தின்ப மணைந்துளோர் தமிற்சில ரிசைப்பாம்
கங்கைநல் யமுனை தாமிர பன்னி காத்தியா யனிபுகழ் வாணி
துங்கபத் திரைகோ தாவிரி பவானி சோணையா தியநதி மின்னூர்
திங்கள்சூழ் சிகரக் கைலையங் கிரியிற் சென்றெதி ரிறைவனைப் பணிந்து. 8

அங்கணு கைலை யிறைவவிவ் வுலகோ ராற்றிடு பவமெலாம் படிவுற்(று)
எங்கள்பால் விடுத்துச் சேறலால் யாங்க ளெழில்குலைந் துடலெலாங் கறுத்
இங்கெமை யனைய கொடியதி வினைவிட் டேகுமா றருள்புரி கென்றூர் [தேம்
சங்கர னெனுந்தன் பேரினுக் கிசையத் தற்பர னுளமகிழ்ந் திசைக்கும். 9

பொன்னியின் தென்சார் வளரிடை மருதிற் போற்றுகா ருண்ணிய வமிர்தம்
தன்னிடை மேட மதிமுத னுளில் சாற்றுகற் கடகமெய் திடுங்கால் [மகலும்
துன்னின ரொருகால் தோய்ந்தெழுந் திடுமுன் தொல்வினைத் துடக்கெலா
வன்னிமேற் படிந்த பஞ்சுபோல் கதிரோன் வருமுனந் தொலையிருட் கணம்
[போல். 10

நீயிரு மணைந்து படியினத் தினத்தி னீங்கிடும் பவக்குல மனைத்தும்
தூயரா குவிரென் றுரைத்தன னவர்கள் தொழுதுறு விடைகொடு மீண்டு
மாயிருட் குலங்க ளெனப்படர்ந் தனைய மாதலத் திலங்குமத் தீர்த்தம்
மேயினூர் படிந்தார் படியுமுற் படிந்த வினைக்குல மனைத்துமாய்ந் தனவே. 11

இரும்பினுக் கிரத குளிகையின் துடக்க மெய்திடப் பசும்பொனு மதுபோல்
பெரும்புன லதனிற் படிதலும் வினைபோய்ப் பேரெழி லடைந்தது நோக்கி
அரும்புகழ்த் தீர்த்த மடந்தையர் மகிழ்வுற் றணியிடை மருதின்வீற் றிருக்கும்
சுரும்புறு கடுக்கை புனைபரஞ் சுடரைத் தொழுதுதோத் திரம்பல விசைத்து.

---

8. அணைந்துள்ளோர் தம்மில். நதி மின்னூர் - நதிகளுக்குரிய அதி தெய்வங்கள். திங்கள் சூழ் சிகரம் - சந்திரன் வலம்வரும் உச்சி.

9. சேறலால் - செல்லுதலால். அருள்புரிக என்றூர். சங்கரன் - தன்னை வழிபடும் ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்பவன்: சம் - சுகம், கரன் - செய்பவன். தற்பரன் - தனக்குத்தானே பரனுகவுள்ளோன்; சிவபெருமான். பரன் - மேலானவன்.

10. மேடமதி - சித்திரைமாதம். கற்கடகம் - நண்டு: கடக ஓரை. வன்னி - அக்கினி. கதிரோன் - சூரியன். இருட்கணம் - இருட்கூட்டம்.

11. பவக்குலம் - பாவக்கூட்டம். மேயினூர் - பொருந்தினவராய்: முற்றெச்சம். மாய்ந்தன - மறைந்தன, கெட்டொழிந்தன.

12. கடுக்கை - கொன்றைமாலை. பரஞ்சுடரை - சோதிர் மகாலிங் கேசரை.

அவரவ ரிருக்கு மிடங்களி னணேவுற் றன்றுதொட் டாண்டினுக் கொருகால்
நவிலுறு மேட மதிமுதற் பகலி னண்ணியாண் டனேயதீர்த் தத்தின்
உவகையி னேடும் படிந்தது காறு முற்றிடு கொடியதீ வினேயும்
கவலேயு மகற்றி வருவரிவ் வாறு களிப்புறப் பயின்றிடுங் காலே. 13

கலிநிலேத்துறை

வட்ட வார்கட லகழியும் வான்றெடு மதிலும்
மட்டு லாமலர்ப் பொழிலுஞ்சூழ் மிதிலேயில் வாழ்வோன்
அட்ட மூர்த்திபா லன்பினே னுலகினி தாள்வோன்
இட்ட ரோமனென் றிசைத்திடு மியற்பெய ருடையோன். 14

அரிய கேள்விய னுளனெரு காவல னவனுக்(கு)
உரிய காதலி பெயரினேச் சுகேசியென் றுரைப்பர்
தெரியு மன்னவள் வனப்பினிற் றிருவினிற் சிறந்தாள்
பரிவி னேங்குகற் பினிலருந் ததியெனப் படுவாள். 15

அந்த மாதுட னீடுநா ளின்புறு மணேயான்
மைந்த ரின்மையா னென்செய்வா மெனமனம் வருந்திச்
சந்த நான்மறை யறைந்திடு தானங்க ளநந்தம்
முந்தி யற்றினன் பற்பல தருமமு முயன்ருன். 16

---

13. நண்ணி ஆண்டு அனேய தீர்த்தத்தின். படிந்து அதுகாறும். முதற்பகல் - முற்பகல்.

14. மட்டு உலாம் மலர் - தேன்பொருந்திய பூக்கள். அட்டமூர்த்தி - மண், நீர், அனல், வளி, வான், மதி, சூரியன், ஆன்மா ஆகிய எட்டு வடிவங்களேயும் உடைய சிவபெருமான். ''ஐம்பெரும் பூத மிருசுட ரான்மா அன்றிவே றுலகிலே யவைதாம், உன்பெரு வடிவ மெனப்படு மன்றே யோர்ந்துளோர்க் கிங்கது தன்ஞல், எம்பிரான் நீயே நிறையதிட் டாதா என்பதற் கையமு முளதோ, வம்பரா மூர்க்கப் பேய்கள்தாம் மயக்கால் மாறுபா டுறப்பிதற் றுவரே''. (சிவதத்துவ விவேகம் - செய் - 27.) இட்டரோமனென்பது அரசன் பெயர்.

15. சுகேசி - மிதிலே அரசனுகிய இட்டரோமன் மனேவி. வனப்பு - அழகு. திரு - செல்வம்.

16. சந்தம் நான்மறை - சந்தஸ்பொருந்திய வேதங்கள். அனந்தம் - முடிவில்லாதன: பல என்றபடி. முந்து இயற்றினன்.

மதங்க னிந்திடு களிற்றவ னிங்ஙனம் வளர்நாள்
உதங்க னென்றொரு முனிவர னவனிடத் துற்றான்
இதங்க லந்திடு மொழியவ னெழுந்தவன் கமல
பதங்க ளிற்பணிந் தியான்செயும் பணியெனை யென்றான். 17

எண்ணு றும்பல தருமநீ யிழைத்தல்கேட் டுன்னைக்
கண்ணி நோக்கிட வந்தனங் காதலி னீண்டுப்
பண்ணு கின்றன மொருமக மதற்குநின் பாங்கர்
நண்ணு றும்பொருள் களிற்சில நல்குக வேண்டின். 18

அறத்தின் மேலனீ யாதலி னவற்றையா மேற்றுத்
திறத்தி னுற்றுமவ் வேள்வியிற் செலுத்துது மென்ன
மறத்தி னீங்கிய மாதவ னிசைத்தனன் மன்னன்
குறித்தி டும்பொரு ளலகில பரிவொடுங் கொடுத்து. 19

எளிய னென்றனை மகவிலாத் துயரமொன் றெய்தித்
தளர்வு செய்கின்ற தன்னது தனக்கொரு தளர்வீண்(டு)
அளிமி குந்திடு முனிவர விளைத்தியென் றறைந்தான்
களமி டற்றவன் றனைநினை ந் தம்முனி கழறும். 20

அருணை வண்பதி திருவையா றணிகொள்மா யூரம்
மருள கற்றெழு முனித்தலம் வளரிடை மருதுற்(று)
உருவ நீடுயர் புனல்படிந் துருத்திரற் கிலக்கம்
தருண வில்வமுந் துரோணமும் பணிந்தெதிர் சாத்தில். 21

சேயு தித்திடு மவற்றினிற் றிருவிடை மருதின்
ஏயும் வல்லையி னித்திற மத்தலத் தியற்றி
மேய கண்ணனுந் தசரத வேந்தனு முன்னுள்
தூய மைந்தரைப் பயந்தனர் சோதிதன் னருளான். 22

---

17. மதம் கனிந்திடு களிறு - மதம் முதிர்ந்த யானை. இதம் - நன்மை. எழுந்து அவன். பணி எனை - குற்றேவல் யாது.

18. கண்ணி - கருதி. மகம் - யாகம். நின்பாங்கர் - நின்னிடத்து.

19. மறத்தின் நீங்கிய - பாவங்களினின்று நீங்கிய. குறித்திடும் - கருதும்.

20. எளியனாகிய என்றனை. அளி மிகுந்திடும் - கருணைமிக்க. களமிடற்றவன் - சிவபெருமான்.

21. மருள் அகற்று எழுமுனித்தலம். துரோணம் - தும்பை.

22. சேய் - புதல்வன். வல்லையின் - விரைவிலே.

அத்த லங்களி னீயுமுற் ருற்றினிவ் வாறு
புத்தி ரற்பெறு குவையென முனிவரன் போந்தான்
முத்த மூரலொண் மனையொடு முனையடு மரசன்
சுத்த நீடுறு மருணைமுன் னான்கினுஞ் சூழ்ந்து. 23

இனிய தீர்த்தங்கள் படிந்தரு ளீசனை யிறைஞ்சி
வினைய கற்றுறு சிவார்ச்சனை விதிப்படி யியற்றி
அனைய மாதலங் களிற்சில வைகனன் கமர்ந்து
தனைநி கர்த்திலங் கிடைமரு தெனும்பதி சார்ந்தான். 24

சார்ந்து காருணி யாமிரு தத்தடம் படிந்து
வாய்ந்த சிற்றிடை யுடைப்பெரு நலமுலை மணாளன்
சூழ்ந்தி றைஞ்சிநின் றருச்சனை துலங்கிடப் புரிவுற்(று)
ஏந்து நல்லெழின் மனையொன்றி லிருந்தனன் மகிழ்ந்து. 25

விருப்பினோ டங்குச் சிலபகல் மேவுமுன் மனைவி
கருப்ப மெய்தின ளனையதோர்ந் தகமிகக் களித்துப்
பொருப்பு வின்மரு தீசன்பான் மிகுமன்பு பூண்டான்
மருப்ப யின்றிடு கோதையும் மகவினைப் பயந்தாள். 26

கருது மைந்தனைக் காதன்மீ தூர்ந்திடக் கண்டான்
பிருது கீர்த்தியென் றொருதனிப் பெயரினி தளித்தே
மருத நாயகற் களவில்பொன் வழங்கிநற் கதிரோன்
தருதி னம்பல சென்றபின் சார்ந்தனன் மிதிலை. 27

---

23. நீயும் உற்று ஆற்றின். முத்த மூரல் - முத்துப்போன்ற பற்களை யுடைய. முனை அடும் - போர்முனையில் பகைவரை வெல்லும். அருணை - அருணாசலம். முன் நான்கினும் - முதலாகவுள்ள நான்கு தலங்களினும்; அருணாசலம், ஐயாறு, மாயூரம், சத்தரிஷிகள் பூசித்ததலம் (?) என்பன.

24. சில வைகல் - சில நாட்கள். தனைநிகர்த்து இலங்கு இடைமருது. தனை - தன்னை.

25. தடம் - தடாகம். மணாளன் - கணவன்; சிவபெருமான். துலங்கிடப் புரிவுற்று - விளக்கமாகச் செய்து.

26. அனையது ஓர்ந்து; ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. பொருப்பு வில் - மேருமலையை வில்லாகவுடைய. பயந்தாள் - பெற்றாள். கோதை: அன்மொழித்தொகை.

27. இட்டரோமன் மகன் பிருதுகீர்த்தி.

மிதிலை யுற்றினி திருக்குநாள் விளங்கிளம் பிறைபோல்
புதல்வ னேங்கியெண் ணிரண்டெனும் பருவமுன் பொருந்த
மதிய மைச்சனே டொருதினஞ் சூழ்ந்துதன் மகற்குக்
கதுமெ னச்செய வேண்டுநற் கடிமண மென்ன. 28

தேறு மந்திரத் தலைவனு முளத்தினில் தேர்ந்து
கூறு வானிந்த வரசிளங் குமரனுக் கேற்ப
வேறு கண்டிலன் சுபாங்கியென் றொருகொடி மேவு
மாறில் வண்புகழ்க் காசிமன் னவன்மகள் மன்னே. 29

அனையள் கண்ணுருச் சுயம்வரம் வரித்திடு மாங்குன்
தனய னேடுநீ யுறினவன் தனியெழி னேக்கிப்
புனைவள் பூந்தொடை மகிழ்ந்தெனப் புகன்றன னிருபன்
இனைய தேசெய லென்றவ்வா றேகின னன்றே. 30

காசி மன்னவ னிவன்வர வுணர்ந்தெதிர் காணு
வாச முற்றிட வசதியும் வரிசையு மளித்தான்
பேசி யுற்றதன் செயலவண் பெரிதிருந் திடுநாள்
மாசில் செங்கதி ரேறினுன் மறியதன் மீது. 31

ஆய புண்ணிய தினத்தினிற் கங்கையி னுடிச்
சாயன் மன்னவன் சிலரொடுங் கரையிடைச் சார்ந்தான்
போயி றங்கினன் தனிமையிற் புரவலன் புதல்வன்
மேய நற்பொழு தேகின்ற தென்றுபின் விரைந்து. 32

முந்து மன்பொடு மூழ்கினுன் மூழ்கலுங் கங்கை
பந்த பாசநீக் கிடைமரு தருட்புனல் படிவான்
அந்தர் வாகினி யாய்விரைந் தவனெடுஞ் சென்ருள்
அந்த வாவியி லெழுந்தன னுங்குமூழ் கினன்போல். 33

---

28. சூழ்ந்து - ஆலோசித்து. கதும் என - விரைவாக.

29. மந்திரத்தலைவன் - முதலமைச்சன். காடி - பூங்கொடிபோல்வாளாகிய நங்கை.

30. நிருபன் - அரசன்; இட்டரோமன்.

31. வாசம் உற்றிட - வதிய; தங்க என்க. செங்கதிர் - சூரியன். மறி - மேடராசி.

32. நல் பொழுது ஏகின்றது.

33. பந்த பாசம் நீக்கு இடைமருது. அருட்புனல் - காருண்ணியாமிர்த தீர்த்தம். அந்தர் வாகினி - பாதலவழியாக உட்செல்லல்.

மிகவு நீடெழி லெய்திவண் கரையிடை மேவிச்
சகம ளந்திடு தவளமால் விடைமிசைத் தயங்கும்
பகவ னின்னருட் டிருவடி பணிந்தவற் றுதித்து
மகிழ்வு றீஇயெதிர் நின்றனன் மண்ணவர் வியப்ப. 34

காம னேயிவ னெனச்சொல்வார் காமனு மென்னின்
பூமன் வார்சிலை கொளுமஃ தின்மையாற் போதின்
மாம னேயெனக் கூறுவா ரவனெனின் மலர்க்கை
நேமி யுற்றிடு மென்பர்மற் றியாரென நினைவார். 35

இந்த நீர்மையிற் சிலருறச் சிலரரு கெய்தி
எந்த வூருனக் கென்றன ரிலங்குமப் பதியின்
முந்து தித்ததூஉ மகன்றதூஉம் பகீரதி மூழ்கி
வந்து வாவியி னெழுந்ததூஉம் வகைப்படச் சொன்னான். 36

சென்னி யித்திற முணர்ந்துறு சிறுவனைக் கூவித்
தன்னி லுற்றிட விருத்தினனுங் கவன் தாதை
மன்னு கங்கையின் மூழ்கிய மகனெழுந் திலனென்(று)
இன்னல் வாரியின் மூழ்கினு னிரங்கிமெய் பதைத்து. 37

---

34. சகம் அளந்திடு மால் விடை, தவள விடை. தவளம் - வெண்மை. சகம் அளந்திடும் மால் என்றது திருவிக்கிரம அவதாரத்தை நினைந்து. பகவன் - சிவபெருமான். பகம் - ஆறு: ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களையும் உடையவன் என்பதாயிற்று. இன் அருள் திருவடி பணிந்து அவன் துதித்து.

35. காமன் - மன்மதன். பூ மன் வார் சிலை - மலரம்புகள் நிலைபெற்ற நீண்ட வில்; புஷ்பதந்வா என்னும் பெயர் மன்மதன் வில்லுக்கு உண்மையின் பூவில் எனினுமாம். இருப்புவில் கரும்புவில் பூவில் என்பன அவனுக்குரியன என்பர். போதின் மா மன் - செந்தாமரை மலரில் உள்ள திருமகள் கேள்வன். நேமி உற்றிடும் - சுதரிசனம் என்னும் சக்கரப்படை பொருந்தியிருக்கும்.

36. நீர்மையின் - தன்மையின். முந்து உதித்ததூஉம் அகன்றதூஉம். பகீரதி - கங்கை. வாவியின் எழுந்ததூஉம் - காருண்ணியாமிர்ததீர்த்தத்திலே கங்கையுடன் தான் மேலெழுந்ததும்.

37. சென்னி - சோழன். சிறுவன் என்றது இட்டரோமன் மகன் பிருதுகீர்த்தியை. தன் இல். ஆங்கு - காசிப்பதியில். இன்னல் வாரியின் - துன்பக்கடலில்.

தேடு வான்விரைந் தநேகரை விடுதலுஞ் சென்று
நாடு மன்னவர் பாதலத் தளவுமுன் னுடி
வாடி வந்தன ரதுகண்டிம் மடுவிடை நானும்
கூட வீழ்வனென் றெழுந்தனன் குறிக்குமப் போது. 38

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நீதுயர் தவிர்தி மன்னநின் புதல்வ னிலவுசி ரிடைமரு திடத்து
மாதனித் தீர்த்த மாடுதற் கேகும் வளர்புகழ்க் கங்கைதன் னுடனே
பாதல நெறிக்கொண் டேகின னுங்குப் படர்ந்திடிற் காணலா மென்ன
மீதலத் திறையோ னருளினு லெவரும் வியப்புற வெழுந்ததோர் வாக்கு. 39

எழுதரு மொழிதன் செவிப்புகுந் திடலும்
இருகரங் குவித்துள மகிழ்ந்து
செழுநகர்க் காசிப் புரவலன் றனக்குச்
சென்றுவந் திடுதுமென் றுரைத்துத்
தழுவுறு சேனே யொடுஞ்சில பகலிற்
சயிலமா தியவெலாங் கடந்து
பொழில்புடை யோங்கு திருவிடை மருதிற்
பொருந்தினன் புதல்வனைக் கண்டான். 40

தன்னெதி ரணைந்து பணிந்திடு மகனைத் தடக்கையா லெடுத்துமார் பணைத்து
வன்னியிற் படிந்த மெழுகினுள் ளுருகி மற்றவன் றனைப்பிரிந் ததனுல்
துன்னிய துயரு மவனிடத் தன்புந் துலங்கிட வெளிப்படு கின்ற(து)
என்னநீ ணயன பங்கயங் களினின் றெழுந்திடு புனலின்மூழ் குவித்தான். 41

---

38. தேடுவான் - தேடும்பொருட்டு. நாடும் அன்னவர் இ மடு இடை. குறிக்கும் அ போது - நினைக்கும் அப்பொழுது.

39. தவிர்தி - நீங்குவாய். படர்ந்திடில் - செல்லுவாயாயின். மீதலத்து - ஆகாயத்தில். இறையோன் - சிவபெருமான். ஓர் வாக்கு - ஒப்பற்ற ஆகாயவாணி. மீதலத்து வாக்கு எழுந்தது.

40. காசிப்புரவலன் - காசியரசன். சயிலம் ஆதிய - மலை முதலியவற்றை. பொருந்தினன்: முற்றெச்சம்.

41. வன்னியில் - நெருப்பில். மெழுகின் - மெழுகினைப் போன்று: இன்: ஐந்தனுருபு. அவன்றனை - தன்னுடைய மகனுகிய பிருதுகீர்த்தியை. துன்னிய துயர் - வந்து பொருந்திய துன்பம். துலங்கிட - விளங்கிட. நயன பங்கயம் - கண்களாகிய தாமரைமலர்.

வளவனுங் கணை ந்து தேற்றிடத் தெளிந்து மகிழ்ந்துபின் மகனெடு மேகி
அளவில்சீ ருறுகா ருண்ணிய வமிர்த மணை ந்துதோய்ந் தியற்றிநன் னியமம்
கிளர்வுறு மணிப்பொற் கோயிலு ளெய்திக் கீற்றிளம் பிறைநறுங் கண்ணி
ஒளிர்சடை மருத நாயகன் பாத வுபயபங் கயம்பணிந் தெழுந்து. 42

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அன்றுனைப் பிரிந்த பின்னு னம்புய மலர்த்தாள் தன்னை
ஒன்றுசிற் றறிவு தன்னு லுன்னல னுகி யாங்கு
நின்றவென் னிலைமை கண்டு நினைவுதந் தருளாற் கூவி
இன்றெதிர் காட்சி தந்த விடைமரு திறைவ போற்றி. 43

மருவிடை மலர்த்தண் கொன்றை மதிவளர் சடைய போற்றி
கருவிடைப் புகாம லென்னைக் காத்தருள் கடவுள் போற்றி
பொருவிடை யூர்தி போற்றி பூரண புராண போற்றி
திருவிடை மருதில் வாழுஞ் செய்யபொற் சோதி போற்றி. 44

என்னநின் றேத்துங் காலை யீசனு காச வாக்கான்
மின்னுவேன் மன்ன நம்பால் வேண்டுக வரங்க ளென்ருன்
மன்னனின் பதத்தை யென்று மறந்திடா மனமு மன்பும்
துன்னுறத் தருக வென்ருன் சோதியு மவற்க ளித்தான். 45

தகர்மதிப் பிறப்பி லீசன் றனக்கெழில் விழாவுஞ் செய்தாங்(கு)
அகமகிழ் மணிப்பூண் செம்பொ னளவில வுதவி செய்து
பகரருட் டீர்த்தஞ் சூழப் படித்துறை யமைத்துப் பின்னர்
மகனெடு மகிழ்ச்சி கூரு மன்னவன் மிதிலை யுற்ருன். 46

அங்கவன் வார ணுசி யடைந்தநா ளவன்றன் மைந்தன்
பொங்கெழி லினிது கண்ட புரவலன் புதல்வி யன்னுன்
இங்குவந் துற்ற பின்னர் யானவன் றனக்கே வேய்வன்
கொங்கலர் தெரிய லென்னக் கூறின ளிருந்தா ளன்றே. 47

---

42. வளவன் - சோழன். அளவு இல் சீர் நல் நியமம்: நியமம்-மதில். உபய பங்கயம் - இரண்டு தாமரைமலர்கள்.

43. ஒன்று - பொருந்திய. உன்னலன் ஆகி - நினையாதவனுய்.

44. கருவிடை - கருவில். பொரு விடை - போர்செய்யும் இடபம்.

45. மன்னன் நின் பதத்தை. அவற்கு - அம்மன்னனுக்கு.

46. தகர்மதி - சித்திரைமாதம். தகர் - மேடம்: ஆடு. அருள் தீர்த்தம் - காருண்ணியாமிர்த தீர்த்தம்.

47. வாரணுசி - காசி. வரணை, அசி என்னும் நதிகள் கலத்தலின் இப்பெயர் பெற்றது. புரவலன் புதல்வி - காசியரசன் மகள் சுபாங்கி.

உற்றிடத் தீர்த்த மெய்தி யோங்கெழி லடைந்து கன்னல்
விற்றனிக் காளை யென்ன விளங்கிடு மகனே டோங்கு
கொற்றவன் வந்த செய்தி குலவுறு மொற்றர் கூறக்
கற்றவர் புகழுங் காசிக் காவல னுவகை யெய்தி. 48

கதுமெனப் புதல்விக் கோதி மற்றவள் களிப்பு நோக்கிப்
புதுமண வோலை தீட்டிப் பொலிவுறு மிதிலைக் கேவி
விதுமுக மருகன் றன்னை மேவுற வழைத்து நன்கு
மதுமலர்க் கோதை மின்னை மணம்புரிந் தளித்தான் மன்னே. 49

இன்னுமித் திறமத் தீர்த்தத் திடைப்படிந் தெண்ணி லார்கள்
மன்னிய துயர நீக்கி மனத்தினிற் குறித்த வெல்லாம்
துன்னினர் பெரிதும் மீது சொல்லுதும் பாண தீர்த்தம்
என்னவோர் தீர்த்த மாங்கே யிலங்கிடு மதன்றன் மேன்மை. 50

காருண்ணியாமிர்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 602

---

தெரியல்வேய்வன் என்ன; தெரியல் - மாலை. வேய்வன் - சூடுவேன்: மாலை சூட்டுவேன் என்றபடி. கொங்கு - வாசனை; தேன் எனினுமாம்.

48. கன்னல் வில் - கரும்புவில். காளை என்றது மன்மதனை. ஒற்றர் - ஒன்றியிருந்துணர்வோர்; தூதுவர்.

49. கதுமென - விரைவாக. தீட்டி - எழுதி. விது முகம் - சந்திரன் போன்ற முகம். கோதை மின் - மலர்மாலையை அணிந்த மின்னற்கொடி போன்றவள்.

50. குறித்த எல்லாம் - நினைத்தனவெல்லாம். பெரிதும் துன்னினர். மீது சொல்லுதும் - மேலே சொல்லுவோம்.

பதின்மூன்றாவது

# பாணதீர்த்தச் சருக்கம்

[ஸ்ரீ சோதிர்மய மகாலிங்கேசுவரர் கோயிலின் வடகிழ்த்திசையில் பதினறு விற்கிடை தொலைவில் உள்ளது பாணதீர்த்தம் என்பது. அதன் அதிதெய்வம் இராமர், மரம் அரசு, தென்பக்கத்தில் உள்ளது. தீர்த்த பாலகர் சுப்பிரமணியக்கடவுள். இருடி வசிட்ட முனிவர். இது மிக்க புகழ் பெற்றது. இராமபிரான் தண்டகாரணியத்தில் வசித்த காலத்தில் ஒரு சமயம் இங்கு வந்தடைந்தார். நீரில்முழுகி நாட்கடனை முடித்தற்பொருட்டுத் தன் கையிலுள்ள அம்பைப் பூமியில் எய்தனர். அப்போது அவ்வழியே நீர் பெருக்கெடுத்து வெளிவந்தது. தமது விருப்பின்படி மூழ்கி நாட்கடனை முடித்தார். அவர் அங்குள்ள அரசமரத்தின்நிழலில் தங்கியிருந்தார்.

அத்தடாகத்தின் வடபுறத்தில் சோதிவடிவினதாய் ஒரு சிவலிங்கம் தோன்றிக் காட்சியளித்தலைக் கண்டார். இராமர் விரைந்து அங்கேசென்று வணங்கித் துதித்தார். தன் பாணத்தினுல் உண்டாக்கிய தீர்த்தத்தைக் கொண்டுவந்து திருமஞ்சனம் ஆட்டினுர். வில்வம் முதலியவற்ருல் அலங்கரித்து அருச்சித்தார். 'எம்பெருமானே! இத்தலத்திலே மேற்குமுகமாக எழுந்தருளிக் காட்சி தந்தருளினீர்; ஐயனே! எனது கைப்பாணத்தால் உண்டாக்கப்பட்ட இந்தத்தீர்த்தம் * பாணதீர்த்தம் எனப் பெயர்வழங்கச் செய்யவேண்டும்; இதில் மூழ்கியவர் தேவர்பதம் பெறக்கடவர்; வைகாசி பூரணையில் இப்பாண தீர்த்தத்திலே மூழ்கித் தேவரீரை வணங்குவோரும் அருச்சிப்போரும் உம்முடைய திருவருளைப்பெற்று வாழ்வாராக' எனப் பிரார்த்தித்தார். பின்பு காருண்ணியாமிருததீர்த்தத்தில் முழுகிச் சோதிர் மகாலிங்கேசரைத் தரிசித்து வணங்கிச்சென்ருர்.

இப்பாண தீர்த்தத்திலே முழுகி, அந்தணர்களுக்குப் பால் தயிர் நெய் பசு முதலியவற்றைத் தானம் செய்வோர் சகலபாவங்களினின்றும் நீங்குவர். மற்றும், பஞ்சாக்கர மந்திரத்தை விதிப்படி செபம் செய்தால்

* பாணதீர்த்தம் திருவிடைமருதூருக்கு வடகீழ்த்திசையில் இரண்டு கல் தொலைவிலுள்ள பாணுபுரம் என்ற தலத்திலே கோயிலின் தென்புறம் உள்ளது. இறைவன் திருநாமம் பாணபுரீசுவரர். இது மகாலிங்கேசர் ஆலய நிர்வாகத்திலுள்ளது.

பேரின்பத்தைப் பெறுவர். இத்தீர்த்தத்திலே பிதிர்தர்ப்பணம் எள்ளினுல் செய்வோர் கயையில் செய்த பலனைவிடப் பன்மடங்கு பயனைப்பெறுவர் என்று சூதமுனிவர் தீர்த்தத்தின் பெருமையைக் கூறியருளினர்.]

கலிநிலைத்துறை

வாணி நாயகன் முதலினோர் வணங்கிடை மருதத்
தாணு வின்வட கீழ்த்திசைத் தங்குமோர் தீர்த்தம்
நீணா லந்தரு விற்கிடை நிகழ்த்துமீ ரெட்டில்
பாண தீர்த்தமென் றதன்பெய ருலகெலாம் பரவும். 1

தெரிக்கு மப்பெரு வாவியின் தேவதை யிராமன்
விரிக்கு நீழலோ ரரசதன் தென்புடை மேவும்
பரிக்கு மன்னதைச் சூருரம் பிள ந்தவேற் படையோன்
தரிக்கு மத்தடத் தருகினில் வசிட்டனு ந் தவத்தோன். 2

தண்ட கத்தனி வனத்திடைச் சார்ந்தெழி லிராமன்
பண்டு சஞ்சரிப் பவனெரு பகலினுங் கடை ந்தான்
கண்டி லன்புன லுறுநிய மஞ்செயக் கையின்
வண்டு தன்னைமன் விடுத்தனன் மலர்ந்திடு பூமேல். 3

அங்க ணீடொரு வாவியா யதனிடை நின்றும்
பொங்கு தண்புன லெழு ந்தது பொரு ந்துமப் புனலின்
மங்க லம்பெறப் படி ந்தனன் நியமங்கள் மற்றும்
பங்க மின்றிநன் கியற்றினன் பரிந்தனன் பின்னர். 4

அரசு நீழலுற் றிரு ந்தன னிரு ந்திடு மமையத்(து)
உரைசெ யுங்கணை வடிவதா ய நாதியா யொளிரும்
பரசி வன்றனைக் கண்டனன் படுகரின் வடபால்
விரைசெய் தண்மலர் மருவுற விளங்கொரு தருக்கீழ். 5

---

1. வாணி நாயகன் - பிரமதேவன்; வாணி - கலைமகள். தாணு - சிவபெருமான். நீள் நலம் தரு. பதினறு விற்கிடை தூரம் என்க.

2. தெரிக்கும் - சொல்லிய. வாவி - குளம். அரசு - அரசமரம். தென்புடை - தெற்குப் பக்கம். சூர் உரம் - சூரபன்மனுடைய மார்பு.

3. தண்டகத் தனி வனம் - தண்டகாரணியம். வண்டு - அம்பு: மன் - இராமன். பூ மேல் - பூமியின்மேல். மலர்ந்திடு பூமேல் வண்டு தன்னை மன் விடுத்தனன் என்றது ஒருநயம்.

5. படுகர் - கரை. விரை - வாசனை. தரு - மரம்.

எழுந்து சென்றனன் பரிவொடும் விரைவொடு மெதிரே
விழுந்து மெய்யுறப் பணிந்தனன் விளம்புதன் கணைசெய்
அழுந்து நீர்கொடு மகிழ்வுட னாட்டினன் கிடைத்த
செழுந்தண் கூவிள மாதிகொண் டருச்சனை செய்தான். 6

மேற்றி சைத்திரு முகத்தினின் றித்திறம் விளைத்திட்(டு)
ஏற்று வெல்கொடிப் பரமனே யிடைமரு திறைவ
தோற்றி யிங்கெனக் குணர்வுதந் தனையெனத் துலங்கப்
போற்றி செய்தனன் செய்துமே லின்னன புகலும். 7

நீடு வாளியிற் செய்திடு நிமித்தினு னிதனுக்(கு)
ஈடு மன்னுறப் பாணதீர்த் தப்பெய ரியையும்
கூடு மன்புட னிதனிடைக் குறுகியா டினர்கள்
ஆட கத்திரு நாட்டினி லமரரா யவிர்வார். 8

இடப மாமதிப் பூரணை யினிலிதின் மூழ்கிப்
படவ ராவணி யித்தனிப் பரமனைப் பணிந்தோர்
திடம தாயுறு மன்பினு லருச்சனை செய்தோர்
நடமி யைந்திடு சிவபத நண்ணரியின் புறுவார். 9

என்று நீடிய வரங்கொடுத் தெழிலருட் புனலில்
சென்று மூழ்கிமா மருதநன் னிழலிடைத் திகழும்
குன்ற வில்லியைப் பணிந்தவ னருளுறீஇக் குலவு
மன்ற லஞ்சரோ ருகபத மனநிறீஇ யகன்ருன். 10

---

6. பரிவொடும்-அன்புடனே. தன் கணை என்றது இராமபாணத்தை. ஆட்டினன் - அபிடேகித்தான். கூவிளம் - வில்வம்.

7. ஏற்று வெல் கொடி - இடபக்கொடி: ஏறு - இடபம். இங்கு எனக்கு உணர்வு உற தந்தனை.

8. வாளி - அம்பு. ஆடகத் திருநாடு - பொன்னுலகம். அமரர் - தேவர். அவிர்வார் - விளங்குவார்.

9. இடப மா மதி - வைகாசி மாதம். பூரணை - பௌர்ணமி திதி. திடம் - உறுதி.

10. அருட் புனல் - காருண்ணியாமிர்த தீர்த்தம். குன்ற வில்லி - சிவபெருமான். மன்றல் - வாசனை. சரோருக பதம் - தாமரை மலர் போலும் திருவடி; சரஸ்ருகம் = சரோருகம்: தடாகத்தில் முளைப்பது எனக் காரணக்குறியாயிற்று.



இராமபிரான் ஸ்ரீ பாணபுரீசுவரரைப் பூசித்தல்

அனைய னுக்கிய பாணதீர்த் தந்தனி லாடி
இனிய பால்தயிர் நெய்பசு வேதியர்க் கீந்தால்
வினைகள் யாவையு மகன்றிடும் விளங்கவங் கிருந்து
மனதி லஞ்செழுத் தெண்ணிடின் மருவுநீ டின்பம். 11

சாற்றி டன்னதில் திலங்கொடு தருப்பண மியற்றில்
ஆற்ற லுற்றிடு கயைதனி லாற்றுமப் பலனும்
போற்றி டன்னதா மத்தடம் பொருந்திய வேற்றம்
மேற்ப ராசர தீர்த்தமான் மியமெடுத் திசைப்பாம். 12

பாணதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 614

---

11. அனையன் - அந்த ஸ்ரீராமன்.

12. சாற்றிடு அன்னதில். போற்றிடு அன்னது ஆம் அ தடம்.

## பதினொன்காவது

# பராசரச் சருக்கம்

---

[காருண்ணியாமிருத தீர்த்தத்தின் வடகிழக்குத் திசையிலே ஒரு விற்கிடை தூரத்திலே ஒருதீர்த்தம் உள்ளது. அது பராசர தீர்த்தம் எனப் பெயர் பெறும். அப்பராசர தீர்த்தத்திலே மார்கழிமாதத்தில் மூழ்கினுல் விசேடபயனைத்தரும். அத்தீர்த்தத்துக்குரிய அதிதெய்வம் வாயுதேவன். அந்தத் தீர்த்தத்தின் பக்கத்திலே வேம்புமரம் மிக உயர்ந்து விளங்கும். அதன்பக்கத்தில் கண்ணுவமுனிவர் எழுந்தருளியுள்ளார். அது வயிரவக் கடவுள் காவல் பெற்றுள்ளது. அத்தீர்த்தத்தில் முழுகினோர் அந்தணர் களுக்கு எள்ளைத் தானம்செய்யின் தீவினை அகலும். சிலகாலம் அதன் பக்கத்தில் வசித்துவரின் மெலிவுநீங்கும்; மனம்தூயதாம். அத்தீர்த்தத்தில் முழுகிப் பலர் தம் பழவினை நீங்கப்பெற்றனர். அதற்கு அப்பெயர் வரக் காரணம் யாதெனில்? கூறுதும்.

மூவுலகமும்நிறைந்த புகழையுடைய பராசரமுனிவர் மச்சகந்தியைத் தாம் புணர்ந்தபாவம் கழித்திடநினைந்தார். பலநாட்கள் மனத்திலே அதனை நினைந்து மிகவும் வருந்தினர். ஒருநாள் உரோமசமுனிவர் எதிர்ப்பட்டார். அவரைப் பராசரமுனிவர் வணங்கித் துதித்தார். ஒருகாலத்திலே அறியா மையால் யான் மச்சகந்தியைப் புணர்ந்தபாவம் போக்குதற்கு உபாயம் கூறி யருளுக என வேண்டினர். அதனைக்கேட்ட உரோமசர் பராசரமுனியைப் பார்த்து, மாதர் உடம்பின் இழிதகவுகளை எடுத்துரைத்தார்; கழுவாயும் கூறினர். 'முனிவரே! நீர் இடைமருது என்னும் தலத்தை அடைந்து கனகதீர்த்தத்திலே முழுகிச் சோதிர்மய மகாலிங்கேசரை விதிப்படி வழி பட்டு வருக; அதனுல் அப்பாவம் தொலையும்' எனக்கூறி விடுத்தார்.

பராசரமுனிவர், உரோமசமுனிவர் கட்டளையின்படி சில முனிவருடன் திருவிடைமருதூரைச் சேர்ந்தார்; காவிரித்தீர்த்தத்திலே படிந்தார்; கனக தீர்த்தத்திலும் நீராடினர்; மருதவாணரை முப்போதும் எப்போதும் நன்கு வழிபாடாற்றினர்; அத்தீர்த்தக்கரையிலே சிலநாட்கள் வசித்துவந்தார்; மனக்கலக்கம் தீர்ந்தார்; அத்தீர்த்தத்தின் பெருமையை நினைந்துநினைந்து உருகினர்; மிக அழகாகத் திருப்பணி செய்து நன்கு திருத்தினர். அக் காரணத்தால் அது பராசரதீர்த்தம் என்னும் பெயரைப் பெற்றது.]

கலிநிலைத்துறை

வசையில் காருணி யாமிரு தத்தினோர் வடகீழ்த்
திசையி னோர்கணை வீழ்ந்திடு சேய்த்தினோர் தீர்த்தம்
இசை வளர்த்திடு பராசர தீர்த்தமென் றிலங்கும்
விசைகொள் வின்மதி மூழ்குதல் விசேடமா மதனில். 1

வாயு தேவன்மற் றதற்குறு தேவதை மருங்கின்
மீயு யர்ந்துநின் றிலங்குமோர் வேம்பெனுந் தாரு
மேய தன்புடைக் கண்ணுவ முனிவரன் விளங்கும்
காயுஞ் சூற்படை வயிரவ னதைநிதங் காப்போன். 2

பொலியு மன்னதிற் படிந்தனர் பூசுரர் தமக்குத்
திலம ளித்திடின் தானமாய்த் தீவினை யகலும்
குலவு சில்பக லதன்புடை வசித்திடிற் கூரும்
மெலிவு நீங்கிடும் புனிதமெய் திடுமன மிகவும். 3

அன்ன தாகிய தீர்த்தமா புரத்ததா யவிரும்
துன்ன திற்படிந் தநேகர்கள் பழவினை தொலைத்தோர்
உன்னு மற்றதைப் பராசர தீர்த்தமென் றுரைத்த(து)
என்ன காரணத் தாலெனி லஃதெடுத் திசைப்பாம். 4

முச்ச கந்திரி புகழுறு பராசர முனிவன்
கச்ச கந்திக ழிளமுலைப் பனிமொழிக் கனிவாய்
மச்ச கந்தியைப் புணர்ந்ததின் வருந்தவ றகற்ற
நச்ச கந்தினம் விளைத்திட நாள்பல கழித்து. 5

---

1. சேய்த்தின் - தூரத்தில். இசை - புகழ். வில் மதி - மார்கழிமாதம்.

2. மீ உயர்ந்து - மேலே உயர்ந்து. காயும் - கோபிக்கும். சூற் படை - சூலாயுதம்.

3. படிந்தவர் - மூழ்கினோர்: வினையாலணையும்பெயர். திலம் - எள். கூரும் மெலிவு - மிக்க இளைப்பு.

5. முச்சகம் - மூவுலகம். கச்சு அகம் திகழ் - கச்சினுள்ளே விளங்கும்: கச்சு - ரவிக்கை. மச்சகந்தி- வலைச்சி: ஓடமோட்டும் தொழிலையுடையாள். வரும் தவறு அகற்ற. நச்சு அகம் தினம் விளைத்திட: நச்சு அகம் - விரும்பும் மனம்.

ஓது மோர்பக லெதிர்ப்படு முரோமச முனிவன்
பாத பங்கயம் பணிந்தெழுந் தன்பொடு பகரும்
மாத வத்தனி மேருவே மறையினு கரமே
சோதி தன்னருட் கினியனே யெனப்பல துதித்து. 6

பன்னு தெண்டிரைப் பரவைசூழ் பாருல கிதனுள்
மன்னு புல்லறி வுற்றிடு மணுளர்நெஞ் சென்னும்
துன்னு மீனினங் களைக்கவர் தொடர்வலை யன்றோ
கன்னன் மென்மொழிப் பொன்னனார் கதிர்முக வலயம். 7

ஊழி னிற்பெரு வலியுள யாவைமற் றென்று
சூழி னும்மஃ ததற்குமுன் தோன்றிடு மன்றே
ஏழை யேனெழின் மச்சகந் தியினிடத் தின்பம்
வீழ லுற்றன னதனைமுன் விலக்கில துள்ளம். 8

அன்ன தன்பினீண் டதைக்குறித் தருவருப் பெய்தி
இன்ன லுற்றிடு கின்றதி யானுமத் துன்பந்
தன்னின் மூழ்கினேன் புகலுமிக் கொடுந்துயர் தவிர்தற்(கு)
என்னை செய்குவ னென்றன னுரோமச னியம்பும். 9

கலிவிருத்தம்

தேறுபொற் பணிகளுந் திகழு மாடையும்
மாறிடப் பிரிந்திடின் மாத ரென்றிடல்
கூறிடு மலப்புழுக் குரம்பை யேயலால்
வேறுறக் கண்டதென் விளம்பு காலையில். 10

---

6. மறையின் ஆகரம்-வேதக் கடல். சோதி-சோதிர் மகாலிங்கேசர்.

7. பரவை-கடல். பார் உலகு இதனுள். மணாளர் நெஞ்சு-ஆடவர் மனம். புல் அறிவு-அற்ப அறிவு: புன்மை-கீழ்மை. ஆடவர்நெஞ்சம் மீனினமாகவும் பெண்கள்முகம் வலையாகவும் உருவகம் செய்யப்பட்டது.

8. ஊழ் - 'இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி' என்பர் பரிமேலழகர். பெருவலி: பண்பாகுபெயர். சூழினும்-பலருடனும் பழுதற எண்ணினும். உம்மை: எச்சவும்மை. முன் இரண்டடிகள், திருக்குறள் அடிகளைக் குழைத்தமைத்தமை காண்க. ''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான்முந் துறும்.'' (குறள்-380). வீழல்-விரும்பல்.

9. பின் ஈண்டு அதைக் குறித்து. இன்னல்-துன்பம். என்றனன் என்றது பராசரமுனிவனை.

10. பொற்பணி-பொன்னாபரணம். மலக்குரம்பை, புழுக்குரம்பை எனத் தனித்தனி கூட்டுக. குரம்பை-கூடு.

தோலிது நரம்பிது சோரி நீரிது
கோலுறு தசையிது குடர்மற் றீதென
ஏலுறச் சிலபக லெண்ணும் போதினில்
வேல்விழி மகளிர்பால் வேட்கை நீங்குமால். 11

திருவுறு மகளிர்பால் வேட்கை தீர்ந்திடின்
மருவிடும் வீடனுர் மருவு போதினும்
பரசிவத் திடைமனம் பற்றி நிற்பினும்
இருவினை சமனுறு மெனினு மெய்திடும். 12

நிலைபெறு பரத்திடை நிலவு நெஞ்சரை
உலகினி லவர்செயும் வினைவந் தொன்றிடா
வலியுறு மந்திர மருந்து வல்லரை
நலிவுசெய் திடுங்கொலோ நண்ணுந் தீவிடம். 13

தூயவ நின்மன ந் தொடர்ந்து நிற்றலின்
தீயது நின்னையுஞ் சேர்ந்தி டாதினி
ஆயினுஞ் சபலநீ யடைந்த தன்மையான்
மேயது போம்வழி விளம்பு வாமரோ. 14

இனிதரு ளிடைமரு தடைவுற் றெண்ணில்சீர்க்
கனகதீர்த் தத்தினிற் கலந்து மூழ்கியே
புனிதநீர் வேணியற் பணிந்து போற்றிடின்
துனிதவிர்ந் துன்மனஞ் சுத்தி யெய்திடும். 15

---

11. சோரி - குருதி. கோல் உறு தசை - கோலுதலுற்ற தசைகள்: தசைப்பிண்டம் என்றபடி. ஏல் உற - பொருந்த. வேல் விழி - வேல் போலும் கூரிய விழிகள். வேட்கை - விருப்பம். ''குடரும் கொழுவும் குருதியும் என்பும், தொடரும் நரம்பொடு தோலும் - இடையிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள், எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்'' (நாலடி - 46). ''என்பினை நரம்பிற் பின்னி உதிரந்தோய்த் திறைச்சி மெத்திப், புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட்டு, ஒன்பது வாயி லாக்கி ஊன்பயில் குரம்பை செய்தான், மன்பெருந் தச்ச னல்லன் மயங்கினுர் மருள என்றுன்'' (சீவகசிந்தாமணி - 1577). இழிப்புச்சுவையணி.

12. அனுர்=அன்னுர்: தொகுத்தல். அன்னுர் வீடு மருவு போதினும்.

13. பரத்திடை-வீட்டுலகினை. பரம்-பரம்பொருள்: சிவபெருமான். வலிய மருந்து மந்திரம் வல்லாரைக் கொடிய விடம் துன்புறுத்தாது என்றபடி. நலிவு - வருத்தம்.

15. வேணி - சடை. கனக தீர்த்தம் - காக்கைக் குளம்.

என்றுநீ டருளொடு மினிதி யம்பினன்
நன்றென விடைகொடு நவில்ப ராசரன்
சென்றுயர் முனிவரர் சிலவர் சூழுறத்
துன்றெழி லிடைமரு திடத்தில் துன்னினன். 16

கலந்துறு வளமெலாங் கண்ணரி னேக்கினன்
நலந்தரு பொன்னியி னண்ணரி யாடினன்
இலங்கருள் வாவியு மெழில்கொள் பொன்னெனத்
துலங்குறு வாவியுந் தொடர்ந்து மூழ்கினன். 17

மருதிறை யவனடி வணங்கி யேத்தினன்
பெரிதுகந் தேகினன் பிறங்கு மத்தடத்(து)
அருகினிற் சிலபக லமர்ந்தி ருந்துதன்
கருதுநன் மனத்துறு கலக்கந் தீர்ந்தனன். 18

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கனகமா தீர்த்தந் தோய்ந்து கடுவினை தொலைத்தோம் வேளை
முனிபரற் பணிந்து மேலா மொழியவன் கருணை பெற்றேம்
இனையசீர்த் தடத்தின் பாங்க ரிருந்தகத் தூய்மை யுற்றேம்
எனநினைந் ததனைப் பின்னு மெழில்பெறத் திருத்து வித்தான். 19

பகருமந் நிமித்தந் தன்னற் பராசர தீர்த்த மென்னப்
புகழுறு மினிய நாமம் பொருந்திய தினிவெம் பாவத்
துகளறு சோம தீர்த்த மான்மியந் தொடங்கு கின்றேம்
திகழுறு முமையாள் பங்கன் சேவடிக் கன்பு மிக்கீர். 20

பராசரச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 634

---

16. நீடு அருளொடும். துன்னினன் - அடைந்தான்.

17. அருள் வாவி - காருணியாமிர்த தீர்த்தம். பொன் எனத் துலங்குறு வாவி - கனகதீர்த்தம்.

18. உகந்து - விரும்பி; மகிழ்ந்து என்க.

19. தோய்ந்து - முழுகி. வேளை முனி பரன் - மன்மதனைக் கோபித்து எரித்த சிவபெருமான். திருத்துவித்தான் - மிக அழகியதாகத் திருப்பணி செய்தான்.

20. நிமித்தம் - காரணம். துகள் - குற்றம். பங்கன் - பாகத்திலுடைய சிவபெருமான்: பங்கு - பாதி.

பதினைந்தாவது

# சோமதீர்த்தச் சருக்கம்

[இந்திரன் முதலிய தேவர்களுக்குக் குரவராகிய வியாழபகவானைச் சந்திரன் அணுகி வணங்கிநின்றான்; சில ஆகமங்களை எனக்கு உணர்த்தி யருளுக என வேண்டி இரந்தனன். தேவகுருவும் நன்றென உடன்பட்டார். சந்திரனுக்கு அவன் வேண்டியவாறே நூல்களை உணர்த்திவருவாராயினர். வியாழபகவான் மனைவி தாரை என்பவள் சந்திரன் அழகிலே ஈடுபட்டாள். நாடோறும் பழகிய பழக்கமிகுதியும், அவன் அழகுமிகுதியும் தாரையின் மனத்தைக் கொள்ளைகொள்வதாயின. சந்திரனும் தன் வலியமனத்தைப் பறிகொடுத்தான்; அவளைக்கூடி மகிழ்ந்தான்; தாரையை உடன்கொண்டு தன்னுலகம் சென்றான். இருவரும் மனமகிழ்ந்து இன்பந்துய்த்திருந்தனர்.

இதனை வியாழபகவான் உணர்ந்தார். சுக்கிரனாகிய அசுரகுருவையும் அழைத்துக்கொண்டு பிருகஸ்பதி, தேவேந்திரன் அத்தாணிமண்டபத்தை அடைந்து இச்செய்தியை அறிவித்தனர். தேவேந்திரன் வெகுண்டான்; சந்திரனை அழைத்தான்; குருபன்னியை விரும்புதல் தக்கதாமோ? எனக் கடிந்தான்; தாரையை விடுமாறு பணித்தான். அதனைக்கேட்ட சந்திரன் அவளைவிட மனமில்லை என்று காமவசத்தனாய்க் கூறினன். அதனை உணர்ந்த தேவர்கள் சினங்கொண்டனர். போருக்கு எழுந்து சந்திரனை வளைந்துகொண்டனர். சந்திரனும் தனது பரிசனங்களுடன் தேவர்களை எதிர்த்தான். இருவர் சேனைகளும் முனைந்து போர்செய்தன. உலகம் அஞ்சியது. அப்பொழுது உருத்திரன், திருமால், பிரமன் முதலியோர் ஆங்கு அணைந்தனர்.

உருத்திரமூர்த்தி கட்டளையால் பிரமதேவர் அவர்களை அணுகிப் போரை விலக்கினர்; சந்திரனைநோக்கி, அறிவில்லாதவனே! இக்காரியம் செய்யலாமா? எனக் கூறிச் சினந்தார்; தாரையைவிடப் பணித்தார். சந்திரன் உடன்பட்டிலன்; மறுத்தான். பின் பிரமதேவர், சந்திரனே! தக்கன் வேள்வியில் நீ பட்ட துன்பத்தை மறந்தனையோ? இறைவன் ஏவலினால் உன்பால் நான் வந்தேன்; தாரையை நீ விடாயாயின் அவளை முன்னர்ச் சபிப்பேன் என்றனர். பிரமதேவர் சொல்லைக்கேட்ட சந்திரன் தாரையை விடுத்தான். சந்திரன்பால் தோன்றிய கருவுடன் தாரை குருபகவானை

அணுகி முன்நின்ருள். அவளைக்கண்ட வியாழன் மாதர்களுக்கு இயல்பு இதுதானே? எனக் கடிந்தார். தாரை அஞ்சி ஒதுங்கிநின்ருள். ஒரு மகவைப் பயந்தாள். அம்மகவைச் சந்திரன் 'என்மகன்' என்று எடுக்க வந்தான். பிருகஸ்பதியும் 'தன்மகன்' எனக் கூறி எடுக்கக் கிட்டினன். சந்திரனுக்கும் குருவுக்கும் சண்டை மூண்டது. அதுகண்ட பிரமதேவர் தாரையை நோக்கி, நீ இக்குழந்தையை எவர்பால் பெற்ருய்? என்றனர். தாரை நாணத்தால் முகங்கவிழ்ந்து ஒன்றும் சொல்லாதிருந்தாள். அதனை மைந்தன் கண்டான்; தாயைநோக்கினன்; நெஞ்சில் வஞ்சமேன்? என்ருன்; உண்மையை ஒளியாமல் சொல்லென்ருன். பிரமன் அவனைக் கையமர்த்தித் தாரையை விளித்து, இம்மைந்தனுக்குத் தந்தை யாவர்? என்ருர். தாரை நாணத்தோடு சந்திரன் என மெதுவாகச் சொன்னுள். சந்திரன் மகிழ்ச்சி யோடு மகவை எடுத்து மடிமீதிருத்திப் புதனெனப் பெயரும் சூட்டினன். தேவரனைவரும் சந்திரன் செய்கையை நோக்கிப் பாவி என இகழ்ந்தனர். வியாழபகவான் சீறி எழுந்து சந்திரனைச் சபித்தார். 'உன் அழகு கெட் டொழிக, நீ துன்புறுக, கயரோகத்தால் பிடிக்கப்பட்டு அலைக' என்ருர். குருசாபம் உடனே சந்திரனைப் பற்றியது. சந்திரன் உள்ளம் பதைத்தான்; சாபவலியால் அழகழிந்தான்; கயநோயால் வருந்தினன்.

பின்பு, சந்திரன் துருவாசமுனிவரைச் சார்ந்து விண்ணப்பித்தான்; இத்துன்பினுக்கு என்செய்வேன் என்ருன். அதனைக்கேட்ட துருவாசர் அவனை நோக்கி, 'இச்செயல் மிகக் கொடுவினையாம்; அதனைப் போக்கும் வழி ஒன்றுண்டு; நீ திருவிடைமருதூரை அடைந்து, கனகதீர்த்தத்திலே படிந்து, சோதி மகாலிங்கேசரை வழிபட்டுவரின் நீங்கும்; இதனையன்றி இக்கொடுவினை எவ்வாற்ருனும் தீராது' என்றருளினர். துருவாசமுனிவர் கட்டளைப்படி சந்திரன் இடைமருதை அடைந்தான். கனகதீர்த்தத்தில் படிந்தான். மகாலிங்கேசரை வழிபட்டு வருவானுயினன். சூரியன்முன் இருள்போல் சந்திரனைப்பற்றிய கொடுவினைநீங்கியது. நல்வாழ்வுபெற்ருன். சந்திரன் இடைமருதீசரைப் பன்னுள்வழிபட்டிருந்தான். காருணியாமிருத தீர்த்தத்தின் கீழ்பக்கத்திலே ஒருதடாகம் அமைத்தான். அத்தீர்த்தம் சோமதீர்த்தம் எனப்படும். அதன் தெய்வம் சோமன், காவல் தண்டீசன், இருடி கௌதமன், அந்தத் தீர்த்தத்திலே சோமவாரத்திலே மூழ்குதல் சிறந்தது. அத்தீர்த்தத்திலே முழுகிக் கன்னிகாதானம், பாயசம், கனி வருக்கம் முதலியவற்றைப் பிராமணருக்குத் தானம்செய்யின் ஐம்பெரும் பாதகமும் அகலும். அதில் விதிப்படி முழுகிப் பயனடைந்தோர் பலர். மற்றும், கனகதீர்த்தத்தின் தென்மேற்றிசையில் ஒருதீர்த்தம் சந்திரன் பெயரால் விளங்கும். அதற்கு இருடி துர்வாசர், சந்திரன் காவல், மரம்

மகிழமரம், தெய்வம் சங்கரன். இதில் மூழ்கி நெய், எள், ஆடை, அரிசி, மலர், சந்தனம் இவற்றைத் தானம்செய்யின் பாவங்கள்போம். பூனையுண்டமிச்சில், இழிகுலத்தோர் மிச்சில், பெண்டிருண்டசேடம் இவற்றையருந்திய குற்றங்கள் நீங்கும். வலிமை, பட்டாடை, செல்வம் முதலியன பெருகும். சந்திரன், பின்னும் காருணியாமிர்த தீர்த்தமாடி இறைவரைப் பணிந்து இன்பநிலை எய்தினன்.]

கலிநிலைத்துறை

இந்தி ரன்முதற் கடவுள ரிசைபெறு குரவன்
சந்தி ரன்றனை யடைந்தெதிர் தாழ்ந்துநின் றேத்தித்
தந்தி ரஞ்சில வுணரநீ தருகெனக் கென்ன
முந்தி ரந்திட வினிதென மொழிந்திடு நாளில். 1

காரை யந்தரத் தலைத்திடு கருங்குழற் பசும்பொன்
தேரை யச்சுறுத் தல்குலாள் திகழவன் மனைவி
தாரை யென்பவள் கன்னலந் தனுத்தனு வில்லோன்
போரை யாற்றிட வலியிலாள் மிகுமயல் பூண்டு. 2

அனுதி னந்தரு பழக்கமு மிகுந்திடு மழகும்
இனிது மேவுசந் திரனிடத் திவன்றனைக் கொடுநாம்
அனைய மாரனை வேறுமென் றவன்றனை யழைப்பான்
துனிகொள் நெஞ்சினுக் கிசைத்துமுன் விடுத்தனள் தூது. 3

1. கடவுளர்-தேவர்கள். இசை-கீர்த்தி. குரவன் - ஆசிரியராகிய வியாழ பகவான். தந்திரம் - கலைஞானநூல்கள்; ஆகமம் எனினுமாம். இரந்திட - யாசிக்க. தனை என்றது குரவனாகிய தன்னை என்க. சந்திரன் தருக என்னக் குரவன் மொழிந்திடும் நாளில்.

2. காரை அந்தரத்து அலைத்திடும் - மேகத்தை ஆகாயத்திலேயே வருத்திடும்; அலைத்திடும் - அலையச்செய்யும், வருந்தச் செய்யும். அவன் என்றது பிருகற்பதியை. தாரை என்பவள் தேவகுருவின் மனைவி. கன்னல் அம் தனு-கரும்பாகிய அழகியவில்லினையுடைய. தனு இல்லோன்- உடல் இல்லாதவன்: மன்மதன். தனு - வில், உடம்பு. தனுவில்லோன் என்றது நயம்.

3. மாரன் - மன்மதன். வேறும் - வெல்லுதும். துனி கொள் நெஞ்சு - நடுங்கிய மனம்.

மேவு மன்புறு தாதையே யாயினும் விளம்பும்
தாவில் காதல ராயினுஞ் சகோதர ரெனினும்
யாவ ராயினு மிளமையு மெழிலுமெய் தினரேல்
பாவை மார்மன மவரிடைப் படர்ந்திடு மன்றே. 4

விகுதி முன்னிடை நிலைமுத லவற்றெடு மேவப்
பகுதி யின்பொரு ளதனிடத் தவாவுறு பரிசின்
தொகுதி யுற்றிடு பூண்முலை தொடர்ந்திட மயங்கி
மிகுதி டத்துறு முளத்தசந் திரனுமே வினனே. 5

கலக வேல்விழி யவர்முகங் காணினு மவர்கள்
இலகு தீஞ்சொல்கேட் பினுமவர் தம்மையெண் ணிடினும்
உலகி லாடவர் மனமுரு கிடுமெனி லுவரே
வலிமை செய்திழுத் திடினெவர் மறுத்திட வல்லார். 6

முத்த மூரலின் மயற்கடன் மூழ்கிநீ டின்பம்
துய்த்த னன்னுள ந் தேறினன் சூழ்ந்துபின் னவளை
உய்த்த காதலிற் கொண்டுதன் னுலகினி லேகி
வைத்த னன்னினி திருந்தனன் மருவினன் மகிழ்ச்சி. 7

அன்ன தோர்ந்துட னெழுந்துசூ ழமரர்க ளோடு
பொன்னும் வெள்ளியுஞ் சதமகன் கொலுவினிற் போகி
மன்னு மித்திறம் புகன்றனர் மற்றவன் வெகுளுற்(று)
என்னை செய்தன னவன்றனை யழைமினென் றிசைத்து. 8

---

4. தாதை - தகப்பன். தா இல் - கெடுதல் இல்லாத. காதலர் - அன்புடையார்: நட்பினர் என்க. வேற்றுப்பொருள்வைப்பணி.

5. பகுதி - முதனிலை. விகுதி - இறுதிநிலை. விகுதி முன் என்றது காலமுன் என்க. பரிசில் - தன்மையின். விகுதி பகுதியின் பொருளை வேறுபடுத்துவது. பூண் - ஆபரணம். பூண் முலை: அன்மொழித்தொகை. உளத்த - உள்ளத்தினையுடைய.

6. கலகவிழி வேல்விழி எனக் கூட்டுக. விழியவர் - விழியினையுடைய மகளிர். உவர் - அம்மகளிர்.

7. முத்தமூரல் - முத்துப்போன்ற பற்களையுடையாள்; அன்மொழித் தொகை: அவள் தாரை. மூரல் - பல். மயற்கடல் - மயலாகிய கடல்: பண்புத்தொகை. சூழ்ந்து-ஆலோசித்து. இன்பம் துய்த்தனன், தேறினன், வைத்தனன், இருந்தனன், மருவினன் என்க.

8. ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. பொன் - வியாழபகவான். வெள்ளி - சுக்கிராசாரியர்: இவர் முறையே தேவகுருவும் அசுரகுருவுமாவர். பொன்

தேவர் கூவிட வெதிருறு திங்களை நோக்கி
யாவ ரும்பணிந் திடத்தகு குரவனுக் கிசைந்த
பாவை தன்னை நீ விரும்புதல் பான்மையோ விங்குன்
ஆவல் தன்னையு மவளையும் விடுகென வறைந்தான். 9

பற்று பாவமும் பகையொடு பழியுமக் களங்கன்
சற்று மோர்ந்திலன் செருக்கினல் தழீஇயவெங் காமம்
குற்ற மேற்றிடு மதுவினுங் கொடியதை யன்றே
மற்றெ னக்கவள் தனைவிட மனமிலை யென்றான். 10

அந்த வாசகங் கேட்டலு மமரர்க ளெவரும்
இந்தி ரன்றமக் கிசைத்திடு மேவலுஞ் சினமும்
முந்து றப்படை கொடுசமர் செய்திட முன்னிச்
சந்தி ரன்றனை வளைந்தனர் பரிதிபோற் சார்ந்து. 11

நின்ற சந்திரன் தன்படை நிகழ்பரி சனமும்
துன்று மற்றுள படைகளுஞ் சூழ்ந்திடத் தானும்
கன்றி முன்னுற வெதிர்த்தனன் கலந்திரு படையுள்
ஒன்று வானவ வீரரு மெதிரெதி ருற்று. 12

தேரி லேறியும் விமானமேல் திகழுற நின்றும்
வார்வி லம்புவாள் வேல்கதை மழுவெழுத் திகிரி
கூர்கொள் முத்தலைச் சூலமா தியபடை கொண்டு
போரி யற்றின ரார்ப்பொடு புணரியோ ரிரண்டின். 13

---

வெள்ளி என்றது ஒரு நயம். சதமகன் - இந்திரன்; நூறு அசுவமேத யாகங்களைச்செய்து முடித்தவன்: காரணக் குறி. சதம் - நூறு. மகம் - யாகம். அவன் - தேவேந்திரன். வெகுளுற்று - கோபித்து.

9. பான்மையோ - தக்கதோ. ஆவல் தன்னையும் விடுக, அவளையும் விடுக.

10. "பகைபாவம் அச்சம் பழியென நான்கும், இகவாவாம் இல்லிறப்பான் கண்" என்ற திருக்குறட் கருத்து அமைந்துள்ளமை காண்க. களங்கன்- களங்கத்தையுடைய சந்திரன். களங்கம் - முயற்கறை. காமம் மதுவினும் கொடிது என்க. மது - கள்.

11. முந்துற - முற்பட. சமர்- போர். முன்னி - கருதி. பரிதி-சூரியன்.

12. தன் புடை - தன் பக்கத்தில். பரிசனம் - ஏவலர்கள். கன்றி - கோபித்து. ஒன்று - பொருந்திய.

13. வார் வில் - நீண்ட வில். திகிரி - சக்கரம். படை - ஆயுதம். புணரி ஓர் இரண்டின்-ஒப்பற்ற இரு கடல்களைப்போல: இன் ஐந்தனுருபு.

விண்ண திர்ந்தது திகாந்தமு மதிர்ந்தது விளங்கு
மண்ண திர்ந்தது பாதல மதிர்ந்தது மற்றும்
நண்ணு மித்திற மதிர்ந்திடு வேலையி னதிரு(டு)
அண்ண லுந்திரு மாலுநான் முகனுமாங் கணைந்தார். 14

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அரனரு ளேவல் தன்னு லரவிந்த னருகி னெய்தி
இருவர்தம் போரு மாற்றி யிந்துவைச் சினத்தி னேக்கி
வருதிவெண் மதியை நீயோர் மதியிலா திதனைச் செய்தாய்
குருவினில் லவள்மேல் காதல் கொள்வரோ வறிஞ ரன்றே. 15

அவள்தனை யினிமே லேனும் விடுதியென் றறைந்தா னல்லோன்
சவலமீ தூர வந்தத் தாரைதன் காத லாலே
பவமொடு பழியும் வந்து பலித்தன பலித்த போலும்
கவலையென் னினியோர் போதுங் கைவிடே னவளை யென்ருன். 16

அந்தணன் பின்னுந் தக்க னுற்றிய வேள்வி தன்னில்
முந்துநீ பட்ட பாடு முழுவதும் மறந்தாய் கொல்லோ
வந்தது நாமிங் குன்பால் வள்ளலே வலினு லன்றே
தந்திடா யெனிலன் னுளைச் சபிக்குது முன்னை யென்ருன். 17

அயனிது கூற வஞ்சி விடுத்தன னவளை யல்லோன்
வயினுறு கருவி னேடு நாணெடு வயங்கு மன்னுள்
பயிலுறு குருவின் முன்போய் நின்றனள் பார்ந்திட் டன்னுன்
இயல்பிதோ மாதர்க் கென்னக் கொடுமொழி பலவு மீந்தான். 18

---

14. திகாந்தம் - திசைகளின் முடிபு: வடசொல். வேலையில் - பொழுதில். நதி சூடு அண்ணல் - சிவபெருமான்.

15. அரவிந்தன் - பிரமதேவன்: அரவிந்தம் - தாமரை. இந்து - சந்திரன். வெண்மதியை - அறிவில்லாதவன் ஆகலின்: வெண்மதி - வெள்ளிய சந்திரன், வெளிற்றறிவு. மதி இலாது - புத்தியில்லாமல். குருவின் இல்லவள் - குருபத்தினி.

16. அல்லோன் - இராக்காலத்துக்கு உரிய சந்திரன்: அல் - இருள். சவலம் - சபலம்; ஆசை.

17. அந்தணன் - பிரமன். வள்ளல் - சிவபெருமான். அன்னுளை - அத்தாரையை.

18. அயன் - பிரமதேவன். அல்லோன் வயின் உறு கரு - சந்திரனுல் உற்ற கருப்பம். அல்லோன் அவளை விடுத்தனன், அல்லோன் வயின்

வெகுளலும் பயந்து நாணி விதிர்ப்புற வொதுங்கி நின்ருள்
மகவினை யுயிர்த்தாள் மற்றம் மகவினை மகிழ்விஞேடும்
திகழுறு கலையி னுனென் சிறுவனென் றெடுக்க வந்தான்
தகவுறு குருவு மென்றன் தனயனென் றுரைத்துச் சார்ந்தான். 19

இருவரு மதியி லாராய்ச் சமரினுக் கெழுந்திட் டார்கள்
அருமறைக் கொடியி னுன்மற் றன்னதை மறித்துத் தாரை
திருமுக நோக்கி யிந்தச் சேயினை யெவர்பாற் பெற்ருய்
வெருளுறே லுரைத்தி டென்ரு னுரைத்திலள் வெள்கி யொன்றும். 20

மைந்தனங் கதனை யோர்ந்து தாயுறு வதன நோக்கிச்
சிந்தையிற் கபட மென்னே செப்புதி யுள்ள தென்ருன்
அந்தண னவனைச் செங்கை யமர்த்தியன் னுளை நோக்கித்
தந்தையா ரிவனுக் குண்மை சாற்றுதி வெள்க லென்ருன். 21

விதுவென நாணி ஞேடு மெல்லென விளம்ப லுற்ருள்
கதுமென மகிழ்ச்சி யோடு கலைமதி யோடி யந்த
மதலையை யெடுத்து வந்து மடிமிசை யிருத்தி யன்னுன்
இதமுறு மறிவை யோர்ந்து புதனென நாம மீந்தான். 22

---

உறு கரு. அல்லோன்: இடைநிலைத் தீவகம். அல் - இருட்டு. அல்லோன்: குறிப்பு மொழியாய் இருண்ட அறிவுடையோன் எனப் பொருள் தருதல் காண்க. அன்னுள் - தாரை.

19. விதிர்ப்புற - நடுக்கம் பொருந்த. கலையினுன் - சந்திரன். தனயன் - புத்திரன்.

20. இருவரும் - வியாழனும் சந்திரனும். மதி இலாராய் - புத்தி இல்லாதவராய். மறைக்கொடியினுன் - பிரமதேவன். சேயினை - புத்திரனை. வெருளுறேல் - அஞ்சற்க. வெள்கி - வெட்கப்பட்டு.

21. தாய் என்றது தாரையை. வதனம் - முகம். கபடம் - வஞ்சனை. உள்ளது - உண்மையை. அந்தணன் - பிரமன். இவனுக்குத் தந்தை யார் சாற்றுதி. வெள்கல் - வெட்கப்படாதே.

22. விது - சந்திரன். கதும் என - விரைவாக. மதலை - புத்திரன். புதன் சந்திரனுடைய புதல்வன். ஓர்ந்து - ஆராய்ந்து. ''புந்தியா லுயர் புதனெனும் புதல்வனை மகிழ்வால், தந்தியாவரும் களிப்புற விருக்குநாள் தன்னில்'' (வில்லிபார. குருகுல. செய்யுள். 6)

அன்னதை யுணர்ந்த தேவ ரனைவரு மதியை யாசான்
பன்னியைப் புணர்ந்த பாவி யென்றுமுன் பழித்திட் டார்கள்
பொன்னவ னெழுந்து சீறிப் பொருந்திடுன் னழகு மங்கி
இன்னலுங் கயமு மெய்தித் திரிதியென் றீந்தான் சாபம். 23

சொற்றிடு முன்ன ரந்தத் தூயவன் சாபம் வந்து
பற்றிய தஃதி னேடு பாவமு மருவித் திங்கள்
உற்றுளம் பதைத்துச் செவ்வா யுலர்ந்துதன் மேனி நீடு
பொற்பழி திறத்தி னேடு கயமுமேற் பொருத்தி மாழ்கி. 24

கலிநிலைத்துறை

மெய்த்த வத்துரு வாசனே டிவையெலாம் விளம்பி
இத்த கைப்பெருந் துயரினுக் கென்செய்கே னென்றான்
அத்த வத்தின னிவைகள்வெங் கொடுவினை யாகும்
உய்த்தி டின்னவை தமக்குமீண் டொருமருந் துளது. 25

அந்த மில்புக ழிடைமரு தடைந்துபொற் றீர்த்தம்
முந்து றப்படிந் தவணுறை முதலவன் றன்னை
வந்த னஞ்செயி னல்லதை மருவுமித் துன்பம்
எந்த வாறெவ னியற்றினு மேகிடா தென்றான். 26

நன்றெ னப்பகர்ந் தவனுமத் தலத்தினை நண்ணித்
துன்று மன்புட னனையதீர்த் தந்தனில் தோய்ந்து
மன்ற லொன்றுகொன் றைச்சடை வரதனைப் பணிந்தான்
கன்று வெவ்வினை யகன்றது கதிரின்முன் னிருள்போல். 27

---

23. ஆசான் பன்னி - குருவின் மனைவி; பத்தினி; பன்னி. முன் - எதிராகவே. பொன்னவன் - வியாழ பகவான். பொருந்திடு உன் அழகு. இன்னல் - துன்பம். கயம் - க்ஷயரோகம்.

24. தூயவன் - தேவகுரு. பொற்பு அழி திறத்தினேடு: பொற்பு - அழகு. மாழ்கி - மயங்கி. திங்கள் செவ்வாய் எனக் கிழமையின் பெயர் வந்தது ஒரு நயம். செவ்வாய் - சிவந்த வாய்.

25. மெய் தவம் துருவாசனேடு. வெம் கொடு வினை - மிகப் பொல்லாத பாவம்.

26. பொற்றீர்த்தம் - கனக தீர்த்தம். அல்லதை: ஐ சாரியை. முதல்வன் - முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்: ஸ்ரீ மகாலிங்கேசர். வந்தனம் - வழிபாடு.

27. அவனும் - சந்திரனும். அனைய தீர்த்தம் தனில் - அந்தக் கனக தீர்த்தத்தில். மன்றல் ஒன்று-மணம் பொருந்திய. வரதன்-சிவபெருமான்.

பண்ணி னீடுபற் பலதுதி பகர்ந்தனன் பரமன்
விண்ணரின் மால்விடை மீதுமை தன்னுடன் வெளிநின்(று)
எண்ணி லாவர மகிழ்வுற வருளொடு மீந்தான்
வண்ண வெண்மதி யரனடி வணங்கிநின் றேத்தி. 28

ஈசன் மேனியெண் வகையுளொன் ருய்விளங் கெழிலும்
தேசு மிக்கவன் விழியினென் ருகிய சிறப்பும்
வாச நீடவன் வேணியில் வயங்கிடு வாழ்வும்
பேசு வண்கலே தேய்தலும் வளர்தலும் பெற்று. 29

மருத வாணனைப் பின்னருஞ் சிலபகல் வணங்கக்
கருதி யத்தலத் திருந்தன னிருந்திடுங் காலே
பொருவில் சீரருள் வாவியின் பூருவ திசையில்
ஒருச ரம்படு சேய்மையி லொருதடஞ் சமைத்தான். 30

சோம னுக்கிய திறத்தினுல் துலங்குமவ் வாவி
சோம தீர்த்தமென் றடமதைச் சூழ்ந்துறு தெய்வம்
சோமன் காவல்தண் டீசனுங் கவுதமன் துறவோன்
சோம வாரமாந் தினத்ததில் தோய்ந்திடல் விசேடம். 31

---

கன்று வெவ்வினே - வருந்துதற்குக் காரணமாகிய கொடிய வினே. கதிரின் முன் - சூரியன்முன்பு.

28. மால் விடை - திருமாலாகிய இடபம்; பெரிய இடபம் எனினுமாம். மால் - திருமால், பெருமை. விடை மீது உமை தன்னுடன். வண்ணம் - அழகு.

29. ஈசன் மேனி எண்வகை: ''ஐம்பெரும் பூதம் இருசுட ரான்மா அன்றிவே றுலகிலே அவைதாம், உன்பெரு வடிவ மெனப்படு மன்றே ஓர்ந்துளோர்க் கிங்கிது தன்னுல், எம்பிரா னீயே நிறையதிட் டாதா என்பதற் கையமு முளதோ, வம்பரா மூர்க்கப் பேய்கடாம் மயக்கால் மாறுபா டுறப்பிதற் றுவரே'' (சிவதத்துவ விவேகம் - செய்யுள். 27); ''அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான், அவனே புவிபுனல்காற் ருவான் - அவனே, இயமான னுயட்ட மூர்த்தியுமாய் ஞான, மயனுகி நின்றுனும் வந்து'' (அற்புதத் திருவந்தாதி – செய்யுள். 21); ''இருநிலனுய்த் தீயாகி நீரு மாகி இயமான னுயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி ருகி ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி'' (திருநாவுக்கரசர் - தேவாரம்).

30. பொரு இல் - ஒப்பில்லாத. அருள் வாவி - காருணியாமிருத தீர்த்தம். பூருவ திசை - கிழக்குத் திக்கு. சரம் - அம்பு. சேய்மை - தூரம். தடம் - தடாகம்.

31. சோமன் - சந்திரன். துறவோன் - இருடி. சோமவாரம் - திங்கட்கிழமை.

தூய வப்பெரும் புனலிடை யன்புடன் தோய்ந்து
சாயல் வாணுதற் கன்னிகை தன்னுட னினிய
பாய சங்கனி வகையிவை பனவர்கட் குதவின்
தீய பஞ்சபா தகமுதல் யாவையுந் தீரும். 32

அருத்தி தன்னுட னத்தடந் தனிலணைந் தாடி
விரித்த தானமீந் திவ்வணம் வெவ்வினை தொலைத்துக்
கருத்த னீடரு ளெய்தினர் கணக்கில ரின்னும்
திருத்த வன்புரி தீர்த்தமொன் றுளததூஉந் தெரிப்பாம். 33

காக மின்புறு வாவியி னிருதியிற் கணையொன்(று)
ஏகி வீழ்ந்திடு சேய்மையி னினிதொரு தீர்த்தம்
மாக வின்கொடு சந்திரன் பெயரினல் வயங்கும்
ஆகு மங்கதின் முனிதுரு வாசனு மறவோன். 34

திங்கள் காவலன் விருக்கமேர்ச் செழுந்துணர் வகுளம்
சங்க ரன்றனித் தேவதை சார்ந்ததிற் படிவுற்(று)
அங்கு நெய்திலம் நெய்திடு கலையெழி லரிசி
கொங்கு லாமலர் சந்திவை யன்பொடு கொடுக்கின். 35

பூசை மிச்சில்பின் குலத்தினோர் புசித்திடு சேடம்
ஆசை பூட்டிடு மடந்தைய ரயின்றிடு சேடம்
பேசு மின்னவை யருந்திய பெரும்பவ மகலும்
தேசி கந்தரும் வன்மையுஞ் செல்வமும் பெருகும். 36

---

32. பனவர்கட்கு - பிராமணர்களுக்கு. பஞ்ச பாதகம் - ஐம்பெரும் பாதகம்.

33. அருத்தி - விருப்பம். அணைந்து ஆடி - பொருந்தி மூழ்கி. கருத்தன் நீடு அருள்: கருத்தன் - சிவபெருமான். கணக்கு இலர் - எண்ணில்லாதவர். திருத்து அவன்.

34. காகம் இன்புறு வாவி - காக்கைக் குளம் (கனக தீர்த்தம்). நிருதி - தென்மேற்குத் திசை. கணை - அம்பு. சேய்மை - தூரம். மாகவின் கொடு: கவின் - அழகு. சோமதீர்த்தம், துருவாசமுனி, சங்கரன் அதிதெய்வம், மகிழமரம்.

35. வகுளம் - மகிழ். நெய், திலம்; கலை - ஆடை, கொங்கு - வாசனை, தேன் எனினுமாம். சந்து - சந்தனம்.

36. பூசை - பூனை. பின் குலத்தினோர் - இழிந்த சாதியார். மாசை - பொன். ஆசை பூட்டிடும் எனினும் ஆம். அயின்றிடு சேடம் - உண்ட மிச்சில். தேசிகம் - ஒளி.

கறையு லாம்பனி மதியினர்ப் பலபகல் கடந்தோர்
மறமி யற்றியன் னதன்பெரு வலியினுற் கலைகள்
குறைவ தேயலா னிறைவுருக் குணத்தினை நோக்கி
உறுமி தற்கினி யென்னியற் றிடுவதென் றுன்னி. 37

தருண பானுவின் மாதரார் தரித்திடு குழைகள்
இருண்ம றைத்திடு மெழிலிடை மருதடைந் திறைவி
கருணை வாவியிற் படிந்துசென் றன்பொடு கவின்செய்
வருண மால்விடை மருதநா யகனடி வணங்கா. 38

இலகு பற்பல துதிகள்செய் தேகிமுன் னுரைசெய்
அலைத ரும்புனல் தடஞ்சமைத் தணியுறு கலைகள்
மலைகு னித்தவ னருளினுல் வளர்தல்கண் டுகந்தான்
கலையி லென்னிலென் னிருக்கினுங் கவின்மரு விடுமோ. 39

பண்டு வந்துவெம் பாதக மகற்றிய பரிசுட்
கொண்டு வந்துபின் னருமுறு குறையதூஉ மகற்றி
விண்த லத்துறு தன்பதி மேவின னன்றி
மண்டு மாலுழந் தயருமோ மருந்துகை கண்டோன். 40

மருத்து லங்கிய கடுக்கையோ னடித்துணை வனசம்
விரித்தி லங்கிடு தடாகமாங் கருத்தினீர் விதுவின்
திருத்த குந்தட மிரண்டுறு சிறப்புமிங் கிசைத்தாம்
உருத்தி ரப்பெருந் தீர்த்தமான் மியமினி யுரைப்பாம். 41

சோமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 675

---

37. கறை - முயற்களங்கம். பனி மதி - குளிர்ந்த சந்திரன்.

38. பானுவின்: இன் ஐந்தாவது ஒப்புப்பொருளில் வந்தது. கருணை வாவி - காருணியாமிருத தீர்த்தம்.

39. முன் உரை செய் தடம் என்றது 34-வது செய்யுளில் கூறியது. மலை குனித்தவன் - மேருமலையை வில்லாக வளைத்தருளிய சிவபெருமான். கலை இல் என்னில்-கலைகள் இல்லாமற்போயின். கலை: சிலேடை. வேற்றுப் பொருள்வைப்பணி. கலை - கல்வி, ஆடை: சந்திரனைக் குறிக்கும்போது சந்திரகலைகள்.

40. பரிசு உட்கொண்டு: பரிசு - தன்மை. விண் தலத்து உறு. மால் உழந்து - மயங்கி. இச்செய்யுளும் வேற்றுப்பொருள்வைப்பணி.

41. கடுக்கை - கொன்றை. வனசம் - தாமரை. விது - சந்திரன்.

## பதினறுவது

# உருத்திரதீர்த்தச் சருக்கம்

[ஸ்ரீ மருதவனேசருக்குத் தெற்குத்திசையில் அப்பெருமான் விழியி னின்று பெருகியதீர்த்தம் உருத்திரதீர்த்தம் எனப்பெயர்பெறும். கருடன் காவல், ஈசன் தெய்வம், இருடி பிப்பிலன், மரம் பச்சிலைமரம் (தமாலம்). அத்தீர்த்தத்திலே முழுகித் தேன் கம்பலம் முதலியவற்றைத் தானம் செய்யின் கொடிய பாவங்களும் நோய்களும் நீங்கும்.

முன்னொருகாலத்தில் நிமிச்சக்கரவர்த்தியின் புதல்வன் திட்டகேது என்பவன் நெடுங்காலம் புத்திரப்பேறின்றி, தருமங்கள் பலசெய்தான். பின்பு அவனுக்கு ஒரு புதல்வன் பிறந்தான். நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அப்புதல்வன் வளர்ந்துவந்தான். அப்புதல்வன் கழுத்தில் கண்டமாலை என்னும் நோய் உண்டாயிற்று. அதனுல் அப்புதல்வன் படும் துன்பம் தந்தையால் பொறுக்கமுடியவில்லை. மந்திரங்களால் மருந்து களால் போக்கப் பெரிதும் முயன்ருன். ஒன்ருனும் பலிக்கவில்லை. அவை பயனின்றியே ஒழிந்தன. அப்போது காத்தியாயனமுனிவர் அங்குவந்தார். மன்னன் பலவகை உபசாரங்களைச்செய்து அவரை வணங்கிப்போற்றினுன்.

உன் மனத்தில் உள்ள விருப்பம் யாது? என முனிவர் மன்னனை வினவினர். அரசன் தன் மனக்கவலையை விண்ணப்பித்து நின்ருன். முனிவர் இறைவரைத் தியானம்செய்து நெடுநேரம் இருந்தார். அரசனே! உன்மகன் முற்பிறப்பில் ஒருவணிகன் ; அவன் வீட்டின்புறத்து ஒரு சிவா லயமிருந்தது; அக்கோயிலில் சிதைந்திருந்த கற்களையெல்லாம் எடுத்துத் தொகுத்தான்; விற்றுத் திரவியம் சேர்த்தான்; சிவபெருமானை முன்னர்ப் பூசித்திருந்த திறத்தால் அவன் இப்பிறப்பில் அரசனுயினன். ஆயினும் சிவாலயத்துக் கற்களை எடுத்து விலைக்குவிற்ற குற்றத்தால் கண்டமாலை என்னும் கொடிய நோய் அவனை இப்பிறப்பிலே பற்றியது.

சிவத்திரவியத்தை எள்ளளவு கவர்ந்தோரும் கொடிய நோயால் வருந்துவர்; பின்பு நரகத்துன்பத்தைப் பலகாலம் அநுபவிப்பர். சந்திர சூரியர் உள்ளளவும் நரகத்துன்பம் அவருக்குத் தவிராது. அறிந்து சிவத் திரவியம் கவர்ந்தோர் உள்ளம் பதைத்து நடுங்கிக் கவர்ந்த பொருளைப் போல நான்குமடங்கு செலுத்திப் பிழைபொறுத்தருளுக எனச் சிவபெரு மானைப் பணிந்து இரந்தால் இப்பாவந்தீரும். அறியாமல் கவர்ந்த சிவத்

திரவியத்தின் இருமடங்கு கொடுத்து இறைவரைப் பணிந்து இரப்பாராயின் அவர்பாவம் கெடும்.

அன்றியும், அந்தணர்பொருளைக் கவரின் அதனை உணர்ந்து அப்பொருளின் இரட்டிகொடுத்து இறைஞ்சினுல் தீரும். அறியாமையால் கவர்ந்தாலும், பிறர்பொருளைக் கவர்ந்தாலும் துன்பம் வேண்டாதார் அவ்வாறேசெய்க. அவர்பால் பணிசெய்தோரும், பரிவர்த்தனைசெய்தோரும் தக்க முறைமையில் பெறலாம். அவர் மனமுவந்து கொடுத்தாராயின் பெறுதல் முறையாம். ஆகலின், அரசனே! இப்போதே நீ உன்மகனை உடன்கொண்டு இடைமருதிற்சென்று, உருத்திரதீர்த்தத்திலே விதிப்படி மூழ்கின் அந்நோய் அகலும் என முனிவர் உரைத்தார். மன்னன், முனிவர் கூறியபடியே இடைமருதடைந்து மகனை உருத்திரதீர்த்தத்திலே மூழ்குவித்துச் சோதிமகாலிங்கேசரை வழிபட்டுவரச்செய்தான். நோய் நீங்கியது. மன்னனும் அத்தீர்த்தத்திலே மூழ்கி இன்புற்றுன். அரசன் தன் நாட்டில் பாதியை மருதவாணருக்கு நல்கினுன். மகனுக்கு முடிசூட்டி மகிழ்ந்தான். பலகாலம் வாழ்ந்திருந்து சிவபெருமான் திருவடிநீழலை அடைந்தான்.]

கலிநிலைத்துறை

வன்ப ணிக்குலம் பூண்டிடு மருதவா ணனுக்குத்
தென்பு றத்திலெய் தவன்விழித் திருவருள் தீர்த்தம்
இன்ப மீந்திடு முருத்திர தீர்த்தமென் றிலங்கும்
பின்பு ரைத்துமப் பெயரதற் கெய்திய பெருமை. 1

கருட னன்னதைக் காத்திடு மீசனே கடவுள்
இருடி பிப்பிலன் தமாலமாங் கிலங்கிடு விருக்கம்
ஒருதி னம்படிந் ததனிற்றேன் கம்பல முதவின்
திருகு வெம்பவத் தோடுதீப் பிணிகளு ந் தீரும். 2

முன்னை நாளிடை நிமியென மொழிந்திடு ந் திகிரி
மன்ன வன்புரி தவத்தினுல் வருதிட்ட கேது
என்னுங் காவலன் மகவின்றித் தருமமிக் கியற்றிப்
பின்னெ டும்பகல் கட ந்தொரு புதல்வனைப் பெற்றுன். 3

---

1. வன் பணிக்குலம் - வலிய பாம்புகளின் கூட்டம்.

2. அத்தீர்த்தம் கருடன் பாதுகாவல். பிப்பில முனிவர். தமாலம் - பச்சிலை மரம். விருக்கம் - விருக்ஷம்.

3. திகிரி - சக்கரம். நிமிச்சக்கரவர்த்தி புதல்வன் திட்டகேது.

மண்ட லம்பெரு மகிழ்வுற வந்திடப் புதல்வன்
அண்டர் நாயக னடியர்பா லன்புட னளித்த
வண்ட னிப்பொருட் பயனென வளர்தரு நாளில்
கண்ட மாலையென் றுரைக்குநோய் கண்டது களத்தில். 4

களம திற்பிணி யுறமகன் வருந்துதல் காணு
வளவ னேருறு மருந்தொடு மந்திரச் செய்கை
அளவி லாவகை யாற்றலு மவற்றினீங் கிலதென்(று)
உளம தில்துயர் கொண்டவ னுற்றன னன்றே. 5

காத்தி யாயன முனிவனக் காலையங் குற்றுன்
பாத்தி யாசம னுர்க்கியங் கொடுத்தனன் பணிவுற்(று)
ஆர்த்தி யாதுளத் திடையென வவனுள துரைத்தான்
மாத்தி யானமுற் றரன்றனை மாதவ னிசைக்கும். 6

மன்ன நின்மகன் பூருவந் தனிலொரு வணிகன்
அன்ன வன்மனைப் புறத்தர னுலய மொன்று
துன்னு மங்கதிற் சிதைவுறு சிலைகளைத் தொகுத்துப்
பொன்ன தாம்படி விலைசெய்யாக் கவர்ந்தனன் போலாம். 7

பிரச மென்மல ரணிசடைப் பிரான்றனை யொருகால்
தரிச னஞ்செயா வவனடி தலைக்கொளு மதனுல்
அரச னுயினு னுலயச் சிலைவிலை செயாவுண்
துரிசி னுலனுன் களத்தினைச் சூழ்ந்ததிக் கொடுநோய். 8

---

4. மண் தலம் - பூமி. வந்திடு அ புதல்வன். அண்டர் நாயகன் - சிவபெருமான். அண்டர் - தேவர். வண் தனி பொருட்பயன். களத்தில் - கழுத்தில். வேற்றுப்பொருள்வைப்பணி.

5. வளவன் - சோழன்.

6. அ காலை - அப்போது. ஆர்த்தி யாது உளத்திடை. ஆர்த்தி= அருத்தி - விருப்பம். உளது உரைத்தான். அரன் தனை மா தியானம் உற்று எனக் கூட்டிப் பொருளுரைக்க.

7. மனைப்புறத்து - வீட்டின் பக்கத்தில். அரன் ஆலயம் - சிவாலயம். சிதைவுறு சிலை - உடைந்த கற்கள். விலைசெய்யா - விற்று.

8. பிரசம் - தேன். தரிசனம் செயா - தரிசனம் செய்து. ஆலயச் சிலை - கோயிற்கல். துரிசினுல் - குற்றத்தால். அ(ன்)னுன் களத்தினைச் சூழ்ந்தது இ கொடு நோய். கொடுநோய் என்றது கண்டமாலை என்னும் நோயை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கறைமிடற்றோன் பொருள்களினெள் ளளவு கொண்டோர்
கடும்பிணியுற் றலைந்ததன்பி னிரய நன்னில்
உறைகுவர்செங் கதிர்மதிய முள்ள காலம்
உடனுணர்ந்து கவர்தலுறி னடுங்கி யுள்ளம்
பெறுபொருளி னாற்குணித முதவி யேழை
பிழைபொறுத்தி யெனப்பணியி லனைய பாவம்
இறுதியுறு முணர்கிலராய்க் கவர்தல் செய்யின்
இருகுணிதங் கொடுத்திறைஞ்சி னேகு மன்றே. 9

மறையுணர்ந்தோர் குரவர்பொருள் கவரி னோர்ந்து
மற்றதனுக் கிரட்டிகொடுத் திறைஞ்சல் வேண்டும்
அறிலிலராய்க் கவர்ந்திடினும் பிறர்பொருளைக் கொளினும்
அத்திறமீந் திடவேண்டு மல்லல் வேண்டார்
உறுமிவர்கட் கோதுபணி செய்த கண்ணும்
உற்றபரி வர்த்தனைசெய் யிடத்துந் தக்க
முறைமையிற்கொண் டிடலாகு மின்னோர் தத்தம்
முன்னமுகந் தளித்தனரேற் கோட லாகும். 10

எப்பவமு மெப்பிணியுந் தீருந் தெய்வ
இடைமருதி னுருத்திரதீர்த் தத்து மூழ்கின்
இப்பொழுதே நின்மகற்கொண் டேகு கென்ன
இசைத்திட்டா னிசைத்திடலு மவனு மவ்வா(று)
அப்பொழுதே சென்றந்தப் பதியி னெய்தி
அத்தீர்த்தந் தனின்மகனை யாட்டு வித்தான்
செப்புவதென் னவன்மிடற்றுப் பிணியத் தீர்த்தம்
சென்றுதோய்ந் திடுமுன்னர்த் தீர்ந்த தன்றே. 11

---

9. இச்செய்யுள் சிவத்திரவியம் கவர்வோர்நிலை கூறியது. நிரயம் - நரகம். பெறு பொருளில் நாற்குணிதம். நால் குணிதம் - நான்கு மடங்கு. உணர்கிலராய் - அறியாமையுடையராய்.

10. அல்லல் வேண்டார் - துன்பம் வேண்டாதவர். இச்செய்யுள் அந்தணர்பொருள், ஆசாரியர்பொருள் கொண்டோர் நிலைமை கூறிற்று. முன்னம் உகந்து அளித்தனரேல்.

11. மிடற்றுப் பிணி - கண்டமாலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பணங்கிள ரரவி னீங்கும் பனிமதி யென்ன வன்னேன்
அணங்ககன் றின்ப முற்று னஃதறிந் தவனு மூழ்கி
மணங்குல விதழி சூடு மருதநா யகனை வந்து
வணங்கினன் துதிகள் கூறி மகனெடு மகிழ்ச்சி யுற்றே. 12

இன்னலெய் திடிற்றம் மைந்தர் தாமுமவ் வின்ன லெய்திப்
பின்னது தீரு மாறு பேணலு மதனைத் தீர்த்தும்
மன்னவர் மகிழத் தாமு மகிழ்தலு மியல்பாந் தந்தை
அன்னையர் தமக்கு மைந்தர் புறத்துல வாவி யன்றே. 13

மகிழ்விற்றன் னுலகிற் பாதி மருதவா ணனுக்கு நல்கித்
தகைமுடி சூட்டி மைந்தன் றனையவ னகருக் கேவிப்
புகழுமத் தலத்திற் பன்னாள் பொருந்தவீற் றிருந்து பின்னர்ப்
பகரெழின் மதியஞ் சூடும் பரனடி நீழல் சேர்ந்தான். 14

உருத்திரதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 689

---

12. பணம் கிளர் அரவு - இராகு கேதுக்கள். அணங்கு அகன்று: அணங்கு - நோய். மணம் குலவு இதழி: இதழி - கொன்றை.

13. இன்னல் - துன்பம். புறத்து உலவு ஆவி: ஆவி - உயிர்.

14. தன் உலகில் பாதி - தன் இராச்சியத்தில் பாதி.

பதினேழாவது

# பதுமதீர்த்தச் சருக்கம்

[சோமதீர்த்தத்தின் தெற்குத்திசையில் ஒரு தீர்த்தமுண்டு. அது பதுமதீர்த்தமெனப்படும். இத்தீர்த்தத்துக்குத் தெய்வம் பரமன், பாம்பின் முகத்தையுடைய கணங்கள் காவல், முனிவன் பிரமன், மரம் வில்வம். இத்தீர்த்தத்திலே முழுகிப் பருத்தி, வெல்லம், உப்பு, தானியம் இவற்றைப் பிராமணருக்குத் தானம் செய்யின் தம் துன்பமெல்லாம் நீங்கும், பகைவர் அழிவர், வளம் பெருகும், செல்வமுண்டாகும், ஆயுள் பெருகும். முன்பு விரோசனன் புதல்வன் மாவலி இத்தீர்த்தத்திலே படிந்து பாவங்களைப் போக்கினன். சிவபெருமான் திருவருளால் மண்ணும் விண்ணும் அரசு செய்திருந்தான். பதுமதீர்த்தம் நீர்வடிவாயிருப்பினும் பாவ விறகினுக்கு இது தீயாம். எண்ணிலாதவர் இத்தீர்த்தத்திலே முழுகித் தாம் செய்த வினைகளைப் பொடியாக்கினர்.]

கலிநிலைத்துறை

மருவு பின்னிசைத் திடுமதி வாவியின் தென்பால்
அருகி னிற்பது மதீர்த்தமென் றென்றுள ததற்குப்
பரமன் தேவதை போற்றுதல் பணிமுகக் கணங்கள்
பிரமன் மாமுனி விருக்கமேர் பிறங்கெழில் வில்வம். 1

ஒல்லு மன்னதில் படிந்துகார்ப் பாசமொப் பில்லா
வெல்ல முப்புயர் தானியம் விப்பிரர்க் குதவின்
அல்ல னீங்கிடு மவர்க்குறு பகைவர்க ளழிவர்
மல்ல லெய்திடு திருவரும் வளர்தரும் வாணாள். 2

---

1. பின் இசைத்திடு - பின்பு சொன்ன. பணி - பாம்பு. மதிவாவி - சந்திரதீர்த்தம்.

2. படிந்து - முழுகி. கார்ப்பாசம் - பருத்தி. விப்பிரர் - பிராமணர். அல்லல் - துன்பம். மல்லல் - வளப்பம்.

மாவ லித்தனிப் பெயருறு விரோசனன் மைந்தன்
மேவு மத்தடம் படிந்துமுன் வெம்பவ மகற்றிச்
சேவு றுங்கொடிச் சேவகன் திருவரு ளடைந்து
தூவி னர்த்தொலைத் தாண்டனன் சுவர்க்கமும் புவியும். 3

மருக்கு லாவுமப் பதுமநீள் வாவிநீர் வடிவாய்
இருக்கி னுந்தனில் படிந்துளோ ரியற்றுவெம் பாவத்
திருக்கெ னும்விற கினுக்கொரு தீயதா மதனில்
தெரிக்கு மெண்ணிலர் வினைகளைப் பசுமமாச் செய்தோர். 4

ஆண்ட நாதியாய் விளக்கமுற் றமர்ந்திடு பதுமத்(து)
ஏண்ட ரும்புகழ்க் கதைசிறி திசைத்தன மினிது
பாண்டு மன்னவன் புதல்வர்கள் பரனடி பணிந்து
காண்ட ருந்தடஞ் சமைத்திடு காதைமேற் கரைவாம். 5

பதுமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 694

---

3. விரோசனன் மகன் மாவலி. சே உறும் கொடி - இடபக்கொடி. சேவகன் - சிவபெருமான். தூ இன்னர் தொலைத்து. இன்னர் - பகைவர்.

4. வெம்பாவம் திருக்கு - கொடிய பாவமாகிய மாறுபாடு. பசுமம் - பொடி.

5. ஆண்டு அநாதியாய். ஏண் தரும் புகழ்: ஏண் - வலிமை. காண் தரும் தடம். சமைத்தல் - அமைத்தல். கரைவாம் - சொல்லுவாம்.

பதினெட்டாவது

# பாண்டவதீர்த்தச் சருக்கம்

[பாண்டவர் ஐவரும் சகுனி துரியோதனன் முதலிய பகைவரோடு சூதாடினர். நாட்டை இழந்தனர். பின்பு, தம் உருவம் பிறருக்குப் புலப்படா வண்ணம் மறைந்தொழுகி வசித்து வந்தனர். அக்காலத்திலே கண்ண பிரான், 'இடைமருது சென்று சோதிமகாலிங்கேசரைத் தொழுவீராக' எனப் பாண்டவர்களுக்குக் கட்டளையிட்டருளினர். அவ்வாறே அவர்களும் மகாலிங்கேசரை வணங்கிக் குறையிரந்து நின்றனர். அளவில்லாத துன்பம் எங்கட்குத் தொலைவது எக்காலமெனக் கரைந்து வேண்டினர். அப்போது சிவபெருமான், யாவரும் கேட்குமாறு 'நீவிர் சிலகாலம் சென்றபின்னர் அறப்போரினால் பகைவரை வெல்வீர்கள்; பின்பு, பலநாள் நிலவுலகத்தை ஆண்டு நம் பதத்தை அடைவீர்கள்' என்று ஆகாயவாணியால் அருள் செய்தார். அதுகேட்ட பாண்டவர் ஐவரும் மனமகிழ்ந்தனர். மறுபடியும் அன்புமேலிட்டால் இறைவனை வணங்கிப் போற்றினர். அத்திருவிடை மருதூரிலே தத்தம் பெயரால் தீர்த்தங்கள் அமைத்தனர். பின்னர், தங்கள் நாட்டையடைந்து பகைவர் குலமுழுவதையும் அழித்து, அறநெறி வழாமல் நாட்டை ஆண்டுவந்தனர். இறைவன் திருவடியைச் சேர்ந்து இன்புற்றனர். பாண்டவர் தீர்த்தங்கள் பதுமதீர்த்தத்தின் தென்பால் உள்ளன. அவை: தருமதீர்த்தம், வீமதீர்த்தம், அருச்சுனதீர்த்தம், நகுல தீர்த்தம், சகாதேவதீர்த்தம் எனப் பெயர்பெறும். இவற்றிற்குத் தேவதை களும் தீர்த்த பாலகர்களும் முறையே சம்பு, நந்திதேவர், சுப்பிரமணியர், பிருங்கி, சண்டேசுரர் என்பவர்களாம். இருடிகள்: பரத்துவாசர், சதுகர் ணர், கௌதமர், மாண்டவியர், பயிலர் என்பவர்கள். மரம்: நாவல், மா, நெல்லி, ஆல், வேம்பு என்பன. இவற்றில் மூழ்குவோர் நீர்க்குடம், குடை, விசிறி, ஆடை, பாதுகை இவற்றைத் தானம் செய்வாராயின், எல்லாச் செல்வங்களும் பெற்று வாழ்வார். பகைமை நீங்கும். துன்புறுத்தும் நோய்களும் நீங்கும். இத்தீர்த்தத்திலே முழுகி இன்புற்றோர் பலராவர்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இருமனப்பெண் டிருமதி மயக்கிடுதண்
ணருவதுவு மிழைக்குஞ் சூதும்
திருமகணீக் கிடப்பட்டார் தொடர்பென்றுன்
றோர்கூறல் தெளிந்து மூழால்

தருமனுயர் விமனருச் சுனனகுலன்
சகதேவன் சாற்று மின்னேர்
கருதலரோ டுறுசூதிற் புவியிழந்து
கரந்துறையக் காலே தன்னின். 1

கண்ணனிடை மருதணேந்து கண்ணுதலேத்
தொழுமினெனக் கழறக் கேளா
வண்ணமுறு மணயதலத் தடைந்துமையாள்
கருணேயெழு வாவி மூழ்கித்
தண்ணிலவா றணிசடிலத் தனிமருத
வாணனடி தாழ்ந்து போற்றி
எண்ணருமெந் துயர்தீர்ப்ப தென்றெனநின்
றிசைத்தனரவ் வேல்வை தன்னில். 2

இன்னவினே விடுத்திடுமி னினியின்னுஞ்
சிலபகல்பின் னிடனீர் சென்று
துன்னலர்க டமைத்தருமச் சமரதனிற்
பொருகளத்திற் றுலேத்துப் பன்னுள்
மன்னுபுவித் தலம்புரந்து பின்னுயர்நம்
பதத்தினிது மருவு வீர்கள்
என்னமரு திறைவனருள் வாக்கிலகு
மிருவிசும்பி னெழுந்த தன்றே. 3

அந்தமொழி செவிப்புகலும் ஐவர்களு
மகிழ்ந்துபினு மன்பி னேத்திச்
சந்தமுறு மணயபதி யிடத்தினிற்றம்
பெயரினெவ்வோர் தடங்கள் செய்து

---

1. நறா அதுவும் - கள்ளும். இருமனப் பெண்டிர் - பொது மகளிர். இச்செய்யுள் ''இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும், திருநீக்கப் பட்டார் தொடர்பு'' என்ற திருக்குறட்கருத்தை ஒட்டியது. கருதலர் - பகைவர். புவி - பூமி: நாடென்க. கரந்து - ஒளிந்து, மறைந்து. கரந்து உறை அ காலே. தொடர்பு என்று ஆன்றோர்.

2. கண்ணன் இடைமருது அடைந்து: கண்ணனிடை மருது அடைந்து என்பது ஒரு நயம். கண்ணுதல் - சிவபெருமான். கழற - சொல்ல. வண்ணம் - அழகு. கருணே எழு வாவி - காருணியாமிர்த தீர்த்தம். நிலவு ஆறு அணி சடிலம். சடிலம் - சடை. ஏல்வை - சமயம்.

3. பின்னிட - பிற்பட, செல்ல என்றபடி. துன்னலர் - பகைவர். சமர் - போர். தருமச்சமர் - அறப்போர். பொருகளம் - போர்க் களம்.

முந்துறுதந் நாடணைந்து பகைவர்பெருங்
குலமுழுது முருக்கி வையம்
நந்தலில்பே ருவகையொடும் புரந்ததன்பி
னண்ணலப்பத நண்ணி னார்கள். 4

பதுமமெனுந் தீர்த்தமதன் தென்புறத்தி
லவர்தீர்த்தம் பரத்து வாசர்
முதுதவத்துச் சதுகர்ணர் கௌதமர்மாண்
டவிபயிலர் முனிவர் நாவல்
இதமுறுமா வாமலக மால்வேம்பு
தருதெய்வ மீச னந்தி
கதமுறுவேற் குகன்பிருங்கி சண்டீச
னின்னவரே காப்பி னேரும். 5

மேதகுமத் தடங்களிடைப் படிந்துபுனற்
குடங்கவிகை விசிறி யாடை
பாதுகையந் தணர்க்குதவி லெண்வகைச்செல்
வமுமுளவாம் பகைமை தீரும்
ஏதமுறும் பிணிதவிரு மிங்ஙனமத்
தடமூழ்கி யின்ப முற்றோர்
பூதலத்தி லெண்ணிலர்மே லிந்திரதீர்த்
தச்சிறப்புப் புகறல் செய்வாம். 6

பாண்டவதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 700

---

4. சந்தம் - அழகு. தடங்கள் - தடாகங்கள். முருக்கி - அழித்து. வையம் - உலகு, பூமி. நந்தல் இல் - கேடில்லாத.

5. பதுமதீர்த்தத்தின் தென்பால் உள்ளது பாண்டவ தீர்த்தம். ஆமலகம் - நெல்லி. கதம் - கோபம்.

6. ஏதம் - துன்பம். மேதகு - மேம்பட்ட. கவிகை - குடை. எண் வகைச் செல்வம் - அட்டலட்சுமி கடாட்சம்.

பத்தொன்பதாவது

# இந்திரதீர்த்தச் சருக்கம்

[ இந்திரதீர்த்தம், மகாலிங்கேசுவரர் கோயிலுக்குக் கிழக்கேயுள்ள சோமதீர்த்தத்துக்குத் தென்பால் உள்ளது. இந்தத் தீர்த்தத்துக்குத் தேவதையும் இருடியும் இந்திரனே. தீர்த்தபாலகர் சந்திரசேகரர். மரம் முள்ளிலவு. இத்தீர்த்தத்திலே மூழ்குவோர் இரும்பு, வெள்ளி, எருமை, பால், தாம்பூலம் இவற்றை அந்தணர்களுக்குத் தானம்பண்ணல்வேண்டும். இவ்வாறு தானம் செய்வதனல் கொடிய வினைகளும், துன்புறுத்தும் நோய்களும் நீங்குவனவாம். இன்பமும் வந்தெய்தும். அக்கினிட்டோமம் செய்த பயனும் சித்திக்கும். பலர் இத்தீர்த்தத்திலே முழுகிப் பயனடைந் தனர் என்று சூதமுனிவர் சொல்லியருளினர். அதனைக் கேட்ட முனிவர், ஐயனே! இந்திரன் எதனை வேண்டி இத்தலத்தை அடைந்து இந்தத் தீர்த்தத்தை உண்டாக்கினன் எனக் கேட்டனர். போர்க்களத்திலே சென்று போர்செய்யின் உயிர் நீங்காதிருக்கவேண்டி வலாசுரன் என்பவன் வரம்பெற்றிருந்தனன். ஒருசமயம் அவ்வலன் இந்திரனுடன் போர்செய்து வென்றுன். தோல்வி அடைந்த இந்திரன், வலாசுரனுடன் போர்செய்து நாம் எவ்வகையினும் வெற்றிபெற இயலாது. ஆகலின், அவனை வஞ்சகத்தால் கொல்லவேண்டுமெனக் கருதினன். பின்பு, இந்திரன் வலாசுரனையடைந்து வலனே! நீ போர்செய்யும் திறத்தைக்கண்டு பெரிதும் உவகையடைந்தேன்; மேலும், உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்கும்பொருட்டே இங்கு உன்பால் வந்தேன்; வேண்டிய வரத்தைக் கேள் என்றுன். இந்திரன் சொல்லிய சொல்லைக் கேட்டு வலன் கைகொட்டி நகைத்தான். என்பால் தோல்வியுற்ற உன்பால் யான் வேண்டும் வரம் ஒன்றுமின்று; வேண்டு மாயின், உனக்கு யான் வரந்தருவேன் கேள் என்றுன் வலன். இந்திரன், இதுவே சமயமெனக்கருதி யான் ஒரு சிறந்த வேள்விசெய்ய நினைந்துளேன்; அதற்குரிய யாக பசுவாக நீ வருதல்வேண்டும் என்றுன். ஈதலே சிறப்பு உடையதென வலன் உறுதி பூண்டான்; நல்லிலக்கணம் பெரிதுமுடைய யாகபசுவாக வடிவெடுத்து இந்திரன் செய்யும் யாகசாலையை அடைந்தான்.

இந்திரன், அந்த யாக பசுவை வேதம் சொல்லிய முறைப்படியே கொன்றுன்; வேள்வியாற்றினன்; தேவர்களுக்கு அவிசை உண்பித்தான்; வேள்வியையும் தன் கருத்தையும் முற்றுவித்தான். வஞ்சனையால் வலனைக்

கொன்ற பாவம் இந்திரனைச் சூழ்ந்தது. முன்பு, பகன் என்பவனைக் கொன்ற பழியும் உடன்சேர்ந்து அவனை வருத்தத்தொடங்கியது. இந்திரன் கொலைப்பாவத்தால் பெரிதும் நொந்தான்; அலைந்து திரிந்தான்; திருவிடைமருதூரை அடைந்தான். காருணியாமிர்த தீர்த்தத்தில் படிந்தான்; ஸ்ரீ மகாலிங்கேசுரரை வழிபட்டுவந்தான்; தன் பெயரால் ஒரு தீர்த்தமும் அமைத்தான்; கொலைப்பாவத்தை அகற்றினான்; சோதி மகாலிங்கேசரை அருச்சித்து வணங்கி அவர் அருளையும், வேண்டிய வரங்களையும் பெற்று விண்ணுலகம் அடைந்திருந்தான் ]

கலிநிலைத்துறை

கொந்து றும்மலர்ச் சடையவன் குணதிசை யிடத்தில்
இந்தி ரன்முனஞ் சமைத்திடு தீர்த்தமொன் றிலங்கும்
அந்த மன்னனே தேவதை யாமவன் முனிவன்
இந்து சூடிறை காப்பவன் தாருமுள் ளிலவு. 1

ஓது மற்றதிற் படிந்திரும் புடனெளிர் வெள்ளி
மேதி யின்சுவைப் பால்கனி வெள்ளிலை கமுகம்
வேதி யர்க்கினி தளித்திடின் வெவ்வினை யதனோ(டு)
ஏதஞ் செய்பிணி யகன்றிடு மின்பமே லெய்தும். 2

ஆற்று மக்கினிட் டோமத்தி னரும்பல னடையும்
மேற்றி கழ்ந்திடு மதிற்படிந் தல்லலைய் விடுத்துச்
சாற்றி டின்பமு மகிமையுஞ் சார்ந்தன ரநேகர்
தோற்ற வாமுத லியதவிர் தூயமா தவத்தீர். 3

---

1. கொந்து - பூங்கொத்து. குணதிசை - கிழக்குத் திக்கு. அந்த மன்னன் - அந்தத் தேவேந்திரன்: மன்னன் - இந்திரன்: 'வேந்தன் மேய தீம்புன லுலகமும்' என்பது தொல்காப்பியம். அவன் என்றது இந்திரனை: தேவதையும் முனிவனும் இந்திரனே என்க. இந்து சூடு இறை - சந்திரசேகரர். தாரு - மரம்: விருட்சம்.

2. மேதி - எருமை. இன் சுவைப் பால் - இனிய சுவையையுடைய பால். மேதியின் சுவைப் பால் எனினுமாம். வெள்ளிலை - வெற்றிலை. கமுகம் - பாக்கு. அம்: சாரியை. வேதியர் - பிராமணர். ஏதம் - துன்பம்.

3. அக்கினிட்டோமம் - ஒருவகை வேள்வி. அல்லல் - துன்பம். தோற்று அவா முதலிய தவிர்: திருக்குறள் அவாவறுத்தல் என்னும் அதிகாரம் முழுதும் சிந்திக்க. அவாவறுத்தலே மாதவத்தின் ஆணிவேர்.

என்று சூதமா முனிவர னிசைத்தலும் முனிவர்
வென்றி வச்சிரத் தவனெது வேண்டியத் தலத்தில்
சென்று ரைத்திடு தீர்த்தமாங் கியற்றினன் தெரிய
இன்றெ மக்குரை செய்திடு மெனவவ னிசைக்கும். 4

பூச லிற்பொரு களத்திடைத் தனதுயிர் பொன்ரு(து)
ஈச னுரிடத் துறுவர மேற்றிடு திறலோன்
பேசு மன்னவன் வலனெனும் பெயரினு னெதிர்த்து
வாச வன்றனே டமர்செய மற்றவன் தோற்று. 5

இவனை வஞ்சகத் தலைத்திட வேண்டுமென் றெண்ணி
அவனை யுற்றுநீ பொருதிடு மாற்றல்கண் டமரில்
உவகை யுற்றன மிகுவர முனக்களித் திடுவாம்
குவவு மால்வரைத் தோளினுய் வேண்டுவ கோடி. 6

என்ன வோதலு மவனகைத் தெனக்கெதிர் தோற்ற
உன்னி டத்தினில் பெறுவதோ வுனக்கியான் தருவன்
மன்ன கேளென நாஞெரு மகமியற் றிடுகேன்
அன்ன தற்குறு பசுவதாய் வருகென வறைந்தான். 7

ஈவ தேபெரி தெனவல னெண்ணிநற் பசுவாய்த்
தாவி லாதவம் மகம்புரி சாலைவந் தடைந்தான்
மேவி யிந்திரன் சுருதிசொல் விதிமுறை வதைத்துத்
தேவர் தங்களுக் கூட்டிமேற் செய்தனன் வேள்வி. 8

---

4. வச்சிரத்தவன் - வச்சிராயுதத்தையுடைய இந்திரன். இன்று - இப்போது. இசைக்கும் - கூறுவான். அவன் - சூதமுனிவர்.

5. பூசலில் - சண்டையில். பொரு களம் - போர்க்களம்: யுத்த பூமி. பொன்ருது - அழியாமல். திறலோன் - வன்மையுடையோன். வாசவன் - இந்திரன்: வசுக்களுக்குத் தலைவன் என்னும் காரணக்குறி. வலன் - வலன் என்னும் அசுரன். மற்று: வினைமாற்றுப் பொருளில் வந்தது. தோற்று - தோல்வியடைந்து. அவன் என்றது இந்திரனை.

6. இவனை - வலாசுரனை. அலைத்திட - வருத்த. பொருதிடும் - போர் செய்யும். மிகு வரம் - மேம்பட்ட வரங்கள். குவவு மால் வரை தோளினுய் - திரண்ட பெரிய மலைபோலும் வலிய தோள்களையுடையவனே: என்றது வலாசுரனை. கோடி - (பெற்றுக்) கொள்வாயாக.

7. அவன் நகைத்து - வலாசுரன் பரிகசித்து. மன்ன - இந்திரனே. கேள் என - கேட்பாயாக என்று வலாசுரன் சொல்ல. மகம் - யாகம்.

8. ஈவதே பெரிது: ''ஈதல் அறம்'' என்ருர் ஔவையார். ''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து), ஊதிய மில்லை உயிர்க்கு'' என்பது


KOVILOOR ANDAVAR LIBRARY KOVILOOR 25916

வஞ்ச னைத்திறத் தவன்றனை வதைத்திடு பவமும்
வெஞ்சி னப்படைப் பகன்றனை விட்டிய பவமும்
நஞ்செ னக்கொதித் தலைத்திட நாடொறு மலைவுற்(று)
அஞ்சி யித்துயர்க் கென்னிழைத் திடுவதென் ருய்ந்து. 9

மன்னு சீரிடை மருதடைந் துமையருள் வாவி
தன்னின் மூழ்கிநீள் மருதநன் னிழலுறை தாணு
பொன்ன டித்துணை பணிந்துதன் பெயர்கொடு புகலத்
துன்னு சீர்த்தட மமைத்தரு வினைகளைத் துடைத்தான். 10

அனைய சோதியை யருச்சனை புரிந்தவ னருளும்
அனைய மால்வரங் களுங்கொடு பொன்னுல கடைவான்
இனைய வாவியிற் படிந்திவை வேதியர்க் கீவோர்
இனைய னீக்கிமற் றிவைபெறு கெனவிசைத் தகன்ருன். 11

கந்த நாண்மலர் மலிதரு கற்பக நிழல்வாழ்
இந்தி ரன்றனித் தீர்த்தமான் மியஞ்சிறி திசைத்தாம்
வெந்த ழற்பெருங் கடவுடன் பெயர்கொடு விளங்கும்
சந்த முற்றிடு வாவியின் பெருமைசாற் றிடுவாம். 12

இந்திரதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 712

---

திருக்குறள் (231). ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாகப் பெரிது என்ருன் என்க: பெரிது - பெருமையுடையது எனினுமாம். தா இலாத - கேடில்லாத. மகம் புரி சாலை - வேள்விச்சாலை. சுருதி - வேதம். ''ஈவதே பெருமை யன்றி யிரக்கின்ற திழிபே யன்றோ'' என்பது பரஞ்சோதி திருவிளையாடல். இவ்வரலாறு பரஞ்சோதி திருவிளையாடற்புராணம் 17-வது மாணிக்கம் விற்ற படலம்: செய்யுள் 18—34 முடியக்காண்க.

9. அவன் தனை - வலாசுரனை. பகன் - பகாசுரன். பவம் - கொலைப் பாவம். வீட்டிய - கொன்ற. அலைத்திட - வருத்த. அலைவுற்று - அலைந்து.

10. மன்னு சீர் - நிலைபெற்ற சிறப்பு. உமை அருள் வாவி - காருணி யாமிர்த தீர்த்தம். தாணு - சிவபெருமான். துடைத்தான் - போக்கினுன்.

11. சோதியை - சோதிர்மகாலிங்கேசரை. மால் வரம் - பெரு வரங்கள். பொன்னுலகு - சுவர்க்கலோகம். படிந்து - மூழ்கி.

12. கந்த நாள் மலர் - மணம் பொருந்திய அன்று அலர்ந்த பூக்கள். மலிதரு - நிறைந்த. கற்பகம் - பஞ்சதருக்களுள் ஒன்று:

## இருபதாவது

# அக்கினிதீர்த்தச் சருக்கம்

[மேலே சொல்லிய இந்திர தீர்த்தத்தின் தென்பால் மூன்று அம்பு வீழ் தொலைவில் உள்ளது அக்கினி தீர்த்தம். இது முன்பு சூலகாதம் எனப் பெயர்பெறும். இத்தீர்த்தத் தேவதை ஸ்ரீ சங்கரர். தீர்த்தபாலன் அக்கினி தேவன். இருடி கபில முனிவர். மரம் நெல்லி. இந்த அக்கினி தீர்த்தத்தில் மூழ்குவோர் தயிர், நெய், பாற்பசு இவற்றை அந்தணர்களுக்குத் தானம் செய்வாராயின் கொலைப் பாவம் நீங்குவர். முற்காலத்திலே ஒரு நாள் க்ஷேத்திரபாலராகிய வைரவக்கடவுள் திருவுலா வருவாராயினர். தமது திருக்கரத்திலுள்ள மூவிலைச் சூலத்தின் அடியைப் பூமியில் நாட்டி எடுத்தருளினர். சூலமெடுத்த பள்ளம் ஒரு தீர்த்தக்குளமாக விளங்கியது. அதனால் இத்திர்த்தம் சூலகாதம் எனப் பெயர்பெற்றது. இச்சூல காத தீர்த்தத்திலே முழுகித் தமது பாவம் தொலையப்பெற்றோர் மிகப் பலர். பாண்டுமகாராசன் புதல்வர் பாண்டவர் ஐவரில் அருச்சுனன் உதவியால் அக்கினிதேவன் காண்டவ வனத்தைப்பற்றி எரித்தான். அங்கு வசித்திருந்த பல உயிர்கள் அதனால் இறந்தொழிந்தன. உயிர்க்கொலைப்பாவம் அக்கினிதேவனைப் பற்றித் தொடர்ந்து வருத்தியது. அந்தப் பாவத்தை அக்கினி போக்கக் கருதினான்; திருவிடைமருதூரை அடைந்தான்; சூல காதினி தீர்த்தத்தில் முழுகி ஸ்ரீ மகாலிங்கேசரை விதிப்படி வழிபட்டான். அக்கொலைப் பாவம் அகன்றது. முன்புபோல் ஒளிபெற்று விளங்கினான். அத்தீர்த்த வாவியைப் புதுக்கித் திருத்தினான். ஆகலின், அஃது அவன் பெயரால் விளங்குவதாம்.]

கலிநிலைத்துறை

சாலு மிந்திர வாவியின் சார்ந்திடு தென்பால்
கோலி ரண்டுட னொன்றுவீழ் சேய்மையிற் குலவும்
சூல காதமென் றொருதடந் தோன்றிடு மதன்றன்
பால னக்கினி சங்கரன் பகர்ந்திடு தெய்வம். 1

---

1. மூன்றுகோல் தூரத்தில் - மூன்று அம்பு வீழ்தூரத்தில். சேய்மை - தூரம். கோல் - அம்பு. சூல காதம் - இத்தீர்த்தத்துக்கு முன்னுள்ள

மயன்மு தற்பகை மாற்றிடு மாதவன் கபிலன்
பயிலு றுந்தரு நெல்லியத் தடத்தினிற் படிந்து
தயிர்நெய் பாற்பசு மறையவர் தமக்களித் தனரேல்
உயிர்வ தைத்திடும் பாதக மொழிந்திடுங் கணத்தில். 2

ஆதி யோர்பகல் வயிரவ னாகிய கடவுள்
ஓது மந்நகர் காவலி னுற்றுலா வருவான்
சோதி முத்தலைக் கைப்படச் சூலமூ லத்தைப்
பூத லத்தவ னூட்டிமே லெடுத்தனன் போலும். 3

எடுத்த பள்ளமோர் வாவியா யிலங்கிய தன்னேன்
பிடித்த சூலமங் கமைத்ததால் பேசுமந் நாமம்
அடுத்த தப்பெருந் தீர்த்தமா லதனிடைத் தோய்ந்து
தொடுத்த பாவநீத் தலகிலர் தூயரா கினரால். 4

பாண்டு வின்மகன் பற்குனன் பரிவுட னுதவு
காண்ட வப்பெரு வனத்தினைப் புசித்திடு காலை
ஆண்டி ருந்தபல் லுயிர்கள்வெந் தவிந்தவெம் பாவம்
பூண்ட பாவகன் மற்றது போக்கிடக் கருதி. 5

வளந்த ரும்புக ழத்தல மரீஇவயி ரவன்செய்
குளந்த னிற்படிந் தப்பெருங் கொலைப்பவ மகற்றி
உளங்கொ ளோகையி னத்தட மொளிபெறப் புதுக்கிக்
களங்கொள் கண்டனைப் பணிந்துதன் கவினுல கடைந்தான். 6

---

பெயர்: க்ஷேத்திரபாலராகிய வைரவக்கடவுள், ஒருநாள் திருவுலா வரும் போது, அவருடைய சூலம் அழுந்திய இடத்தில் உண்டானமையின் இப் பெயர்பெற்றது என்பர் (செய். 3). பாலன் - தீர்த்தபாலகன்.

2. மயல் முதற் பகை - காமமுதலாகவுள்ள உட்பகை: அவை ஆறு என்பர். இதனை அரிஷட்வர்க்கம் என்பர் வடநூலார். பாற்பசு - பால் கறக்கும் பசு: என்றது வறட்டுப் பசுவை நீக்குதற்கு.

3. ஆதி - முற்காலம். சூல மூலம் - சூலாயுதத்தின் அடிப்பாகம்.

4. நாமம் அடுத்தது - பெயரைப் பொருந்தியது. தோய்ந்து - முழுகி. தூயர் - பரிசுத்தர்.

5. பற்குனன் - அருச்சுனன். பரிவு - இரக்கம். இவ்வரலாறு வில்லி பாரதம் காண்டவதகனச்சருக்கத்தால் அறிக. பாவகன் - அக்கினிதேவன். அது - அப்பாவம்.

6. அத்தலம் - திருவிடைமருதூர். மரீஇ - பொருந்தி. வயிரவன் செய் குளம் - சூல காதம். ஓகை=உவகை - மகிழ்ச்சி. ஒளி - புகழ்:

அனைய னேர்பெறப் புதுக்கலா லக்கினி தீர்த்தம்
எனவ தற்கொரு நாமமே லெய்திய திப்பால்
இனம லர்க்குலம் பொலிதரு மியமதீர்த் தத்தின்
கனமு றுந்தனி மான்மியங் கட்டுரைத் திடுவாம். 7

அக்கினிதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 719

---

விளக்கம் எனினுமாம். களம் கொள் கண்டன் - களாப்பழத்தையொத்த நஞ்சு பொதிந்த கழுத்தையுடைய சிவபெருமான். களம் - விடம், கழுத்து; களம் கொள் கண்டன் என்றது நயம். கரளம் - விடம்: அது களம் என இடைக்குறைந்தது எனினுமாம்.

7. அனையன் - அத்தீக்கடவுள். ஏர் பெற - அழகாக. கனம் உறும் - சிறப்புற்ற.

## இருபத்தொன்றாவது

# இயமதீர்த்தச் சருக்கம்

---

[அக்கினிதீர்த்தத்தின் மேற்றிசையில் ஏழம்புவீழ் தூரத்திலே இயமதீர்த்தம் உள்ளது. இதற்குத் தேவதை அகோரமூர்த்தி. தீர்த்த பாலன் நிருதி. இருடி இயமன். மரம் பாதிரி. இதில்மூழ்கினோர் எள், இரும்பு, பொன், பருத்தி, கம்பளம், எருமை, எருமைக்கடா இவற்றைத் தானம் செய்தல் வேண்டும். இதில் மூழ்குறுவதால் இம்மையில் குட்டநோய், பித்தநோய், சூலை, என்புருக்கி, மேகநோய் முதலியன நீங்கப்பெறும். மறுமையில் இயமவாதையும் நீங்கும். மற்றும், இன்பம் கல்வி செல்வம் புகழ் அழகு முதலியவற்றைப் பெறுவர். பகைவரால் வணங்கப்பெற்று வாழ்வர். இத்தலத்திலே தவஞ்செய்த அம்பிகையின் தவச்சாலையைக் காத்திருந்த இயமனால் இது உண்டாக்கப்பட்டது ஆகலின் அப்பெயர் பெற்றது. மற்றொரு காலத்தில் அகத்திய முனிவர் சிவபெருமானது அகோரவடிவத்தைத் தரிசித்தற்கு எண்ணினர். இந்தத் தடாகக் கரையிலே இருந்து தவஞ்செய்தார். இறைவர் அகத்திய முனிவர் விருப்பப் படியே காட்சி கொடுத்தருளினர். அவ்வடிவத்துடனேயே இத்தீர்த்தக் கரையில் சிவபெருமான் எழுந்தருளி இருக்கின்றனர். இத்தீர்த்தத்தில் முழுகி, அகோரமூர்த்தியைத் தரிசிப்போர் இட்டசித்திகளையடைவர்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பாவக தீர்த்த மேல்பாற் பகழியேழ் படுதூ ரத்தின்
மேவுறு மியம தீர்த்தம் விளம்பிய மன்ற வத்தோன்
தேவதை யகோர மூர்த்தி பாதிரி திகழுந் தாரு
காவல்செய் திடுவா ரங்க னிரிரிடர் கணங்க ளாகும். 1

---

1. பாவக தீர்த்தம் - அக்கினி தீர்த்தம்: பாவகன் - அக்கினி. பகழி ஏழ் படு தூரம் - ஏழம்பு வீழ் தூரம்: பகழி - அம்பு. மேல்பால் - மேற்றிசை. தாரு - மரம். அகோரமூர்த்தி: மூன்று கண்களும், சிரத்தில் மூன்றாம்பிறைச் சந்திரனும், சாந்தமும், திருச்செவிகளில் குண்டலங் களும், புருவம் மீசை சிகை முதலியன கீரி நிறமும், கோரப்பற்களும், பயங்கரமான முகமும், கபாலமாலையும், பாம்பு தேள் பொருந்திய ஆபரணமும், கட்வாங்கம் கபாலம் கேடயம் பாசம் தரித்த இடக்கரமும், முத்தலைச்சூலம் கண்டகோடரி கத்தி தடி இவை தரித்த வலக்கரமும்,

திருத்தகு மதனின் மூழ்கித் திலமுட னிரும்பு செம்பொன்
பருத்திகம் பளங்கார் மேதி பகடிவை பனவர் தங்கட்(கு)
அருத்தியி னுதவு வோர்கட் கறைதரு மியமன் றன்னல்
வருத்தமீ தின்று மீண்டும் வளர்ந்திடு மவர்தம் வாணுள். 2

கலிநிலைத்துறை

துன்பி ழைத்திடு குட்டநோய் பித்தநோய் சூலை
என்பு ருக்கிடு மேகநோ யாதிய விரியும்
இன்பு கல்விசெல் வம்புக ழெழினனி யெய்தும்
வன்ப கைத்திறம் விளைப்பவர் வணங்குவர் வந்து. 3

கயலை நேர்விழி யுமைதவம் புரிந்திடு காலை
இயலு மத்தவச் சாலைதன் றூதரோ டியமன்
பயிலுங் காவல்செய் திட்டநாள் பகருமவ் வாவி
இயலு றச்சமைத் தாங்கினி திருந்தனன் மேவி. 4

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அத்தகைய நெடுந்தீர்த்தத் தென்கரையில் சிலபகல்பின் னகன்ற பின்னர்
முத்தமிழ்த்தென் மலையமுனி மருதநிழ லிடத்தொளிரு மூர்த்தி தன்னைப்
பத்திவலை யிடைப்படுமெம் பரசிவனை யன்பினெடும் பணிவுற் றேத்தி
மெய்த்தவர்சூழ்ந் திலங்கிடநீ டருந்தவஞ்செய் திடுவதற்கு மேவுற் ருனல். 5

---

கரிய மேகம்போலும் கறுத்த திருமேனியும் உடையவர். இவர் எல்லாவித இட்டசித்திகளையும் தந்தருளுவர். விளம்பு இயமன் தவஞ்தோன்.

2. திருத்தகும் - அழகு தக்க. திலம் - எள். கார் மேதி - கரிய எருமை. பகடு - எருமைக்கடா. பனவர் - பார்ப்பார். அருத்தியின் - விருப்பமுடன். வாழ்நாள் - ஆயுட்காலம்.

3. இரியும் - கெட்டோடும். எழில் - அழகு. இத்தீர்த்தத்திலே மூழ்குவோர் குட்டம், பித்த நோய், சூலை, என்புருக்கி, மேக நோய் முதலியன நீங்கப்பெறுவர் என்பது.

4. கயலை நேர் விழி உமை - கயல்மீனின் கண்ணையொத்த கண்ணை யுடைய உமாதேவியார் : ஆகலின், மீனுட்சி என்ற பெயர் பெற்றனள். இயல் உற - நன்ருக.

5. தென் மலைய முனி - தெற்குத் திசையிலுள்ள பொதியிலில் எழுந்தருளிய அகத்தியமுனிவர் : மலயம் - பொதியில் மலை. மெய்த்தவர் - உண்மைத் தவசிகள்.

வினையகற்று வெண்ணீறும் கண்மணியு முடல்முழுதும் விளங்கத் தாங்கிச்
சினவியெழு மைம்புலனு முள்ளடக்கித் திரிமலமும் சிதைத்து நீடு
கனமுதவு தாமரையா தனத்திருந்தூ ணுடனுறக்கம் கடிந்து நோக்கம்
தனைமுகிழ்த்தல் விழித்தலுறு வொருதிறத்து நாசிநுனி சாரச் செய்து. 6

இடையினெடு பிங்கலையி னிடையினுங்கால் வரவுபோக் கிலங்கி டாது
நடுவினுறு சுழுமுனையில் தம்பனஞ்செய் துயிர்க்குயிராய் நயந்து வைகும்
சுடரினைத்தன் மனத்திருத்தி வழிபடச்சில் பகலாங்குத் தோற்றத் தோடு
முடிவுமிலாக் கடவுளெதிர் தோற்றினு னகோரமா மூர்த்தி யாகி. 7

அலகினுருத் தபனர்களோ ரிடத்தெழுந்த தெனத்தோன்றி டமலன் வேணி
நிலவுமிழு மிளம்பிறையு மலர்முகமும் விழிமூன்றும் நிகழ்செவ் வாயும்
நலமருவு பிறவெழிலும் கண்டெழுந்து மகிழ்வினெடு நடித்து முன்னர்ப்
பலமுறைவந் தனஞ்செய்து கடல்குடித்த மலையமுனி பரவ லுற்றுன். 8

அணையரவ முடையோனு மரவிந்தக் கண்ணுனு மறியொ ணுத
துணைமலர்ச்சே வடிதனியேன் காணவெழுந் தருள்புரிந்த சோதி போற்றி
இணையிலிபொன் னிதழிபுனை வேணியநீ ளிடைமருதி னெந்தை போற்றி
பணைமுலைமின் கொடிமருவு மிடப்பாக விடைப்பாக பரம போற்றி. 9

என்றுதுதித் திடவுன்ற னருந்தவமு மிருந்துதியு மெமது நெஞ்சம்
துன்றிமிகு மகிழ்வுறச்செய் தனவுனக்கு வேண்டுவரம் சொல்க வென்னக்
குன்றுதனை வளைத்தபிரா னிசைத்தனனம் முனிதாழ்ந்து குலவு நின்பால்
ஒன்றலுறு முயர்முத்தி வேண்டுமென வுரைத்திட்டா னுரைக்கு மீசன். 10

---

6. சினவி - கோபித்து: சினம் - கோபம். திரி மலம் - முக்குற்றம்: அவை:- காமம், வெகுளி, மயக்கம் என்பன. சிதைத்து - கெடுத்து. தாமரை ஆதனம் - பதுமாதனம்; அஃது அட்டாங்க யோகாசனத்துள் ஒன்று: இருதொடைமேலும் இரண்டு உள்ளங்காலையும் மாறித் தோன்ற வைத்தல். ஊண் - உணவு. கடிந்து - நீக்கி. முகிழ்த்தல் - மூடுதல்.

7. கால் - பிராணவாயு. வரவு போக்கு - உச்சுவாச நிச்சுவாசங்கள். இலங்கிடாது - பொருந்தாமல். தம்பனம்செய்து - நிலையாகநிறுத்தி.

8. அலகின் உரு தபனர் - எல்லையில்லாத சூரியர்கள்: அளவிறந்த சூரியர் என்க. வேணி - சடை. கடல் குடித்த மலய முனி - ஏழ்கடல் நீரையும் உழுந்து அமிழ்ந்து நீராகச்செய்து ஆசமனம் செய்த அகத்தியர்.

9. அணை அரவம் உடையோன் - திருமால். அரவிந்தக் கண்ணுன் - பிரமன்: அரவிந்தம் - தாமரை. கண்: ஏழனுருபு.

10. குன்று தனை வளைத்த பிரான் - மகாமேருவை வில்லாக வளைத் தருளிய சிவபெருமான். நின்பால் ஒன்றல் உறும் உயர் முத்தி - பரமுத்தி;

வேறு

தென்றமிழ் முனிவ முத்தி வேண்டுமேல் தெரிக்கு மன்ன(து)
உன்றனக் கரிய தன்று மயேந்திர மென்னு மோங்கல்
சென்றவ னுறைதி நாமும் சிலபகல் கழிந்திட் டந்தக்
குன்றிடை யணைந்து காட்சி கொடுத்ததூஉந் தருது மென்றான். 11

பெரிதுள மகிழ்வுற் றந்தப் பிறங்கல்சென் றுறைந்தா னன்னோன்
அரியயற் கரிய வண்ண லனையபே ருருவத் தோடு
தெரியுற வின்னு மாங்கே திகழுற வுறையு நீடு
விரிதரு முலகி னோர்க்கு வேண்டிய வரங்க ளீவான். 12

அத்தடம் படிவுற் றந்த மூர்த்தியை யருச்சித் தோரும்
உய்த்திடு பூசை யாற்றற் குரியன வுதவி னோரும்
பத்தியிற் பணிந்திட் டோரும் பாரினு மினிது வாழ்ந்து
நித்தரா யவன்றாள் நீழ னீடுவ ரீது வாய்மை. 13

கலிவிருத்தம்

தருமனுக் கியதனித் தடத்தின் மேன்மையும்
பரசிவ னுண்டினி திலங்கு பான்மையும்
ஒருவகை பேசின முமக்கு நாமினி
நிருதிதீர்த் தத்துறு நிகழ்ச்சி கூறுவாம். 14

*இயமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 733

---

சுத்தாத்துவித சித்தாந்த முத்தி. இதனை, ''பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலம் தீயிரும்பு பாணி யுப்பு, விண்ணனிலம் உடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல் விளக்குப் பானீர், கண்ணிரவி உணர்வொளிபோல் பிரிவரிய அத்துவிதக் கலவி...'' என்னும் ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் வாக்கானுணர்க.

11. ஓங்கல் - மலை. கொடுத்து அதூஉம் தருதும்.

12. அந்தப் பிறங்கல் - மயேந்திரமலை: பிறங்கல் - மலை.

13. அத்தடம் - இயமதீர்த்தம்: தடம் - தடாகம். அந்த மூர்த்தி - அகோரமூர்த்தி. பாரினும் - நிலவுலகத்தினும்: உம்மை எதிரதுதழீஇயது. வாய்மை - சத்தியம்.

14. தருமன் - இயமன். ஆண்டு - அவ்விடத்தில்.

## இருபத்திரண்டாவது

# நிருதிதீர்த்தச் சருக்கம்

[ இயம தீர்த்தத்துக்கு மேற்குத்திக்கிலே மூன்று அம்புகள் விழும் தூரத்தில் நிருதி தீர்த்தம் உள்ளது. இதற்குத் தேவதை விரூபாட்சர். தீர்த்தபாலன் நிருதி. இருடி வசிட்டர். மரம் கருங்காலி. இதில் மூழ்குவோர் பூசினிக்காய், உழுந்து, எண்ணெய், எள்ளன்னம் இவைகளை அந்தணர் கட்குத் தானம்செய்தல் வேண்டும். இதனுல் சுரம் முதலிய நோய்கள் நீங்கும். அரக்கர்களாலும் பசாசு முதலியவற்ருலும் உண்டாகும் துன்பங் கள் அகலும். நிருதி இத்தீர்த்தத்தை உண்டாக்கி, இதனுல் யாவரும் நன்மையடையுமாறு வரம் பெற்ருன். ஆகலின், இது நிருதிதீர்த்தம் என்னும் பெயர் பெற்றது.]

கலிவிருத்தம்

இயமதீர்த் தத்தினுக் கிலங்கு மேற்றிசை
வயினிரண் டோடொரு வாளி வீழிடைப்
பயிலுறு நிருதியின் தீர்த்தம் பாங்குறும்
மயலறு மாதவன் வசிட்ட னென்பவன். 1

நேத்திர நுதல்வளர் நிமலன் தேவதை
கூர்த்திடு நிருதியே குலவு மன்னதைக்
காத்திடு நீள்கருங் காலி யென்றிசை
சீர்த்திபெற் றிடுதரு திகழு மாயிடை. 2

மேயதின் மூழ்கிமேல் விளங்கு பூசினிக்
காயுழுந் தெண்ணெயெட் கலந்த போனகம்
தூயவே தியர்க்கிடிற் சுரமுன் னுகிய
நோயகன் றிடுமொரு நொடிப்ப தத்தினே. 3

---

1. வயின் - இடம்: ஏழனுருபு. வாளி - அம்பு. மாதவன் - இருடி.

2. நேத்திரம் - கண். நுதல் - நெற்றி. நிமலன் - மலரகிதர்: குற்ற மில்லாத சிவபிரான்; என்றது விரூபாக்ஷமூர்த்தியை. சீர்த்தி - மிகுபுகழ். ஆயிடை - அவ்விடத்து.

3. எள் கலந்த போனகம் - எள்ளன்னம்: எள்ளோதனம். சுரம் முன் ஆகிய - சுரம் முதலாகவுள்ள. பதம் - காலம்.

அரக்கரி னலகையி னனுகு மின்னன்மேல்
நெருக்குறு வின்பமே நீடு நாடொறும்
தருக்குறு மத்தடந் தன்னின் மூழ்கிமுன்
கருக்குநோய் தவிர்ந்துளம் களித்து ளார்பலர். 4

தரணியி லெளியரைக் காக்கத் தானவர்
அரசனத் தடஞ்சமைத் ததற்கு முன்னிசை
வரனுமீந் திட்டனன் மகிழ்ந்து மற்றினி
வருணதீர்த் தம்பெறு வளமை யோதுவாம். 5

*நிருதிதீர்த்தச்சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 738

---

4. அலகை - பேய் பசாசுகள். இன்னல் - துன்பம். கருக்கு நோய் - கருகச் செய்த நோய்கள்.

5. தரணி - பூமி. தானவர்அரசன் - நிருதி: தானவர் - அரக்கர். வரன் - வரம்: இறுதிப்போலி.

# இருபத்துமூன்றுவது

# வருணதீர்த்தச் சருக்கம்

[ மருதவனேசர் கோயிலுக்கு மேற்குத்திக்கில் பதினைந்து அம்புகள் விழுந்தூரத்திலே வருணதீர்த்தம் உள்ளது. இதனை வருணன் உண்டாக்கினான். இதற்குத் தேவதை சத்தியோசாத மூர்த்தி. தீர்த்தபாலர் விநாயகக் கடவுள். இருடி பரத்துவாசர். மரம் மகிழமரம். இத்தீர்த்தத்திலே முழுகி அந்தணர்களுக்குத் தாம்பூலம், அழகிய குதிரை முதலியவற்றைத் தானம் செய்தல்வேண்டும். இத்தீர்த்தத்திலே முழுகுவோருக்கு எவ்வித நடுக்கங்களும் நீங்கும். திரிபுரத்து அசுரர்களால் மிக்க துன்பமெய்தி நடுங்கிய தேவர்கள் இத்தலத்தையடைந்து காருண்ணியாமிர்தம் முதலிய தீர்த்தங்களில் முழுகிப் பின்பு இவ்வருணதீர்த்தத்திலும் படிந்து, இதன் கரையிலிருந்து தவம்புரிந்தனர். ஸ்ரீ மகாலிங்கப்பெருமான் சத்தியோசாத மூர்த்தியாக எழுந்தருளி அவர்கட்குக் காட்சிதந்தருளினர். தேவர்களை நோக்கித் 'தேவர்களே! நீங்கள் சிறிதும் நடுக்கம் அடையவேண்டாம்' என்று அபயமளித்தார். பின்பு, முப்புரங்களையும் நகைத்து எரித்தார். அவரவர் பதவிகளை அடையும்படி தேவர்களுக்கு அருள்புரிந்தார். இக்காரணத்தால் இதன் கரையிலிருக்கும் பெருமானுக்கு நடுக்கந்தீர்த்தவர் என்று திருநாமம் வழங்குகின்றது.]

கலிநிலைத்துறை

மருத நாயகன் றனக்குமேற் றிசையினில் வாளி
ஒருப தைந்துவீ ழெல்லையி னுறையுமோர் தீர்த்தம்
வருண னுக்கிய தஃதவன் பெயரினல் வயங்கும்
இருடி திண்பரத் துவாசனு மிசைதரு வகுளம். 1

தீர்த்த பாலனைங் கரத்தினேன் தெரிக்குமெவ் வுயிர்க்கும்
சாத்தி யப்பொரு ளாயுறு சத்தியோ சாத
மூர்த்தி தேவதை மற்றதின் மூழ்கிவெள் ளடைகாய்
ஏர்த்து ரங்கமே லுதவிடிற் கொடுவினை யேகும். 2

---

1. வாளி - அம்பு. ஒருபது ஐந்து: உம்மைத்தொகை. வகுளம் - மகிழமரம்.

2. ஐங்கரத்தினேன் - விநாயகக் கடவுள். வெள்ளடை - வெற்றிலை. காய் - பாக்கு. துரங்கம் - குதிரை. சத்தியோசாதமூர்த்தி வெள்ளைமாலை,

பொன்னி ரும்பிர சதங்களிற் பொலிந்திரு விசும்பு
தன்னி டைத்திரி திரிபுரங் களினுறு தகுவர்
முன்ன வன்தரத் தாம்பெறு வரத்துறு மொய்ம்பால்
துன்னு வானவர்க் கனுதினந் துயரமே விளைத்தார். 3

வான நாடவ ரவர்செயுந் துயரினல் வருந்தி
மாநி லம்புக ழிடைமரு தெனும்பதி மருவி
மேன லம்பெறக் காகமூழ் கியதட மேவி
நானஞ் செய்துமை யருளிஞ ரத்தினும் படிந்து. 4

பொன்னி சூழிடை மருதிறை யவனடி போற்றி
அன்ன வன்மல ரடியையே யகத்திலிற் குறியாச்
சொன்ன வாருணத் தடத்தினும் தோய்ந்ததன் கரைமேல்
பன்னு மெய்ந்நடுக் குற்றிடப் பரிந்தன ரிருந்தார். 5

முந்து சத்தியோ சாதமா மூர்த்தியா யிறையோன்
வந்து நின்றெதி ரவரைநீ ரஞ்சன்மின் வலிசெய்
அந்த வன்கணர்க் கழிவுநா ளடுத்ததா மென்னச்
சிந்தை தன்னெடு மெய்யுறு நடுக்கமுந் தீர்த்து. 6

---

வெண்சந்தனம், வெள்ளை அணிகலங்கள், வெள்ளைப்பாகை, வெள்ளை நிற ஆடை தரித்தவர்; சாந்தமுடையவர்; மூன்றும்பிறைச்சந்திரனைத் தரித்த சிரமுடையவர்; முக்கண்களையுடையவர்; பால்ய வடிவமும் புன்சிரிப்பும் உடையவர்; வரத அபய கரங்களையுடையவர்.

3. இரசதம் - வெள்ளி. இரு விசும்பு - பெரிய ஆகாயம்: என்றது மற்றைப்பூதங்கள் தன்பால் வந்து ஒடுங்குமாறு இடந்தந்து நிற்றலின். தகுவர் - அரக்கர். முன்னவன் - முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான். மொய்ம்பால் - வலிமையினல். துன்னு வானவர் என்றது முப்பத்து முக்கோடி தேவர்களைக் குறிப்பதாம்.

4. அவர் - திரிபுராதிகள். மேல் நலம் பெற. காகம் மூழ்கிய தடம் - காக்கைக்குளம்; அது கனகதீர்த்தம். உமை அருளின் நாரம் - காருண்ணியாமிருத தீர்த்தம்: நாரம் - நீர்.

5. பொன்னி - காவிரி. இடைமருது இறையவன். அகத்தினில்குறியா - மனத்திடை வைத்துத் தியானித்து. வாருணத்தடம் - வருணன் சம்பந்தமான தடாகம்; வடமொழித் தத்திதபதம். தோய்ந்து - மூழ்கி.

6. வன்கணர் - துட்டர்.

கேச வன்திரி புரத்துறு கேடற்பாற் கிடைத்தாண்(டு)
ஈசன் மாலய னிறைவரென் றியம்பல்பொய் றென்றவ்
வாசை நீங்கிடப் பலபல மாயஞ்செய் தவர்செய்
பூசை யுஞ்சிவ பத்தியும் போக்கிமுன் வந்து. 7

ஈச நின்பதம் விடுத்திலர் மூவர்மற் றியாரும்
நீச ராயினர் திரிபுரத் திடையென நிகழ்த்த
வாசு கிப்பெரும் பணியினை நாணென மாட்டித்
தேசு மிக்கபொன் மேருவைச் சிலையதாக் கோட்டி. 8

மாய னைக்கணை யாக்கியங் கைக்கொடு மதியோ(டு)
ஏய செங்கதிர் திகிரியா யிசைமறை பரியாத்
தூய நான்முகன் வலவனுத் துன்றுமே தினியா
மேய தேரினின் றெருதனிச் சிறுநகை விளைத்து. 9

அந்த மென்னகை யெழுந்ததீப் பொறிகளி னுங்கு
முந்து முப்புரந் தீயவு மொழியுமுத் தவரும்
வந்து தன்னடி வணங்கவும் செய்தபின் வானோர்
சுந்த ரத்தம னியநகர் துன்னவும் செய்தான். 10

---

7. கேசவன் - திருமால்; கேசி என்னும் அசுரனைக் கொன்றவன். மயிர்முடி அழகுடையவன் எனினுமாம்; இது திருமால் பன்னிரு திருநாமங்களுள் ஒன்று. ஏனைய நாராயணன் மாதவன் கோவிந்தன் விஷ்ணு மதுசூதனன் திரிவிக்கிரமன் வாமனன் ஸ்ரீதரன் இருடிகேசன் பத்மநாபன் தாமோதரன் என்பன. கேடர்பால் கிடைத்து - கேட்டை விளைவிப்பவரிடத்தே வலிந்து சென்று.

8. மூவர் - சுதன்மன் சுசீலன் சுபுத்தி என்பவர்: இம்மூவரும் தாரகாசுரனுடைய புதல்வர். விஷ்ணுமூர்த்தி பௌத்தாவதாரஞ்செய்து திரிபுராதிகளை மயக்கி அவர்கள் செய்த சிவபூசையையும் சிவபத்தியையும் போக்கினர் என்பது வரலாறு. காஞ்சிப்புராணம் முப்புராரி கோட்டப்படலத்தானும், உபதேசகாண்டம் திரிபுரவிசயச்சருக்கத்தானும் இதனை விளங்கக்காண்க. நீசர் - இழிந்தோர். பெரும் பணி - பெரிய பாம்பு. சிலை - வில். கோட்டி - வளைத்து.

9. மாயன் - திருமால். கணை - அம்பு. திகிரி - தேருருளை. பரி - குதிரை. வலவன் - தேர்ப்பாகன். மேதினி - பூமி. சிறுநகை - புன்சிரிப்பு.

10. மென்னகையினின்று எழுந்த தீப்பொறி என்க. முத்தவர்: எட்டாம்பாட்டு உரை காண்க. தமனிய நகர் - பொன்னுலகம்.

தாரி லங்கணி முடிச்சுரர் தனிமுதற் போற்றிப்
பாரி னீடுமித் தலத்திடைப் பகர்புனற் கிறைசெய்
நீரின் மூழ்கின மிகலினோர் நெருப்புமூழ் கினரென்(று)
ஏரி னேங்கதைப் புகழ்ந்துத மிருக்கையெய் தினரால். 11

கடுக்க வின்பெறு கந்தரக் கண்ணுத லிமையோர்
இடுக்க ணீக்கிய திறத்தின லின்னுமத் தலத்தின்
நடுக்கந் தீர்த்தவ னெனச்சொலு நாமமேற் கொண்டு
வடுக்கண் மாதினே டமர்ந்திடும் வணங்கமூ வுலகும். 12

தருண வின்மதி மிலைந்திடை மருதுறை தலைவன்
கருணை யுற்றருள் வரம்பெறு நெஞ்சகங் களித்து
வருண னுக்கிய வாவியின் மான்மிய மிதுமேல்
அருண வாகனன் தீர்த்தமான் மியமினி தறைவாம். 13

வருணதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 751.

---

11. தார் இலங்கு அணிமுடி. புனற்கு இறை - வருணன். இகலினோர் - பகைவராகிய திரிபுரத்தோர். சுரர் நீரில் மூழ்கினர் இகலினோர் நெருப்பில் மூழ்கினர் என்றது நயம். சுரர் புகழ்ந்து இருக்கை எய்தினர் என முடிக்க.

12. கடுவானது கவின் பெறுதற்கு இடனாகிய கந்தரம் என்க. கடு; விடம்; ஆலாகலம். கவின் - அழகு. கந்தரம் - கழுத்து. கண்ணுதல்- அன்மொழித்தொகை; நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்; நுதற் கண் என மாறுக. கந்தரத்தையும் கண்ணுதலையும் உடையோன் என்க. முதலடி ''கடுக்கவின் பெறு கண்டனும்'' ''கறைநிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்'' என்னும் பரஞ்சோதி திருவிளையாடற் புராணச் செய்யுள் அடிகளை நினைவுறுத்துவதாம். இடுக்கண் - துன்பம். வடு - மாவடு. நடுக்கம் தீர்த்தவர் - கம்பகரேசர்.

13. அருண வாகனன் - வாயுதேவன்: அருணம் - மான்: இது அரிணம் எனவும் வழங்கும்.

## இருபத்துநான்காவது

# வாயுதீர்த்தச் சருக்கம்

---

[மேல்பாலுள்ள வருணதீர்த்தத்தின் வடமேற்கிலே ஓர் அம்பு வீழ் தொலைவில் வாயுதீர்த்தம் உள்ளது. அதற்கு வாயுவே தெய்வம். முருகவேள் அதனைப் பாதுகாப்பவர். முனிவர் கண்ணுவர். கேசரமரம் தலவிருட்சம். அத்தீர்த்தத்தில் முழுகி அந்தணர்கட்குக் கன்னிகை, கவிகை, பொன் முதலியவைகளை உதவினால் வாயு உபத்திரவம் நீங்கும்; இன்பம் பெருகும். அத்தீர்த்தத்தில் முழுகிப் பலர் உயர்ந்த கதியைப் பெற்றனர். அவருள் அந்தணர்குலத்தில் தோன்றிய கிருகலனென்னும் பெயரினனும் ஒருவன். அவன் களவு, வஞ்சனை, பொய் முதலியவற்றால் மிக்கோன். அந்தணர்களிடத்திலே நட்பிலன்; வேதமோதிலன். ஆயினும், மந்திர மயக்கமும் மாதர்பால் மயக்கமும் உடையன். சத்தமுனிவர்கள் பூசித்த தலமாகிய திருத்தவத்துறையை அடைந்து அங்கே சிவபெருமான்மீது அணிந்திருந்த ஆபரணங்களைக் களவாட எண்ணினன். இரவில் அங்கு உள்ள விளக்கினைத் தூண்டி ஒளியை உண்டாக்கினன். அன்று சோமவாரம். நினைத்தபடியே அணிகலங்களைக் களவுசெய்துகொண்டு போகும் போது அவனை இயமதூதர்கள்கொண்டு தருமன்பால்விடுத்தனர். இயமன் அவனைப்பார்த்து 'ஏ பார்ப்பானே! நிலவுலகத்தில் நீ செய்த பாதகத்தால் வேடனாகப் பிறந்து உழல்வாயாக; எழுமுனித்தலத்தில் திருடும்பொருட்டு நீ தூண்டிய திருவிளக்குப்பணியின் புண்ணியம் மேவ, திருவிடைமருதூர் என்னும் தலத்தை அடைந்து வாயுதீர்த்தத்திலே படிவாய்; அப்புண்ணிய விசேடத்தால் சிவபதம் பெறுவாய்' என்று பணித்தான். அவனும் அக்கட்டளைப்படி வேடனாய்ப்பிறந்து இடைமருதடைந்து இத்தடத்திற்படிந்து சிவலோகம் அடைந்தான்.]

கலிநிலைத்துறை

மேய வாருணத் தடவட மேற்றிசை யிடத்தோர்
சாய கம்விழு சேய்மையில் தயங்குமோர் தீர்த்தம்
வாயு தீர்த்தமென் றதற்கிசை வாயுவே தெய்வம்
சேய தைப்புரந் திடுமுனி திறங்கொள்கண் ணுவனும். 1

---

1. வாருணத்தடம் - வருணன் சம்பந்தமான தடாகம்: வடமொழித் தத்தித பதம். மேய - பொருந்திய. சாயகம் - அமபு. ஓர் சாயகம் விழு சேய்மை - ஓர் அம்பு வீழும் தூரம். தயங்கும் - விளங்கும்.

கேச ரத்தனித் தருவொன்று கெழுமலர் கொண்டு
வாசஞ் செய்திடு மாவயின் மற்றதின் மூழ்கி
ஆசில் கன்னிகை கவிகைபொன் னந்தணர்க் குதவின்
பேசும் வாயுநோ யகலுமே லின்பமும் பெருகும். 2

ஒளிரு மத்தடந் தனிற்படிந் துயர்கதி யடைந்தோர்
அளவி லாரவர் தமிலொரு வன்றனை யறைதும்
கிளரும் விப்பிர குலத்தினேன் கிருகலப் பெயரோன்
களவு கைதவம் படிறிவை யளவில கற்றேன். 3

அந்த ணூர்பாற் பயிலுரு னருமறை யறையான்
மந்தி ரப்பெரு மயலினும் வடுவகிர் நெடுங்கண்
கந்த மென்மல ரோதியர் காமவே லையினும்
சந்த தம்படி மனத்தொடு சரிப்பவ னொருவன். 4

வந்து சத்தமா முனித்தலத் திடைநளி மதியில்
இந்து வாரநா ளிரவினி லீசன்மீ திலங்கும்
சந்த நீள்பணி கவர்ந்திடச் சார்ந்தது தெரிவான்
நந்து தீபத்தைத் தூண்டிமேற் கொண்டன னடந்தான். 5

நடக்கும் போதினி லியமகிங் கரர்சிலர் நண்ணி
அடுத்தி டங்கொரு பணியெயிற் றமர்தருங் கொடிய
விடத்த வன்றனைக் கொண்டுபோய் விளங்குகூற் றுவன்பால்
விடுத்து நின்றன ரன்னவ னுய்ந்திது விளம்பும். 6

---

2. கேசரத்தரு - மகிழமரம். ஆவயின் - அவ்விடத்தில்: வயின் - இடம். ஆசு இல் கன்னிகை - குற்றமில்லாத கன்னிப்பருவத்துப் பெண்.

3. அறைதும் - சொல்லுவோம். விப்பிர குலம் - பிராமணர்குலம். களவு - திருட்டு. கைதவம் - வஞ்சகம். படிறு - பொய்.

4. அரு மறை - அரிய வேதங்கள். மயல் = மையல் - மயக்கம். வடு வகிர் - மாவடுவின் பிளவு. ஓதியர் - கூந்தலையுடைய பெண்கள்: ஓதி - கூந்தல். காமவேலை - காமக்கடல். சந்ததம் - எப்போதும்: இரவும் பகலும் என்க. சரிப்பவன் - திரிவோன்.

5. சத்தமா முனித்தலம் - ஏழு முனிவர்கள் பூசித்த தலம்; திருத்தவத் துறை. நளி - குளிர்ச்சி. இந்துவாரம் - திங்கட்கிழமை. சந்தம்-அழகு. பணி- ஆபரணம். சார்ந்து அது. தெரிவான் - தெரியும்பொருட்டாக. நந்து தீபம் - அணைந்து போகும் தறுவாயிலிருந்த விளக்கு.

6. இயம கிங்கரர் - இயமதூதர். அடுத்திடு அங்கு. பணி - பாம்பு. எயிறு - பல். விடத்தவன் - விடம்போன்றன்: கூற்றுவன் - இயமன்.

தராத லத்திடைப் பனவ நீ யிழைத்தபா தகத்தால்
கிராத னுவுதித் தெழுமுனித் தலத்தினிற் கிடைத்தங்(கு)
இராவி லிந்துநா ளீசன்முன் னிருந்திடு சுடர்வில்
விராவ நீட்டலா லிடைமரு தெனும்பதி மேவி. 7

அனில னுக்கிய வாவியிற் படிந்துமற் றனைய
புனித வாவியிற் படிந்திடு புண்ணிய வசத்தால்
பனிம திச்சடை நுதல்விழிப் பரம்பொரு ளுலகத் (து)
இனிதி ருஞ்சுக மெய்துவான் பிறத்திபோ வென்றான். 8

அவனு மத்திறற் கூற்றுவ னறைந்தவா றீண்டுச்
சவர னுவுதித் திடைமரு தெனும்பதி சார்ந்து
தவல ரும்புகழ் மருத்தெழிற் றடத்தினில் தோய்ந்து
சிவப ரன்றனி யுலகிடைச் சென்றுவிற் றிருந்தான். 9

தளமி குந்திடு மலர்பொலி சமீரண தீர்த்த
வளமை மற்றிஃ தாமினி மகிழ்வுறு தவத்தீர்
களமி டற்றவன் துணைவனுக் கட்டுரைத் திடுதென்
அளகை மன்னவ னமைத்ததீர்த் தப்புக ழறைவாம். 10

வாயுதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 761

---

7. பனவ - பிராமணனே: விளி. கிராதன் - வேடன். சுடர் - விளக்கு. வில் விராவ - ஒளி பொருந்த.

8. அனிலன் - வாயுதேவன். வாவி - குளம். சடையினையும் விழியினையும் உடைய பரம்பொருள். எய்துவான் - அடையும்பொருட்டு. பிறத்தி - பிறப்பாயாக.

9. சவரன் - வேடன். தவலரும் புகழ் - நீங்குதற்கு அரிய புகழ். மருத்து - காற்று.

10. தளம் - பூவிதழ். சமீரணன் - வாயு: களமிடற்றவன் - நஞ்சு பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான்: களம்-விடம். துணைவன்-தோழன்: குபேரன் அரனுக்குப் பிரியாத் தோழன் என்க. ''அறிந்து செல்வ முடையானும் அளகைப் பதியாற் றோழமை கொண்டு'' என்பது நால்வர் நான்மணிமாலை. அளகை - குபேரனுடைய நகரம். அறைவாம் - சொல்லுவாம்.

## இருபத்தைந்தாவது

# குபேரதீர்த்தச் சருக்கம்

[வாயுதீர்த்தத்தின் கிழக்கிலே ஐந்து அம்புவீழ் தூரத்திலுள்ளது குபேரதீர்த்தம் என்பது. அத்தீர்த்தத்துக்குரிய இருடி மார்க்கண்டேயர். அதற்குத் தெய்வம் குபேரனே. கண்டாகர்ணன் அதனைக் காப்போர். அதன் தலவிருட்சம் சண்பகம். அத்தீர்த்தத்தில் படிந்து வேதசிவாகமம் வல்ல பிராமணருக்கு மோதகம், கரும்பு, சர்க்கரை, நல்லவாசனைப்பொருள், கோதுமை இவற்றைத் தானம் செய்தோர் செய்த தீவினை குறையும். செல்வம் உயரும். குபேரன் இத்தீர்த்தத்தை உண்டாக்கித் தன் வினை தவிர்ந்தான். இத்தீர்த்தத்தில் முழுகுவோர் வினை தவிர்ந்து செல்வம் அடைதல் வேண்டுமென மருதீசரைப் பணிந்து வேண்டிக் குபேரன் விடை பெற்று அளகையை அடைந்தான்.]

கலிநிலைத்துறை

தீர்க்க முற்றிடும் வாயுவின் தீர்த்தமென் றதற்கே
கூர்க்க டுங்கணை யைந்துசெல் சேய்மையிற் குணபால்
தார்க்க வின்முடி நிதிபதி சமைத்திடு தீர்த்தம்
மார்க்க டேயனு முனிவரன் மற்றதற் கிருடி. 1

கொண்ட புட்பக வூர்தியே குலவதின் தெய்வம்
கண்டை யுற்றகண் டாகர்ண னன்னதைக் காப்போன்
வண்டு ணுமலர்ச் சண்பக மதிலுறு விருக்கம்
மண்டு வெள்வளை யுலவுமவ் வாவியின் மூழ்கி. 2

---

1. தீர்க்கம் முற்றிடும் - முழுநன்மையும் நிறைவெய்தும். கூர் கடும் கணை - கூர்மை பொருந்திய வேகமாகச் செல்லும் அம்பு. சேய்மை - தூரம். ஐந்து அம்புகள் வீழ் தூரம் என்க. குணபால் - கிழக்குத்திக்கில்: குணக்கு - கிழக்கு. தார் கவின் முடி - மாலையணிந்த அழகிய கிரீடத்தைத் தரித்த. நிதிபதி - குபேரன். குபேர தீர்த்தத்திற்கு முனிவர் மார்க்கண்டேயர்.

2. புட்பக ஊர்தி - புட்பக விமானம்: இது குபேரனுக்கு உரியது. குபேரன் அதிதெய்வம். கண்டாகர்ணன் தீர்த்தபாலன். சண்பகத்தில் வண்டுகள் மொய்க்கப் பெறு. மண்டு - நிறைந்த. வெள் வளை - வெள்ளிய சங்குகள். வாவி - குளம்.

வேத மாகம மாதிய வுணர்ந்தவிப் பிரர்க்கு
மோத கங்கழை சருக்கரை மொழிதரு சுகந்தம்
கோது மைக்குலங் கொடுத்திடின் குலவுமன் னவர்கள்
ஓது தீவினை குறைந்திடு முயர்ந்திடுஞ் செல்வம். 3

அத்த டத்தினை யமைத்துவெவ் வினைதவி ரருத்தன்
இத்தி றப்பெருஞ் செல்வமுற் றிடவிடை மருதின்
நித்த னைப்பணிந் துறுவர மேற்றுநன் னீர்தோய்
மெய்த்த வர்க்குத வெனவதற் குதவினன் மேனாள். 4

மேவு மத்தடந் தனிற்படிந் தித்திறம் வெய்ய
பாவ நீக்கிநற் செல்வமேற் பற்றின ரநேகர்
சேவு கைத்திடீ சானனுந் தேவனு ரமைத்த
வாவி யின்தனிச் சிறப்பினி வழுத்துது மன்னோ. 5

குபேரதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 766

---

3. விப்பிரர் - பிராமணர். மோதகம் - கொழுக்கட்டை. சுகந்தம் - நறுமணம் மிக்க பொருள்கள். கோதுமைக் குலம் - கோதுமையாகிய தானியம்: கூலம் குலமெனக் குறுகியது: கூலம்-தானியம். குலவும் அன்னவர்.

4. அருத்தன் - நிதிபதியாகிய குபேரன்: அருத்தம் - பொருள், நிதி. இடைமருதில் நித்தனை. மெய் தவர்க்கு - உண்மையான தவத்தினையுடையவர்க்கு. இத்தீர்த்தத்திலே விதிப்படி முழுகி மகாலிங்கேசரை வழிபடுவோருக்கு வறுமை வறுமையாம் என்றபடி.

5. வெய்ய பாவம் - கொடிய பாவம். சே உகைத்திடு - இடபத்தை வாகனமாகக்கொண்டு செலுத்துகின்ற. ஈசானன் - வடகிழக்குத் திக்குப் பாலகர். வழுத்துதும் - போற்றுவோம்.

## இருபத்தாருவது

# ஈசானதீர்த்தச் சருக்கம்

[குபேரதீர்த்தத்தின் கிழ்த்திசையில் இரண்டு அம்புவீழ் தூரத்திலே ஈசானனுல் முன்பு அமைக்கப்பட்ட தீர்த்தம் ஒன்றுண்டு. அத்தீர்த்தத்தின் இருடி வசிட்டமுனிவர். மாணிபத்திரன் அதனைக் காவல் செய்வோர். சங்கரன் அதன் தெய்வம். ஈசானதீர்த்தத்தில் முழுகி உருத்திராக்கம், ஆடை முதலிய தானங்களைச் செய்யின் மகப்பேறு உண்டாம். ஞானம் சித்திக்கும். மார்க்கண்டேயமுனிவர் இத்தடத்திற்படிந்து மகாலிங்கேசரை வணங்கிக் கடவூர் சென்று இறைவரைப் பூசித்துக் காலனை வென்ருர்; என்றும் சிரஞ்சீவியாக இருக்கப்பெற்ருர். மற்றும் பலர் இத்தீர்த்தத்தில் முழுகிச் சித்திபெற்றனர், முத்திபெற்றனர்.]

கலிநிலைத்துறை

இயக்கர் நாயக னமைத்திடவ் விலஞ்சியின் கீழ்பால்
வயக்க டுங்கணை யிரண்டிலீ சானன்முன் வகுத்த
வியக்கு றுந்தனிப் பொற்றட மேவுறு மிருடி
மயக்கின் மாதவ வசிட்டனும் வார்தரு விளவே. 1

மாணி பத்திர னென்பவன் மற்றதைப் புரப்போன்
தாணு வென்றுல கிசைத்திடு சங்கரன் தெய்வம்
காண திற்படிந் துருத்திரக் கண்மணி கலைகள்
சேண ளித்திடின் மகவுறும் ஞானமுஞ் சேரும். 2

மேலை யன்னதில் படிந்தெழில் மிருகண்டு மைந்தன்
சூல பாணியை யணையபொற் பதியிடைத் தொழுது
கால னென்பவன் றனைப்புகழ்க் கடவையில் வென்று
சால வின்புற வாழுநா ளெய்தினன் தனித்து. 3

---

1. இயக்கர் நாயகன் - யக்ஷர்களுக்குத் தலைவனுகிய குபேரன்: இயக்கர்: பதினெண்தேவகணங்களுள் ஒரு பகுதியார். இலஞ்சி - குளம். வயம்-வெற்றி பொருந்திய. விளாமரம்: தரு - மரம்.

2. மாணிபத்திரன் தீர்த்தபாலன். அதை-அத்தீர்த்தத்தை. தாணு-கடவுள். உருத்திரக் கண்மணி - உருத்திராக்கம். கலைகள் - ஆடைகள்.

3. மேலை - முற்காலத்தில். கடவை - திருக்கடவூர்.

உரிய வன்பினம் மறையவ னிதிற்படிந் துலகில்
பெரிது வாழ்பக லெய்தின னென்பது பெரிதோ
அரிய ஞானமொன் றெய்திடு மெனச்சொலி னதனுல்
கரிய கந்தரன் திருவருள் கலந்திடு மன்றே. 4

இன்னு மத்தடந் தனிற்படிந் திடைமரு திறையோன்
பொன்ன டித்துணை பணிந்தரு ளெய்தியிப் புடவி
தன்னி டைப்பல யுகமுறச் சித்திசார்ந் தவரும்
மன்னு வீடுபெற் றவர்களும் வரையில ரன்றே. 5

ஈச னுற்றிய வாவியின் மான்மிய மிதுவாம்
மாசி லந்தணி ரினியவன் மலரடி வணங்கி
வாசு தேவனென் றுரைத்திடு மாதவ னமைத்த
தேசு மிக்கதீர்த் தக்கதை சிறிதெடுத் திசைப்பாம். 6

ஈசானதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 772

---

4. அன்பின் அ மறையவன். கரிய கந்தரன் - நஞ்சு உண்டமையால் கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமான்.

5. புடவி - பூமி. சித்தி சார்ந்தவரும் - சித்திகள் கைவந்தவர்களும். வீடு - முத்தியுலகம். வரை இலர் - அளவிறந்தவர்கள்.

6. ஈசன் - ஈசானன். மான்மியம் - மகத்துவம். மா தவன் - இலக்குமி கணவன். வாசுதேவன்—வசுதேவனுடைய புத்திரன்: வடமொழித் தத்தித பதம்.

இருபத்தேழாவது

# கிருஷ்ணகூபச் சருக்கம்

---

[ஸ்ரீ மகாலிங்கேசர் ஆலயத்தின் ஈசானத்திசையில் கண்ணனுல் நிருமிக்கப்பட்ட தீர்த்தம் ஒன்று உண்டு; அது கேணிவடிவில் உள்ளது. அட்டமி திதியில் அதில் மூழ்குதல் உத்தமம். முழுகி அவ்விடத்தில் தானம் செய்வோர் வினைகள் தீர்வர். கடன் வாதனை தொலையும். நல்ல மனைவி மக்களைப் பெறுவர். சிவபெருமான் கருணையும் உண்டாம். மாவலி யிடம் மூவடிமண் வேண்டிய விஷ்ணுமூர்த்திக்குக் கொடாமல் தடுத்த சுக்கிரபகவான் கண்ணில் வாமனமூர்த்தி தருப்பையால் குத்தினமையால் அவன் ஒரு கண்ணிழந்தனன். சுக்கிரன் மிகத்துயருற்றுப் பெயர்ந்தனன். மாவலி வாக்களித்தபடியே மூவடிமண் தத்தம் செய்தான்; மண்ணும் விண்ணும் ஈரடியாலளந்தபின் மூன்ருமடிக்குத் தன் சிரத்தைத் தந்தான். வெள்ளி ஒருகண் கொண்டே நின்ருன். ஒருவருக்கு ஒன்றைக் கொடுத்தல் அறம். கொடுத்தற்குரியன இல்லையாயின் பெறுமிடத்தையாவது சொல் லுதல் வேண்டும்; அஃதும் இயலாதாயின் ஒன்றும் பேசாதிருத்தலே நன்று. ஈதலைத் தடுத்து நிற்பார் துன்புறுதலில் வியப்பொன்றுமின்று. ஈதலைச் செய்வோர் இன்பத்தையடைவர். கொடுப்போர் முன்பு துன்புறி னும் பின்பு புண்ணியமும் புகழும் அவருக்கு வந்தெய்தும்; தடுத்தல் செய்தோர் அவதியுறுவர்; வசையும் அவரைவிட்டு நீங்காது என்பதை மாவலி சுக்கிரன் என்னும் இருவர்பாலும் அறிந்தோம். கண்ணென்றை இழந்துநின்ற சுக்கிரன் இடைமருதையடைந்து கிருஷ்ணகூப தீர்த்தத்தில் மூழ்கிக் கண்ணொளி பெற்ருன். மகாலிங்கேசரையும், பெருநலமுலையம்மை யையும் தரிசித்து மகிழ்ந்தான்; தன்னுலகு அடைந்தான்.]

கலிநிலைத்துறை

ஆல யத்தினி லீசதிக் கதனிடைக் கண்ணன்
மேலை யத்தலத் தெதிர்ந்தநாள் விளைத்ததோர் தீர்த்தம்
கோல முற்றினி திலகிடுங் கூபநீ டுருவாய்ப்
பாலி னட்டமி தனிலதில் படிதலுத் தமமால். 1

---

1. கண்ணன் - கிருட்டினன். கோலம் உற்று - அழகு பொருந்தி. கூபம் - கிணறு. பாலின் அட்டமி - சுக்கிலபக்க அட்டமி. பாலின் - பால் போன்ற வெண்ணிறப் பக்கம் என்க.

தரிக்கு மன்னதிற் பரிவொடு தானமுன் னியற்றின்
தெரிக்கும் வெவ்வினைக் கணத்துட னிரணமுந் தீரும்
வரிக்கண் மாதுறும் மகவுறு மதியிள நிலவு
விரிக்கு மின்சடைத் தனிமுதல் கருணையும் மேவும். 2

தான வர்க்கிறை யாகிய மாவலி தன்பால்
தான மூன்றடி தருகெனத் தகையரி வேள்வித்
தான மெய்திநின் றிரந்திடப் பார்க்கவன் தனித்துத்
தான வற்கியற் குரவனுந் தன்மையால் சார்ந்து. 3

மேவு வஞ்சமீ தெனக்கொடா வகையெதிர் விலக்க
மாவ லிப்பெயர் மானவன் வந்திரந் தவர்கட்(கு)
ஈவ தேபெரி தெனவுரைத் தளிப்பதற் கிசையக்
காவி யன்பினர் மேனெறி யாதெனக் கருதி. 4

பொழித ரும்புனல் கமண்டலச் சிறுதுளை புகுந்துள்
வழிய டைத்தனன் வாமனன் மற்றதை யறிந்தவ்
வுழியி னோர்பசுந் தருப்பையில் குத்திட வொளியோன்
விழியி னொன்றிடைப் பட்டது வியன்மணி சிதற. 5

ஆங்க வன்துய ரொடுமுகம் பெயர்த்தன னதனில்
தூங்கு தண்புனல் விடுத்தவன் சொன்னவா றளித்தான்
வாங்கி மாயவன் தலைக்கொள மலர்ப்பதங் கொடுத்தான்
ஈங்கு வெள்ளிபின் னேகநேத் திரத்தொடு நின்றான். 6

ஈதல் வேண்டும்வந் திரந்தவர்க் கிசைந்தன விலையேல்
ஓதல் வேண்டுமற் றொருவருக் குதவுமா றின்றேல்
யாது மோதுறு திருந்திட வேண்டுமன் றீதல்
பேத முற்றிடச் செய்பவர் பிணியுறல் வியப்போ. 7

---

2. பரிவொடு - அன்போடு. இரணம் - கடன் வாதனை.

3. அரி - விஷ்ணுமூர்த்தி: வாமனவடிவத்தில் என்க. பார்க்கவன் - சுக்கிரன்: பிருகுமுனிவன் வழித்தோன்றல்: வடமொழித் தத்திதபதம்.

4. மானவன் - பெருமையுடையோன். காவியன் - சுக்கிரன்.

5. கமண்டலம் - கெண்டி. அவ்வுழியின் - அப்போதிலே, அவ்விடத்திலே. மற்று: வினைமாற்று. ஒளியோன் - சுக்கிரன்.

6. முகம்பெயர்த்தனன் - நீங்கினான். தூங்கு - ஒழுகுகின்ற. புனல் விடுத்து - தாரைவார்த்து. அவன் - மாவலி. ஏகநேத்திரம் - ஒற்றைக்கண்.

7. ஈதல் பேதம் உற்றிட - ஈயாமல் தடைசெய்ய.

கொடுக்கு மானவ னின்பமேற் கூடிடு முன்னர்
இடுக்க ணெய்தினு மதனெடு புகழுமொன் றெய்தும்
தடுக்கி னர்க்கொரு புன்கணுஞ் சாற்றிடு வசையும்
அடுக்கு மென்பதம் மாவலி கவிகள்பா லறிந்தாம். 8

நின்ற வெள்ளிபொன் னிடைமரு தெனும்பதி நேர்ந்து
துன்று சீருறக் கூவனீர் தோய்ந்துடன் பெற்றன்
சென்ற கண்மணி பிறர்க்கிவ னீதலைச் சிதைத்தோன்
என்று காட்டிலச் சினையின்முன் போலவே யிலங்கும். 9

பாவு மோகையி னுமையொடு மருதுறு பாங்கின்
மேவு சோதியைத் தன்னிரு விழியினு நோக்கித்
தூவி யொண்மலர் பணிந்தெதிர் துதிபல விசைத்துத்
தேவர் தங்களுக் கின்னல்செய் தீவினை தீர்ந்து. 10

தனதெ ழிற்றனி யுலகிடைச் சார்ந்தனன் தயங்கும்
அனைய தீர்த்தமான் மியஞ்சொலற் கநேகமுண் டின்னும்
சினவு மால்விடைத் தாணுவின் திருவிழி யமைத்த
கனக தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத் திடுவாம். 11

கிருஷ்ணகூபச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 783

---

8. மானவன் - பெருமையுடையோன். இடுக்கண் - துன்பம். புன்கண் - துன்பம். வசை - பழிச்சொல். மாவலி கவிகள் - மாவலி சுக்கிரன் என்னும் இருவர் : கவி - சுக்கிரன்.

9. வெள்ளி - சுக்கிரன். பொன் இடைமருது - அழகிய திருவிடைமருதூர். நேர்ந்து-அடைந்து. கூவல் நீர்-கிணற்று நீர்: கிணறு என்றது கிருஷ்ண கூபத்தை. சிதைத்தோன் - கெடுத்தோன். காட்டு இலச்சினையின் - காட்டுகின்ற அடையாளம்போல: இலச்சினை - முத்திரை, அடையாளம். வெள்ளி பொன் என உலோகப்பெயர் வந்தது ஒருநயம்.

10. ஓகை=உவகை - மகிழ்ச்சி. இன்னல் - துன்பம்.

11. தயங்கும் - விளங்கும். சினவு மால் விடை - கோபத்தையுடைய திருமாலாகிய இடபம். தாணு - சிவபெருமான். கட்டுரைத்திடுவாம் - சொல்லுவாம்.

## இருபத்தெட்டாவது

# கனகதீர்த்தச் சருக்கம்

[அழகிய சந்திரனைத் தரித்த சிவபெருமானுடைய திருக்கண்களினின்று வந்த கனகதீர்த்தம், காகம் ஒன்று படிந்து ஏகநாயகர் திருவருளடைந்த காரணத்தால் காகதீர்த்தம் (காக்கைக்குளம்) என்னும் பெயரையடைந்தது. காகதீர்த்தத்தைத் தரிசித்தாலும் பழவினைகள் விட்டுநீங்கும். கையால் தொடின் வினைகளெல்லாம் கெட்டோடும். அத்தீர்த்தத் துளியொன்று தலையில் தெளிப்பின் பதினாயிரம் வேள்விசெய்த பலன் வந்து பொருந்தும். கொடிய நோய்கள் அகலும். செல்வம் வந்தடையும். அத்தீர்த்தத்திலே மூழ்கின் நன்மை பெறுவர். உருத்திர சாரூபம் பெறுவர். பங்குனி மாதம் முதல்நாள் அதில் படிதல் விசேடமாம். மிகக்கொடிய காக்கையொன்று அதிற்படிந்து பொன்னிறம்பெற்று உருத்திர சாரூபம் அடைந்து, கயிலை மலைக்குச் சென்று இன்புற்றது. இதனை முன்னரே கூறினோம். இன்னும் பலர் இதில் மூழ்கி இன்பமடைந்தனர். அதனையும் சமயம் வரும்போது சொல்லுவோம்.]

கலிநிலைத்துறை

மாக வின்மதி சூடிகண் வந்தபொன் தீர்த்தம்
காக தீர்த்தமென் றுயது காகமுன் மூழ்கி
ஏக நாயகன் திருவரு ளெய்திய துரைக்கின்
பாகு றன்னதை நோக்கிடிற் பழவினை பறியும். 1

அங்கை யாலதைத் தொடின்வினை யாவையு மகலும்
தங்கி டன்னதி லொருதுளி தலைமிசைத் தெளிப்பின்
பொங்கு வேள்வியைந் திரட்டியா யிரப்பலன் பொருந்தும்
மங்கு வெம்பிணி தொலைவுறு மருவுறுஞ் செல்வம். 2

---

1. மாகவின் மதி - பெருமை பொருந்திய அழகிய பிறைச்சந்திரன்: மா - பெருமை. கவின்-அழகு. மாக இன்மதி எனப் பிரித்து ஆகாயத்தில் உள்ள இனிய பிறைச்சந்திரன் எனப் பொருள் கூறலுமாம். சூடி பெயர்: சிவபெருமான். பாகு உறு அன்னதை - இனிமை பொருந்திய அந்தத் தீர்த்தத்தை. பறியும் - வேரோடு கெடும். பாகு - இனிமை.

2. தங்கிடு அன்னதில். ஐந்து இரட்டி ஆயிரம்-பதினாயிரம். வேள்வி-யாகம். மங்கு வெம் பிணி - அழியப்பண்ணும் கொடிய நோய்.

துங்க முற்றிடு மதனிடைத் தோய்ந்திடு மவர்கள்
இங்கி தம்பெறக் குறித்தவை யாவையு மெய்தித்
திங்கள் சூடிய சிவனுருப் பெறுவர்மேல் தெரிக்கும்
பங்கு னிக்கண்முன் னுளதில் படிந்திடல் விசேடம். 3

கொடிய தாகிய வொருகொடி குலவதி னெய்திப்
படிதல் செய்துபொன் னுருவதாய்ப் பரனுரு வாகி
நெடிய பொற்குவட் டிரசத நிலவுவெண் கயிலை
குடிபு குந்ததூம் பிறர்சிலர் கொடுமைதீர்ந் ததுவும். 4

முன்னர் நீவிர்நன் குணர்ந்திட மொழிதலுற் றனமால்
இன்னு மன்னதி லெண்ணிலர் படிந்துநீ டின்பம்
துன்னி னுர்களச் செய்கையுந் தோன்றுழி யறைதும்
பின்ன ரீண்டினிக் கங்கையின் பெருமைபே சிடுவாம். 5

கனகதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 788

---

3. இங்கிதம் - இன்பம். சிவன் உரு - உருத்திரசாரூபம். பங்குனி மாதம் முதல்நாள்.

4. கொடி - காக்கை. குலவு அதின் எய்தி. பரன் உரு - உருத்திர சாரூபம். பொற்குவடு - மேருமலை. இரசதம் - வெள்ளி.

5. மொழிதலுற்றனமால்: ஆல் அசை. படிந்து - நீராடி. நீடு இன்பம் - மிக்க இன்பம். தோன்றுழி - சொல்லவேண்டிய இடத்து. ஈண்டு - இவ்விடத்து.

## இருபத்தொன்பதாவது
# கங்காகூபச் சருக்கம்

---

[ஸ்ரீ மகாலிங்கேசருக்கு ஈசானதிக்கிலே முருகவேள் அருளால் கூப (கிணறு) வடிவிலே அமைந்துள்ள தீர்த்தம், சிவபெருமான் அருளினுல் கங்கைநீர் எப்போதும் நிறைந்து விளங்குவதாம். அதனைக் காணினும், தொடினும் முற்செய்துள்ள கோடிக்கணக்கான தீவினைகள் விட்டகல்வன. அத்தீர்த்தத்தில் மூழ்குவோர் எல்லாவினைகளும் விட்டு நீங்கப்பெறுவர். இக்கங்காகூபத்திலே படிந்து அந்தணர்கட்குச் சிவலிங்கம், சிவிகை, தேர், வெண்பட்டுக்குடை, வெள்ளி, பொன் முதலியவற்றை இயன்றவாறு தானஞ்செய்வாராயின் எல்லாப் பகைகளும் தவிர்வார்; எல்லா இன்பமும் பெறுவர்; முடிவில் சிவபதமடைவர். மிகமேலான இக்கங்காகூப தீர்த்தத்தின் உத்தரதிக்கில் அர்த்தநாரீசுரர், அக்கினிதிக்கில் விபண்டக முனிவர், கிழக்குத்திக்கில் வைரவக்கடவுள், நிருதிதிக்கில் பிரமதேவர் ஆகிய இவர்கள் காவல்புரிவர். மேற்றிசையில் இடைமருது உள்ளது. இவ்விடத்தில் ஒருதடவை பிதிர்தருப்பணம் பண்ணினுல் தொண்ணூற்ருறு நாட்கள் ஸ்ரீ காசியிலிருந்து தருப்பணம் செய்ததாகக்கொண்டு பிதிர்க்கள் மகிழ்வுறுவர். திருவைந்தெழுத்தை நூறுதரம் செபித்தால் ஸ்ரீ காசியில் ஆயிரங்கோடி செபம் செய்த பலனுறும். இக்கங்காகூப தீர்த்தத்தை எடுத்து மூழ்கினோர் பலர் கொடுவினை நீங்கப்பெற்றனர்; அவர் ஸ்ரீ மகாலிங்கேசருடைய திருவருள் பெற்றுய்ந்தனர்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கந்தவே ளருளால் கூபம தாகிக் கண்ணுதற் கீசதிக் கிலங்கும்
சுந்தரத் தீர்த்த மதனிடை யிறையோ னருளினுல் தூயநீர்க் கங்கை
சந்தத முறையு மதனைநோக் கிடினுந் தடங்கையில் பரிசனஞ் செயினும்
முந்திய கோடி கொடுவினை மூழ்கு மூழ்கிடின் வினையெலா முடியும். 1

---

1. கூபம் - கிணறு. கண்ணுதல் - சிவபெருமான் : மகாலிங்கேசுவரர். ஈச திக்கு - வடகிழக்குத் திசை. சந்ததம் - எப்பொழுதும். பரிசனம் செயினும் - தொட்டாலும். முந்திய - முற்பட்ட : முன் சென்மங்களிற் செய்த என்றபடி. மூழ்கும் - தொலையும். மூழ்கிடின் - நீராடினுல்.

மருவிடு மதனின் மூழ்கியந் தணர்க்கு வளர்சிவ லிங்கநீள் சிவிகை
இரதம்வெண் கவிகை யிரசதங் கனக மிசைந்தன வுதவின ரென்னின்
பரவுமிவ் வுலகில் பகைகளை யொடுக்கிப் பகருமெவ் வின்பமு மணைந்து
விரிபசுங் கதிர்வெண் பிறைகொள்செஞ் சடில விமலனெண் பதமுமே
[வுறுவார். 2

உத்தம மாகு மனையதீர்த் தத்தி னுத்தர திக்கினி லுறையும்
அத்தநா ரீசன் விபண்டக முனிவ னனலிதன் திசையுறுங் குணபால்
முத்தலைப் படைக்கை வயிரவ னுறையு மொழிதரு நிருதிதன் திசையின்
மெய்த்தகைப் பிரமன் காவலாய் வதியும் மேற்றிசை யிடைமரு திலங்கும். 3

சாற்றதன் மருங்கு பிதிர்களுக் கொருகால் தருப்பண மிழைத்திடி
[னதைத்தொண்
ணூற்றறு தினத்துங் காசியென் றினிது நுவல்பெரும் பதிக்கணுற் றியதாய்
ஏற்றுள மகிழ்வ ரனையரன் னதன்பா லிருந்துநூற் றைந்தெழுத் தோதின்
பாற்றிகழ் பதிக்க ணுயிரங்கோடி பரிந்திசைத் திடுபலன் மேவும். 4

அத்தகைத் தீர்த்தந் தனையெடுத் தாடி யலகிலர் கொடுவினை தொலைத்து
நித்தனீ டருளு மடைந்தன ரனைய நிகழ்ச்சியு மளவினிற் சொலுதும்
மெய்த்தவத் தீரிங் குறுதியாய்க் கேண்மின் விளங்கிடு கருடதீர்த் தாதிப்
பத்துவண்தீர்த்தத் திடங்களுஞ்சிறப்பும் பகருவன் தொகைப்பட வினிது. 5

கங்காகூபச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 793

---

2. சிவிகை - பல்லக்கு. கவிகை-குடை. இரசதம் - வெள்ளி. கனகம் - பொன். பசுங்கதிர் - இளங்கிரணம். செஞ்சடிலம்-சிவந்த சடை. விமலன் - சிவபெருமான்.

3. உத்தர திக்கு - வடக்குத்திசை. அத்தநாரீசன் - அர்த்தநாரீசுரர் : மாதொரு கூறன். அனலி - அக்கினி. முத்தலைப்படை - சூலாயுதம்.

4. அதன் மருங்கு-அதன் பக்கத்தில். ஒரு கால்-ஒரு முறை. ஏற்று உளம் மகிழ்வர். ஐந்தெழுத்து நூறு உருச் செபித்தல். நூறு என்பது நூற்றென ஒற்று மிக்கது, ஓசை நோக்கி.

5. கருட தீர்த்தாதி - கருட தீர்த்தம் முதலாகிய.

முப்பதாவது

# கருடதீர்த்தாதிச் சருக்கம்

[ஸ்ரீ மருதவனேசர் சந்நிதியிலே தூரத்திலே ஒரு தீர்த்தம் உண்டு. அது கருடதீர்த்தமெனப்படும். அதில் கருடன்மூழ்கி எண்ணியசெயல்களை முற்றுவித்தான். மற்றும் பலர் அதில் மூழ்கி மிக்கநோய்களும் துன்பமும் தவிர்ந்தனர். தக்கன் புதல்வியர் பலர். அவருள் விநதை, கத்துரு என்ற இருவரும் காசிபமுனிவனை மணந்தனர். அவ்விருவரும் ஒருநாள் தனியே சல்லாபமாகப் பேசியிருந்தனர். அப்போது விநதை, இந்திரனது குதிரை யாகிய உச்சைசிரவத்தின் வால் வெண்ணிறம் என்றாள். கத்துரு அதற்கு மாருக அது கருநிறம் எனச் சாதித்தாள்; இதற்கு மாருக இருந்தால் தோல்வியுற்ரேர் ஏவல் செய்தல் வேண்டும் எனப் பந்தயமும் கூறினள். பின்னர் கத்துரு தன் பிள்ளைகளாகிய பாம்புகளுக்கு இச்செய்தியைத் தெரிவித்தாள். அதுகேட்ட அப்பாம்பினங்களில் ஒன்று விரைந்துபோய் குதிரையின் வாற்புறத்தில் நஞ்சைக் கக்கிக் கரிதாம்படிசெய்தது. அக்கரு நிறத்தைக்கண்டு விநதையைக் குற்றேவல் செய்துவரும்படி கத்துரு கூறி அமைத்தனள். விநதை கவலையால் உடல் மெலிந்தாள். இதனையறிந்த கருடன் தன் தாயை நோக்கி, உடல் வரவர மெலியக் காரணம் என்ன என்ருன். நேரிட்டசெய்தியைக் கூறினள் விநதை. உடனே கருடன் தன் சிறிய தாயிடத்தில் சென்று இது முறையன்று என்ருன். அதனையும் கத்துரு தன் மக்களிடம் தெரிவித்தாள். தேவாமிர்தத்தைக் கொண்டு வந்து எங்களுக்குக் கொடுத்தால் கருடன்தாயை ஏவலினின்று விடுவிக்க லாம் என்ருர் அம்மக்கள். அதனைக் கருடனிடம் தெரிவித்தாள் கத்துரு. கருடன் நல்லதென்று விடைபெற்று இடைமருதடைந்தான். இத்தீர்த் தத்திலே படிந்தான். அம்மையப்பரைத் தரிசித்தான். விண்ணுலகைச் சார்ந்தான். அணுவடிவங்கொண்டு சுழலும் சக்கரத்தினுள் நுழைந்தான். அமுத குடத்தை எடுத்துக்கொண்டு வெளியே வந்தான் கருடன். இதனை விண்ணோர் அறிந்தனர்; போர் செய்தனர். கருடன் அவரைப் புறமுது கிட்டோடுமாறு செய்துவிட்டு வந்துகொண்டிருந்தான். தேவர் பின்னும் கருடனைத் துதித்து வணங்கி அமுதகுடத்தையளிக்க வேண்டினர். பாம்பு களுக்குச் சொல்லிய சொல் பழுதுருதபடி இதனை அவரிடம் சேர்த்து விடுகிறேன்; பின்னர் நீங்கள் அமுதகும்பத்தைக் கைக்கொள்ளலாம் என்ருன் கருடன்.

அமுதகும்பத்தை அராவினங்களிடம் கொண்டு சென்று 'இதோ அமுதகுடம் கொண்டுவந்துவிட்டேன்; நீங்கள் நீராடித்தூயராய் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கருடன் சொல்லித் தருப்பையைப் பரப்பி அதன் மேல் வைத்தான். அன்னையாகிய விநதையை ஏவல் செய்தலினின்று விடுவித்தனன். பாம்புகளும் நீராடச்சென்றன. சமயம்பார்த்துத் தேவர்கள் அமுதகுடத்தை எடுத்துப் பொன்னுலகிற் சென்றனர். பாம்புகள் நீராடி வந்து பார்க்கக் குடத்தைக் கண்டில. தருப்பைகளில் சிந்திய அமுதத் துளியை நாவினுல் அவை நக்கின. அவைகளின் நாக்குகள் பிளந்தன. பாம்புகள் மனம்நொந்து சென்றன. இதனை முனிவர்களே! முன்பு உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். இத்திர்த்தவிசேடமே கருடன் கருத்தை முற்றுவித்துப் பயன் நல்கியது. இயமதீர்த்தத்தின் ஈசானதிக்கில் வசுதீர்த்தம் உள்ளது. வளர்பிறை அட்டமியில் அதில் மூழ்குதல் நல்ல பயனை விளைக்கும். வசுதீர்த்தத்தின் வடக்கில் சூரியதீர்த்தம் உள்ளது. ஞாயிற்றுக்கிழமை உதயத்தில் அதில் மூழ்கின் பிணிகளகலும். கிருஷ்ண கூபத்தின் சமீபத்தில் மருத்துக்கள் தீர்த்தம் பொருந்தும். வருணதீர்த்தத்தின் தெற்கில் நரசிங்கதீர்த்தம் உள்ளது. அதனைப் பரிசித்துக் குட்டநோய் நீங்கினோர் பலர்; மூழ்கி இன்பமுற்றோரும் பலராம். அவ்வருண தீர்த்தத்தின் கிழக்குத் திசையிலே நந்திதீர்த்தம் ஒன்று விளங்கும். அதில் மூழ்கின் ஞானம் பொருந்தும். அதன்மேற்கில் துரோணதீர்த்தம் உள்ளது. அதில் மூழ்கிய பலத்தால் துரோணர் அசுவத்தாமன் என்ற புத்திரனைப் பெற்றார். சீராமன் இராவணனைக் கொல்லச் செல்லும்போது அம்பிகை சந்நிதியிலே ஒரு தீர்த்தம் உண்டுபண்ணினர். அஃது இராம தீர்த்தம்; கூபவடிவானது. அதில் மூழ்கினோர் பகையினின்று நீங்குவர். வருணதீர்த்தத்தின் வடக்கிலே தேவதீர்த்தம் உள்ளது. ஸ்ரீ மருதவனேசருக்குத் தெற்குப்புறத்தில் முனிவர்தீர்த்தம் ஒன்றுள்ளது. இப்பத்துத் தீர்த்தங்களும் தன்னிற்படிந்தோருக்குப் பிறப்பையும், துன்பங்களையும் நீக்குவன; செல்வம் பெருக்குவனவாம்.]

கலிநிலைத்துறை

இருட ருங்கள மருதநா யகன்றனக் கெதிரே
மருட விர்த்தினி தொருதடஞ் சேய்மையின் மன்னும்
தெருட ருந்தனி யத்தலத் தநாதியாய்த் திகழும்
கருட னன்னதின் மூழ்கிமேற் கருதிய தடைந்தான். 1

1. இருள் தரும் களம்: களம் - கண்டம். மருள் தவிர்த்து இனிது ஒரு: மருள் - மயக்கம், அறியாமை. சேய்மை - தூரம். தெருள் - தெளிவு.

பின்னு மெண்ணிலர் மூழ்கிமுன் பெரிதுறு நோய்கள்
இன்னல் யாவையு நீக்கிமே லின்பநீ டுற்றார்
அன்ன வன்பெருஞ் சிறப்பினு லவன்பெய ரடைந்த(து)
என்ன டைந்தனன் மூழ்கிமற் றவனெனி னிசைப்பாம். 2

தக்க னீன்றருள் புதல்விய ரெண்ணிலர் தம்முள்
மிக்க காசிபன் மணந்திடு விநதைகத் துருவாம்
தொக்க பேருறு மிருவருந் துலங்குமோ ரிடத்தில்
ஒக்க வுற்றிருந் துலகியல் பேசிடுங் காலை. 3

கனக நாட்டின னிவுளிவால் வெளிதெனக் கவின்கொள்
விநதை யோர்ந்தன ளுரைத்திட மேலது கரிய(து)
எனவு ரைத்தனள் கத்துரு விதற்குமா ருகின்
இனிதி னேவல்செய் திடுவதீண் டிளைத்தவ ரென்றாள். 4

அந்த வஞ்சினம் புதல்வராம் பணிகளுக் கறைந்தாள்
முந்து கத்துரு பணிகளி னென்றுபோய் முடுகிச்
சிந்தி வல்விட மன்னதைக் கரியதாச் செய்து
வந்த தன்னவள் விநதையை வருதிகா ணென்றாள். 5

சென்று பார்த்தனர் கரியதா யிருந்தது திகைத்து
நின்ற வாணுதல் விநதையை மற்றவ ணீமேல்
துன்று மேவல்செய் திடுகெனச் சொல்லின ளிசைவுற்(று)
அன்று தொட்டவட் கேவல்செய் தொழிலினி னமர்ந்தாள். 6

---

2. இன்னல் - துன்பம். மேல் இன்பம் நீடு உற்றார். அவன் பெயர் அடைந்தது என். அவன் மூழ்கி என் அடைந்தனன். என்: இடைநிலைத் தீவகம்.

3. விநதை கத்துரு இருவரும் தக்கன் புதல்வியர், காசிப முனிவன் மனைவியர். உற்று இருந்து.

4. கனகநாட்டினன் - பொன்னுலகத்தையுடைய இந்திரன். கனகம்-பொன். இவுளி-குதிரை: உச்சை சிரவம் என்பது. ஓர்ந்தனளாய் உரைத்திட: ஓர்தல் - ஆராய்ந்தறிதல். ஓர்ந்தனள்: முற்றெச்சம். மேலது கரியது - முன் சொல்லப்பட்ட உச்சை சிரவத்தின் வால் கரிய நிறத்தை உடையது: மேலது: பெயர். கரியது: குறிப்புவினைமுற்று. மாறு ஆகின் - மாறுபட்டால். ஈண்டு இளைத்தவள்: இளைத்தவள்-தோல்வியுற்றவள்.

5. வஞ்சினம்-சபதம், சூள். பணிகள்-பாம்புகள். முடுகி-விரைந்து. ஒன்று செய்து வந்தது. அன்னவள் என்றது கத்துருவை.

6. திகைத்து - மயங்கி. வாணுதலாகிய விநதையை. வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றி. நீ மேல் துன்றும் ஏவல். இசைவு உற்று -

அறவு மெய்யிளைத் திட்டதை யனையள்கா தலனும்
பறவை நாயக னென்னென வினவினன் பணிசெய்
குறையி லென்றதன் வகையெலாங் கூறினள் குறுகிச்
சிறிய தாயினைக் கருடனென் பவனிது தெரிக்கும். 7

முன்னு தித்தவ ளேவல்செய் திடுவது முறையன்(று)
என்ன வோதின னவளிது பணிகளுக் கிசைத்தாள்
பன்ன கங்கள்வா னமிர்தெமக் குதவிடின் பரிவின்
அன்னை யேவல்செய் வினையினை விடுகென வறைந்த. 8

ஒல்லு மவ்வுரை கருடனுக் கன்னவ ளுரைக்க
நல்ல தென்றவ னிசைந்துவந் தகத்தினு னுடிச்
செல்வ மோங்கிய விடைமரு தெனும்பதி சேர்ந்து
சொல்லி டத்தனிச் சிறப்புறு வாவியில் தோய்ந்து. 9

பணைமு லைக்கொடிப் பாகனை வலங்கொடு பணிந்து
தணிவி லன்பொடு துதித்துவா னுலகினைச் சார்ந்து
துணிவொ டியாவரு மணுகுரு வகையெதிர் சுழலும்
திணிய சக்கரத் தகப்படா தணுவெனச் சென்று. 10

---

ஒப்புக்கொண்டு. அன்று தொட்டு: தொட்டு-தொடங்கி. தொழிலினின் அமர்ந்தாள்.

7. அறவும் - மிகுதியும். காதலன் - புதல்வன். பறவை நாயகன் - கருடன். குறையில் என்று. பணி செய் குறையில் - குற்றேவல் செய்யும் குறையினுல்; பணிசெய்த குறையினுல்: பணி - குற்றேவல், பாம்பு. சிறிய தாயினைக் குறுகி. தெரிக்கும்-தெரிவிப்பான்: வில்விகுதி தொக்கது.

8. முன் உதித்தவள் - தமக்கை. முறை அன்று - நீதியல்ல. அவள் - கத்துருவை. இது - இச்செய்தியை. பணிகளுக்கு - புத்திரர்களாகிய பாம்பு களுக்கு. பன்னகம் - பாம்பு. வான் அமிர்து - தேவரமுதம். பரிவின் - இரக்கத்தினுல்: பரிவு - இரக்கம், அன்பு. அன்னை: விளி. வினையினை விடுக - வினையினின்று விடுவிக்க.

9. நல்லது என்று அவன் இசைந்து வந்து அகத்தினில் நாடி: இசைந்து - ஒப்புக்கொண்டு. அகம் - மனம். நாடி - ஆராய்ந்து. இசைந்து உவந்து எனினுமாம். சொல்லிடு அ தனி சிறப்பு உறு. வாவி - குளம்: என்றது கருடதீர்த்தத்தை.

10. பணை முலைக்கொடி - பெருநல முலையம்மை: இத்தலத்து உமா தேவியார் திருநாமம். தணிவு இல் - குறைதலில்லாத. அணு - அணு வடிவம்.

உண்ணு ழைந்துமெல் லெனவவ ணுறைந்திடு மமிர்த
வண்ண வொண்மணிக் குடந்தனைக் கைக்கொடு வருங்கால்
விண்ணு ளாரறிந் தெதிருற வெஞ்சமர் விளைக்க
எண்ணு மன்னவர் தம்மைவெந் கண்டன னேக. 11

துன்னி மற்றவர் சூழ்ந்துபின் துதித்திட முன்னர்ப்
பன்ன கங்களுக் கிசைத்தசொல் பழுதுரு துதவி
அன்னை யேவலை மாற்றுவ னுங்குநீ ரடைவுற்(று)
இன்ன தைக்கொடு சென்மினென் றிசைத்தவ னெய்தி. 12

ஓத ராவினங் கட்குமக் கமுதுகொண் டுற்றேன்
சீத நீர்படீஇத் தொடுகெனத் தெரித்தொரு தருப்பை
மீது வைத்தனை யேவலை மீட்டனன் சென்றான்
ஆத ரத்தவை மூழ்குமுன் சுரர்கள்கொண் டகன்றார். 13

வந்து பார்த்தன திகைத்தன மணிக்குட மிருந்த
நந்த லில்லதோர் தருப்பையை நக்கின விருப்பான்
முந்து நாவிரு பிளவுறப் பிளந்தன முழுதும்
சிந்தை நொந்தன சென்றன சீறுமப் பணிகள். 14

பொருந்து மித்திற முனிவிர்காள் பூருவ முமக்கும்
தெரிந்த தேயமிர் தெடுத்தவன் வந்திடு திறனும்
வருந்து தாயினை மீட்டதூஉ மருவுறு மனைய
பரந்த வாவியிற் படிந்திடு பயனென லாகும். 15

---

11. உள் நுழைந்து. வெஞ்சமர்-கொடிய போர். அன்னவர் என்றது தேவர்களை. வெந்=வெரிந் - புறமுதுகு.

12. துன்னி - நெருங்கி. மற்று : வினைமாற்று. சூழ்ந்து - சுற்றி, ஆலோசித்து. பழுது உரு து உதவி. இசைத்து - சொல்லி.

13. ஓது அரா இனங்கட்கு. ஓது - முன்னே சொல்லப்பட்ட. உமக்கு அமுது. சீதம் நீர் படீஇ தொடுக என. சீதம் - குளிர்ச்சி. படீஇ - படிந்து; முழுகி. தெரித்து: விவ்விகுதி தொக்கது. வைத்து அனை ஏவலை. ஆதரத்து அவை : ஆதரம் - விருப்பம். அவை - அப்பாம்புகள். சுரர்கள் - தேவர்கள்.

14. நந்தல் - கெடுதல். நா இரு பிளவு உற. நொந்தனவாகிச் சென்றன.

15. பூருவம்-முன்னமே. எடுத்து அவன். இதுவரை கருடதீர்த்தச் சிறப்புரைத்தது.

இசைக்குந் தென்றிசைக் கோனுறு தீர்த்தத்தி னீச
திசைக்க ணலிரு வசுக்களின் தீர்த்தமொன் றினிது
வசிக்கு மற்றதின் வளர்பிறை யட்டமி மருவி
அசைக்கு மன்பொடு படிந்தவர் வேண்டிய தடைவார். 16

விரவு றும்வசு தீர்த்தத்தின் விளம்புமுத் தரத்தின்
இரவி தீர்த்தமொன் றிலங்கிடு மிதனின்மற் றணையோன்
பரவு வாரநா ளவனெழு காலையில் படியின்
மருவு தீப்பிணி யாவையு மாய்ந்திடு மன்றே. 17

மன்னு மாதவன் தடத்தயன் மருத்துகள் தீர்த்தம்
அன்ன தோங்கிடு வாதநோ யகற்றிடு மதனின்
முன்ன ரம்மருத் துக்கள்போய் மூழ்கிநீள் கருவில்
பொன்னி லத்திறை குறையுடல் பூரண முற்றார். 18

வட்ட வாருண வாவியின் தென்புடை வயங்கும்
சிட்டர் போற்றிடு நரசிங்க தீர்த்தமொன் றதனைத்
தொட்டு வந்துடன் குட்டநோய் தொலைத்தன ரநேகர்
கட்டு ரைப்பதென் மூழ்கினோர் கலந்தபே ரின்பம். 19

அந்த வாருண வாவியின் குணதிசை யமர்ந்து
நந்தி தீர்த்தம்வந் தாடினேர்க் களித்திடு ஞானம்
சந்த நீடதின் குடக்கினில் துரோணன்செய் தடாகம்
முந்த வன்றனக் கீந்தது மொழிந்திடு மதலை. 20

---

*16.* தென் திசை கோன் - இயமன். நால் இரு வசுக்கள் - அட்ட வசுக்கள்: அநலன், அநிலன், ஆபச்சைலன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் முதலியோர். வசிக்கும் - வசியஞ்செய்யும். வளர்பிறை அட்டமி - பூர்வபக்கத்து அட்டமிதிதியில்.

*17.* உத்தரத்தின் - வடதிசையில். இரவி - சூரியன். வார நாள் - வாரமாகிய நாள்: பண்புத்தொகை. மாய்ந்திடும் - அழியும்.

*18.* மாதவன் தடம்-கிருஷ்ணதீர்த்தம். அயல் மருத்துகள் தீர்த்தம்: மருத்துகள் - தேவ மருத்துவர், அசுவினி தேவர்கள். வாத நோய் - வாத ரோகம்.

*19.* வாருண வாவி - வருண தீர்த்தம். சிட்டர் - நல்லொழுக்கமுடையோர். அத்தீர்த்தத்தைப் பரிசித்தமாத்திரத்தில் குட்டநோய் தீர்ந்தோர் பலர். கட்டுரை - புகழ்ந்து சொல்லல்.

*20.* குணதிசை - கிழக்குத் திக்கு. ஆடினேர்க்கு ஞானம் அளித்திடும். அதின் குடக்கினில்: குடக்கு - மேற்கு. முந்து அவன் தனக்கு ஈந்தது. மதலை - புத்திரன்; அசுவத்தாமன்.

இராவ ணான்றன்மி தேகுநா ளிராகவக் குரிசில்
விராவு மன்புட னுமையவள் மேவுசந் நிதிக்கண்
தராத லம்பணிந் தேத்திடச் சமைத்ததோர் கூபம்
பராவு தன்வயிற் படிந்தவர் பகைமைதீர்த் திலங்கும். 21

வருண தீர்த்தவுத் தரந்தனில் வாளிமூ வாறில்
வரமு றுஞ்சுர தீர்த்தமொன் றிலங்கிடு மருதப்
பரமன் தென்புடை யுலகெலாம் பகர்முனி தீர்த்தம்
விரவு மொன்றிவை யிரண்டுமேல் விமலன்ரு ளுதவும். 22

கூறி டும்முர காரிதீர்த் தாதியாக் குலவும்
ஆறு நாலும்வெம் பவத்தொடு துயரமு மகற்றும்
மாறில் செல்வமீண் டுதவிடு மன்னியா டினர்கட்(கு)
ஈறில் சீருறு கச்சப தீர்த்தமே லிசைப்பாம். 23

கருடதீர்த்தாதிச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 816

---

21. ஏகு நாள் - போரிடச் செல்லுங்காலத்தில். இராகவன் - ரகுவம் சத்தில் தோன்றிய சீராமன். உமையவள் மேவு சந்நிதி - அம்பிகை திருமுன். கூபம் - கிணறு. வயின் - இடம்.

22. உத்தரம் - வடதிசை. வாளி மூ ஆறு - பதினெட்டு அம்புகள் வீழ் தொலைவில் : வாளி - அம்பு. வரம் - மேன்மை. சுரதீர்த்தம்-தேவதீர்த்தம். விமலன் - சிவபெருமான்.

23. முரகாரி - முரன் என்னும் அசுரனைக் கொன்ற திருமால். ஆறும் நாலும் - பத்துத் தீர்த்தங்களும். பவம் - பிறப்பு. மாறு இல் - நீங்காத. ஈண்டு உதவிடும் : ஈண்டு - இம்மையில். கச்சபம் - ஆமை. கச்சபன் - ஒரு முனிவன்.

முப்பத்தொன்ருவது

# கச்சபதீர்த்தச் சருக்கம்

[இத்தலத்திலே செல்லுகின்ற காவிரிதீர்த்தத்திலே சில தீர்த்தத் துறைகளும் உள்ளன. இக்காவிரியாற்றிலுள்ள மண் மணல் யாவுமே சிவ பிரான் வடிவம் என்பர். காவிரிநதியிலே படிந்து செல்லும் காற்று யாவர் மேற்படினும் கொடும் பாவங்களனைத்தும் நீங்கும். இவ்வாருயின், அதனைப் பார்த்தோர் கையினுல் தொட்டோர் அதில் மூழ்கினோர் பாவம் தொலையும் என்பது கூறவும் வேண்டுமோ? கங்கைநீரில் மூன்று நாட்கள் முழுகிப் போக்கும் பாவங்களும், யமுனுநதியில் ஐந்து நாட்கள் மூழுகிப்போக்கும் பாவங்களும் காவிரிநதியில் ஒருநாள் முழுகின் விரைந்துநீங்கும். முறையே, இத்தீர்த்தத்திலே முழுகி வருவோருக்குப் பகை நீங்கும். மெய்ஞ்ஞான முண்டாம். பிதிர்தருப்பணம் செய்யின் அவர் மரபிலே நரகத்தில் கிடந்து துன்புறுவோர் சுவர்க்கத்தை அடைவர். அவற்றுள், திருவானைக்கா திருவையாறு திருக்குடந்தை திருவிடைமருதூர் திருமயிலாடுதுறை முதலிய தலங்கள் மிக விசேடமுடையன.

ஐப்பசி மாதத்திலே அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும் பொன்னி நதியிலே வந்து பொருந்தும். ஆகலின், துலாமாதத்தில் காவிரிநதியிலே மூழ்கினோர் அத்தீர்த்தங்கள் எல்லாவற்றினும் மூழ்கின பயனை எளிதில் அடைவர். கவேரமுனிவன் புதல்வியாய்க் கடலரசன் துணைவியாய் உலகத் துயிர்களுக்கு அன்னையாய் விளங்கும் காவிரிநதியின் பெருமைகள் மற்றும் பல உள. இத்திருவிடைமருதூரில் காவிரியாற்றில் வடபுறத்தில் கச்சப தீர்த்தம் என ஒரு துறை உள்ளது. அத்தீர்த்த விருட்சம் மாவிலிங்கம். முனி கச்சபமுனிவர். காவல்செய்வோர் வீரபத்திரக்கடவுள். அதற்கு வாமதேவர் தேவதை. இதில் முழுகித் திலஅன்னம், சிவிகை, தானியம் முதலிய தானம் செய்தோர் அரசராவார். இத்துறையின் அருகே கச்சப முனிவர் தவம் செய்திருந்தனர். சிவபெருமான் அவர்முன்பு வாமதேவர் வடிவிலே தோன்றிக் காட்சிதந்தார். முனிவனே! நீ வேண்டிய வரம் யாதென்ருர். முனிவன் சிவபெருமானை நோக்கி, சுவாமி! அடியேன் அநு தினமும் வணங்கும் பொருட்டு இங்கே எழுந்தருளியிருத்தல் வேண்டுமென வேண்டிநின்ருன். அவ்வாறே அருள்செய்தார் இறைவன். ஆகலின், அத்துறை அம்முனிவர்பெயரால் வழங்கும். இத்தீர்த்தத்திலே முழுகிப் பலர் நல்ல பயனைப்பெற்று இன்புற்றனர்.]

கலிநிலைத்துறை

விலையி லாமணிக் குலமுறு சையமால் வெற்பின்
மலைய மாதவன் கமண்டல வயிற்றினின் றெழிற்கு
வலைய மேற்குண திசைக்கொடு மகரநீ டுலவும்
மலையி னுற்றபொன் னியிற்சில தீர்த்தமுண் டாங்கு. 1

சந்த முற்றிடக் காவிரி வாரணந் தாங்கிச்
சுந்த ரந்திக ழரம்பைகள் சூழ்வுறப் புலவோர்
வந்தி றைஞ்சவச் சிரமெடுத் தேகலின் வானாட்(டு)
இந்தி ரன்றனக் கிணையெனப் புவியிடை யிலங்கும். 2

பெருமை மேவித்தென் கீழ்த்திசை யடைந்துமேற் பிறங்கல்
விரவு சோதிகண் ணுற்றொரு பூதமாய் வெந்தீப்
பொருவுந் தன்னிடத் தடைந்துளோர் கொடுவினை போக்கி
உரமு றும்பக டூர்ந்திக லியமனை யுறழும். 3

---

1. மணிக்குலம் - இரத்தினக் கூட்டம். சையம் - குடகம், மலைய மாதவன் - பொதியில் மலையிலுள்ள அகத்திய முனிவர். கமண்டலம் - கெண்டி. வயிற்றில் நின்று எழில் குவலைய மேல். குவலையம் - பூமி. குண திசை-கிழக்குத் திக்கு. மகரம் நீடு உலவு - மீன்கள் மிக்குச் சஞ்சரிக்கும்: மகரம் - பெரிய மீன். அலையின் உற்ற - கடலைப் பொருந்திய. அலையின் : உருபு மயக்கம். அலை - அலைகளையுடைய கடல் : ஆகுபெயர். பொன்னி - காவிரி.

2. காவிரி - காவுக்காக விரிந்த நதியாகலின் காவிரியாயிற்று. சந்தம் உற்றிடு அ காவிரி. சந்தம் - அழகு. இணை - ஒப்பு. காவிரி இந்திரனை ஒக்கும். இந்திரன் : வாரணம் (வெள்ளையானைமேல்) ஊர்ந்து, அரம்பை கள் (தேவ மாதர்கள்) சூழ, புலவோர் (தேவர்கள்) இறைஞ்ச, வச்சிரம் (வச்சிராயுதம்) எடுத்தேகுவான். காவிரி: வாரணம் (சங்குகள்) ஊர்ந்து செல்ல, அரம்பை (வாழைகள்) சூழ, புலவர் (வித்வான்கள்) வந்து வணங்க, வச்சிரம் (வைரக்கற்களை) எடுத்துச் செல்வது என்க.

3. தென் கீழ்த்திசை - அக்கினி திக்கு. பிறங்கல் - மலை, விளங்குதல். சோதி கண் உற்று. ஒரு பூதம்: தேயு என்பது. தீப்பொருவும் - தீயையொக் கும். தன் என்றது காவிரியை. கொடுவினையை நீறுக்கும் தன்மையால் தீயை ஒக்கும். உரம் - வலிமை. இகல் - மாறுபாடு. பகடு - எருமைக் கிடா. காவிரி அக்கினிதேவனை ஒக்கும் என்பது. அக்கினிதேவன் : பெருமை (பெரிய ஆட்டுக்கிடாவைப்) பொருந்தி, தென் கீழ்த்திசை (அக்கினி திக்கை) அடைந்து, பிறங்கல் விரவு சோதிகண் (சிவபெருமான் கண்ணாக) உற்று, பூதம் (ஐம்பூதங்களுள் ஒன்று) ஆய் விளங்குவான். காவிரி: பெருமை - சிறப்பு. தென் கீழ்த்திசையாக ஓடி, சோதிலிங்க

பொருவில் காருருக் கொடுநிசி யலையுறப் போந்து
நிருதி யாகிமீ னிவந்துவா ருணமுற நிலவி
மருவு பாசியொன் றிடல்கொடு வருணனுய் மண்மேல்
அருண மூர்ந்துயிர்க் குயிரதா யனிலமா யோங்கும். 4

ஈசன் றன்பதி மருங்கினுற் றுயர்தன மெய்திப்
பேச லுற்றிடு மளகையோன் புரைதரும் பெரிது
வாச நீடறு கணிந்துகா மதகன நிரப்பித்
தேசின் மிக்கவீ சானனிற் சிறந்திடு மன்னே. 5

---

மாகிய சிவபெருமான் தன்கண்ணே பொருந்தப்பெற்று, ஐம்பூதங்களுள் தானும் (நீர்) ஒன்றுய் விளங்கிடும் என்க.

காவிரி இயமனை ஒக்கும் என்பது. இயமன்: தன்பால் வந்தடைந் தோர்களின் கொடிய வினைகளைப் போக்குவன். வலிய எருமைக்கிடாவை வாகனமாகக்கொண்டுளான். காவிரி: தன்பால் வந்து மூழ்கினோர் கொடும் பாவங்களைப் போக்கி, வலிய எருமைகள் தன்பால் ஊர்ந்து மேலே வரச் செல்லும் என்க.

4. நிருதி - தென்மேற்குத் திசைக்காவலன். காவிரி நிருதியை ஒக்கு மென்பது. நிருதி: கார் உரு (கரிய வடிவம்) பொருந்தி, நிசி அலை உற போந்து - இராக்காலத்திலே சஞ்சரித்தலையுடையனுய் இருத்தல். காவிரி: கார் உரு - நீர் வடிவம். நிசி அலை உற - பொன்னனது அலைகளிலே பொருந்துமாறு செல்லுதல்: நிசி - பொன். காவிரி வருணனை ஒத்தது. வருணன்: மீன் நிவந்து - சுறுமீனை வாகனமாகக்கொண்டு ஏறி. வாருணம் உற - மேற்றிசையில் பொருந்த. பாசி - பாசத்தைக் (வருண பாசம்) கொண்டோன்: பாசி - பாசத்தையுடையோன். பாசம் - கயிறு போன்ற ஆயுதம். காவிரி: பாசியை (நீர்ப்பாசி) உடையதாய். மீன் நிவந்து வாருணம் உற - மீன்கள் மிகுத்து நீர் பொருந்த. வாயுதேவன்: அருணம் ஊர்ந்து - மான் வாகனத்திலேறி. உயிர்க்கு உயிரதாய் - உயிர்களுக்குப் பிராணன் பொருந்தப் பிராணவாயுவாய். அனிலம் - காற்று. காவிரி: அருணம் ஊர்ந்து - மான் கூட்டங்களை வெள்ளத்திலே அடித்துக்கொண்டு வந்து. சீவ வர்க்கம் உயிர் வாழ்தற்கு இன்றியமையாத காரணமாய். உயிர்கள் சீவித்தற்கு நீரும், காற்றும் இன்றியமையாததென்க. ஓங்கும் - உயர்ந்து விளங்கும்.

5. காவிரி குபேரனை ஒத்தது. குபேரன்: ஈசன் தன் பதி - ஈசான திக்கு. மருங்கு உற்று - தன் திசையின் பக்கலில் பொருந்தி. தனம் - நவ நிதியம். பேசல் உற்றிடும் - புகழ்ந்து சொல்லப்பெறும். காவிரி: ஈசன் தன் பதி மருங்கு உற்று - சிவதலங்கள் தன் இரண்டு பக்கங்களிலும் (கரை களிலும்) பொருந்தி. தனம் - திரவியம், பொன். புரைதரும் - ஒக்கும்.

துன்னி னூர்தமக் கசோகத்தோ டஞ்சுகந் தோன்ற
மன்னி வேங்கைநீ டிபங்கொடு குறிஞ்சியாய் வழிக்கோள்
பன்னி டும்பொருள் பறித்துமேல் விடலையும் பறித்துக்
கன்னி யுந்தரித் தோதிடு பாலையைக் கடுக்கும். 6

மால டைந்துசிற் றிடைச்சியர் பயின்றுமான் மருவிக்
கோல முற்றிடு கலுழியும் பூவையுங் கூடி
ஏலு முல்லைதா மரைவயல் வஞ்சிநீ டிலஞ்சி
பாலி சைந்தருச் சுனமுறு மருதமாப் படரும். 7

கடல ணைந்துமுத் தரும்பிடு கடிமலர்ப் புன்னை
மடல்வி ரித்தெழு கேதகை பட்டின மருவித்
தடமி சைந்திடு நெய்தலாய்த் தயங்கிடு மினைய
புடவி மீதுளோர்க் கமுதமாய் விளங்குமப் பொன்னி. 8

---

காவிரி ஈசானனை ஒத்தது. ஈசானன்: அறுகு - அறுகம்புல். காம தகனம் நிரப்பி - காமனை எரித்து முடித்து. தேசு - புகழ். நீடு அறுகு உற்று - மிக்க அறுகால் அருச்சிக்கப்பெற்று. அறுகு - யானை எனினுமாம். காவிரி: கா மதகு அனம் நிரப்பி - சோலை மதகுகள் இவற்றை நீரால் நிறையப்பண்ணி, அன்னப்பறவைகளையும் மிகச் செய்து என்க.

6. துன்னினர் - நெருங்கினர். அசோகம் - அசோக மரம், சோகம் இன்மை. அம் சுகம் - அழகிய கிளி, ஆரோக்கியம். வேங்கை - வேங்கை மரம், புலி. இபம் - யானை. குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த இடமும். வழிக்கோள் - வழிக்கொள்ளும். விடலை - மணவாளன், ஆண்மகன். கன்னி- இளம் பெண். பாலை - பாலை நிலம்; ''முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து . . பாலை என்பதோர் படிவங் கொள்ளும்'' என்றதும் காண்க. கடுக்கும் - க்கும்.

7. மால் - திருமால், மயக்கம். சிற்றிடைச்சியர் - சிறிய இடையினையுடைய பெண்கள், இடைச்சிறுமிகள். கலுழி - கலங்கல் நீர். பூவை - நாகணவாய்ப்புள். ஏலும்=இயலும் - பொருந்தும். முல்லை - முல்லைக் கொடி, முல்லை நிலம்: காடும் காடு சார்ந்த இடமும் முல்லை. வஞ்சி - வஞ்சிக்கொடி. இலஞ்சி - குளம், மகிழமரம். பால் - பக்கம். அருச்சுனம் - மருத மரம். மருதம் - வயலும் வயல் சார்ந்த இடமுமாம்.

8. முத்து அரும்பிடு - முத்துப்போல அரும்புகளைத்தோற்றும். கடி - வாசனை. புன்னை - புன்னை மரம். கேதகை - தாழை. பட்டினம் - நெய்தல் நிலத்தூர். தடம் இசைந்திடு. நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடமும். தயங்கிடும் - விளங்கும். புடவி - பூமி. பொன்னி - காவிரியாறு.

கலைய றிந்தன மேற்கொடு கலைமக ளாகி
மலர ணைந்துவண் டிகிரிசங் கேந்திமே லவன்முற்(று)
இலகெ ழிற்றிரு வாகிவெற் பிடத்தினிற் றேன்றி
அலகி னீடறம் விளக்கலி னம்பிகை நிகர்க்கும். 9

புனையு மண்மண லியாவையும் புகல்பர னுருவாய்த்
தனையொத் தோங்கிடு காவிரி தனிற்றவழ் காற்றுங்(கு)
எனையர் மேற்படிந் திடினும்பட் டேகிடுங் காலை
அனையர் வெம்பவ மனைத்துமேற் றகன்றிடு மன்றே. 10

போற்று காவிரி பொருந்துகால் பொருந்திவெம் பவங்கள்
மாற்று மேலதை நோக்கினேர் மலர்க்கைதிண் டினர்கள்
தோற்ற திற்படிந் துளோர்பவந் தொலைவுறு மென்னச்
சாற்ற வேண்டுமே யெவர்தரி சனத்தினுஞ் செலுமால். 11

பன்னு கங்கையின் மூன்றுநாள் படிந்திட யமுனை
தன்னி லைந்துநாள் தோய்ந்திடத் தணந்திடும் பாவம்
முன்னு காவிரி யொருதின மூழ்கிடி லகற்றும்
பின்னு மவ்வுட லளவுசெய் பிறங்குவெம் பவமும். 12

வன்ப கைப்பிணி தவிர்த்திடு மருவுமெய்ஞ் ஞானம்
இன்ப மெய்திடுந் திலத்துட னப்புன லேற்றுத்
தென்பு லத்தவர்க் குதவிடில் திகழவர் மரபில்
துன்ப மார்நிரை யத்துளோ ரடைகுவர் சுவர்க்கம். 13

---

*9. கலை அறிந்து அனம் மேற்கொடு - அறுபத்துநான்கு கலைகளையும் உணர்ந்து அன்னவாகனத்தில் மேலேறி. செந்தாமரைமலர் மேற்கொண்டு சக்கரத்தையும் சங்கையும் பொருந்தி. கலைமகள் - சரசுவதி. திகிரி - சக்கரம். முற்று இலகு எழில். வெற்பு - மலை. அலகு இல் நீடு அறம் என்றது முப்பத்திரண்டு அறங்களை. காவிரியாறு கலைமகளையும் திருமகளையும் மலைமகளையும் நிகர்க்கும் என்க.*

*10. தவழ்ந்து செல்லும் காற்று. பவம் - பாவம், பிறப்பு. ஏற்று அகன்றிடும்.*

*11. கால் - காற்று. வெம் பவங்கள் - கொடிய பாவங்கள். தோற்று அதில் படிந்துள்ளோர்: படிந்து - மூழ்கி. எவர் தரிசனத்தினும் பவங்கள் செலும்.*

*12. தணந்திடும் - நீங்கும். பிறங்கு - விளங்கும்.*

*13. திலத்துடன் - எள்ளோடு. தென்புலத்தவர்க்கு - பிதிரர்களுக்கு. நிரையத்துளோர் சுவர்க்கம் அடைகுவர். நிரையம் - நரகலோகம். சுவர்க்கம் - விண்ணுலகம்.*

இயல்கொள் சையமா தியவிட மெவற்றினு மிசைத்த
பயனு றத்தரு மவற்றினிற் பகருமா னைக்கா
மயல கற்றுமை யாறுதென் குடந்தையொண் மருதூர்
வியலு றும்புகழ் மயிலையா தியதலம் விசேடம். 14

கூறி டுந்துலா மதியினிற் கூடிநீ டறுபத்
தாறு கோடிதீர்த் தங்களும் பொன்னியி னமரும்
மாறி லம்மதி யன்னதின் மருவியா டினர்கள்
தேற வற்றெலாஞ் சென்றுதோய் பயனதூஉஞ் சேர்வர். 15

கந்த மார்தொடைக் கவெரன்றன் கன்னிகை யாகிச்
சிந்து மன்னவன் றனக்கொரு துணைவியாய்த் தெரிக்கும்
இந்த வையகத் துயிர்களுக் கன்னையா யிலங்கும்
அந்த மாநதி மான்மிய மநேகமுண் டின்னும். 16

மேவு மந்நதி தனில்வட புறந்தனில் விளங்கும்
தாவில் கச்சப தீர்த்தமாந் தனித்துறை யதற்கு
மாவி லங்கிடு தருமுனி மருவுகச் சபனே
காவ லன்புகழ் வீரபத் திரனெனுங் கடவுள். 17

வாம தேவனங் கதற்கிசை தேவதை வயங்கக்
காமர் வண்டுறை மூழ்கியெட் கலந்தபோ னகநல்
தாம முற்றிடு சிவிகைதா னியந்தரு தகையோர்
பூமி காவல்செய் திடுவர்மேற் கொடுவினை போக்கி, 18

---

14. சையம் - சையமலை. பயன் உற தரும்: உற - மிகுதியாக. மயிலை - திருமயிலாடுதுறை (மாயூரம்).

15. துலா மதி - ஐப்பசி மாதம். மாறு இல் அ மதி அன்னதில். ஆடினர்கள் - நீராடினோர். தேறு அவற்று எலாம்.

16. கந்தம் - வாசனை. தொடை - மாலை. கவெரன் - கவேர முனிவன். சிந்து மன்னவன் - கடலரசன். துணைவி - இல்லாள். மான்மியம் - சிறப்பு.

17. தா இல் - கேடில்லாத. மா இலங்கிடுதரு. மா மரம், கச்சபமுனி. வீரபத்திரர் காவல்.

18. தேவதை வாமதேவர். வண் துறை. எள் கலந்த போனகம் - எள்ளோதனம். போனகம் - உணவு. தாமம் - மாலை.

அவமில் சீருறு கச்சப னத்துறை மருங்குத்
தவமி யற்றினன் சிலபகல் பிறைமதிச் சடையோன்
உவமை யில்லதோர் வாமதே வத்தனி யுருவோ(டு)
அவனு தித்தன னேரிடத் தலகிலா தவரின். 19

ஆன்ற மாதவன் பணிந்தெழுந் தேத்தின னமலன்
ஏன்ற நீபெறு வரங்களென் னென்றன னனையோன்
வான்த யங்குனை யநுதினம் வணங்கநா னிறைவ
தோன்று மிவ்விடங் கொண்டுறைந் தருள்கெனச் சொன்னான். 20

தாது லாமலர்க் கூந்தன்மால் வரைக்கொடி தன்னோ(டு)
ஆதி நாயக னத்திற னண்டினி துறைந்தான்
மாத வத்தனு மனமகிழ்ந் துறைந்தனன் வைகும்
ஏது கொண்டவன் பெயரின லத்துறை யிலங்கும். 21

பேசு மத்துறை படிந்தவண் பெரிதுகந் துறையும்
ஈச னைப்பணிந் தளவில ரின்பநீ டுற்றார்
மாசின் மாதவக் கவுதம முனிவரன் மகிழ்ந்து
வாச முற்றிடு தடந்துறை வளமினிப் புகல்வாம். 22

கச்சபதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 838

---

19. அவம் இல் சீர். அலகு இல் ஆதவரின் - எல்லையில்லாத சூரியர்களைப்போல. உதித்தனன் - தோன்றினன்.

20. வான் தயங்கு உனை. சொன்னான் - விண்ணப்பித்தான்.

21. தாது-மகரந்தப்பொடி, தேன். வரைக்கொடி - உமாதேவியார். ஆண்டு இனிது உறைந்தான். ஏது - காரணம்.

22. படிந்து அவண்.

முப்பத்திரண்டாவது

# கௌதமதீர்த்தச் சருக்கம்

[திருவிடைமருதூரிலே காவிரியாற்றிலே உள்ள கச்சப தீர்த்தத்தின் மேற்குத்திசையில் ஓர் அம்புவிழ் தூரத்தில் கௌதமதீர்த்தம் என்னும் துறை உள்ளது. அத்தீர்த்த காவலர் சண்டேசர். கவுதமர் அத்தீர்த்தத்தின் இருடியாவார். கௌதமதீர்த்தத்தில் முழுகி மண், பசு, பொருள் முதலியவற்றைத் தானம் செய்வோர் மனத்தில் எண்ணிய காரியங்களெல்லாம் நிறைவேறப்பெறுவர். கௌதமமுனிவருடைய மனைவி ஒருகாலத்தில் நேரிட்ட சாபத்தைப் போக்கி முன்புபோலவே பெண்ணுருவம் பெற்று முனிவர்பால் அடைந்தார். அதற்குக் காரணம் இத்தீர்த்தத்திலே முழுகிய விசேடமேயாம். இன்னும் பலர் இதில் படிந்து எண்ணிய காரியம் நிறைவேறப் பெற்றனர். மற்றும் சிலர் அரசராயிருந்து தேவவடிவம் பெற்று இன்புற்றனர்.]

கலிவிருத்தம்

தோற்று கச்சப தீர்த்தத் துறைக்குமேற்(கு)
ஆற்றல் சாலு மடுகணை யொன்றினில்
தேற்றுங் கோதம தீர்த்தத்து றையொன்று
போற்று மாங்கதைப் போற்றுசண் டேசனே. 1

கட்டு ரைத்த கவுதம னுகிய
சிட்ட னுங்குறுஞ் சென்றதி னுடியே
விட்டி டிற்புவி கோதனம் வேதியர்க்(கு)
இட்ட மாமனத் தெண்ணிய வெய்துவார். 2

---

1. மேற்கு - மேல்புறத்தில். அடு கணை - கொல்லும் அம்பு: வினைத்தொகை. ஓரம்பு வீழ் தூரத்தில். கோதமன் - கௌதம முனிவர். அதனைக் காவல் செய்வோர் சண்டேசர்.

2. கட்டுரைத்த - சொல்லிய. சிட்டன் - ஒழுக்கமுடையோன். ஆடி - முழுகி. புவி - பூமி. கோ - பசுக்கள். தனம் - பொருள். எய்துவார் - பெறுவார்.

வடங்கொள் கொங்கை யகலிகை மற்றதில்
படிந்த புண்ணியத் தாலொர் பவத்தினல்
திடங்கொள் சாபச் சிலையுருப் போக்கியுற்(று)
அடைந்த னள்கண வன்றனை யாதிநாள். 3

இன்னு மெண்ணில ரேந்துமப் பூந்துறை
தன்னின் மூழ்கித் தரணி புகழ்ந்திட
மன்ன ராகி மகிழ்வோ டிருந்துபின்
பொன்னி லத்திற் புலவர்க ளாயினர். 4

ஆற்றல் சாலு மருந்தவக் கோதமன்
போற்றி டுந்துறை மாண்பு புகன்றனம்
சாற்றி டொண்புகழ் சாருல கெங்கணும்
தோற்று பூசத் துறைவளங் கூறுவாம். 5

கௌதமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 843

---

3. வடம் - மாலை. அகலிகை - கௌதம முனிவர் மனைவி. ஓர் பவத்தினல் - ஒரு பாவத்தினல்; இந்திரனைப் புணர்ந்தமையினல் என்க. சாபம் - சாபமொழி: கௌதமரிட்ட சாபம். சிலை உரு - கல் வடிவம். சாபச் சிலை என்றது நயம். கணவன்தனை உற்றடைந்தனள். ஆதி நாள் - முன்னெரு காலத்தில்.

4. எண் இலர் - அளவிறந்தோர். தரணி - பூமி. பொன்னிலம் - விண்ணுலகம். புலவர் - தேவர்.

5. ஆற்றல் சாலும் அருந்தவக் கோதமன்: ''ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான், இந்திரனே சாலுங் கரி'' (குறள் - 25). ஆற்றல் சாலும் - வலிமை மிக்க: ஆற்றலாவது 'புலன்களில் செல்கின்ற அவா ஐந்தனையும் அடக்கும் வலிமை'.

முப்பத்துமூன்ருவது

# கல்யாணதீர்த்தச் சருக்கம்

[கல்யாண தீர்த்தம், காவிரியாற்றின் தென்புறத்தே, மூன்று அம்பு வீழ் அகலம் கிழக்கு மேற்காக எல்லையினையுடைய ஒரு துறை. இதன் தேவதை மத்தியார்ச்சுனேசுவரர். தீர்த்தபாலர் திருநந்திதேவர். இருடி உரோமேசர். விருட்சம் அரசு. இத்தீர்த்தத்தில் மூழ்குவோர் அந்தணர்களுக்குப் பசு, பொன் முதலியவற்றைத் தானம்பண்ணல்வேண்டும். இஃது எல்லாத் தீர்த்தங்களிலும் மிக மேலானது. இத்தலத்தில் காசிபர் முதலிய முனிவர்களுக்குச் சிவதத்துவத்தை அகத்தியமுனிவர் உபதேசித்தார். இத்தீர்த்தத்திலே முழுகி விதிப்படியே பூரகர்மா, ஆதிசத்தி பூசை இவற்றைச்செய்து உமாதேவியார் ஏகநாயகராகிய சிவபெருமானை மணம்செய்து கொண்டார். இத்திருமணக்கோலத்தை அகத்தியமுனிவர் தரிசித்துப் பேரானந்தமுற்ருர். இதனுல் இது கல்யாணதீர்த்தம் என்று பெயர் பெற்றது.

ஆகாயத்தில் விமானத்தில் எழுந்தருளிய நித்திய கல்யாண ரூபிகளாகிய பார்வதி பரமேசுரர்கள் இக்காவிரிநதியின் இருபாலும் ஐந்து யோசனை அளவாயிருந்து தவஞ்செய்யும் முனிகணங்களின் பத்தி சிரத்தைகளையும் தவச்செயலையும் கண்டு மகிழ்ந்து விழிகளினின்று ஆனந்தபாஷ்பம் சொரிந்தனர் ஆகலின், இத்துறை கல்யாணதீர்த்தம் எனப் பெயர்பெற்றதென்பர்.

இதனையன்றி, தன்னிடத்து மூழ்கினேருக்கு எல்லா மங்களங்களையும் முத்தியின்பத்தையும் எளிதின் அடையச் செய்வதனுலும் இது கல்யாண தீர்த்தம் எனப்படும். இதில் விதிப்படி ஸ்நானம்செய்து கரையிலிருந்து ஸ்ரீ பஞ்சாக்கர செபம்பண்ணுவோர் சிவசாயுச்சியம் பெறுவர். கின்னரர் முதலிய தேவகணத்தினர் யாவரும் நாடோறும் இதில் முழுகித் தங்கள் தங்கள் நாட்கடன்களைச் செய்து சிவார்ச்சனைசெய்து எப்போதும் மகிழ்ச்சியோடிருப்பர். எல்லாக்காலமும் உரியனவேனும் சோமவாரத்தில் இதில் மூழ்குதல் விசேடம்; அதிலும் ஆதிவாரம் விசேடம்; அதிலும் அமாவாசை விசேடம்; அதிலும் சூரியகிரகணம் சந்திரகிரகணம் விசேடம். எல்லாவற்றினும் சிறந்தது தைப்பூசம். அதிலும் குருவாரத்தோடு கூடிய புஷ்யம் மிக விசேடம். இந்தக் குருபுஷ்யத்தில் கங்கை முதலிய எல்லாப் புண்ணிய

தீர்த்தங்களும் இதில் வந்து பொருந்துவனவாம். இத்தீர்த்தத்திலே மூழ்கினுல் கோடி சென்மங்களில் செய்த பாவம் நீங்கும். இக்காரணத்தால் இக்கல்யாண தீர்த்தத்திற்குப் புஷ்யதீர்த்தம் என்ற பெயரும் வழங்கும். இதில் மூழ்கிப் பேறுபெற்ருேர் பலர். அவருட்சில வரலாறு வருமாறு:

(i) பரிட்சித்து மகாராசனேக் கடித்துக் கொன்றமையால் உண்டாகிய பாவத்தைக் கார்க்கோடகன் இதில் மூழ்கிப் போக்கி உய்ந்தமை.

(ii) கலிபுருஷனுல் மிகத் துன்புற்ற நளச்சக்கரவர்த்தி இதில் மூழ்கித் துன்பம் நீங்கப்பெற்று, மனேவி மக்களேயும் தனது தேசத்தையும் மீளப் பெற்றமை.

(iii) தம்மைக் கண்டவுடன் சூதமுனிவர் எழவில்லே எனக் கறுக் கொண்ட பலராமர், அவரைக் கொன்ற பாவத்தை இத்தீர்த்த ஸ்நானத் தால் போக்கியமை.

(iv) தைப்பூசத்தில் இதில் படிந்த புண்ணியத்தால் பகீரதன் ஆகாய கங்கையைப் பூமியில் வருவித்துத் தனது முன்னேரை நற்கதியடையச் செய்தமை.

(v) மிகக் கொடியோன் ஒருவன் சிவராத்திரி புண்ணியகாலத்தில் இதில் முழுகித் திருக்கோயிலுக்குச் சென்று சிவத்திரவியத்தைக் கவர்ந்து கொண்டு வெளியே சென்றவன் மரணமடைந்தான். 'யமதூதர் அவன் உயிரை யமனிடத்துக் கொண்டு சென்று விடுத்தனர். யமன் அவனேப் பார்த்து 'நீ சிவராத்திரியில் கல்யாணதீர்த்தத்தில் முழுகினதால் எமது தண்டனேக்கு உரியையல்லே; நீ கயிலேக்குச் செல்வாயாக' என்று விட்டு விட்டமை.

(vi) விதேகநாட்டிலே காபிலம் என்று ஓர் ஊர் உண்டு. அங்குள்ள ஒரு பிராமணன் சில பெண்டிர்களேயும் சிசுக்களேயும் கொன்று ஆபரணங் களேச் சம்பாதித்தான். ஐந்து மனேவியரை மணந்தனன். அவனது பாவ மிகுதியால் அம்மனேவியர் ஐவரும் இறந்தனர். பின்பு அவன் கள்விற்கும் குலத்துப் பெண்ணெருத்தியைச் சேர்ந்திருந்தான். அவளும் ஒரு குழந்தை யைப்பெற்றுப் பின் இறந்தனள். இக்குழந்தையன்ருே இவள் இறத்தற்குக் காரணமாயிற்று என்று அக்குழந்தையைக் கிழித்து ஆற்றில்விட்டான். இப்பாவங்களெல்லாம் இவனேச் சூழ்ந்துகொண்டன. அதனுல் பயித்தியங் கொண்டான். முயலகன் முதலிய பொல்லா நோய்களேயும் அடைந்தான். எல்லாராலும் இகழப்பட்டுத் துன்புற்ருன். இவ்வாறு திரிந்த அவன்

*தற்செயலாய் இத்தலத்தை அடைந்தான். நோயினால் மிக அவதியுற்று அவசமாய்த் திருவிதியில் கிடந்தான். அன்று தைப்பூசநாள். ஆகலின், பூசதீர்த்தம் ஆடி வருவோருள்ளே சில பிராமணர் இவனைக்கண்டு இரக்க முற்று எடுத்தனர். அவர்கள் கையிலுள்ள ஈரம்பட்ட புண்ணிய விசேடத்தால் மயக்கத்தினின்று தெளிந்தான்; உணர்ச்சியுற்றான்; அவர்களை வணங்கிச் சென்று இத்தீர்த்தத்தில் படிந்தான்; தூயவனானான். மருதவாணரைத் தரிசித்திருந்து முத்திபெற்றான் என்பன. இதனை நாற்பத்தேழாம் சருக்கத்தாலறிக.]*

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

காவிரித்தென் புறமதனிற் கல்யாண
 தீர்த்தமதைக் காப்போ னந்தி
தேவதைநம் மருதீசன் முனிவனுரோ
 மசனரசு தெரிக்கு மூலம்
ஏவிரண்டோ டொன்றுறுசேய்த் தத்துறையின்
 குணக்குமேற் கெல்லை யென்ப
மேவதனிற் படிவதற்கு நினைந்தெழுமுன்
 சிலவினைகள் விட்டு நீங்கும். 1

பரவுமந்தத் துறையிலறிந் தேனுமறி
 யாதேனும் படியி னோர்கால்
பிரமகத்தி முதலான கொடுவினைகள்
 உடனகலும் பிணிபி னீங்கும்
கரமதனாற் பசுவொடுபொன் முதலியவே
 தியர்க்களித்தோர் கயிலை சேர்வர்
திரமுறுமஞ் செழுத்தினையங் கிருந்துவிதிப்
 படியுரைப்போர் சிவனே யாவர். 2

---

1. தென்புறம் - தெற்குப்பக்கம். ஏ இரண்டோடு ஒன்று உறு சேய்த்து. ஏ - அம்பு. இரண்டோடு ஒன்று உறு - மூன்று அம்புகள் வீழ்தரும். சேய்த்து - தொலைவில் உள்ளது. குணக்கு - கிழக்கு. கிழக்கு மேற்கு எல்லைகள் மூன்று அம்புவீழ் தூரமாம் என்க. மேவு அதனில் படிவதற்கு.

2. பரவும் - துதிக்கப்பெறும். ஓர் கால் படியின். உடன் அகலும் - உடனே விட்டு நீங்கும். கரம் அதனால் - தம் கையினால். திரம் உறு - நிலைபெற்ற. சிவனே ஆவர் - சிவசாரூபம் பெறுவர்: சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவர் எனினுமாம்.

கின்னரர்கள் கிம்புருட ரியக்கரிராக் கதரசுரர் கிளைகொள் வானோர்
பன்னகர்பா ரிடத்தலைவர் கந்தருவர் தவமுனிவர் பயிலுஞ் சித்தர்
பின்னுமுறு மனிதரொடு பிறர்களுமத் துறைப்படிந்து பெரிது மாங்கே
நன்னியம முடித்திறையோன் பதம்பணிந்து மகிழ்வுறுவர் நாளு மன்னோ. 3

வளந்தருமத் துறைபடிதற் கநுதினமும் விசேடமதா மதியின் வாரம்
அளந்திடுமன் னவற்றதிக மதற்கதிக மதிமுதன ளதற்கு மேலாய்த்
தெளிந்ததுநீ டமாவாசை யதற்கதிக மெனலாகுஞ் சீறு தீக்கோள்
விளங்குமிரு சுடர்தொடுநா ளெவற்றினுக்குந் தைப்பூசம் விசேட மாகும். 4

பூசமதிற் படிந்திடுதல் விசேடமதா லத்துறைக்குப் புகலு நாமம்
தேசமுழு வதும்பூசத் துறையென்ன வெவ்வுயிருஞ் சென்று மூழ்கி
மாசுறுதீ வினையகற்றிப் பரனருளால் பேரின்ப மருவ லாலே
பேசலுறுங் கல்யாண தீர்த்தமென வொருநாமம் பெரிது மன்னோ. 5

திடமுறுகார்க் கோடனெழிற் பரிச்சித்து தனைக்கடித்த தீமை யந்தத்
தடமுறுதீர்த் தந்தனிற்றோய்ந் தகன்றதுவெங் கலியலைக்கத் தளர்ச்சி யெய்தி
இடமுறுமே தினியிடத்தி னலைந்திடுநா ளத்துறையுற் றினிது மூழ்கி
நிடதநெடு நாடுமனை மகவடைந்தான் நளனென்னு நிருப னம்மா. 6

வந்துபெருஞ் சேனையுட னெதிர்நின்று நான்வணங்கா வயிரமேற்கொண்
டிந்தநெடு நைமிசத்தில் தருப்பையினு லெளியேனை யெறித லுற்று
முந்துயிர்கொண் டிடுபாவம் புகல்பூசத் துறையினிடை மூழ்கி யன்றே
அந்தமில்சீ ருற்றபல பத்திரன்வீ டுற்றின்ப மடைந்தா னீடு. 7

---

3. பன்னகர் - உரகர்; பன்னகம் - பாம்பு. பாரிடம் - பூதம். நல் நியமம் முடித்து - சிறந்த நித்திய கன்மாநுட்டானங்களைச் செய்து. நாளும் - எப்போதும்.

4. மதியின்வாரம் - திங்கட்கிழமை. மதி முதல்நாள் - மாதப்பிறப்பு. நீடு அமாவாசை. தீக்கோள் - இராகு கேதுக்கள். இருசுடர் - சந்திரசூரியர். தொடுநாள் - கிரகண புண்ணியகாலம். தைப்பூசம் - தைமாதத்தில் வரும் பூசநாள்.

5. நாமம் - பெயர். மாசு உறு - குற்றம் பொருந்தும். மருவலால் - பொருந்துதலால்.

6. கார்க்கோடகன் - ஒரு பாம்பு. அந்தத்தடம் - அந்த இடம். கலி அலைக்க - கலிபுருடன் வருத்த: கலி - சனிபகவான் எனினுமாம். மேதினி - பூமி. நிருபன் - அரசன்.

7. நான் என்றது இங்கே சூதமகாமுனிவரை. வயிரம் - மனத்தில் உள்ள கறு. முந்து - முற்காலத்து. பலபத்திரன் - பலராமன்.

தண்ணரிதழி வேணியனுக் கன்புடையீர் பகீரதனுந் தவத்தின் மிக்கோன்
விண்ணிலுறு கங்கையினைப் பூதலத்தின் வரவழைத்து மேலை நாளில்
அண்ணலுறு தனதுகுலத் தறுபதினு யிரவர்கதி யடையு மாறு
பண்ணியதத் துறையினிடைத் தைப்பூசந் தனிற்படிந்த பயனே வேறே. 8

சிவநிசியி லொருகொடியோ னத்துறையிற் படிந்தெழுந்து சென்று கோயில்
அவணுறுசில் பொருளிரவிற் கவர்ந்துபுறத் தணைந்திடுங்கா லவனைத் தூதர்
கவனமுறக் கொண்டியமன் முன்விடலு மவனிறையோன் கங்குல் தன்னில்
புவிபுகழ்பூ சத்துறையிற் படிந்திட்டாய் கயிலையிடைப் போவென் றுய்த்தான்.

கலிநிலைத்துறை

முன்ன ரெத்துணை யோர்களத் துறையிடை மூழ்கி
இன்னல் தீர்ந்தின்ப முற்றன ரித்தகை யோரும்
அன்ன திற்படிந் தெய்திய தறைதலுற் றனமீண்(டு)
இன்னு முண்டுபல் கதையதற் கேய்ந்துழி யறைதும். 10

கல்யாணதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 853

---

8. இதழி - கொன்றைப்பூமாலை. வேணி - சடை; வேணியன் - சிவபெருமான். கதி - முத்தி.

9. சிவநிசி - சிவராத்திரி. அத்துறை - கல்யாணதீர்த்தத்தில். அவண் உறு சில்பொருள். கவனம் உற கொண்டு. இறையோன் கங்குல் - சிவநிசி. பூசத்துறை - புஷ்யதீர்த்தம். உய்த்தான் - செலுத்தினன்.

10. எத்துணையோர்கள் அ துறை இடை. இன்னல் - துன்பம். ஏய்ந்துழி - சொல்லுதற்கு ஏற்ற காலத்து.

## முப்பத்துநான்காவது

# சேடதீர்த்தச் சருக்கம்

[அரவாபரணத்தை அணிந்து விளங்கும் சிவபெருமானுக்கு அன்புடையீர்! இதுவரை பூசத்துறை என்னும் கல்யாணதீர்த்தச் சிறப்பைக் கூறினேம். இனி, சேடதீர்த்தச் சிறப்பையும் செப்புவோம். முன்னொரு காலத்து ஆதிசேடன் பூமியைத்தாங்க வலியிலனாயினான். துன்புற்றுத் துவண்டு சிவபெருமானைத் தியானித்தான். மனம் தெளிந்தான். நிலவுலகத்தை அடைந்தான். பொன்னிநதியைச் சார்ந்தான். பூசத்துறையின் கீழ்புறத்துள்ள ஒரு துறையிலாடினன். பூதலத்தைச் சுமக்கும் வலிமட்டுமின்றி எல்லா உலகங்களையும் எளிதில் சுமக்கும் வலிமையைப் பெற்று மகிழ்ந்தான். மருதீசரை வணங்கித் துதித்தான். நல்ல சிவஞானச் செல்வமும், மற்றும் சிறந்த வரங்களும் பெற்றான்; விடைகொண்டு தன்னுலகம் சென்றான். அக்காரணத்தால் அது பூசத்துறையின் கீழ்பால் சேடதீர்த்தம் என்னும் பெயரையும் பெற்று விளங்குகின்றது என்றருளினர்.]

கலிவிருத்தம்

ஆட னாக மணிபவற் கன்பினீர்
நாடு பூசத் துறையி னலந்தரு
பீடு சால்கதை பேசி னுமினிச்
சேட தீர்த்தச் சிறப்புப் பகருவாம். 1

ஆதி காலத் தரவின் குலத்திறை
பூத லத்தைப் பொறுக்க வலியிலான்
ஏத முற்றுட லொல்கி யினிச்செயல்
யாதெ னப்பிறை சூடியை யெண்ணினான். 2

---

1. ஆடல் நாகம் அணிபவற்கு: ஆடல் நாகம் - படமெடுத்தாடுகின்ற பாம்பு. பூசத்துறை - கல்யாணதீர்த்தம். துறையின் நலம் தரு. சேட தீர்த்தம் - ஆதிசேடனால் உண்டாக்கப்பட்ட தீர்த்தத்துறை.

2. அரவின் குலத்து இறை - ஆதிசேடன். வலியிலானாகி. ஏதம் - துன்பம். உடல் ஒல்கி: ஒல்கி - துவண்டு. பிறைசூடி - சிவபெருமான்.

இன்ன செய்து மெனத்தெளி வெய்தினன்
மன்னு மிப்படி மீது மருவினன்
பொன்னி யங்கிடு பொன்னியி னத்தலத்(து)
அன்ன தண்டுறை யாடின னுடினன். 3

மகித லத்தைப் பரிக்கும் வலியலா(து)
அகில லோகமு மாற்றிடு மாற்றல்பெற்(று)
இகல்வின் மேரு இடைமரு தீசனை
மகிழ்வு றப்பணிந் தானெதிர் வாழ்த்தினன். 4

நற்றி றச்சிவ ஞானத் திருவொடு
மற்று நீடு வரங்களு மின்புறப்
பெற்ற னன்விடை கொண்டு பெயர்ந்தனன்
உற்ற னன்ற னிலகு முலகிடை. 5

மன்னு சேடன் மருவிமுன் னுடிய
தன்மை யாலத் தடந்திரைப் பூந்துறை
அன்ன வன்திரு நாம மணிந்தது
துன்னு மெவ்வயி னோருந் துதித்திட. 6

சேடதீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 859

---

3. செய்தும் என. இ படி மீது - இந்நிலவுலகத்தில். பொன் இயங் கிடு பொன்னி. ஆடினன் நாடினன்; ஆடினன்: முற்றெச்சம்.

4. மகிதலம் - பூமி. அகில லோகமும் - எல்லா உலகங்களையும். ஆற்றிடும் - சுமக்கும். இகல் வில் மேரு - வலிய வில்லாகிய மேருவை யுடைய; மேருவாகிய வலிய வில் என மாறுக. எதிர் வாழ்த்தினன்: எதிர் நின்று வாழ்த்தினன் என்க.

5. நல் திறம் சிவஞானத் திருவொடு: சிவஞானத்திரு - சிவஞானச் செல்வம். தன் இலகும் உலகிடை பெயர்ந்தனன் உற்றனன்; பெயர்ந் தனன்: முற்றெச்சம்.

6. மருவி - பொருந்தி. ஆடிய - முழுகிய. பூந்துறை - அழகிய நீர்த் துறை. அன்னவன்: சேடன். எ வயினோரும் - எவ்விடத்திலுள்ளவர்களும்: வயின் - இடம்.

## முப்பத்தைந்தாவது

# கந்ததீர்த்தச் சருக்கம்

[மேலேகூறிய சேடதீர்த்தத்தின் கீழ்பால் உள்ளது கந்த தீர்த்தம் என்பது. அத்தீர்த்தத்திலே திருதியைத் திதியிலும், சஷ்டி திதியிலும் நீராடப்பெற்றோர் எல்லையில்லாத செல்வமும் வெற்றியும் புகழும்பெறுவர். ஈராயிரவெள்ளம் பூதகணங்களும், இந்திரனும், தேவர்களும், வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களும் சூழ்ந்துவர; முருகக்கடவுள் கயிலைமலையி னின்று புறப்பட்டுச் சேய்நலூரை அடைந்தருளினர். அங்கே சிவபெரு மானைப் பூசித்துப் பாசுபதத்தைப் பெற்றார். மகிழ்ச்சியுற்றுப் பின்பு திரு விடைமருதூருக்கு எழுந்தருளினார். அங்குள்ள காவிரிநதியில் தென்பால் உள்ள சேடதீர்த்தத்தின் கிழக்கிலுள்ள ஒரு துறையில் நீராடியருளினார். மருதவாணரைப் பூசித்து வணங்கிப் பல வரங்களைப் பெற்றார். தெற்குத் திசையிலுள்ள மகேந்திரத்தை அடைந்தார். வீரமகேந்திரபுரியிலுள்ள சூரபன்மனுடன் போர்புரிந்து அவனைக் கிளையுடன் அழித்துத் தேவர்களை விண்ணுலகிற் குடிபுகச்செய்தருளினார். மயில்வாகனக் கடவுளாகிய கந்தக் கடவுள் வந்து நீராடிய காரணத்தால் அந்தத் துறைக்குக் கந்ததீர்த்தம் என்று பெயர் கூறப்படும்.]

கலிநிலைத்துறை

அந்த மில்லவன் பெயரினோ டமர்ந்துதன் னிடத்து
வந்து மூழ்கினோர் பவந்துலைத் ததெிர்வலி வழங்கும்
சந்த முற்றிடு தீர்த்தத்தின் தனிச்சிறப் புரைத்தாம்
கந்த தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத் திடுவாம். 1

கூறி டத்தகைச் சேடதீர்த் தத்துறைக் குணபால்
தேறு சீர்பெறு கந்தமா தீர்த்தமொன் றுளது
மாறில் செல்வமும் விசயமுங் கீர்த்தியும் வழங்கும்
ஆறு மூன்றெனுந் திதியினு ளினிலணை ந் தாடின். 2

---

1. அந்தம் இல்லவன் - அழிவில்லாதவன். சந்தம் - அழகு. மான் மியம் - பெருமை.

2. கூறிடு அ தகை சேட தீர்த்தம். குணபால் - கீழ்த்திசையில். தேறு - தெளிந்த. மாறு இல் - மாறுதலில்லாத; கேடில்லாத. விசயம் - வெற்றி. ஆறு மூன்று எனும் திதி - சட்டி, திருதியை என்னும் திதிகள்.

ஆர மேருவைப் பறித்தெடுத் தம்மனை யாடும்
பாரி டங்களீ ராயிர வெள்ளமும் பரவும்
கூரி லங்குவச் சிரத்தனுங் குலவுபல் சுரரும்
வீர வாகுவே முதனவ வீரருஞ் சூழ. 3

வண்ண வேற்படை முருகவேள் கயிலைமால் வரைநின்(று)
எண்ண ரும்புகழ்ச் சேய்ஞ்ஞலூ ரெய்திமுச் சுடர்க்கண்
அண்ணல் பாசுப தாத்திர மளித்திடக் கொள்ளா
உண்மகிழ்ச்சிமிக் கிடைமரு தெனும்பதி யுற்று. 4

மன்னு றுஞ்சர மருங்குதித் திலங்குமீன் வளர்த்துக்
கொன்ன வின்றிடு மயில்கொடு தானெனக் குலவும்
பொன்னி மாநதித் தென்புடை புகுந்தெழி லுறையும்
முன்னி சைத்திடு துறையிடை மூழ்கின னினிது. 5

மருத வாணனைப் பணிந்தெதிர் வரஞ்சில வேற்றுக்
கருது தென்திசை மயேந்திரங் கலந்துசூ ரனைநேர்
பொருது வென்றவன் படைஞர்கள் போற்றிடு மிமையோர்
இருதி றத்தரும் விசும்பினிற் குடிபுக விழைத்தான். 6

---

3. பாரிடங்கள் - பூதகணங்கள். வெள்ளம் - ஓர் எண்; மிகுதியைக் குறித்தது. கூர் இலங்கு வச்சிரத்தன்: வச்சிரத்தன் - இந்திரன். சுரர் - தேவர். வீரவாகு - நவவீரருள் முதல்வர்.

4. வண்ணம் - அழகிய. எண்ண அரும்புகழ். முச்சுடர்க்கண் அண்ணல் - சிவபெருமான். முச்சுடர் - சூரியன் சந்திரன் அக்கினி என்பன. பாசுபத அத்திரம்: அத்திரம் - அம்பு. உள் - மனம்.

5. மன் உறும் சரம் மருங்கு - நிலைபெற்ற சரவணப் பொய்கையினிடத்து. மீன் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். கொன் - பெருமை. அயில் - வேலாயுதம். முன் இசைத்திடுதுறை - காவிரியின் தென்புறத்திலே.

6. ஏற்று - பெற்றுக்கொண்டு. மயேந்திரம் - வீரமயேந்திரபுரி. பொருது - போர்செய்து. படைஞர்கள் - வீரர்கள்: என்றது சூரன் திறத்துப் போர்க்களத்தில் மாண்டோர். இமையோர் இருதிறத்தரும் - தேவர் இருவகையினரும்: அவர் முன் தேவலோகத்திலுள்ள தேவரும், வீரசுவர்க்கம் அடையும் வீரரும். விசும்பு - விண்ணுலகம்.

அந்த வான்மயி லூர்திவந் தாடிய திறத்தால்
கந்த தீர்த்தமென் றிசைப்பர்கள் கருதுமத் துறையைச்
சந்த நீடயி ராவதஞ் சாற்றுமத் தலத்தில்
வந்து சோதியைப் பூசித்த வாறினி வகுப்பாம். 7

கந்ததீர்த்தச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 866

---

7. வான் மயில் ஊர்தி - சிறந்த மயில்வாகனத்தையுடைய முருகவேள். அயிராவதம் - இந்திரன் பட்டத்து யானை. சோதியை - சோதிர் மகாலிங்கேசரை.

முப்பத்தாறுவது

# ஐராவததீர்த்தச் சருக்கம்

[செந்தாமரை மலரிலிருக்கும் திருமகள், கலைமகளாகிய மருமகளுக்கு ஒரு பொன்னரிமாலையை அளித்தாள். அக்கலைமகள் அதனைத் துருவாச முனிவருக்கு அளித்தாள். அம்முனிவர் அம்மாலையை இந்திரனுக்குத்தர மனத்தில் எண்ணினர். பொன்னுலகு அடைந்தார். அப்போது இந்திரன் யாவரும் போற்ற ஐராவதயானையின்மீதேறிப் பவனிவந்துகொண்டிருந் தான். அவனை முனிவர் கண்ணுற்றார். ஆசிகள் கூறினர். அம்மாலையையும் அவனுக்கு அளித்தார். அதனை அவன் ஒரு கையால் வாங்கி யானையின் மீதுவைத்தான். அவ்விலங்கும் அதனை எடுத்துக் கீழேபோட்டுக் காலினல் தேய்த்தது. முனிவர் அச்செயலைக் கண்டார். கடுங்கோபங்கொண்டார். இந்திரனைநோக்கி 'இறுமாப்புடன் ஒரு கைநீட்டி இதனை வாங்கி யானையின் மீது வைத்தாய்; அதுவும் அதனை மதியாது எடுத்துக் காலால் மிதித்தது; ஆதலின், நின்செல்வம் கெட்டொழிக; வெள்ளானையும் காட்டானையாகி வருந்திடுக' எனக் கடுஞ்சாபமிட்டார். அச்சாபமொழிப்படியே ஆயின. யானையும் காட்டானையாய் உழந்தது.

நிலவுலகத்திலே வந்து அலைந்து திரிந்து வருந்திய ஐராவதம் ஒரு நாள் திருவிடைமருதூரை அடைந்தது. பொன்னிநதியின் தென்கரை யிலேயுள்ள கந்ததீர்த்தத்தின் தெற்கில் இரண்டு அம்புவீழ் தூரத்தில் விளங்கும் விக்கினேசுர தீர்த்தத்திலே சென்று படிந்தது. காட்டானை வடிவம் போயது. முன்போல் வெள்ளானையுரு விளங்கக்கண்டது. மகிழ்ச்சி மிக்கு மருதவனேசரைப்போய்த் தரிசித்தது, துதித்தது. அச்சிவபெரு மானை விட்டுப்பிரிய மனமின்றிச் சிலகாலம் மருதவாணரைப் பூசித்திருந் தது. மருதவாணர் மகிழ்ச்சிபூத்து வெள்ளானைக்குக் காட்சி கொடுத் தருளினர். ஐராவதமே! உன் பூசையை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டோம். வேண்டிய வரத்தைக் கேள் என்றருளினர் மருதவனேசர். வெள்ளானை சிவபெருமானை நோக்கி, ஐயனே! என்றும் உம்மைப் பூசித்து வழிபாடு செய்யும் வாழ்வை அருளுக என்று இரந்து வேண்டியது. சிவபெருமான் ஐராவதத்தைப் பார்த்து 'இந்திரன் நம்பால் அன்புடையவன்; அவன்பால் சென்று சிறிதுகாலம் தங்குக. அதன்பின்பு, நமது அருளால் உனக்குச் சிவலோகம் கிடைக்கும்; அங்கே இன்புற்று வாழலாம்; நீ தேவலோகம்

செல்வாயாக' எனக் கட்டளையிட்டருளினர். அவ்வாறே ஐராவதம் இந்திர லோகத்தை அடைந்தது. விநாயகதீர்த்தம் அன்றுமுதல் ஐராவததீர்த்தம் என்று வழங்கப்படுகிறது எனச் சூதமுனிவர் சொல்லியருளினர்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செஞ்சலசப் பொகுட்டிலிருந் தருண்மடந்தை புகழ்வாக்கின்செல்விக்கங்கோர்
விஞ்சுகதிர் மணியெழிற்பொன் னரிமாலை உகந்தளித்தாள் விளங்கு மன்னுள்
எஞ்சலில்சீர்த் துருவாசற் கீந்தனளன் னவனிமையோ ரிறைவற் கீய
நெஞ்சினிடைக் குறித்துறுபொன் னுலகடைந்தான் அவன்சென்ற நேரத்
[தன்னுன். 1

கனிமொழிச்செந் துவரிதழ்ப்பொற் கலசமுலை மேனகைவெண் கவரி வீச
நனிமலர்ப்பூங் குழற்கயற்கட் டிலோத்தமைமென் சதிமுறையி னடிப்ப மீது
தனிமதித்தண் குடைநிழற்றக் கடங்கவிழ்வெள்ளானைமிசைத் தகைமந் தாரப்
பனிமதுத்தண் மலர்சொரிந்து வானவர்போற் றிடமறுகிற் பவனி
[போந்தான். 2

ஆங்கவனைக் கண்டுமுனி வரன்சிலவா சிகள்கூறி யதனை யீந்தான்
தீங்குவரு காலைமதி கெடுமன்றே யன்னவனேர் செங்கை நீட்டி
வாங்கிமத யானையின்மேல் வைத்தனன்மற் றதூஉம்விலங்கின் மரப தன்றே
தாங்கிலதாய் மறுகினிடை வீழ்த்தியெதிர் தேய்த்ததுதன் ருளி னுனே. 3

கண்டதனைத் துருவாச முனிவரனிந் திரற்சீறிக் கரிய நஞ்சம்
உண்டுலகங் காத்தபர னடியவர்கள் விருப்பமுரு தொதுக்குஞ் செல்வம்
கொண்டுமதங் கொண்டொருகை கொண்டெதிர்நான் கொடுத்ததனைக்
[கொண்டு நீடு
மண்டுகளி யானைமிசை வைத்தனையாங் கதுசிந்த மதித்தி டாது. 4

---

1. செஞ்சலசப் பொகுட்டு: செம் சலசம் - செந்தாமரை மலர். பொகுட்டு - தாமரைப் பூங்கொட்டை. மடந்தை என்றது ஈண்டுத் திருமகளை. வாக்கின் செல்வி - நாமகள். இமையோர் இறைவன் - தேவேந்திரன். குறித்து - கருதி. அன்னுன் - அவ்விந்திரன்.

2. கயற்கண் திலோத்தமை. மறுகில் - வீதியில்.

3. அதனை - அப்பொன்னரிமாலையை. தீங்குவருகாலை – கேடுவருங் காலத்தில். மதி - புத்தி. அதூஉம் - அவ்வெள்ளானையும்: உம்மை இழிவு சிறப்பு.

4. இந்திரற்சீறி - இந்திரனைக் கோபித்து. செல்வம் - செல்வத்தைப் பெரிதாக மதித்து. ''சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்'' என்ருர் பரஞ்சோதி திருவிளையாடலில்.

நீயிவணித் துணையிறுமாப் பெய்தியது செல்வமதி னிலையி னன்றே
ஆயதுதெண் டிரைக்கடலிற் சிந்திடுக யானையுங்காட் டானை யாகிப்
பாயபுவி மீதுழல்க வெனச்சபித்தான் சபித்திடுமுன் பரவை மீது
மேயபெருந் தனிச்செல்வஞ் சிந்தியதி சனைக்கண்டோர் வினைக ளென்ன. 5

துறந்திடக்கண் டெழிற்செல்வ மிந்திரன்மா துயரினொடு துணுங்கி நின்றான்
இறந்தமைந்த சால்புடையா ராயினுமென் னும்வெருளி னிசைக்கு மேலோர்
சிறந்திடுசெல் வமுமமிர்து மணியகடல் கடைந்துகொண்டார் தேவர் பின்னாள்
மறந்ததும்பு வெண்களிறுங் கிரியுருவாய் உலவியது வைய மீது. 6

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தன்னுயிர் தனையும் புரந்துதற் சார்ந்தோர் தம்மையும் புரந்திடும் கொற்றம்
மன்னனைச் சேர்ந்து வாழ்வதே பெருமை வறுமையால் பிறரினுல் துயரும்
துன்னிடு விதிர்ப்புந் தான்மிக மருவித் தொடர்புறத் தனையடைந் தவரும்
இன்னல்கூர்ந் திடக்கண் டிருக்குமே ழையைச்சேர்ந் திருந்திட லேழைமைத்
[தன்றே. 7

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பூவலயத் தலைந்திடுநா ளொருபகலோங் கிடைமருது பொருந்திக் கோடு
மேவிமணி யுருக்கொண்டு துதிக்கைகொடு தனைப்போல விளங்கு நீடு
காவிரிக்க ணுறுகந்த தீர்த்தமதின் தென்திசையில் கதழ்வி னேகும்
ஏவிரண்டின் வளர்விக்கி னேசுரதீர்த் தந்தனைச்சென் றெய்திற் றம்ம. 8

---

5. இத்துணை - இவ்வளவு. செல்வம் அதின் நிலையின் அன்றோ. சிந் திடுக - சிதறக்கடவது. பாய புவி - பரவிய பூமி. சபித்திடுமுன் என்றது சாபம் கொடுத்தவுடனே என்க. பரவை - கடல்.

6. துணுங்கி - நடுங்கி. மறம் - வீரம். வெண்களிறு - ஐராவதம். கிரி உரு - மலை வடிவாய். வையம் - உலகம்.

7. புரந்திடும் - பாதுகாக்கும். விதிர்ப்பு - நடுக்கம். இன்னல் கூர்ந்திட - துன்பம் மிக. ஏழைமை - அறிவில்லாமை.

8. ஓங்கு இடைமருது. கோடுமேவி, மணி உரு கொண்டு, துதிக்கை கொடு; சிலேடை. கோடு - கரை, கொம்பு. மணி உரு - அழகிய வடிவம், நீலமணிபோன்ற நிறம். துதிக்கை - போற்றுதல், தும்பிக்கை. தனைப் போல் என்றது யானையாகிய தன்னைப்போல் என்க. கதழ்வின் ஏகும் - வேகத்துடன் செல்லும். ஏ இரண்டு - இரண்டு அம்புகள்வீழ் தூரம்.

சென்றுபுனல் படிந்திடலு மணிமாசு கழுவுற்ற திறமே யென்னத்
தொன்றிலகு தனதுருவந் தோன்றிடக்கண் டுவகைமனந் துளும்ப வுற்றுக்
கொன்றையறு கணிதருசெஞ் சடையவனை மருதடியிற் குடியுற் றேனைத்
தன்திருக்கண் களிகூரக் கண்டுபணிந் தேத்தியது தகைமை தோன்ற. 9

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கருவினிடைப் புகாதபடி யெளியேன் மீது
காத்தியென நின்றிரந்து கருத்துங் கண்ணும்
ஒருவகைமீண் டிடக்கொண்டு குணபாற் சென்றுங்
கொருபதியை யுறைபதியாக் கருதி வைகித்
திருமருவு நிறத்தன்முத லெவர்கள் வாழ்வுஞ்
செஞ்சடைவா னவனடியைப் பூசை செய்து
பொருவிலவன் தரப்பெற்ற தென்னத் தேறிப்
பூசிப்பான் றுனுமுறப் பொருந்தி யேகி. 10

வைகலுறு முப்பொழுதுந் தனக்குத் தூய
வடிவருள்கா விரித்துறையின் மருவி மூழ்கிக்
கைகலந்த புனலினொடு நறுமென் போதும்
கருத்தில்வள ரன்பினொடு களிப்புங் கொண்டு
மைகலந்த தனிமிடற்று மருத வாணன்
மலரடியைப் பூசித்து வணங்கிப் போற்றப்
பைகலந்த வரவினொடு மதியஞ் சூடு
பரன்சிலநா ளணைந்திடுமு னெதிரே தோன்றி. 11

---

9. மணி - இரத்தினம். மாசு கழுவுற்ற - அழுக்கைப் போக்கிய. தொன்று இலகு - பழமையாகப் பொருந்திய. கண்டு உவகை. கொன்றை அறுகு.

10. குணபால் - கீழ்த்திசை. ஒருபதியை - ஓரிடத்தை. உறைபதியா - தங்குமிடமாக. திரு மருவு நிறத்தன் - இலக்குமி பொருந்தும் மார்பினை யுடைய திருமால்: நிறம் - மார்பு. பின் இரண்டடிகள் ''வண்டுளருந் தண் டுழாய் மாயோன் இறுமாப்பும்..'' என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளை நினைப்பிக்கின்றன. பொரு இல் - ஒப்பில்லாத. தேறி - தெளிந்து. பூசிப்பான் - பூசிக்கும்பொருட்டு.

11. தூயவடிவு - பரிசுத்தமான தன் பழைய வடிவம். புனல் - நீர். போது - மலரும்பருவத்தரும்பு. களிப்பு - மகிழ்ச்சி. மை கலந்த - கருமை பொருந்திய. பை கலந்த அரவு: பை - பாம்பின்படம்.

ஈண்டுறுமெய் யன்பினெடு நமைநீ பூசை
இயற்றியதான் மிகமகிழ்ந்தோ முனக்கு நம்பால்
வேண்டுவதென் னிசைத்தியெனப் பணிவுற் றம்மா
வெய்யதுரு வாசமுனி கொடுத்த சாபம்
மாண்டதெழிற் பொன்னியிடைப் படியு முன்னர்
மன்னிடுநின் னருளதனு லினியெந் நாளும்
காண்டலுட னின்மலர்த்தாள் பூசித் தீண்டே
கலந்திருக்க வருள்கவென வுரைத்த தேத்தி. 12

இன்னணமக் களிறுரைப்ப மருத வாணன்
இத்தலத்தின் நமையொருகா லருச்சித் தோர்கள்
மன்னுதனிச் சிவலோக மெய்து வார்கள்
வச்சிரத்தோ னமதிடத்தி லன்ப னுகும்
அன்னவன்பால் சென்றிருநீ சின்னுள் பின்னர்
அணிமருவு சிவபுரியி னடைய லாகும்
என்னவுரைத் தானதுமா றுரைப்ப வஞ்சி
இமையோர்கள் போற்றவிண்ணு டுற்ற தன்றே. 13

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நினைவரிய புகழ்விக்கி நேசுரதீர்த் தத்துறைமுன் னிலவு நாற்கோட்(டு)
அணையகளி றுடுதிறத் தாலயிரா வதத்துறையென் றறையு நாமம்
புனைதரலுற் றிட்டதஃ துறைபதியு மதன்பெயராற் பொலிந்த தம்ம
இனியினிய நெடுஞ்சீர்த்தி வீரசேனன் கதையினையீண் டெடுத்துச்
சொல்வாம். 14

*ஐராவததீர்த்தச்சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 880

---

12. இசைத்தி - சொல்லுவாய். சாபம் மாண்டது. காண்டலுடன் - தரிசனம் செய்வதுடன். பூசித்து - பூசைசெய்து. உரைத்தது ஏத்தி.

13. இன்னணம் அ களிறு. ஒருகால் - ஒருமுறை. வச்சிரத்தோன் - இந்திரன். சென்று இரு நீ. அது மாறு உரைப்ப: மாறு - எதிராக.

14. அயிராவதம் - இந்திரன் யானை; நான்கு தந்தங்களையுடையது. சீர்த்தி - மிகுபுகழ்.

முப்பத்தேழாவது

# வீரசேனச் சருக்கம்

[தாமிரபரணி நதிக்கரையிலேயுள்ள தென்னாட்டிலே ஒரு வளநகரம் உண்டு. அது சந்திரனைச் சூழ்ந்து விளங்கும் வட்டம்போல அகழியால் சூழப்பெற்றது. அந்நகரில் வீரசேனன் என்னும் மன்னன் ஒருவன் ஆட்சி புரிந்தான். அவன் செங்கோலரசன்; பகைவரை அஞ்சாதவன். அவ்வரசன் ஒருநாள் வேட்டையின் பொருட்டுக் காட்டை அடைந்தான். பல விலங்குகளையும் வேட்டையாடினான் அவன். வேட்டையாடும் வேடிக்கையைக் காண ஒரு வேதியன் அங்கே வந்தான். மேகம் மழை பொழிவது போல் அம்புமழையைப் பொழிந்தான் அரசன். அவ்வம்பிலொன்று ஒரு பன்றியின் வயிற்றில்பட்டு ஊடுருவி, பக்கத்தில் மறைந்திருந்து வேடிக்கை பார்த்த மறையவன்மேல் பாய்ந்தது. அவனும் உயிர் நீத்தான். அரசன் அதனைக்கண்டு உள்ளம் நடுங்கினான்; உடல் நடுங்கினான்; பதறினான்; விரைந்து ஓடினான்; இறந்த மறையோனைக் கண்டான்; உடல்சோர்ந்தான்; விழிநீர் பெருக்கினான்; இவன் மறைந்திருந்ததை நான் அறியாமல் அம்பு எய்தேனே! தெய்வமே!! என்செய்வேன்!!! என்று சொல்லிக் கதறிப் புலம்பினான்.

இவ்வாறாக, அவன் எதிரே 'பிரமக் கொலைப்பாவம்' கரிய உருவும், வளைந்த கூரிய வெண்பற்களும், செம்பட்டைமயிரும், இடிபோன்ற குரலும், ஓங்கிய இருப்புலக்கையுடன் கூடிய கையும் உடையதாய்த் தோன்றிப் பழிக்குப்பழி வாங்குவேன் என அவனைப் பற்றியது. அவ்வடிவத்தைக் கண்ட அரசன் பெரிதும் அஞ்சினான்; கண்களை மூடிக்கொண்டான்; ஏங்கினான்; மனங்கலங்கினான்; உடலமும் நடுங்கினான்; கண்களைத் திறந்து பார்த்தான். எந்தப்பக்கம் திரும்பினாலும் அவ்வுரு உலக்கையை ஓங்கிய கையுடன் நிற்றலையே கண்டான். கள்ளைக்குடித்த பைத்தியன் போலாகி விட்டான் காவலன். அரசன் நிலையைக்கண்ட பெரியோர் புண்ணிய தலங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள புண்ணிய தீர்த்தங்களிலே மூழ்கினாலன்றித் தீராது எனக் கூறினர். அதனைக் கேட்ட அமைச்சர் முதலாயினோர் அரசனைச் சிவிகையில் ஏற்றிச் சுற்றிலும் நல்ல பாதுகாப்புடன் புண்ணியத் தலங்கள் பலவற்றினும் சென்று தீர்த்தங்களில் மூழ்கும்படி செய்வாராயினர்.

அவ்வாறே சோழநாட்டைச் சேர்ந்தனர். திருவிடைமருதூர் என்னும் தலத்தை அடைந்து காவிரிநதியிலுள்ள பூசத்துறையிலே நீராடச் செய்வித்தனர். அரசனும் அந்தத் தீர்த்தத்தில் முழுகியெழுந்தான். அப்பழி அரசனை நீங்கிக் கரிய மலையொன்று எதிரிலே நின்றாற்போலக் காட்சி அளித்தது. தன்மேலேற்றிய பெருஞ்சுமை நீங்கப் பெற்றவனைப் போல அரசன் விளங்கினான். யாவரும் வியப்பெய்தினர். அப்பிரம பாவத்தைப் பார்த்திபன் நோக்கி 'உலகத்திலே இத்தலத்தையொத்தது ஓர் தலமும், பூசநீர்த்துறையை ஒத்ததோர் தீர்த்தமும் இல்லை என்பதை யாவரும் அறியச்செய்து எனக்கும் தெளிவித்தாய்; உனக்கு யான் செய்யக்கூடிய கைம்மாறு யாது? நீயும் என்னுடன் இத்தலத்தை அடைந்தாய்; வருக' என்றழைத்துக்கொண்டு மருதவாணரைப் பணிய ஆலயத்தினுள் புகுந்தான். அரசன் உள்ளே செல்லலும் வாயிலிற் காவல்புரியும் கணநிதிபர்கள் பிரமகத்தியை உள்ளே செல்லவொட்டாமல் தடைசெய்தனர். அப்பழி தியங்கி வாயிலின் வெளியே நின்றது.

உமையம்மையாருடன் சிவபெருமான் கயிலாயமாகிய மருதமரத்தின் கீழ், பெருநலமாமுலை அம்மையுடன்கூடிய சோதிர் மகாலிங்கமாய் விளங்குதலைக் கண்டான் அரசன். அன்புமீதூர வணங்கினான்; வாயார வாழ்த்தினான்; கைகளை உச்சிமேல் குவித்தான்; நெஞ்சம் நெக்குருகக் கண்களினின்று ஆனந்தபாஷ்பம் சொரிந்தான். அரசன் இத்தலத்தைவிட்டு நீங்க மனமில்லாதவனாயினான். ஆயுட்காலம் முடியுமளவும் இத்தலத்திலேயே தங்கியிருந்து மகாலிங்கேசரை வணங்குவேன் என உறுதிபூண்டான். சோழமன்னனுடன் நட்புடையனாய்ப் பலநாட்கள் இத்தலத்தில் வசித்துச் சிவதரிசனம்செய்து சிவபெருமான் அருளைப்பெற்றான். பின்பு கைலையைச் சார்ந்து இன்புற்றான்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மலைய முருசந் தெழிற்கோடு மலையு மதவா ரணக்கோடு
நிலைகொள் கடலின் பெருவயிறு நிறையத் தூர்க்குந் தண்பொருநை
இலகு கரைமேற் பரிவேட மினிது சூழ வொளிருமதி
வலைய மென்னத் திரையகழி சூழ வுறுமோர் வளம்பதியே. 1

---

1. மலையம் - பொதியில்மலை. சந்து எழில் கோடு - சந்தனமரங்களின் அழகிய கிளைகள். மலையும் - போர்செய்யும். மதவாரணக்கோடு - மத யானைகளின் தந்தங்கள். பொருநை - தாமிரபரணியாறு. பரிவேடம் - ஊர்கோள்; அது சூரிய சந்திரர்களைச்சுற்றி மண்டலமாக இருக்கும் கோடு.

பார முறுமவ் வளம்பதிவீற் றிருந்து முறையிற் பார்புரப்போன்
கூர்மை தோன்றி யெழில்தழைத்து மதுகை மலர்ந்து கோபங்காய்த்(து)
ஆருங் கொடிய கொலைபழுத்திட் டிலகு நெடுவே லங்கையினன்
வீர சேன னெனும்பெயரா னொருவன் கணைவில் வேளெழிலான். 2

அன்னா னொருநா ளடவிபுகுந் தடல்வெஞ் சேனை தன்னோடும்
செந்நாய் கவரி புலிகரடி திரிகோட் டிரலை மரைகளிறு
முன்னா மிருகம் பலநாடி முடுகி வேட்டஞ் செயுங்காலை
மன்னான் மறையோன் வேட்டைவியப் பறிவா னொருவன் மருங்குற்றான். 3

வருணா னெனவே குடதிசைநாட் டரசன் வண்கார் முகம்வளைத்திட்(டு)
உரைசெய் யம்பின் றாரைமிக வுய்க்குங் காலை யொருவாளி
பொருவில் விலங்கா மொருகேழல் வயிற்றுட் புகுந்து புறத்துருவி
அருகு விலங்கா மறையவன்மேற் பட்ட தவனும் பட்டானால். 4

---

சந்திரனிடத்து உண்டாகும் ஊர்கோள் நன்மையைத் தருவது எனவும், சூரியனிடத்து உண்டாகும் ஊர்கோள் தீமையைத் தெரிவிக்கின்ற உற்பாதமாம் எனவும் நூல்கள் கூறும்: இதனை ''மேகங்கள் வழங்காமல் விண்ணதிர்ந்திட் டூர்கோளும் வெயிலைச் சூழ்ந்து, பூகம்பம் பிறந்துடுவும் அரும்பகலே விழுந்துடனே பொய்கை வாடி, யாகஞ்செய் நெடுஞ்சாலையின்பாலும் செந்நீரா யிருந்த வேந்தர், ஆகங்க ளொளிமழுங்கிற் றவிதாவென் றணங்கனையா ளழுத போதே'' (வில்லி - சபா: சூதுபோர் - 259) என்ற பாடலிற்காண்க. மதி வலையம் - சந்திரனிடத்துத் தோன்றும் வட்டம். திரை அகழி - அலைகளையுடைய நீர்நிறைந்த அகழி.

2. பாரம் - சுமை; பெருமை எனினுமாம். முறையில் - நீதியோடு. பார் - பூமி. புரத்தல் - பாதுகாத்தல். மதுகை - வலிமை. ஆரும் - பொருந்தும். தோன்றித் தழைத்து மலர்ந்து காய்த்துப் பழுத்திட்டு இலகும்வேல் என்க. கூர்மையை முனையாகவும், எழிலைத் தழையாகவும், மதுகையை மலராகவும், கோபத்தைக் காயாகவும், கொலையைப் பழமாகவும் உருவகம் செய்தார். எழில் - அழகு. வேல் - வேற்படை. கணை வில் - அம்புகளுடன் கூடிய வில்: அம்பு மலர், வில் கரும்பு என்க. வேள் - மன்மதன். திருவிடை மருதூர் மும்மணிக்கோவை: 10-ஆம் பாடலை இத்துடன் ஒப்பிடுக.

3. அடவி - காடு. அடல் - வலிமை. திரி கோட்டு இரலை - முறுக்கிய கொம்புகளையுடைய மான். முன்னா - முதலாக. முடுகி - விரைந்து, மன் நான்மறையோன். அறிவான் - அறியும்பொருட்டு. மருங்கு - பக்கத்தில்.

4. குடதிசை - மேற்குத்திக்கு. கார்முகம் - வில். அம்பின் தாரை - அம்பின் ஒழுங்கு. வாளி - அம்பு. பொரு இல் - ஒப்பில்லாத. கேழல் - பன்றி. விலங்கு ஆம் ஒரு கேழல். விலங்கா மறையவன். விலங்கா - விலகாத: ஈறு கெட்டது. பட்டான் - இறந்தான்.

வேந்த னதுகண் டுளநடுங்கி விரைவி னெய்தி யருமறையோன்
சோர்ந்து கிடத்தல் கண்டுடலஞ் சோர்ந்து விழிநீர் சோர்ந்திடநின்(று)
ஆர்ந்த விலங்கின் குழுமறைவி லனையா னின்ற தறியாமே
கூர்ந்த கணைவிட் டிவன்றன்னைக் கொன்றே னந்தோ வென்செய்தேன். 5

என்ன விரங்குற் றிடுங்காலை யெதிரே பிரம கத்திதனி
மன்னுங் கரிய பெருவடிவும் வளைவெள் ளெயிறுஞ் செம்மயிரும்
உன்னுங் கொடிய குரலுமிருப் புலக்கை யோங்கு நெடுங்கரமும்
துன்ன வணைந்து பழிதருதி யென்ற தரசன் தோள்பற்றி. 6

கலிநிலைத்துறை

என்ற போதிறை யேங்கின னிலகுமெத் திசையும்
நின்றி டவ்வுரு நோக்கின னீடுகண் முகிழ்த்தான்
துன்று பேய்பிடித் திட்டிடுன் மத்தர்கள் சுவைக்கள்
மன்ற லம்பருந் தினரென விளங்கினன் மாதோ. 7

ஏங்கி மன்னவன் சிலபக லுழன்றிடு மேல்வை
பாங்க ருற்றிடு குரவரும் பனவரும் பாராத்
தாங்கு மிவ்வினை புண்ணிய தீர்த்தங்கள் சாரின்
நீங்கு மன்றிமற் றெவற்றினு நீங்கரி தென்ன. 8

---

5. வேந்தன் - அரசனாகிய வீரசேனன். மூன்றுமடி சொற்பொருட் பின்வருநிலையணி. கண்டு உடலம். கூர்ந்த - கூர்மைபொருந்திய. கணை - அம்பு. அந்தோ - ஐயோ: இரக்கக் குறிப்புணர்த்தும் ஓர் இடைச்சொல். என் செய்தேன் - என்ன காரியம் செய்தேன்.

6. பிரமகத்தியின் வடிவம் கூறுதல் காண்க. எயிறு - பற்கள். துன்ன - பொருந்த. பழிதருதி - பழிக்குப்பழி கொடுப்பாய். இந்திரன் பழிதீர்த்த படலம் 59 ஆம் பாடல் நோக்கிப் பிரமச்சாயையின் இயல்பறிக.

7. இறை - வீரசேனன். அவ்வுரு - பிரமச்சாயை. முகிழ்த்தான் - மூடிக்கொண்டான். பைத்தியம் பிடித்தோரைப் பேயும் பிடிக்கக் கள்ளும் அருந்தினராயின் அவர் அடையும் நிலைபோல. உன்மத்தர் - பைத்தியம் பிடித்தோர். சுவை கள் மன்றல் அம்பு அருந்தினர் என. கள் அம்பு, மன்றல் அம்பு எனக்கூட்டுக. மன்றல் - வாசனை. கள் அம்பு-கள்ளாகிய நீர்.

8. மன்னவன் - வீரசேனன். உழன்றிடும் ஏல்வை - வருந்தும் சமயத்தில்: ஏல்வை - பொழுது. பனவர் - பிராமணர். சாரின் - பொருந்த லுற்றால். சாரின் நீங்கும் அன்றி. நீங்க அரிது: அகரவீறு தொகுத்தல்.

பார்த்தி பன்றனைச் சிவிகையிற் பரிவொடுங் கொண்டு
சூர்த்த வாட்படைப் படைசில சூழுற வெய்திக்
கூர்த்த புண்ணியத் தலங்கள்சென் றவற்றிடைக் குலவு
தீர்த்த மானவை மூழ்குவித் திங்ஙனஞ் செல்வார். 9

நலங்கொள் செம்பிய னுடனா ந் தன்னதி னுப்பண்
இலங்கு பேரிடை மருதெனு மெழிற்பதி மேவித்
துலங்கு காவிரிப் பூசநீர்த் துறையிடை விடுத்தார்
அலங்கல் வேலினு னொல்லைசென் ருடின னந்நீர். 10

முழுகி மேனிமிர் ந் திடுதலு மூழ்கின மூரிப்
பழவி னைக்குலம் பனவனைப் படுத்திய பழிமற்(று)
எழுத லுற்றொரு கருவரை யெனவெதிர் நின்ற(து)
எழில்கொள் பூந்தொடை யவன்சுமை யெறிந்தவ னெத்தான். 11

காவன் மன்னவ னேடிமுன் பணிந்தது காணு
யாவ ரும்வியப் பெய்துழிக் கொடும்பழி யெழுந்து
தாவி யோர்புறஞ் சென்றதூஉந் தார்பதி தெளிவும்
மேவ னேக்கினர் மிகுமகிழ் வெய்தினர் மேலும். 12

வைய கத்தினித் தலநிகர் வளந்திகழ் தலனும்
துய்ய பூசநீர்த் துறைநிகர் துறையும்வே றிலையென்(று)
உய்ய யாவருந் தெளிந்தென்க ணறிவித்த வுனக்குச்
செய்வ தென்னநான் நீயுமித் தலத்திடைச் சேர்ந்தாய். 13

---

9. பார்த்திபன் - அரசன். பரிவொடும் - இரக்கத்தோடும். சூர்த்த - அஞ்சத்தக்க. வாட்படைப்படை - வாளாயுதத்தையேந்திய படைகள்: படை - ஆயுதம், சேனை. கூர்த்த - மிக்க: மேம்பட்ட என்றபடி. குலவு - விளங்குகின்ற.

10. செம்பியன்நாடு - சோழநாடு. நாப்பண் - நடுவிடம். காவிரிநதியின்கண் உள்ள பூசநீர்த்துறை. அலங்கல் - மாலை. ஒல்லை - விரைவிலே.

11. மேல் நிமிர்ந்திடுதலும். மூரி - வலியமைந்த. பழவினைக்குலம் - பழைய வினைக்கூட்டம்: சஞ்சிதவினை. படுத்திய - கொன்ற. கரு வரை என - கரிய மலை என்னும்படி, பூந்தொடையவன் - மலர்மாலையை அணிந்தவனாகிய வீரசேனன்.

12. தார் பதி - மாலையை அணிந்த மன்னன். மேவல்-பொருந்துதல்.

13. வையகத்தின் - நிலவுலகத்தில். தெளிந்து என் கண் அறிவித்த.

வருதி யாலென வுரைத்தன னுலய மருவி
மருத வாணனைப் பணியவுள் புகுந்தனன் வாட்கைத்
திருகு வெஞ்சினக் கணுதிபர் தடைகொடு தியங்கி
விரவு மப்பழி நின்றது வாயிலின் வெளியே. 14

அன்ன மென்னடைப் பணைமுலே யம்பிகை யகத்து
முன்னு மத்திறஞ் சோதியா யெழுந்தருண் மூர்த்தி
தன்னை நீள்பெருங் கயிலையாந் தனிமரு தோர்பால்
மன்னு தாணுவைக் கண்டெதிர் மன்னவன் பணிந்து. 15

அகில காரண நிற்குண நிராமய வமல
தகுநி ரஞ்சன நித்திய தற்பரா னந்த
சகள நிட்கள சங்கர சதாசிவ மருத
மிகுநி ழற்கண்வீற் றிருந்தருள் வித்தக சரணம். 16

தரணி மீதுணர் விலாதுசெய் கொடும்பவந் தன்னுல்
நரகெ லாமுழன் றிடத்தகு நாயினேன் தன்மேல்
கருணை வைத்துநின் னடிமையாக் கியபெருங் கடவுள்
மருத நாயக பணைமுலை மணுளனே சரணம். 17

---

14. வாட்கையினையும் சினத்தையும் உடைய கணுதிபர். தியங்கி - தியக்கத்தை அடைந்து; மறுகி என்றபடி.

15. அம்பிகை - பெருநலமுலையம்மையார். தாணு - சிவபெருமான்: மருதவாணர்.

16. அகிலகாரணன் - எவற்றிற்கும் காரணராயுள்ளார். நிர்க்குணன் - மாயா குணங்களில்லாதவர்: அருட்குணமுடையார். நிராமயன் என்பது அருட்டிருமேனி வாய்ந்தவரென்பதாம். அமலன் என்பது அநாதி மல முத்தர் என்பது தெரித்தவாறுயிற்று. நிரஞ்சனம் - குற்றமின்மை. நிரா மயம் - நோயின்மை. தற்பரானந்தம் - தனக்குத்தானே விளையும் பேரா னந்தம். நித்தியன் என்றதனுல் முதல்வனுனவன் க்ஷணிகன் என்னும் புத்தன் முதலியோரை மறுக்கப்பட்டது; க்ஷணிகமாயிருப்பவன் பிரபஞ்ச கிருத்தியம் நடத்தல் கூடாமையின் என்க. சகளம் - உருவம். நிட்களம் - உருவமின்மை. சங்கரன் - சுகத்தைச் செய்பவன். வித்தகன் - சதுரப்பாடு உடையவன்.

17. தரணி - பூமி. உணர்வு இலாது. நரகு எலாம் உழன்றிட. பெருங் கடவுள்: அண்மைவிளி. பணைமுலை - பெருநலமுலையம்மை: அன்மொழித் தொகை.

என்று நெஞ்சநெக் குருகிட விருகையுந் தலைமேல்
துன்று மஞ்சலி முகிழ்த்திட விழிகணீர் சொரியக்
குன்று ருதவன் புருவமாய் மொழிகளங் குழற
நின்று பற்பல துதித்தனன் களித்தன னீடு. 18

பின்னு மித்தலத் திவ்வுட லளவுநாள் பிறைகொள்
மன்னு வார்சடைப் பரமனை வணங்குவே னிருந்தென்(று)
உன்னி நேரிய ஞெடுமகிழ் துறைந்துபன் னாட்பின்
வன்னி சூடிதன் னருள்கொடு மருவினன் கயிலை. 19

விர சேனனென் றிசைபெறு பெருந்திறல் வேந்தன்
கோர மாகிய பழிதொலைத் தரனருள் கூரும்
தார நீடெழிற் றனிவரை சார்ந்தமை யுரைத்தேம்
பார சித்திர கீர்த்திதன் காதைமேற் பகர்வாம். 20

விரசேனச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 900

---

18. நெக்கு உருகிட. முகிழ்த்திட - கூப்ப. குன்றுருத அன்பு உருவமாய்; குன்றுருத - குறையாத, மொழி களம்; உம்மைத்தொகை: மொழியும் கண்டமும் என்க.

19. இவ்வுடலளவும் - இவ்வுடம்பு உள்ளளவும். நேரியஞெடு - சோழனோடு. வன்னி - வன்னியிலை.

20. இசை - கீர்த்தி. தாரம் நீடு எழில் தனிவரை - கயிலாயமலை. தாரம் நீடு - வெள்ளி மிக்க. பாரம் - பெருமை.

## முப்பத்தெட்டாவது
# சித்திரகீர்த்திச் சருக்கம்

[சித்திரகீர்த்தி என்பவன் பாண்டியநாட்டரசன். அவன் மதுரைப் பதியில் வாழ்வோன். மன்மதனை வெல்லும் கட்டழகுடையான். அவன் ஒருநாள் தனியே நகரின் புறத்திலுள்ள பூஞ்சோலைக்குச் சென்று உலாவினன். அச்சோலையில் தோழிகள் சூழ்ந்துவர வரும் ஒரு பெண்மணியைக் கண்ணுற்றான். அரசன் அவளோடு பேசத்தொடங்கினான். தோழியருள் ஒருத்தி அரசனைப்பார்த்து அரசே! இவள் உன் சுற்றத்தாருள் இன்னார் மகள்; ஆகலின், அவரிடத்திலே சென்று மணம்பேசி இவளை மணம்புரிக என்றுரைத்தாள். மன்னனும் நல்லதெனச் சென்றான். மந்திரிமாரை அனுப்பி மணம் பேசினான்; விதிப்படி அவளை மணஞ்செய்துகொண்டான். அம்மனைவி சுகுணை என்பவள். எல்லா நலங்களும் நிறையப்பெற்றும் மைந்தரில்லாக் குறையொன்று அவள்மனத்தை வாட்டியது. அரசன் அம் மனைவியுடன் சாபாலமுனிவரை அடைந்து, வணங்கிக் குறையிரந்து நின்றனன். முனிவர் அரசனை நோக்கி 'அரசே! நீ முற்பிறப்பிலே ஒரு வணிகன். அப்பிறப்பிலும் இவளே உனக்கு மனைவியாக இருந்தாள். நீ சிவநிசி விரதத்தை மாதந்தோறும் அநுட்டித்தாய். அச்சிவபுண்ணியத்தால் நீ அரசன் ஆயினை. நீ புத்திரப்பேற்றை விரும்பினால் இடைமருது என்னும் தலத்தை அடைக. காவிரித் துறையிலும் காருண்ணியாமிர்த தீர்த்தத்திலும் விதிப்படி நீராடுக. மருதவனப்பெருமானை வணங்கிப் போற்றுக. உன் பாவமெல்லாம் கழியும். புத்திரப்பேறும் உண்டாம். மந்திரங்களினுள்ளே அஞ்செழுத்தே சிறந்தது, சாத்திரங்களில் வேதமே சிறந்தது, தெய்வங்களிலே சிவபரம்பொருளே சிறந்தது, தலங்களினுள்ளே திருவிடைமருதூரே சிறந்ததாம். ஆகலின், இடைமருதை அடைந்து மூர்த்தி தலம் தீர்த்தம் முதலியவைகளை முறைப்படி தரிசித்தும் வசித்தும் படிந்தும் இருப்பாயாக. பங்குனி மாதத்திலே மருதவனத்திறைவருக்குச் சிறப்புடன் திருவிழா நடாத்துக' என்று கட்டளையிட்டார்.

முனிவரிட்ட கட்டளையின்படி அரசனும் மனைவியுடன் திருவிடைமருதூரை அடைந்தான், விதிப்படி நீராடினான், சோதிர்மகாலிங்கசுவாமியை முப்போதும் எப்போதும் வழிபட்டான், அத்தலத்திலே சிலகாலம் தங்கியிருந்தான். பெருநலமாமுலையம்மை சமேதராகிய மகாலிங்கமூர்த்தியின்

திருவருளால் சுகுணை வயிறுவாய்த்துச் சுபநாளிலே ஒரு நன்மகவைப் பெற்றுள். அரசன் மனமிக மகிழ்ந்து அந்தணர்கட்குப் பொன்மாரி பொழிந் தான். மகாலிங்கேசருக்கும் மிகுதியாகப் பொருள்களை அளித்தான். அப்புத்திரனுக்குச் சித்திரத்துவசன் என்னும் பெயரிட்டான். பங்குனித் திங்களில் திருவிழா நடாத்துவித்தான். மனைவியுடனும் புத்திரனுடனும் மன்னன் மதுரைமாநகரை அடைந்தான்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

முத்தமிழ் மணக்குங் கூடன் முதுபதி யிடத்தில் வாழ்வோன்
கொத்துறு வேம்பின் கண்ணி குலவுறு குவவுத் தோளான்
சித்திர கீர்த்தி யென்னத் தெரிக்குமோர் தென்ன னேரின்
நித்திலஞ் சொரிவில் வேளை நேருமெய்க் கல்வி மிக்கான். 1

இன்னவ னகரின் பாங்கோ ரெழிலுறு மலர்ப்பூஞ் சோலை
தன்னிடை யொருநா ளெய்தித் தனிமையி னுலாவுங் காலை
மன்னுறு தோழி மார்பின் வந்திட முந்து மேவித்
துன்னலர் பறித்திட் டாண்டோர் துடியிடை மயிலைக் கண்டான். 2

கண்டிவ ளனங்கன் வாழ்வோ கமலமெல் லியலோ வன்றி
அண்டர்கட் கின்ப நல்கு மரம்பையோ சசியோ விந்த
மண்டலத் தணங்கோ வென்ன மனத்திஞே ரைய முற்றுன்
கொண்டிடு மிமைப்பு நோக்கிக் குறிக்குமவ் வையந் தீர்ந்தான். 3

---

1. முத்தமிழ் - இயலிசை நாடகங்கள். கூடல் - நான்மாடக் கூடலா கிய மதுராபுரி. வேம்பின் கண்ணி - வேப்பமலர் மாலை. குவவு - திரண்ட. தெரிக்கும்: விவ்விகுதி தொக்கது. தென்னன் - பாண்டியன். நேர் இல் - ஒப்பில்லாத. நித்திலம் சொரி வில் - கரும்பு வில்; நித்திலம் - முத்து. முத்துப் பிறக்குமிடங்கள் இருபதில் கரும்பும் ஒன்று. இதனை ''தந்தி வராகம் மருப்பு இப்பி'' என்னும் பாடலால் அறிக. வேள் - மன்மதன்.

2. தோழிமார் பின் வந்திட. துடியிடை - உடுக்கைபோலும் இடை யினையுடைய. மயில் - மயில்போலும் சாயலினையுடைய பெண்: உருவகம். துன் அலர் பறித்திட்டு. இப்பாடல் காட்சி என்னும் துறை.

3. அனங்கன் - மன்மதன். வாழ்வு - வாழ்க்கைக்குக் காரணமாகிய இரதிதேவி. கமலமெல்லியல் - திருமகள். அண்டர் - தேவர். அரம்பை - தெய்வமகளிர். சசி - இந்திராணி. இந்த மண் தலம். அணங்கு - பெண். இமைப்பு - கண்ணிமைத்தல். இப்பாடலில் ஐயமும் தெளிவும் கூறப் பட்டன.

அன்னவள் சிறப்பு நோக்கி யகத்துறு வேட்கை நோக்கித்
துன்னுநம் மகத்த வாவுஞ் சொற்றுமிங் கிவட்கென் றெய்திப்
பின்னர்நின் றணங்கென் னெஞ்சம் பேதுறத் ததைத்த தந்தக்
கன்னல்வே ளம்போ வுன்றன் கண்ணம்போ பார்த்தி டென்றான். 4

என்னை நீ தனியே நிற்ற லிகுளையர் வரவு பார்த்தோ
மன்னுமென் வரவு பார்த்தோ வாய்மலர்ந் தருள்க வென்று
முன்னிலை யாக்க வெண்ணி மொழிந்தனன் மொழியு முன்னர்
அன்னமென் னடைப்பூங் கோதைப் பாங்கிய ரணுக வந்தார். 5

அன்னவர் தமிலோர் பாவை யரசனை நோக்கி யைய
இன்னளுன் கிளைஞர் தம்மு ளின்னவர் புதல்வி யன்றோ
மன்னவ ரிடத்திற் பேசி மணம்புரிந் தினைய ளின்பம்
துன்னுக முறையி னென்றாள் சொல்லிய திசைவென் றுற்றான். 6

கதுமென விருக்கை யெய்திக் காதன்மந் திரிகட் கோதி
முதுவரக் கிளைஞர்க் கோத மொழிதரு மனைய ரந்த
மதுமலர்க் கோதை மின்னை மனமகிழ்ந் தினிது நல்கப்
புதுமணம் புரிந்து கூடிப் புகலுறு மின்ப மார்ந்தான். 7

தறைபுக ழனைய மாதின் றன்பெயர் சுகுணை யன்னாள்
பொறையினிற் புகல்பூ மாதும் பொற்பினிற் பூவின் மாதும்
உறழ்பவ ளவர்க ளாவி யொன்றுட லிரண்டின் வாழ்நாள்
அறமிகப் புரிந்து மைந்தர்ப் பேறிலா தலக்க ணுற்றார். 8

---

4. அகத்து உறு வேட்கை - மனத்தில் பொருந்திய விருப்பம். அகத்து அவாவும். சொற்றும்-சொல்லுவோம். இதுவரை குறிப்பறிதல். அணங்கு: அண்மை விளி. பேதுற - மயங்க. கன்னல்வேள் அம்போ - மன்மதனுடைய பாணமோ: கன்னல் - கரும்பு. கண் அம்போ - கண்களாகிய அம்போ: பண்புத்தொகை. இரந்து பின்னிலை நிற்றல்.

5. இகுளையர் - தோழிகள். முன்னிலையாக்கல். அன்னம் மெல்நடைப் பாங்கியர். பூங்கோதைப் பாங்கியர் - பூமாலை போலும் பாங்கியர்.

6. பாவை - சித்திரப்பிரதிமை போன்ற தோழி. இன்னள் - இங்கே நிற்பவள். இசைவு என்று உற்றான்.

7. கதும் என - விரைவாக. காதலை ஓதி என்க. முதுவர் அ கிளைஞர்க்கு ஓத. மது மலர் - தேன்பொருந்திய மலர்.

8. பொறை - பொறுமை. பூ மாது - நிலமகள். பொற்பு - அழகு. பூவின்மாது - செந்தாமரையில்வசிக்கும் திருமகள். உறழ்பவள் - ஒத்தவள்.

றனிபகல் வருந்திப் பின்னர் நரபதி மதலை யெந்தத்
துனிதரு வினையா லின்றே தொழுதுமுப் பொழுது மோர்ந்த
முனிவரை வினுது மென்ன மொய்குழ லணங்கி னேடும்
தனிமுத லடியுட் கொண்ட சாபாலி யிடத்திற் சென்றான். 9

சென்றடி பணிந்து கையிற் செய்யவாய் புதைத்து முன்னர்
நின்றனர் கருணை கூர்ந்து நெடியபொன் மேரு விற்கொண்(டு)
ஒன்றில ரிருக்கு மூன்றூ ரிருந்தழ லொருங்கு கூட
வென்றவன் றன்னை முன்னி மேலவ னினிது கூறும். 10

மன்னமுற் பவத்தி னீயோர் வணிகனின் றனக்கப் போதும்
இன்னளே யுரிய காந்தை யினையள்பூ மடந்தை யானாள்
அன்னதாங் குணர்ந்து நீமா லாகிமற் றணைந்தின் புற்றாய்
துன்னுமப் பவத்தி னாலே தோன்றலிப் பவத்தி னில்லை. 11

திங்கடோ றினிது மேவுஞ் சிவநிசி விரதம் நோற்றாய்
பொங்குமத் தவத்தி னாலே புரவல னாகி வாழ்தி
இங்கென திடத்தி னீவி ரெய்திய திதற்கு நும்பால்
தங்கிடு துயரந் தன்னைத் தகர்த்தனுப் புவன்கே ளீது. 12

---

அவர்கள் ஆவி ஒன்று உடல் இரண்டு: ஆவி - உயிர். மைந்தர்ப்பேறு - புத்திரப்பேறு. அலக்கண் துன்பம்.

9. நரபதி - அரசன்; சித்திரகீர்த்தி. மதலை - குழந்தை. துனிதரு வினையால் - துன்பத்தைத் தரும் தீவினையால். முப்பொழுதும் ஓர்ந்த - திரிகாலங்களையும் தமது அறிவினால் நுனித்துணர்ந்த. வினுதும் - வினவுவோம். மொய் குழல் அணங்கு - சுகுணை என்னும் மனைவி. தனிமுதல் - ஒப்பற்ற முழுமுதற்கடவுள். சாபாலி - சாபாலி என்னும் முனிவர்.

10. மேரு வில் - மேருமலையாகிய வில். ஒன்றிலர் - பகைவர். மூன்றூர் - திரிபுரம். இரும் தழல். வென்றவன் - சிவபெருமான். முன்னி - தியானித்து. மேலவன் - முற்கூறிய சாபாலமுனிவர். ஒன்று மூன்று எண்ணலங்காரம்.

11. நீ ஓர் வணிகன். நின் தனக்கு அப்போது. காந்தை - மனைவி. பூ மடந்தை ஆனாள் - அம்மடந்தை பூப்புடையளாயினள். அது உணர்ந்தும் - அவள் பூப்புடையள் என்பதை அறிந்து வைத்தும்: உம்மை இழிவு சிறப்பும்மை. இனையள் பூ மடந்தை ஆனாள், நீ மாலாகி இன்புற்றாய் என்றது ஒரு நயம். மால் ஆகி - மயக்கமுற்று: அப்போதும் இன்னளே உரிய காந்தை.

12. திங்கள் தோறும் - மாதந்தோறும். சிவநிசி - சிவராத்திரி. புரவலன் - அரசன். தகர்த்து - பொடியாகச் செய்து.

இலங்குமந் திரங்க டம்மி லிசைக்குமஞ் செழுத்தும் நீடு
நலந்தரு நூல்க டம்மி னவின்றிடு மறையு மெண்ணும்
பலந்தரு தேவர் தம்மிற் பரமனு மதிக மென்னத்
தலங்களி லதிக மாகுந் தனியிடை மருது மன்னே. 13

மின்னிடை யிவடன் னேடும் விளங்கிடை மருதி னெய்திப்
பொன்னியல் வாவி பொன்னி புகழுமை கருணை வாரி
இன்னவை படிவுற் றீச னெழிற்பதம் வணங்கிப் போற்றின்
துன்னுறு பவமு நீங்குந் தோன்றலும் விரைவில் தோன்றும். 14

அங்கதன் பின்னர் மீனத் தாதவன் புணரு நாளில்
திங்கள்சூ டிறைக்கு நீடு திருவிழாப் புரிதி யென்ருன்
செங்கதிர் வடிவேல் தென்னன் சென்றவன் விடைபெற் ருங்குத்
தங்குமத் தீர்த்த மெல்லாஞ் சார்ந்தனன் மகிழ்ந்து மூழ்கி. 15

பெருநல முலையா ளென்னப் பேசிடு வனிதை யோர்பால்
மருவுறு மிறையோன் செய்ய மலரடி வணங்கி யந்தத்
திருநக ரிடத்திற் சின்னுள் செலுத்தினன் செலுத்துங் காலைக்
கருநெடுங் கண்ணி னுளோர் காதலற் பெற்ருள் மன்னே. 16

அத்திற முணர்ந்த வேந்த னனந்த வெள்ளத் தூடு
மெய்த்தவர் புகழும் பொன்னி வெள்ளத்து மூழ்கி வேத
வித்தகர் தமக்கு மியார்க்கும் வெங்கன நயன மோங்கும்
மத்தகன் றனக்கு மம்ம வரையிலாப் பொருள்க ளீந்தான். 17

---

13. அஞ்செழுத்து - பஞ்சாக்கரமந்திரம். தனி இடை மருது: தனி - ஒப்பற்ற. மறை - வேதம். பரமன் - சிவபெருமான். அதிகம் - மேம்பாடுடையது.

14. மின்னிடை: அன்மொழித்தொகை. விளங்கு இடைமருதின். பொன் இயல் வாவி - கனக தீர்த்தம்: காக்கைக்குளம் என்பது அது. பொன்னி - காவிரி. உமை கருணை வாரி - காருணியாமிருத தீர்த்தம். படிவுற்று - முழுகி. ஈசன் - மகாலிங்கேசர். பவம் - பாவம். தோன்றல் - மகவு.

15. அங்கு அதன் பின்னர். மீனத்து ஆதவன் புணரும் நாள் - மீன ராசியில் சூரியன் சேருங்காலத்து: பங்குனி மாதத்தில். திங்கள் சூடு இறைக்கு - சிவபெருமானுக்கு. தென்னன் - சித்திரகீர்த்தி.

16. பெருநலமுலையாள் - இத்தலத்து வீற்றிருக்கும் உமாதேவியார் திருநாமம். காதலன் - புதல்வன்.

17. வேத வித்தகர் - வேதம்வல்ல பிராமணேத்தமர். வெம் கனல் நயனம் - கொடிய அக்கினிக்கண். மத்தகன் - நெற்றியையுடைய சிவபெருமான். வரை இலா - அளவுபடாத.

சித்திரத் துவச னென்னத் தெரிந்திடு நாம மந்தப்
புத்திரற் களித்தன் னுனும் புகழுறு மனையுஞ் சூழச்
சத்திர நிழற்றத் தானை ததைவுறக் கூடல் சார்ந்தான்
பத்திர முறவீ சர்க்குப் பங்குனி விழாவுஞ் செய்து. 18

கலிநிலைத்துறை

கைத்தி டுந்தொடைச் சித்திர கீர்த்திதன் காதை
இத்த கைத்தினித் திகழொரு மறையவ னெய்தி
அத்த லத்திறை தனைப்பணிந் தருள்கொடு விசுவா
மித்தி ரப்பெருங் குரிசிலா கியகதை விரிப்பாம். 19

சித்திரகீர்த்திச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 919

---

18. சித்திரத்துவசன் என்பது சித்திரகீர்த்தியின் புதல்வன். சத்திரம்-குடை. தானை ததைவு உற - சேனைகள் நெருங்கிச் செல்ல. பத்திரம் உற - ஜாக்கிரதையாக: குற்றமொன்றின்றிக் கண்ணும் கருத்துமாக இருந்து என்றபடி. இத்தலத்தில் பங்குனித் திருவிழாவும் உண்டெனத்தெரிகிறது.

19. கைத்திடும் தொடை - கசப்பினையுடைய வேப்பமலர் மாலை. இ தகைத்து - இத்தன்மையையுடையது.

முப்பத்தொன்பதாவது

# விசுவாமித்திரச் சருக்கம்

[துங்கபத்திரை என்னும் நதிதீரத்தில் 'சத்தகோடிசுராலயம்' என்பது ஓர் ஊர். அவ்வூரிலே அந்தணாளன் ஒருவன் தருமசிந்தனையும் சிவபெருமான் திருவடிப்பத்தியும் உடையவன். அவன், உதயகாலத்தின் முன்பு நித்திரைவிட்டெழுந்து நீராடித் திருநீறணிந்து, பூசனைக்குரிய மலர்வகைகளைக் கொய்துவந்து, வில்வமுதலியவற்றையும் கலந்து சிவபெருமானைப் பூசித்துவரும் நியமமுடையவன். சிவபூசைசெய்வோர் உலர்ந்தமலர், சிலந்திநூல், குறைந்த இதழ், சுருங்கல், வாடல், மயிர்ச்சிக்கல், புழுக்கடிமுதலியன இன்றி நன்ருக ஆராய்ந்து வைத்துச் சாத்தாராயின் குருடராவர். பூசனைக்குரிய ஏனைய உபகரணங்களையும் நன்கு சோதித்தல் வேண்டும். குற்றமுள்ளதாயின் அவற்றை அகற்றல் வேண்டும். இவ்வாறு விதி உளதாக, அவன் கவனமின்றி அவைகளைச் சோதிக்காமல் பூசைசெய்தான்.

ஒருநாள் சாத்திய மலரில் புழுவெட்டிய பூவும் இருந்தது. அக்குற்றத்தால் அவன் கண்ணின் பார்வையை இழந்தான்; உள்ளம் பதைத்து இரங்கினன்; இன்னதென உணர்ந்துகொள்ள இயலாதவனுனன்; தவத்தாலுயர்ந்த வசிட்டமுனிவரை அடுத்தான்; அவரிடம் இதனை விண்ணப்பித்தான்; காரணம் யாதென வினவினன். வசிட்டமுனிவர் அம்மையப்பரை மனத்தில் நன்கு தியானித்து அதனை உணர்ந்தார். 'அந்தணனே! பூசனைப் பொருள்களை நன்கு சோதியாமல் இறைவரைப் பூசித்தாய். பூவிலே ஒரு பழுதிருந்தது. ஆகலின் குருடனுய்த் துன்புறுகின்ருய். எனினும், வருந்தற்க. நீ விரைந்து சிவபெருமான் எழுந்தருளி விளங்கும் திருவிடைமருதூரை அடைக. கனகதீர்த்தத்திலே நீராடுக, இத்துன்பம் தவிரும், ஐயுருதே. அங்கே கோயில் கொண்டிருக்கும் மருதநாயகரைத் தரிசித்து வணங்கித் துதிப்பாயாக. வேண்டிய யாவையும் பெறுவாய்' எனக் கட்டளையிட்டருளினர். அந்தணன் வணங்கி விடைபெற்ருன். இடைமருதடைந்தான், கனகதீர்த்தத்திலே தோய்ந்தெழுந்தான், விழியொளிபெற்ருன், மகிழ்ந்தான், மகாலிங்கேசரை விதிப்படி வணங்கிப் பூசை செய்வித்தான். வரங்களைப்பெற்றுச் சென்ருன். சிலநாட்களில் இவ்வுடம்பை விட்டான். சிவனைப் பூசித்திருந்த புண்ணியப் பேற்ருல் அடுத்த பிறப்பிலே விசுவாமித்திர முனிவனுய்த் தோன்றினன், தவத்திலே சிறந்து விளங்கினன்.

தவப்பேற்றினல் பிரமன்படைப்புக்கு மாறுதலாகப் படைத்தல் தொழிலைச் செய்யவும் தொடங்கினன். இவையெல்லாம் சிவபெருமானைப் பூசித்துப் பெற்ற பேற்றினலன்றோ எனச் சூதமுனிவர் சொல்லியருளினர்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பரவுதெண் டிரைநீர்த் துங்க பத்திரா தீரந் தன்னில்
சுரர்புகழ்ச் சத்த கோடி சுராலய மென்ன வோரூர்
திருவள ரனைய வூரிற் றிகழுமோ ரந்த ணாளன்
தருமசிந் தனையு மீசன் றன்னடிக் கன்பு மிக்கான். 1

புலருமுன் னெழுந்து மூழ்கிப் புனிதநீ றணிந்து தும்பை
குலவுமல் லிகைவெண் முல்லை கோங்குமந் தாரை சாதி
நலனுறு நீல மாதி நால்வகை மலரும் வில்வம்
பொலிதுள வாதி யுங்கொண் டீசனைப் பூசிப் பானல். 2

காதலிற் பூசிப் போர்கள் கலந்திடு முலர்ந்த போது
கோதுறு சிலந்தி யெச்சங் குறையிதழ் சுருங்கல் வாடல்
ஓதிடு மயிர்ச்சிக் குண்ட லூறுபுழுக் கடிக ளாதி
சோதியா தருச்சிப் பாரேல் குருடராய்த் துலங்கு வார்கள். 3

பூசனைக் குரிய மற்றைப் பொருள்களு மினிது சோதித்(து)
ஆசுள தகற்றல் வேண்டு மனையவன் சோதி யாது
தேசுறு பூசை செய்தான் தெரித்திடு மலர்க டம்மில்
ஏசுறு புழுவெட் டுண்ட மலருமொன் றிருந்த தோர்நாள். 4

---

1. தெண் திரை நீர் - தெளிந்த அலைகளையுடைய நீர். துங்கபத்திரா தீரம் - துங்கபத்திரை என்னும் நதிக்கரை.

2. புலரும் முன் - விடியுமுன். புனித நீறு - பரிசுத்தமாகிய விபூதி. நால்வகை மலர் - கோட்டுப்பூ கொடிப்பூ (நிலப்பூ) புதர்ப்பூ நீர்ப்பூ என்பன. பூசனைக்குரிய பூக்களில் சில கூறினர்: இவ்வாறு பூக்கொய்ய வேண்டும் என விதியும் காட்டினர்.

3. இப்பாடலில் பூக்களைச் சோதித்து இறைவனுக்குச் சாத்தவேண்டுமெனவும், சோதியாது அருச்சித்தால் வருங்குற்றம் இன்னதெனவும் கூறுகின்ருர். உலர்ந்த போது - காய்ந்த பூக்கள். கோது - குற்றம். சிலந்தி எச்சம் - சிலந்திப் பூச்சியின் நூல்.

4. பூசனைக்குரிய மற்றைப் பொருள்கள் அபிஷேகத் திரவியங்கள், நிவேதித்தற்குரிய பண்டங்கள், அலங்காரத்துக்குரிய மலர்கள், தூபதீப முதலியன. ஆசு உளது - குற்றமுள்ளவற்றை. தேசு - புகழ், ஒளி. ஏசு உறு - பழிக்கத்தக்க. அனையவன் - அவ்வந்தணாளன்.

விளம்புமக் குற்றம் தன்னுல் விழிகளின் விடய மேக
உளம்பதைத் திரங்கி யேங்கி யுற்றவா றிஃதென் ருேரான்
வளந்தரு வசிட்டன் றன்பான் மருவியீங் கெளிய னேற்குக்
களந்தரு குருடு வந்த காரண மென்ன வென்ருன். 5

மாதவ னிமயச் செல்வி மணுளனை யிதயத் தெண்ணி
ஓதுவ னந்த ணுள வுறுபொருள் சோதி யாமல்
சோதியர்ச் சனைசெய் தாயத் துணரினேர் பழுது போந்த(து)
ஆதலி னுத னுகி யரந்தையுற் றிடுகின் ருயால். 6

கலிநிலைத்துறை

வாடன் மீது நீ விழியொளி மருவுறு மெழில்செய்
மாட மீதுறு கொடியினுன் மதிமறுத் துடைக்கும்
ஈடு தங்கிய விடைமரு தெனும்பதி யெய்தி
ஆட கப்புன லாடுறி னையமின் றைய. 7

ஆண்டு றைந்திடு மருதநா யகனிணை யடியைக்
காண்டல் செய்துநீ டன்பொடு கைதொழு தேத்தில்
வேண்டு மியாவையு முதவிடும் விரைவினே கென்ருன்
பூண்ட காதலன் விடைகொடு போயினன் மறையோன். 8

ஏய்ந்து சீரிடை மருதிடை யிலங்கிடை வாளை
பாய்ந்து டுக்களை யலைத்திடு பசும்பொனீர் வாவி
தோய்ந்தெ ழுந்தனன் விழியொளி தோன்றிய தாங்கே
சூழ்ந்த காரிருள் நீங்கிடத் தோன்றுமா தவன்போல். 9

---

5. விழிகளின் விடயம் - கண்ணுல் காணும் செய்தி. ஏக என்றது குருடாயிற்று என்றபடி. ஓரான் - ஆராய்ந்தறியாதவனுய். கள்ளம் தரு குருடு.

6. மாதவன் - வசிட்டமுனிவர். இமயச்செல்வி - பார்வதிதேவியார். மணுளன் - சிவபெருமான். சோதி அர்ச்சனை - சிவார்ச்சனை. துணர் - பூங்கொத்து. ஆதன் - குருடன். அரந்தை - துன்பம்.

7. வாடல் - வாட்டம் அடையற்க. கொடியினுல் - துகிற்கொடிகளால். மதி மறு - சந்திரனிடத்துள்ள களங்கம். ஆடகப்புனல் - கனக தீர்த்தம். நீ ஆடுறின் விழி ஒளி மருவுறும் ஐயமின்று என்க.

8. ஆண்டு - அத்தலத்தில். காண்டல் செய்து - தரிசித்து. ஏகு - செல்வாய். பூண்ட காதலனுய்ப் போயினன்.

9. இடை மருதிடை: இடை ஏழனுருபு. இலம் கிடை - இல்லமாகக் கொண்டு கிடக்கும். உடுக்களை அலைத்திடும் - நட்சத்திரங்களை வருத்தும். கார் இருள் - கரிய இருள். ஆதவன் - சூரியன்.

மனங்க ளித்தன னியாவரும் வியந்தனர் மதனே
அனங்க னுக்கிய விழியினு னடிமல ரிறைஞ்சி
இனங்கொ ளுண்மலர் சொரிந்தருச் சனைமுறை யியற்றிக்
கனங்கு லாஞ்சில வரங்களுங் கரங்கொடு சென்றான். 10

அத்த னுத்தனைச் சிலபக லகன்றபின் னகற்றி
நித்த னைப்பணிந் தருச்சனை நிரப்பின திறத்தால்
இத்த லத்துமேற் பிறப்பினி லிசைபெறு விசுவா
மித்தி ரத்தனிக் குரிசிலாய்த் தவத்தினு மிகுந்தான். 11

தவத்தின் மேலவ னுகிய காலையிற் சலச
பவத்தி னுனினி தியற்றிடு படைப்பினுக் கவன்முன்
புவிக்கண் மாறுறு விதிதனைப் புரிந்தன னிவையும்
நவிக்க ரத்திடை மருதிறை வனைப்பணி நலனே. 12

சுருதி வல்லவ னுமொரு தூயவன் மேவி
மருத வாணனைப் பணிந்துமேன் மாதவத் துயர்ந்த
விரிவி னைப்புகன் றனமினி விளங்குதென் கூடல்
வரகு ணப்பெருந் தென்னவன் மாண்பெடுத் திசைப்பாம். 13

விசுவாமித்திரச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 932

---

10. மதனே - மன்மதனே, அனங்கன் - உடம்பில்லாதவன். மதனே அனங்கனுக்கிய என்றது நயம். விழியினுன் - சிவபெருமான். நாண்மலர் - அன்றலர்ந்த பூக்கள். முறை இயற்றி - விதிப்படி செய்து. கனம் குலாம் - மேன்மை பொருந்திய. கரம்கொடு - பெற்றுக்கொண்டு.

11. அ தனு தனை - அவ்வுடம்பை. இசைபெறு - கீர்த்தியையுடைய.

12. சலச பவத்தினுன் - திருமாலின் உந்தித்தாமரையில் தோன்றிய பிரமதேவன்: கமல யோனி என்பது வடமொழி. சலசம் - தாமரை: நீரில் தோன்றுவது என்னும் காரணக்குறி. இனிது இயற்றிடும். மாறு உறு விதி- விசுவாமித்திர சிருட்டி. நவி-மழு. நவ்வி எனக்கொண்டு மானெனினுமாம்.

13. சுருதி வல்லவன் - பிராமணன். மா தவத்து உயர்ந்த.

நாற்பதாவது

# வரகுணதேவச் சருக்கம்

[வைகையாற்றின் வளமிக்க பாண்டிநாட்டில் விராட்புருஷனுக்குத் துவாதசாந்தத் தலமாய் விளங்குவது மதுரைமாநகரம். அத்தலத்திலே பாண்டியர் குலத்தே வந்த அரசர் எல்லோரும் செய்த தவமுழுவதும் திரண்டாலொத்த மன்னவன் வரகுணபாண்டியனுவான். அவன் சுந்தரேச பாதசேகரன் மைந்தன். வரகுணன் பகையரசருக்குச் சிங்க ஏறு, வறி யோருக்குக் கற்பகதரு, மகளிருக்கு மன்மதன் என விளங்கினன். அவன் ஆட்சிக்காலத்தில் ஒருநாள் வேட்டையாடக் காட்டையடைந்தான். விலங் கினங்களைவேட்டையாடினன், பொழுதுபோயிற்று, நகருக்குத்திரும்பினுன்; குதிரை விரைந்து வந்தது. சேனைகள் பின்னே தொடர்ந்து வந்தன. வரும் வழியில் ஒரு பிராமணன் படுத்துத்தூங்கினுன். விரைந்துவந்த குதிரையின் குளம்பு அவன் மார்பில் அழுந்தி ஊன்றியது. மறையோன் இறந்தான். மன்னன் அறியானுய் மனையிற்புக்கான்..

நிலவும் தோன்றியது. பின்னர்வந்த சேனையிலுள்ளோர் பிராமணன் இறந்துகிடத்தலைக் கண்டார். ஓடிவந்து அரசனுக்கு விண்ணப்பித்தனர். அரசன் நடுங்கினுன். அறியாமல் நேர்ந்ததே என அவசமுற்றுன். நிறைந்த செம்பொனைக் கொடுத்து இறந்த அந்தணனுக்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களைச் செய்யப் பார்த்திபன் பணித்தான். பிரமபாவம் அரசனைத் தொடர்ந்தது. பல்லாற்றுனும் பார்த்திபனைப் பயமுறுத்தியது. பழிக்குப் பழி தா என்றது. அரசன் அப்பழிதீரப் பல கழுவாய்கள் செய்தான். ஒன் ருனும் அது தீர்ந்திலது. துன்பம் அதிகரித்தது. கூடல் நாயகனை வழி பட்டுச் சிலநாள் வலம்புரியின் இக்குற்றந்தீரும் என்றனர் கலைவல்லோர். அவ்வாறே அரசன் ஆலவாயடிகளை வணங்கிச் சிலநாள் வலம்வந்து வழிபாடுவானுயினன். ஒருநாள் அரசன் கேட்க இறைவன் ஆகாயவாணி யால் சொல்லுவார். 'அரசனே! சோழ அரசன் ஒருவன் இங்குவந்து உன் னேடு போர்புரிவான்; தோற்றுப் புறங்காட்டி ஓடுவான்; நீயும் அவனேடு தொடர்ந்து வெருட்டிக்கொண்டுசெல்; அப்போது நம்மைநாமே அருச்சனை புரிந்து வைகும் தலமாகிய இடைமருதினை நீ அடைவாய்; அத்தலத்தை அடையுமுன்னரே இப்பழி உன்னை விட்டகலும்' என்றருளினர். அரசன் ஆலவாய்ப்பெருமான் கருணையை வியந்து வாழ்த்தியிருந்தான்.

சிலநாட்கள் கழிந்தன. சோழமன்னன் சேனைகள் புடைசூழக் கூடலின் மருங்குற்ருன். போர்ச்சின்னங்கள் முழங்கின. பாண்டியன் திருவருளைச் சிந்தித்துப் போற்றினுன். சோழனேடு போர்செய்ய ஆயத்தமாளுன். சேனைகள் திரண்டன, போர்க்களத்தை அடைந்தன, இருதிறத்துச் சேனைகளும் சினமூண்டு போரிட்டன. சோழவரசன் சேனைகள் சின்ன பின்னமாயின. பிணக்குவியல்கள் மலைபோலாயின. எஞ்சிய சேனை சிதறி யோடின, பதுங்கின. வரகுணன் சோழன் தோல்வியுற்றுப் புறமுதுகிட்டு ஓடுவதைக் கண்ணுற்ருன். புறங்கொடுத்து ஓடுவோரைத் துரத்திச் செல்லல் நீதியன்றெனத்தேர்ந்தான். அன்று ஆலவாய்ச்சொக்கர் ஆகாய வழியே அருளிய சொல்லைக் கருதினுன். ஒருவாறு தேறினுன். சோழ மன்னனைச் சேனையோடும் தொடர்ந்து வெருட்டிச் சென்ருன். பாண்டி நாட்டரசன் சோழநாட்டை அடைந்தான். திருவிடைமருதூரின் அணித்தாகச் சென்ருன், கோபுரத்தைக் கண்டான், தேரினின்று இழிந்தான், அடியற்ற மரம்போல் பூமியில் விழுந்து வணங்கினுன். வீதியைச் சார்ந்து வலம்புரிந்தான். பொன்னிநதியின் பூசத்துறையிலே போய்ப்படிந்தான். அந்தணர்கட்குப் பெரும்பொருள் அளித்தான். காருணியாமிர்த தீர்த்தத்திலே மூழ்கினுன். கிழக்குக் கோபுரவழியே கோயிலினுள் புக்கான். பார்த்திபனைத் தொடர்ந்த அப்பார்ப்பனப்பழி ஒருபால் அகன்றுநின்றது. மன்னவன் பெருஞ்சுமையைப் போக்கினன் போன்று மகிழ்ந்தான். பெரும் பாரமகன்ற அரசன் பின்னர்த்திரும்பினன். பழியைக்கண்டிலன். ஆனந்தக் கடலிடை அமிழ்ந்தான். மருதவனேசரை வணங்கிப் போற்றினுன், ஆனந்தக்கண்ணீர் சொரிந்தான், அவசமாயினன். பின்னர்த் துதி பல சொற்ருன். மகாலிங்கேசர் மன்னனை நோக்கி, 'நீ குணதிசை வாயிலின் வழியே செல்லற்க; பழி அங்கே நின்றது ஆகலின் மேலைவாயிலிற் செல்' என்றருள் செய்தார். மீனவன் மகிழ்ந்தான், அம்மையாரையும் சென்று அடிமலர் பணிந்தான்.

வரகுணன் நாடோறும் ஆலயத்தை நூறுதரம் வலம் வந்தான். காலங்கள்தோறும் சென்று கடவுளைத் தரிசித்தான். கூடல் நாயகனுக்கு ஒரு கோயிலை இத்தலத்திலே வடபால் நன்கமைத்தான். குடதிசைக் கோபுரம் இயற்றுவித்தான். தவத்தால் உடல் மெலிந்தான். மருதவனேசர் ஒருநாள் அரசனை விளித்து 'வரகுண! கயிலையிலுள்ளபடி கொடுமுடிப் பிரகாரம் ஒன்று இங்கே அமைப்பாய். அந்தப் பிரகாரத்தை நீ ஒருமுறை வலம்வரின் அது ஆயிரம்முறை வலம்வந்ததை ஒக்கும்' என்றருளினர். அரசன் சிலநாட்களில் இறைவனருளியபடியே கொடுமுடிப்பிரகாரத்தைச் செய்வித்து முடித்தான். அதனை நாடோறும் வலம் வருவானுயினுன்.

திருவிடைமருதூரிலேயே வரகுணபாண்டியர் வசித்துவந்தனர். அக்காலத்திலே பற்பல அற்புத நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அவைகளெல்லாம் வரகுணபாண்டியரின் அன்பையும் அருளையும் புலப்படுத்துவன.

பின்னர், சோழ அரசன் தன்மகளை வரகுணருக்குச் சிறப்புடன் மணஞ் செய்வித்தான். வரகுணர் தன் மனைவியின் அழகுகளைக் கண்டு வியந்து இவள் மருதநாயகருக்கே உரியவள் என உறுதி பூண்டார். கோயிலை அடைந்தார். மருதநாயகனே என்றழைத்தார். உடன் அழைத்துவந்த தன் மனைவியை இறைவர்பால் ஒப்புவித்தார். இவள் உனக்கே தக்கவள் ஏற்றுக்கொள்ளும் என விண்ணப்பித்தார். முன்றிலை அடைந்தார். முன்போலவே கதவுகள் விரைந்து திருக்காப்பிடப்பெற்றன. அரசனையும் அவன் மனைவியையும் காணுமல் காவலர்கள் தேடத் தொடங்கினர். பொழுதும் புலர்ந்தது. பூசைசெய்தற்குச் சிவாசாரியர் உள்ளே புகுந்தார். அரசரும் நுழைந்தார். சிவபெருமான் முடியின்மேல் வளைக்கரம் ஒன்றைக் கண்டனர். இறைவன் அதனையும் மறைத்தருளினர். மன்னவர் பெரு மகிழ்ச்சியடைந்தார். ஏனையோர் வியந்தனர்; விதிர்விதிர்த்தனர். விண்ணோர் மலர்மாரி சொரிந்தனர். பாண்டியர் விடைகொண்டு தன் நாட்டை அடைந்தார். மதுரை சார்ந்தார். ஸ்ரீ மீனாட்சியம்மையாரையும் சொக்கலிங்க மூர்த்தியையும் வணங்கிப் போற்றி மகிழ்ந்தார். வரகுணபாண்டியர் சிவலோகத்தை இங்கேகாண வேணவாக்கொண்டார். அவ்விருப்பின்படி வரகுணனுக்குச் சிவலோகம் காட்டியருளினர் ஆலவாய்ச்சொக்கர். கண்டு மகிழ்ந்து பணித்தெழுந்து ஆனந்தக்கடலிலமிழ்ந்தார் மன்னர். பின்னர் அரசர் சிலகாலம் மதுரையாண்டிருந்து கயிலையை அடைந்து சிவசாரூபம் அடைந்தார்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எழில்கொள்பங் கயமாந் தொட்டி லிடைத்திரி கயல்க ளாட்டப்
பொழிலுறு மலர்ப்பூந் தாது போர்த்துவண் டிசைகேட் டாமை
விழிதுயில் குளனுஞ் செந்நெல் விளைதரு வயலும் வைகைச்
சுழிதரு தூநீர் பாய்ந்து துலங்கிடுந் தென்னர் நாட்டில். 1

1. பங்கயம் - தாமரை. தொட்டிலிடை: இடை ஏழனுருபு. திரி கயல்கள்: வினைத்தொகை. பூந்தாது - மகரந்தப்பொடிகள். தென்னர் - பாண்டியர்.

தென்னர்நா டென்னு மங்கைத் திருநுதல் திலக மாகிப்
பொன்னினி திருக்குங் கஞ்சப் புதுமலர் மாட மாகித்
துன்னுசீர்த் தொல்லை யண்ட புருடன்மா துவாத சாந்தம்
என்னுநல் தானமாகி யிலங்கிடு மதுரை தன்னில். 2

திகழ்மதிக் குலத்தின் மேவு தென்னவ ரெவருஞ் செய்த
புகரில்சீர்த் தரும மியாவும் பொருந்தொரு வடிவு போல்வான்
பகர்தருஞ் சுந்த ரேச பாதசே கரன்றன் மைந்தன்
புகழ்வர குணநா மத்தான் புரவல ளெருவ னன்னுன். 3

வன்பகை யரச ரியார்க்கு மடங்கலாய் வறுமை கூர்ந்தோர்க்(கு)
அன்புரு வாகி விண்ணி லமர்ந்திடு தருவா ளுகி
இன்புறு மடநல் லார்கட் கிகன்மணக் கோலஞ் செய்யும்
முன்பின ளுகி வையம் முறைசெயு நாளி னோர்நாள். 4

மேவிய கழற்கா லொற்றர் விரைவின ரிருவ ரெய்திக்
காவத மரையின் மேல்பாற் கடத்திடைக் கவரி யேனம்
தீவிழி யுழுவை யெண்கு திரிமருப் பிரலை யாதி
மாவின மிடைந்த தின்று வாய்த்திடும் வேட்டை யென்ருர். 5

---

2. உருவக அணி. நுதல் - நெற்றி. திலகம் - பொட்டு. பொன் - இலக்குமி. கஞ்சம் - தாமரை. அண்ட புருடன் - விராட் புருஷன். துவாத சாந்தம் - உச்சிக்குமேல் பன்னிரண்டங்குல எல்லை. தானம் - இடம்.

3. மதிக் குலம் - சந்திர வமிசம். புகர் இல் சீர் - குற்றமற்ற சிறப்பு. பொருந்து ஒரு வடிவு. பாதசேகரன் - திருவடிகளை முடியாக உடையான். நாமம் - பெயர். புரவலன் - அரசன்.

4. மடங்கல் - சிங்கம். கூர்ந்தோர் - மிக்கோர். மடநல்லார் - பெண்கள். இகல் மணம் கோல் அஞ்சு எய்யும் முன்பினன்: இகல் - வலிமை, பகை. மணம் - வாசனை. கோல் அஞ்சு - ஐந்து பாணங்கள். முன்பினன்- வலிமையுடைய மன்மதன். மணக்கோல் என்றது மலரம்புகளை. மணக் கோலஞ்செய்யும் என்றது ஒரு நயம். ‘மணக்கோலஞ் செய்தான் மதன்’ என்ருர் அருணைக்கலம்பகமுடையாரும். வையம் - உலகம். முறை செயும் நாளில் - நீதியோடு ஆட்சிபுரியும் காலத்தில்.

5. ஒற்றர் - தூதுவர். கடத்திடை - வனத்தில்: காட்டில். ஏனம் - பன்றி. உழுவை - புலி. எண்கு - கரடி. திரி மருப்பு இரலை - முறுக்கிய கொம்புகளையுடைய மான். மா இனம் - விலங்குக் கூட்டம். மிடைந்தது - நெருங்கியுள்ளன.

என்றலும் வேட்டஞ் செய்தற் கிசைவன செய்ய முன்னம்
சென்றிடு வோரை யேவிச் சிறந்தவாம் பரிமேல் தானும்
துன்றிருஞ் சேனை சூழத் தூரிய முழக்கங் கேட்டு
மின்றயங் கெழிலி யஞ்ச வெய்தெனச் சென்றான் மன்னே. 6

ஒற்றர்க ளுடன்முன் சென்றோ ருணர்சுவ டொதுங்குங் கானில்
பற்றுயிர்க் கியமன் காட்டு முடலெனப் பார்வை வைத்து
மற்றவன் வீசு பாச மானவார் வலைசூழ் போக்கிச்
சுற்றவன் றூத ரென்ன நிறுத்தினர் தொடக்கு நாய்கள். 7

மன்னனும் வேட்டைக் கான மருவவங் குற்றோர் வந்து
பன்னுதம் முயற்சி யாவும் பணிந்தெதி ரிசைக்க நோக்கித்
துன்னுறு விலங்கி னீட்டந் தொடர்ந்தினி யெழுப்பு மென்றான்
அன்னவ ருவகை துள்ள வமைந்தன ரனைய தாற்ற. 8

வேறு

பம்பை தடாரி வலம்புரி பேரிகள் பாடுறு துடிநீடு
கொம்பின மாதி கடந்திடு மோதைகள் கூவிளி தருமோதை
அம்புவி மாதிர மண்டக டாகமு மார்தர வெழலோடும்
வெம்புலி மான்மரை பன்றிகு டாவடி மேவின வெதிர்சீறி. 9

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கோலிச் சிலைமற வோர்விட் டனரடு கோலுய்த் தனர்வளை யதன்மீதே
காலற் றனசில வீரிட் டனசில காதற் றனசில மிகநீடார்
வாலற் றனசில வோடுற் றனசில வாடுற் றனசில குடர்சோர
மாலுற் றனசில நாய்பற் றினசில மாய்வுற் றனசில விறன்மாவே. 10

---

6. வேட்டம் செய்தற்கு இசைவன - வேட்டையாடுதற்குரியவற்றை. வாம் பரி - தாவிச் செல்லும் குதிரை. துன்று - நெருங்கிய. தூரியம் - வாத்தியம். மின் தயங்கு எழிலி: எழிலி - மேகம். வெய்தென - விரைவாக.

7. சுவடு ஒதுங்கும். பற்று உயிர்க்கு இயமன் காட்டும். பார்வை - பார்வைமிருகம். அவன் - அந்த இயமன். மான - ஒப்ப. வார் - நீண்ட.

8. இசைக்க - சொல்ல. விலங்கின் ஈட்டம் : ஈட்டம் - கூட்டம்.

9. பம்பை தடாரி வலம்புரி பேரி துடி கொம்பு முதலியன வாத்தியப்பெயர்கள். கூவிளி - கூப்பிடுதல். ஓதை - ஓசை. மாதிரம் - திக்கு; ஆர்தர - பொருந்த. குடாவடி - கரடி. எதிர் சீறி மேவின.

10. கோலி - சூழ்ந்து. சிலை மறவோர் - வில் வீரர். அடு கோல் - கொல்லும் அம்புகள். மால் - மயக்கம். விறல் மா - வலிய விலங்குகள்.

விரவிய மறவர்க ளெழுதரு படைகளின் மெலியுமு னுதர மிகநீடும்
கருணையின் வலைபல விடுபவ னெனவொரு கணைகொடு கானிடை வெகுதூர
மருவுற விடவுழை புலிமுத லியபல வாளிகள் சிலவேவி
நிருபனு நினைவினை நிறுவினன் வனமதி னிலவின சோரியி னதியோடி. 11

இத்திற மச்செயன் முற்றிய தக்கண மெத்திசை வீரரு மெதிராக
மொய்த்தனர் மற்றவர் சுற்றிட மெச்சிடு முத்தமிழ் மாறனு மகிழ்நீடி
உத்தம நித்தில வட்டம திக்குடை யுற்றிடு நீள்கதிர் மிசைசூழ
நத்தலை யுற்றக ழத்தியின் முற்றிடு நற்பதி சார்தர வருவேலை. 12

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மதிவழி மன்ன னுற்று மாவியல் வேட்டஞ் செய்யக்
கதிரவ னேக்கித் தானுங் கலந்துநீள் குடபால் வெற்பில்
எதிருறு மரக்க ரென்னு மிகலுமா வேட்டை யாடி
வதியுமத் திசையி னெங்குங் குருதியாய் வயங்கச் செய்தான். 13

மருளுற நமைத் துரத்து மதிக்குல மதினில் தோன்றும்
நிருபனு மிவனுக் கின்றோர் நெடும்பழி யெளிதி னீண்டு
வருதலைச் செய்து மேலம் மதிக்கியற் றியதா மென்று
கருதிவந் தடைந்த தென்னக் காரிருள் சூழ்ந்த தன்றே. 14

---

11. ஆதரம் - விருப்பம். கணை - அம்பு. உழை - மான். வாளிகள் - அம்புகள். நிருபனும் - அரசனும். சோரி - இரத்தம்.

12. முற்றியது அ கணம்: முற்றியது - முடிந்தது. முத்தமிழ் மாறன் - பாண்டியன்: வரகுணன். நித்திலம் - முத்துக்களால் வேயப் பட்ட. வட்ட மதிக் குடை - சந்திரவட்டக் குடை. நத்து அலையுற்ற அகழ் அத்தியின் - சங்குகள் அலைகளிலே பொருந்திய அகழியானது கடலைப் போன்று: அத்தி - கடல். இன்: ஐந்தனுருபு. வரு வேலை - வரும் சமயத்தில்.

13. மதி வழி மன்னன் - சந்திரகுலத்தில் தோன்றிய அரசன். மா இயல் வேட்டம் - மிருக வேட்டை. கதிரவன் - சூரியன். குடபால் வெற்பு - அத்தமன கிரி. அ திசையின் - அந்த மேற்குத்திக்கில். குருதி யாய் - இரத்தமாய். அந்திமாலை வந்தது என்க. எதிருறும் அரக்கர் என்று - மந்தேகர் எதிர்ப்பர் என்று (கோடீச். 373 காண்க).

14. மருளுற - மயங்க். இன்று ஓர். செய்துமேல் - செய்வோமாயின். அ மதிக்கு இயற்றியது ஆம். கார் இருள் - கரிய இருட்டு.

இருளெதிர் கலக்கு மாலை யெனச்சொலுங் காலை தன்னில்
குரகதந் தனது மேற்கொள் கொற்றவன் றன்னே டெய்யும்
சரகதி கொண்டு சூழுந் தானைபின் தொடரத் தான்முன்
விரைவொடுஞ் சென்ற தந்த வியனகர்ப் புறத்து மாதோ. 15

மன்னெறி யிடைக்கி டந்தோர் மறையவன் துயின்ருன் மாலுற்(று)
அன்னவன் றனக்கோர் கால னுமென வணைவுற் றம்மா
தன்னடி யுரத்தின் வைப்பத் தளர்வுகொண் டிறந்தா னுக
இன்னதென் றறியான் வேந்த னெழின்மனை புகுந்தான் சென்று. 16

மித்திர னெடுநா னில்லா வேலையென் வழிதீ தாற்றச்
சித்திர மிழைத்தி டல்லைச் சிதறிடத் துணித்தல் செய்வேன்
எத்திசை யவருங் காண வெனச்சிவந் தெழுந்தான் போல
அத்திமீ தெழுந்தா னல்லோ னமர்தரு கரவாள் வீசி. 17

---

15. காலை தன்னில் - பொழுதில். காலம் பெறவே என்றபடி. குரகதம் - குதிரை: என்றது கனவட்டம் என்னும் பாண்டியன் குதிரையை. எய்யும் சரகதி - செலுத்துகின்ற அம்பினது செலவு: வேக மிகுதி குறித்தது. ''கோலிற் செலும்பரியின்'' (பரஞ்சோதி திரு. 40:5); ''வாளியின் வரும் பரிமாவின்'' என்பது வில்லிபாரதம். தானை - சேனை. மாலை காலை என்பன முரண்தொடை; சிறுபொழுது வந்தன. குரகதம் சென்றது என்க.

16. மன் நெறியிடை - நிலைபெற்ற வழியில்: இடை ஏழனுருபு. மால் உற்று - மயங்கி. உரத்தின் - மார்பினிடத்து. வேந்தன் - வரகுணன்.

17. மித்திரனெடு - சூரியனேடு. நான் என்றது அல்லோனை. ''பத்திரட்டியி லீரிரண் டொழிந்தபல் கலையோன், மித்தி ரற்கவை கொடுத்து முன் மீளவும் கவர்வோன்'' என்ருர் வில்லிபாரதத்தும். இல்லா வேலை - இல்லாத காலத்தில். என் வழி - என்பால். ''நெடும்பழி......மதிக்கு இயற்றியதாமென்று'' என்ருர் முன்னும் (செய். 14). தீது - தீமை: கொடும்பழி என்க. அல்லை - இருட்டை. சிவந்து - கோபித்து: ''கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள'' (தொல். உரி. 76). அத்தி மீது - கடலின் மேல்: யானையின்மேல் என்ற பொருள் தொனித்தலும் காண்க. அல்லோன் - இருட்காலத்திற்குரியோனுகிய சந்திரன்; இரவோன் என்றது போல. அல் - இருட்டு. கர வாள் - கிரணமாகிய வாள்: கரம் - கிரணம். வாள் - வாட்படை: ஒளி எனினுமாம். கையிலுள்ள வாளை வீசி என்ற பொருள் தொனித்தலும் காண்க. மித்திரன் அத்தி கரவாள் என்பன நயங்கள்.

இறையவன் தோன்ற முன்ன ரிகலுறு குறும்பு செய்த
குறுநிலத் தவர்க ளோடுங் கொள்கையி னிருட்கு ழாஞ்சென்(று)
உறுமொளி யிலாது வைகு முழைதொறு மொளித்த தந்த
மறையவன் கிடக்கை பின்னர் வந்தணை ந் தவர்கள் கண்டார். 18

நம்புறு மவன்றன் கேளிர் நரபதிக் கதுசென் றோதக்
கம்பமுற் றவன்யா னீது கண்டிலே னென்று வேண்டும்
செம்பொனீந் திறந்தா னுக்குச் செய்வன செய்ம்மி னென்றான்
வெம்பழி தானும் வந்து பிடித்தது விலக்கு வார்யார். 19

மட்டவிழ் வேம்பின் தாரோன் வன்பழி மருவி யெங்கும்
நெட்டுயிர்ப் பெறியும் வாளா நின்றிடு மார்க்கும் வண்கை
கொட்டும்பற் கடிக்கு மாடுங் குலவுமப் பழிமுன் வந்து
கிட்டியச் சுறுத்த வஞ்சுங் கிடைக்குநல் லறிவுஞ் சற்றே. 20

பொருந்திடர் தீர்க்கப் பின்னர்ப் பூசுரர்க் கம்பொ னாதி
திருந்திடு தான மீந்துந் தேனுவிற் கறுகு கொய்தாங்(கு)
அருந்திடக் கொடுத்தும் நீடு மகமரு டணத்தி னோமம்
புரிந்துமற் றதுநெய் பெய்த தழலின்மேற் பொலிந்த தன்றே. 21

---

*18.* இறையவன் - முடிமன்னன். இகல் உறு - பகைமை மிக்க. குறுநிலத்தவர் - குறுநில மன்னர். ஓடும் கொள்கையின். முழை - குகை. வந்தணைந்தவர்கள் - வந்து சேர்ந்த சேனையிலுள்ளோர்.

*19.* கேளிர் - சுற்றத்தார். நரபதிக்கு - அரசனுக்கு. கம்பம் உற்று அவன்: கம்பம் - நடுக்கம். செய்வன - செய்யும் ஈமக்கடன்களை. வெம்பழி - கொடிய பிரமக்கொலைப் பாவம்.

*20.* மட்டு - தேன். வன் பழி மருவி - வலிய பழியானது பொருந்தி. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. வாளா - சும்மா. ஆர்க்கும் - ஆரவாரிக்கும். ''ஏங்கும் பெருமூச் செறியுங்கை யெறியுங் குன்றின், ஓங்கும் சிறுகு முடன்றூர்த்திடும் முன்னும் பின்னும், பாங்கும் தொடரும் சிரிக்கும் பகு வாயை மெல்லும், நீங்கும் குறுகும் பழிதாவென நேர்ந்து பற்றும்'' (பரஞ்சோதி திரு. 40:9 செய்.)

*21.* பொருந்து இடர். பூசுரர் - அந்தணர். தேனு - பசு. அகமருடணம் - வேதத்தில் கூறப்படும் ஒருவகை மந்திரம்: பாவத்தைப் போக்குவது என்பது பொருள்: அகமருஷண சூக்தம் என்றும் சொல்லப்படும்: சூக்தம் - நன்றாகச் சொல்லப்படுவது. அது - அப்பழி.

பின்னும்பல் விதங்கள் செய்தும் பெயர்ந்திடா தொழிதல் கண்டு
நன்னெறிக் கலைவல் லோர்க ணரபதி தன்னை நோக்கி
இன்னநான் மாடக்கூட லிறைவனை வணங்கிச் சின்னுள்
மன்னுற வலஞ்செய் தன்பின் வந்திடில் தீரு மென்ருர். 22

அங்கவ னவ்வா றெய்தி யத்திற னெழுகு நாளில்
துங்கமால் வரைவிற் சோம சுந்தரக் கடவுள் விண்ணின்(று)
இங்குவந் தார்த்தார் வேந்த னெதிர்த்துநின் னெடுபோ ராற்றிப்
பங்கமுற் ரோடு வான்மேற் படர்குவை தொடர்ந்து நீயும். 23

அவ்வழி நம்மை நாமே யருச்சனை புரிந்து வைகும்
செவ்விய மருதூர் சேர்வாய் சேர்தரு முன்ன ருன்றன்
வெவ்வினை யகலு மென்ன விளம்பின னதுகேட் டன்னுன்
திவ்விய வருளை வாழ்த்தி யிருந்தனன் செங்கோன் மன்னன். 24

சிலபக லகன்ற பின்னர்ச் செம்பிய னனைய வாறே
புலிவளர் துவச மோங்கு பொருபடை கடலிற் சூழ
இலகுதூ ரியங்கள் வேனி லிடியென முழங்கச் சென்று
குலவுறு தென்னர் நாட்டில் கூடலின் மருங்குற் ருனல். 25

தென்னனு மதனை நோக்கிச் சேல்விழிக் கன்னி பாகன்
தன்னருள் கருதிப் போற்றித் தடங்கடற் சேனை சூழத்
துன்னுற வேம்பி னேடு தும்பைவேய்ந் தெழுந்து நீடு
பொன்னகர்ப் புறத்தி னுற்ருன் பொன்னியந் துறைவன் முன்னர். 26

---

22. நன்னெறி - சன்மார்க்கம். நரபதி - அரசன்.

23. துங்கம் மால் வரை வில் : மால் வரை - பெரிய மேருமலை. வரை வில் - மேருமலையாகிய வில்: பண்புத்தொகை. ஆர்த்தார் வேந்தன்-ஆத்தி மலர்மாலையையணிந்த சோழ அரசன். பங்கம் உற்று - தோல்வியடைந்து.

24. மருதூர் - திருவிடைமருதூர். முதலிரண்டடிகள் : ''எமையா மருச்சித் திருக்குந்தலத் தெய்து வாயால், அமையாத வன்கட் பழியாற்றும் என்ன'' (பரஞ்சோதி திருவிளை. 40:16 செய்.)

25. செம்பியன் - சோழன். புலி வளர் துவசம் - புலியை எழுதிக் கட்டிய கொடி. தூரியம் - வாத்தியம். வேனில் இடி - கோடைக்காலத்து இடி. தென்னர் நாடு - பாண்டிய நாடு. கூடல் - மதுரை.

26. தென்னன் - பாண்டியன். சேல் விழிக் கன்னி - அங்கயற்கண்ணம்மை. கடற்சேனை : உவமைத்தொகை. வேம்பு - பாண்டியர் அடையாளப்பூமாலை. தும்பை-தும்பைப்பூ மாலை: போர்ப்பூ. ''நிலந்திரைக்கும் கடற்ருனைப் பொலந்தும்பை'' (புறநா.) பகைவரோடு போர் செய்தலை

கலிநிலைத்துறை

உற்ற காலையிற் செம்பிய னுறுபடை வீரர்
வெற்றி வார்சிலை வளைத்தனர் விடுத்தனர் பகழி
எற்று நேமிகள் செலுத்தின ரெறிந்தனர் கவண்கல்
முற்று நாளுல கழித்திடச் சொரிதரு முகில்போல். 27

முன்ன ராங்கவ ரடல்வினை தொடுத்தலு மூரிக்
கன்னி நாடவன் சேனைசூழ் கடுஞ்சின மறவோர்
கொன்ன வின்றிடு சிலையொடு புருவமுங் கோட்டி
மின்னு தீப்பொறி விழிவிட வாளிகள் விடுத்தார். 28

சிகர மற்றன புலிக்கொடிச் சில்லியந் தடந்தேர்
புகர்மு கக்களி றலகில வுருண்டன புவிமேல்
பகர்ப ரிக்குலந் திசைதொறும் பாய்ந்தன துணிந்து
தொகையில் வீரர்கள் புகுந்தனர் துறக்கநன் னாடு. 29

---

நினைந்து தும்பைப்பூவைச் சூடுதல் மரபு; தும்பைமாலை பொன்னாற் செய்யப்படுவது. ''நொச்சியை முற்றியந் நொச்சியி னுள்ளார், பச்சிள நொச்சி பறித்தணி யாமே, நச்சிய தும்பை நறுந்துணர் சூடி'' (காஞ்சிப் புரா. திருநாட். செய். 27) 'நிரை கொள்ளப்பட்டோன் பொருகளங் குறித்துப் போர் செய்தலும் அவன் களம் குறித்தது பொருது நிரை கொண்டானும் களங்குறித்துப் போர் செய்தலும் வெட்சிப் புறத்துத் தும்பையாம், வஞ்சியுள்ளும் விழுப்புண்பட்ட வீரரை நோக்கி வேந்தற் குப் பொருமை நிகழ்ந்து துறக்கம் வேண்டுழி நிகழ்ந்த தும்பையும் வஞ்சிப் புறத்துத் தும்பையாம். முற்றப்பட்டோனை முற்று விடுத்தற்கு வேறோர் வேந்தன் வந்துழி அவன் புறம் போந்து களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும் அவன் களம் குறித்துழிப் புறத்தோனும் களம் குறித்துப் போர் செய்யக் கருதுதலும் உழிஞைப் புறத்துத் தும்பையாம். இவை எல்லாம் மண்ணசையும் அரண் கோடலுமன்றி மைந்து பொருளாகச் சென்று துறக்கம் வேட்டுப் பொரும் தும்பைச் சிறப்புக் கூறிற்று. மேற் காட்டும் துறைகளெல்லாம் இச்சூத்திரத்திற்கே ஆம் என்றுணர்க' என்றார் நச்சினார்க்கினியர் புறத்திணையியலில். விரிவெல்லாம் அங்கே காண்க.

27. செம்பியன் - சோழன். வார் சிலை - நீண்ட வில். பகழி - அம்பு. நேமிகள் - சக்கரப்படைகள். முற்றும்நாள் - ஊழிக்காலத்து.

28. அவர் - சோழன் சேனாவீரர். அடு வினை - போர்த் தொழில். மூரி - வலிய. கன்னி நாடவன் - பாண்டிய மன்னன். கொன் நவின்றிடு - பெருமை பொருந்திய. கோட்டி - வளைத்து. வாளிகள் - அம்புகள்.

29. சிகரம் - உச்சி. புலிக்கொடி சோழருக்குரியது. புகர் - பொறிகள். அலகு இல - அளவில்லாதன. துறக்கம் - வீர சுவர்க்கம்.

மீன கேதனன் படைத்தனி மந்தரம் விரிதன்
சேனை யாந்தடங் கடலினைக் கலக்கலுஞ் சினந்து
மான மீக்கொள விடமென வெழுந்திசை வளவன்
தானு றுங்கடு வேகத்தின் விடுத்தனன் சரங்கள். 30

உந்தும் வாளியி னளவையின் றோங்குதன் சேனை
முந்தும் வீரர்கண் முடிவது முடிநெடுந் தேர்கள்
கந்த டுங்கரி பரியிவை மடிவதுங் காணு
வந்த னன்னுருத் திரனென வெழுந்தனன் வழுதி. 31

மேவு வெஞ்சினத் தெழுந்தவன் வீரரை நோக்கி
நீவி ரஞ்சன்மின் சிதைப்பன்யா னீடுமப் படையைத்
தேவர் மன்னவன் மணிமுடி சிதறிடு மெம்முன்
ஏவர் நின்றுபோ ரிழைத்தனர் பிழைத்தன ரென்று. 32

வில்லை வாங்கிநா ணிசைத்தன னெறிந்தனன் விசும்பு
மல்லன் ஞாலமுந் துணுக்குற வளவனீள் கரத்தில்
புல்லும் வார்சிலைக் கொருகணை முந்துறப் போக்கி
வல்ல தானைமேற் செலுத்தின னலகில்வெவ் வாளி. 33

நீடு வெஞ்சரஞ் சென்றெதிர் நேரியன் படையில்
ஆடி டும்பரி மதக்கயம் வீரர்க ளங்கத் (து)
ஊடு புக்குயிர் தேடியங் கோடிடு முயிர்ப்பின்
ஓடு மற்றினி விடேமென வும்பரி னளவும். 34

---

*30.* மீன கேதனன் - கயற்கொடியையுடைய பாண்டியன்: கேதனம் - கொடி. தனி மந்தரம் - ஒப்பற்ற மந்தரமலை: உருவகம். விடம் - நஞ்சு, விடமாட்டோம். ''ஐயவுனை, விடமென்ன வந்து வளைந்து கொள்வார்'' (கோடீச்சுரக். 105). வளவன் - சோழன். சரங்கள் - அம்புகள்.

*31.* உந்தும் - செலுத்தும். அளவை இன்று ஓங்கு. கந்து அடும் - கட்டுத்தறியைக் கோபிக்கும். வழுதி - பாண்டியன்.

*32.* அஞ்சன்மின் - அஞ்சற்க. சிதைப்பன் - அழிப்பேன். தேவர் மன்னவன் - இந்திரன். ஏவர் - யாவர்தாம். இழைத்தனர்: முற்றெச்சம்.

*33.* வாங்கி - வளைத்து. இசைத்தனன்: முற்றெச்சம். எறிந்தனன் - தெறித்தான்: நாணொலி எழுப்பினான் என்றபடி. விசும்பு - விண்ணுலகம். ஞாலமும் - நிலவுலகமும். துணுக்குற - திடுக்கிட. புல்லும் - பொருந்தும். வல்ல தானை - வலிய சேனைகள். வெவ் வாளி - கொடிய அம்புகள்.

*34.* வெம் சரம்: சரம் - அம்பு. நேரியன் - சோழன். ஆடிடும் பரி - ஆட்டக் குதிரை: என்றது குதிரைகள் செல்லும் கதி குறித்தபடி.

தலைமு றிந்தன மறவர்தோண் முறிந்தன தடக்கை
மலைமு றிந்தன பரிக்குல முறிந்தன வடிவேல்
இலைமு றிந்தன தூரிய முறிந்தன வெடுத்த
சிலைமு றிந்தன முறிந்தன செம்பியன் சேனை. 35

சின்ன நீள்பிண மலைகள்புக் கொளித்தனர் சிலரே
பன்னு பல்படை வனத்தினிற் பதுங்கினர் சிலரே
முன்ன ரோடுதி ரத்திடை மூழ்கினர் சிலரே
சென்னி யோடுகால் சோர்ந்திட வோடினர் சிலரே. 36

வாய்ந்த பொன்மதிற் கூடல்வாழ் வரகுணத் தென்னன்
சாய்ந்த தெவ்வர்மேற் படர்ந்திடான் றடங்கடற் பிறந்த
காந்து நஞ்சமர் மிடற்றினன் றிருவருள் கருதி
வேய்ந்து வாகைபின் றுரத்தினன் மிகுபடை யோடும். 37

துரத்தி னன்விசும் புலவிய சுரநதிப் புனலைக்
கரத்தி னுலெடுத் தாம்பலுண் வரைகளுங் கானும்
சிரத்தி னர்மதி தரித்தவன் றிகழ்பல பதியும்
உரத்தி னற்கடந் தெய்தின னுயர்புன னடு. 38

---

அங்கத்து ஊடு புக்கு. உயிர்ப்பின் - உயிரின் பின்னே. விடேம் - விடமாட்டோம். விடேம் என உம்பரின் அளவும். உயிர்ப்பின் ஓடும் என்றது நயம்.

35. மறவர் - வீரர். தட கை மலை - பெரிய துதிக்கையையுடைய மலை போன்ற யானை. கைம்மலை: உருவகம்: இல்பொருளுவமை. வடிவேல் - கூரிய வேற்படை. தூரியம் - வாத்தியம். சிலை - வில். செம்பியன் சேனை - சோழனுடைய படையிலுள்ள.

36. முன்னர் ஓடு உதிரத்திடை: உதிரம் - இரத்தம்.

37. கூடல் - நான்மாடக் கூடல்: மதுரை. தென்னன் - பாண்டியன். சாய்ந்த - தோற்ற. தெவ்வர் - பகைவர். காந்து - கோபிக்கும். வாகை வேய்ந்து - வெற்றிக்கு அறிகுறியாகிய வாகைப்பூ மாலையை அணிந்து.

38. விசும்பு உலவிய - ஆகாயத்தில் பொருந்திய. சுர நதி - ஆகாய கங்கை. ஆம்பல் உண் - யானைகள் உண்ணும். சிரத்தின் ஆர் மதி தரித்தவன் - சிவபெருமான்: ஆர் - ஆத்திப்பூ மாலை. மதி - பிறைச்சந்திரன். பதி - தலம். உரத்தினல் கடந்து: உரம் - வலிமை. புனல் நாடு - சோழவள நாடு.

திகழந் நாட்டிடை யிடைமரு தணிமையிற் செலுங்கால்
ககன முற்றெதிர் கதிர்பொலி கவினமர் கனகச்
சிகர கோபுரங் கண்டனன் தேரினின் றிழிந்து
மகித லத்துறப் பணிந்தனன் மாற்றினன் விதிர்ப்பு. 39

நீடு கோபுர சிகரத்து நிலவுவெண் கொடிகள்
ஆட நோக்கிநங் குலத்தினி லவதரித் திட்டோன்
கூடு வெம்பழி தொலைந்ததின் றீண்டெனக் குறித்து
நாடு தண்பிறை நடித்தலொத் திடுமென நயந்தான். 40

மங்க லம்பொலி மாளிகை மண்டப மியாவும்
பொங்கு தண்சுடர்க் கனகமாய்ப் பொலிவள நோக்கித்
தங்கு பொன்னுருக் காகதீர்த் தத்தினுக் கென்றூர்
எங்கும் பொன்னுரு வங்கொலோ வெனத்தனி வியந்தான். 41

கஞ்ச மேல்வளை யீன்றிடு கதிர்கொளரித் திலத்தை
அஞ்ச மென்பெடை முட்டையென் றடைகிடந் திடுநீர்
விஞ்சு வாவியும் வண்டுறை விரிமலர்ப் பொழிலும்
மஞ்சு லாவிய புரிசையும் பார்த்துள மகிழ்ந்தான். 42

குலவு தண்பொழில் கனிவளங் கொண்டுமுன் காட்ட
நிலவு கார்மயின் மாதரி னின்றெதிர் நடிப்ப
அலகில் பூவையுங் கிளிகளும் வருகென வழைப்பப்
புலவு வேலினன் கண்டுகேட் டின்புறப் போந்தான். 43

---

39. திகழ் அ நாட்டிடை. அணிமை - சமீபம். ககனம் உற்று: ககனம் - ஆகாயம். கதிர் - கிரணம், ஒளி. கவின் - அழகு. கனகம் - பொன். சிகரம் - உச்சி. இழிந்து - இறங்கி. மகிதலம் - பூமி. விதிர்ப்பு - நடுக்கம்.

40. கோபுர சிகரம் - கோபுரத்தின் உச்சி. தொலைந்தது இன்று ஈண்டு. நயந்தான் - மகிழ்ந்தான்: நயப்பு - விருப்பம்.

41. பொங்கு - மிகுந்த. காக தீர்த்தம் - கனக தீர்த்தம்: காக்கைக் குளம்.

42. கஞ்சம்மேல் - தாமரைமலரின்மேல். வளை - சங்குகள். நித்திலம் - முத்து. அஞ்சம் - அன்னப் பறவைகள். நீர் விஞ்சு வாவி - தண்ணீர் மிக்க குளம். பொழில் - சோலை. மஞ்சு உலாவிய புரிசை - மேகம் சஞ்சரிக்கும் மதில்.

43. மாதரின் - பெண்களைப்போன்று; இன்: ஐந்தனுருபு. அலகு இல் பூவை - எல்லையில்லாத நாகணவாய்ப்புட்கள். புலவு வேல் - புலால் நாற்றம் வீசும் வேற்படை.

மறைமு ழக்கமு மங்கல முழக்கமு மாறு
மறுகி னெய்தினன் வலங்கொடு சென்றுநாண் மலரின்
பொறை சுமந்திடு பொன்னியி னிலங்கெழிற் பூசத்
துறைப டிந்துவே தியர்க்கிரு நிதிமழை சொரிந்தான். 44

சென்று சத்திதன் னருட்புனல் படிந்தனன் செம்பொற்
குன்ற மொத்தொளிர் குணதிசைக் கோபுர வாயில்
ஒன்றி யுட்புகுந் தான்றொடர் கொடும்பழி யொருபால்
நின்ற தந்தகன் விழிகெட நிற்பது போல. 45

துன்னி லிவ்விடை மருதினெவ் வினைகளுந் தொலையும்
என்ன யாவரு மறிந்திடற் கிலகொரு கரியாய்
அன்ன வெம்பழி சோர்ந்துநின் றிடுதலு மாங்குப்
பன்னு வேந்துவன் றளைவிடு பட்டவ னெத்தான். 46

பின்னர் நோக்கினன் கண்டிலன் பழியினைப் பெரிதும்
துன்னு மானந்தக் கடலிடை மூழ்கினுன் சுருதி
என்னும் வண்டுசூழ்ந் தொலித்திட மருதிடத் திருக்கும்
மின்னு வார்சடைத் தேனினைப் பருகினுன் விழியால். 47

---

44. மறுகின் - தெருவில். நாண் மலர் - அன்றலர்ந்த பூக்கள். பொன்னியின் இலங்கு எழில். பூசத்துறை - தைப்பூசநாளில் இறைவர் தீர்த்தம் கொடுத்தருளும் துறை; தைமாதத்திலே பூசநட்சத்திரத்தில் யாவரும் ஸ்நானம் செய்யும் திருவிடைமருதூர்க் காவிரித்துறை. படிந்து - முழுகி. நிதி மழை: பண்புத்தொகை.

45. சத்தி தன் அருட்புனல் - காருண்ணியாமிர்த தீர்த்தம். குண திசை - கிழக்குத் திக்கு. ஒருபால் - ஒரு பக்கத்தில். அந்தகன் - குருடன்.

46. துன்னில் இ இடைமருதின். இலகு ஒரு கரி ஆய். துன்னில் - பொருந்தின். இடைமருதூரை அடைந்தால் என்றபடி. கரி ஆய் - சான்றாக. சோர்ந்து - வாட்டமுற்று. வேந்து - வரகுணபாண்டியர். வன் தளை - வலிய விலங்கு.

47. சுருதி - வேதங்கள். தேன் என்றது சிவபெருமானை. ''அந்த இடைமருதில் ஆனந்தத்தேனிருந்தபொந்து'' என்றருளினர் ஸ்ரீ மாணிக்க வாசகசுவாமிகள். சுருதியை வண்டாக உருகிவத்தார். மருது தலவிருட்சம்; சிவபெருமான் தாம் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்களை உமாதேவியாருக்குக் காட்டிக்கொண்டு திருவிடைமருதூருக்கு நேரே வரும்போது, திருக்கைலை அவரது பிரிவாற்றுமல் மருதவிருட்சமாக இங்கு நின்றது என்பது வரலாறு. விழியால் பருகினுன் என்க.

தொழுதெ ழுந்துள முருகிட விழிகணீர் துளும்பச்
செழும லர்க்கர சரோருகஞ் சென்னிமேற் குவிய
முழுது மாகிய கடவுட னருளினை முன்னி
எழுது சித்திர மாமஃ தெனும்படி நின்றான். 48

பொன்னி சூழிடை மருதுறை பூரண புராண
முன்ன ரெய்திய பவங்களின் மொழியுமீண் டெய்தி
உன்ன டித்துணைத் தாமரை யொளிமலர் காண்டற்(கு)
என்ன புண்ணியஞ் செய்தன னேழையே னம்ம. 49

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஒலிகட லெழுந்த நஞ்சை யொளிர்மிடற் றடக்கி வானோர்
குலமுதல் புரந்த தென்னக் கூற்றினை யுதைத்தோர் பாலன்
இலகிடக் காத்த தென்ன வேழையன் றனையு மிந்நாள்
வலியுறு பழிதீர்த் தாண்ட மருதநா யகனே போற்றி. 50

அளவையென் றிசைப்ப தாலும் அரிமுதற் றேவ ராலும்
தெளிவுற வுணர வொண்ணுச் சிவபரஞ் சுடரே திங்கட்
பிளவுறு சடையாய் வேற்கட் பெருநல முலையாள் பாக
வளரிடை மருதின் மேவு மருதநா யகனே போற்றி. 51

---

*48. கர சரோருகம் - கைத்தாமரைமலர்கள். முழுதும் ஆகிய கடவுள் - சிவபெருமான். ''ஒன்றும் நீயல்லை அன்றி ஒன்றில்லை'' எனவும், ''எல்லா மாய் அல்லதுமாய் இருந்ததனை'' எனவும் கூறிய திருவாக்குக்களான் அறிக. ''எல்லை யில்லதோர் பொருளெலா மாகுறும் யாவும், அல்ல ணுகியு மிருந்திடும் அருவமுமாகும், பல்வ கைப்படு முருக்கொளும் புதி யரிற் பயிலும், தொல்லை யாதியா மநாதியு மாகியே தோன்றும்'' (கந்த புரா: மகேந்திர: அவைபுகு - 139 செய்.) முன்னி - சிந்தித்து. சித்திரம் ஆம் இஃது.*

*49. பூரணன் - எங்கும் நிறைந்தவன். புராணன் - யாவற்றினுக்கும் பழமையானவன். 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே' என்றருளியமை காண்க. பவம் - பிறப்பு.*

*50. நஞ்சு - ஆலகாலவிடம். கடல் என்றது திருப்பாற்கடலை. மிடற்று அடக்கி: மிடறு - கண்டத்தில். பாலன் - மார்க்கண்டேயர். காத்தது என்ன, புரந்தது என்ன: என்ன உவமவுருபு. வலி உறு பழி - பிரமகத்தி.*

*51. முதலிரண்டடிகள்: ''மறையினுல் அயனுன் மாலான் மனத்தி ணுன் வாக்கான் மற்றும், குறைவிலா அளவினுலும் கூறெணு தாகி நின்ற,*

தொல்லேவன் பிறவி யென்னுந் தொடுகட லிடையின் வீழ்வுற்(று)
அல்லலி னழுந்து வேனே யருளெனுந் தோணி தன்னில்
வல்லேவந் தேற்றிக் கொண்டுன் மலரடித் துணைக ளென்னும்
மல்லலொண் கரையிற் சேர்த்த மருதநா யகனே போற்றி. 52

என்றெதிர் நின்று போற்று மிலங்கிலே வேலி னுனேக்
குன்றினை வளைத்தோன் மன்னு குணதிசை வாயி லின்பால்
நின்றது பிரமகத்தி நீயந்த நெறியி னேகல்
சென்றிடு மேலே வாயிற் சிறந்திடு நெறியா லென்ருன். 53

விண்ணிலங் கிதனைக் கேளா மீனவன் மகிழ்ந்து மீண்டு
மண்ணுற வணங்கிப் போற்றி வலவயி னிமையச் செல்வி
நண்ணுபூங் கோயி லெய்தி நளினமெல் லடியில் வீழ்ந்தான்
எண்ணுள முருகி னுன்மற் றெழுந்திவை துதிசெய் வானுல். 54

---

இறைவனுர் கமல பாதம்'' எனும் சிவஞானசித்தித் திருவிருத்த அடிகளை ஒற்றியது. அளவை - பிரமாணம்: அஃதாவது, பொருள்களை அளக்கும் கருவியாம். பொருள் கண்ணுல் காணப்படும் உலகப் பொருளும், அங்ஙனம் காணப்படாத பதி பசு பாசப் பொருள்களும் என இருவகைப்படும். அவற்றுள், கண்ணுல் காணப்படும் பொருளை எண்ணல் எடுத்தல் நீட்டல் முகத்தல் என்னும் கருவிகளான் அளக்கலாம். கண்ணுல் காணப்படாத பதி பசு பாசப் பொருள்களை அக்கருவிகளான் அளக்க முடியாது. அதனை, ஆகமம் அனுமானம் என்னும் கருவியைக்கொண்டு ஆன்ம சிற்சத்தியால் அளத்தல் கூடும். இதனுல் ஆன்ம சிற்சத்தியே பிரமாணமாம்; கருவிகளும் உபசாரத்தால் பிரமாணம் எனப்படும் என்க. திங்கட்பிளவு - பிறைச் சந்திரன். பெருநலமுலேயாள் என்பது இத்தலத்து அம்பிகை திருநாமம்.

52. தொடு கடல் - சகரர்களால் தோண்டப்பட்ட கடல்: சாகரம் என்பது. அல்லல் - துன்பம். பிறவியைக் கடலாகவும், அருளைத் தோணியாகவும், மலரடிகளைக் கரையாகவும் உருவகம் செய்து அல்லலை வெள்ளமாகக் கூருமையின் ஏகதேசவுருவக அணி. வல்லே - விரைவாக. மல்லல் - வளப்பம்.

53. வேலினுன் - வரகுண பாண்டியன். குணதிசை - கிழக்குத் திக்கு. நெறியின் - வழியிலே. ஏகல் - செல்லாதே; வியங்கோள்: அல்விகுதி.

54. மீனவன் - பாண்டியன். மண்ணுற - பூமியில் படிய. வல வயின் - வலப் பக்கத்திலே. நளினம் - தாமரை. எண் உளம் - மதிக்கத்தக்க மனம்; எண்ணுகின்ற மனம் எனினுமாம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தெரித்திடு மளவி லண்டங்க ளீன்று திகழ்பெருங் கருணைமென் சிறகா
விரித்தணைத் தவற்றைக் காத்தினி திலங்கும் வியனுறு பனிவரை மயிலே
பரித்திடு மினிய பொருட்பிர ணவமாம் பஞ்சரத் துறைபசுங் கிளியே
வரித்தட நெடுங்கட் பெருநல முலையே வயங்குபெண் ணமுதமே போற்றி. 55

குருமணி விளக்கே யிசைதரு வேதக் கொம்பரிற் படரிளங் கொடியே
வரமுறு பலன்மிக் குதவுமா கமத்தே மாவில்வாழ் சிறுகருங் குயிலே
பரவிடு மிமையோர் மணிமுடி யுரிஞ்சு பதயுகத் தொருசுவைக் கரும்பே
மருதிடத் திறையோன் மனத்தடத் துலவு மடப்பெடை யன்னமே போற்றி. 56

போற்றியென் றினைய வகைபல துதித்துப் பூதநா யகனுரைப் படியே
மேற்றிசை வாயி னெறிக்கொடு மறுகின் மேவினன் விளம்புமத் தலத்தே
வீற்றிருப் பதனுக் குளத்தின்மீ தூரும் விருப்பினு லுயர்நெடு மறுகின்
பாற்றனி வசதி செய்தினி திருந்தான் பார்த்திபர் திறைகொணர்ந் துதவ. 57

இன்னவ னிலங்கு மிடைமரு தணுகி யிகலுறு பழிதொலைத் துவகை
மன்னியாங் கிருக்கும் வகையுணர்ந் தார்த்தார் வனைந்திடு வரைப்புய வளவன்
தன்னுறு முதுவர் தமைவிடுத் துறவு சாற்றிமுன் னிசைவுற வடைந்து
கன்னியைமணஞ்செய் திடக்கொடுத்திடலுங் களிப்புற வதுவைசெய்தனனல்.

---

55. வியன் - பெருமை. பனிவரை - இமயமலை. மயில் - மயில் போன்ற சாயலையுடைய உமாதேவியார். பஞ்சரம் - கூடு. கருணையைச் சிறகாகவும், உமாதேவியை மயிலாகவும்; பிரணவத்தைப் பஞ்சரமாகவும், அம்மையாரைப் பசுங்கிளியாகவும் உருவகம் செய்தார். அண்டம்-உலகம்: முட்டை என்னும் பொருள் தொனித்தல் காண்க. அண்டங்கள் ஈன்று சிறகை விரித்து அணைத்துக் காக்கும் மயில் என்றது நயம்.

56. குரு மணி விளக்கு - இரத்தின தீபம்: குரு - நிறம். மணி - நீல மணி; மாணிக்கம் எனினுமாம். இசை தரு வேதம் - இசை பொருந்திய வேதம்: இசைதரு - பொருந்திய எனினுமாம். இசை - சாமகானம்: சந்தஸ். வேதத்தைக் கொம்பாகவும், அம்மையாரைக் கொடியாகவும்; ஆகமத்தைத் தேமாவாகவும், அம்மையாரைக் கருங்குயிலாகவும் உருவகித்தார். பதயுகம் - இரண்டு திருவடிகள். மனத் தடம் - மனமாகிய தடாகம்: தடம் - இடம், தடாகம். சிவபெருமான் மனத்தைத் தடாகமாகவும், அம்மையாரைப் பெடையன்னமாகவும் உருவகம் செய்தமையும் காண்க.

57. பூதநாயகன் - பூதகணங்கட்குத் தலைவன். மறுகின் - திருவீதியில். உளத்தின் மீதூரும்: மீதூரும் - அதிகரிக்கும். திறை - கப்பம்.

58. இகல் உறு பழி - வலிமை மிக்க பிரமபாவம். ஆர்த் தார் - ஆத்திப்பூ மாலை. வளவன் - சோழன். முதுவர் - பெரியோர். வதுவை - கல்யாணம்.

படிபுரந் திவ்வா ருங்கினி திருக்கும் பஞ்சவ னிலங்கெழின் மருதக்
கடவுளைத் தினமுஞ் சதவலம் புரிந்து காலங்க டொறும்பணிந் தேத்திக்
குடதிசை வாயிற் கோபுர மியற்றிக் கூடல்வா ழிறையவன் றனக்கு
வடதிசை வயினே ராலய மிழைத்து வணங்கிப்பி னரும்பணி செயுநாள். 59

பாகுறு கங்குல் பகலிரு பொழுதும் பயின்றிடு தவத்தினல் மெலிந்தி
டாகமுன் னேக்கி மருதிறை யொருநா ளரசனுங் கிறைஞ்சிடு வேலை
வாகுறு குமுத வாய்மலர்ந் தீண்டு வரகுண வருகென மகிழ்வுற்(று)
ஏகநா யகனே போற்றியென் றிறைஞ்சி யிருகையுங் குவித்தெதிர் நின்றான்.

மருதிறை யவனை நோக்கிநங் கயிலை மணிதிகழ் கொடுமுடி கடுக்கும்
ஒருமதில் வகுத்து நமதுரைப் படிநீ யொருவலம் புரியினுள் ளஃது
பரவுமா யிரநே ராமென வுரைத்தான் பரவிமற் றவன்சில பகலில்
விரவுமத் திறஞ்செய் திறைஞ்சின னரனு மீனவ கொண்டுநா மென்றான். 61

வேந்தனித் திறமீங் கென்னையெஞ் ஞான்றும் விமலநீ புரத்தியென் றிரந்தான்
பாந்தளம் பணியா னத்திறம் புரக்கப் படுதியென் றிசைத்தனன் மகிழ்ந்து
தேந்துளித் திடுதண் கற்பகத் துணர்கள் சிந்தினர் தேவர்தங் கணங்கள்
வாய்ந்தபே ருவகைக் கடலிடைத் திளைத்து மன்னவன் துதிபல புரிந்தான். 62

துட்டனு மொருகள் வனைச்சிரந் துணிப்பான் துணைப்புய மிணைப்புறக் கட்டிக்
கட்டுட னகர்கா வலர்கொடு செலுங்காற் கரவடன் திருவெணீ றணியப்
பட்டிடு மினைய திறனறிந் தவனைப் பரிந்தழைத் தனையகட் டவிழ்த்துச்
சிட்டர்போற் றிறையோ னடியனீ ரென்று சிலநிதி கொடுத்தனன் விடுத்தான்.

---

59. படி - பூமி. பஞ்சவன் - பாண்டியன். சத வலம் - நூறு பிரதக்கிணம். கூடல் வாழ் இறையவன் - சொக்கலிங்க மூர்த்தி. அரும் பணி - அரிய திருத்தொண்டு.

60. மெலிந்திடு ஆகம். இறைஞ்சிடு வேலை: வேலை - சமயம். குமுத வாய் - செவ்வல்லி மலர்போன்ற வாய்.

61. கடுக்கும் - ஒக்கும். ஆயிரம் நேர் ஆம்: நேர் - ஒப்பு. கொண்டும் நாம் - நாம் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டோம்.

62. எஞ்ஞான்றும் - எப்பொழுதும். புரத்தி - காப்பாய். பாந்தள் அம் பணியான் - பாம்பாகிய அழகிய ஆபரணத்தையுடைய சிவபெருமான்: பாந்தள் - பாம்பு. பணி - ஆபரணம், பாம்பு. பாந்தள் அம் பணி என்றது நயம். கற்பகத்துணர் - கற்பகப் பூங்கொத்துக்கள்.

63. கள்வன் - திருடன். கரவடன் - வஞ்சகன். சிட்டர் - ஒழுக்கம் உடையோர்.

ஓடிடு நரியி னூளைகேட் டொளிரும் உடுபதி தொடுமதில் சூழ்ந்த
கூடலங் கயற்க ணுமையிடத் திறையைக் கூவின வெனவெழுந் திரவில்
தேடிமற் றவற்றைக் கொடுவர வுரைத்துத் தெரிக்குமன் னவற்றினுக் கிலகும்
ஆடைக ளுடுத்து விடுத்தன னெமைத்த னடிமையாக் கொண்டதென் னவர்
[கோன். 64

குவளையும் பொலியுஞ் சலசமு நிறைந்த குளிர்புனற் றடத்தொரு பகலில்
தவளைக ளரற்று மோதைகேட் டிமஞ்சூழ் தடவரைத் தோற்றுவேற் கண்ணள்
அவளையோர் புறத்தி லிருத்துமெங் கோனை யரகர வென்றன வென்னத்
திவளைவின் மணியுங் கனகமும் வாரிச் சிந்தினன் பைந்தமி ழிறைவன். 65

வழிபடு மொருவன் மஞ்சனக் குலரு மணிவிரை யெள்ளினை நுகர
விழிதனிற் கண்டு பிடித்திதே தென்ன வினவிமற் றவனிடை மருதின்
மருவலான் றனக்கே யடிமையாய்ப் பின்னும் வந்துதித் திடவெனப் புகலத்
தழுவிநின் னுளாய்ப் பிறந்திடற் கெளியேன் றருகென்றேற் றவனெச்சில்
[நுகர்ந்தான். 66

மறந்திகழ் சிறிய குலந்தனிற் பிறந்து
மற்றெருரு களவினுல் வெட்டுண்(டு)
இறந்தவன் றனதூன் றவிர்ந்தவெண் டலையை
யிடைமரு தெல்லையி னேக்கி
அறந்திகழ் கரத்தா லெடுத்திழி விழிநீ
ராட்டியென் றலையுமுன் றலைபோல்
சிறந்திடிப் பதியிற் கிடந்திடுங் கொல்லோ
சிதைந்தொரு நாளெனப் பகர்ந்தான். 67

---

64. உடுபதி - சந்திரன்: உடு - நட்சத்திரம். தென்னவர்கோன் - வரகுணபாண்டியர்.

65. குவளை - நீலோற்பலம். சலசம் - தாமரை. திவள் ஐ வில் மணி - அசையாநின்ற அழகிய ஒளியையுடைய இரத்தினங்கள்; ''திவளொளி மணியு முத்தும்'' (நைடதம்). கனகம் - பொன். பைந்தமிழ் இறைவன் - பாண்டியன்.

66. மஞ்சனக்கு - மஞ்சனத்துக்கு: அத்துச்சாரியை கெட்டது: மாடக்கு என்பதுபோல. பிடித்து இது ஏது என்ன. தருக என்று ஏற்று.

67. மறம் - பாவம். சிறிய குலம் - இழிந்த சாதி. ஊன் தவிர்ந்த வெண்டலை: ஊன் - தசை. விழிநீர் ஆட்டி - கண்ணீரால் அபிஷேகித்து. சிறந்திடு இப்பதியில். சிதைந்து - சிதறுபட்டு.

பாலுறச் சிலர்கள் கருணையந் தடத்திற் படிந்துபோய் வலன்வரு போழ்தில்
ஆலய முன்றிற் கிடந்தநாய் மலங்கண் டகற்றிறேற் கிதனை நம் முலகில்
நாவிலொன் றிரண்டு மூன்றொடு முழுது நல்குவ மெனமுறை குறித்தாங்(கு)
ஏலுநால் வலங்கா றெடுத்திடக் காணு னெனது நாடெனக்கென வெடுத்தான்.

தேம்பனுண் ணிடையா ரிசைத்திடு மிசைகள் செல்பவர் தமையெலா நிறுத்து
மேம்படு மறுகின் வலன்வரு பொழுது வீழ்ந்தபொற் கனியுருக் கண்டு
பாம்பணி சடையோன் படிவமே முழுதும் பழுத்துநின் மனவெனப் பணிந்து
வேம்புகட் கெல்லாங் கதிருமிழ் மணிசூழ் விதானமேற் சமைத்தனன் மன்னே.

மற்றொரு தினத்துக் கங்குலிற் கணிதர் வகுத்தநல் லோரையி னூர்த்தார்க்
கொற்றவ னளிக்க வதுவைமுன் புரிந்த கோமளப் புதுமலர்க் கொடியைச்
சிற்றிடை நெடுங்கட் சேடியர் செழியர் திருமக னினிதுவீற் றிருக்கும்
பொற்றிரு மனையி லுய்த்துமீண் டனர்பூங் கொடியெழில் சிறிதெடுத் திசைப்
[பாம். 70

கெண்டையங் கணினுள் கூந்தலுக் குவமை கிளத்துதற் கியாதுள ததுநீள்
கொண்டலின் குழுவைக் காலினு லுதைத்துக் குலவிவண் டினத்தைநா ணுறுத்
தண்டரு பிரச மலர்க்கடுக் கையினைச் சைவலத் தினைவனத் தகற்றி [தித்
அண்டிநள் ளிருளியா னிகரெனப் புலவோ ரல்லெனச் சொல்லிநின் றிடினே.

---

68. கருணையந்தடம் - காருண்ணியாமிருததீர்த்தம். பால் உற - பக்கத்திலே பொருந்த. முன்றில் - முற்றம்: இல்முன். நால்வலம் காறு - நான்குமுறை வலம்வரும் வரையில்.

69. தேம்பல் நுண் இடையார்: தேம்பல் - இளைத்தல், வாடல். இசைகள் - இசைப்பாட்டுக்கள். பொற்கனி - பொன்போன்ற நிறமுடைய கனி. நின்மன - நிற்பன. பாம்பணி சடையோன் படிவம் - சிவலிங்க வடிவு. விதானம் - மேற்கட்டி.

70. கணிதர் - சோதிடர். ஆர்த்தார்க்கொற்றவன் - சோழ அரசன்: ஆர் - ஆத்தி. தார் - மாலை. வதுவை - கலியாணம். கோமளம் - அழகு. சேடியர் - தோழிகள். செழியர் திருமகன் - பாண்டியன்.

71. கிளத்துதற்கு - சொல்லுதற்கு. யாது உளது அது. கொண்டல் - மேகம். கால் - காற்று, பாதம். வண்டு இனம் - வண்டுக்கூட்டம். நாணுறுத்தி - வெட்கச்செய்து, நாணிலே பொருந்தவைத்து. பிரசம் - தேன். கடுக்கை - கொன்றை. சைவலம் - நீர்ப்பாசி. வனம் - காடு, நீர். நள் இருள் யான் நிகர் என்ன. அண்டி - நெருங்கி. நள் இருள் - நடு இருட்டு. புலவோர் - வித்துவான்கள், தேவர்கள். அல் என - இருட்டு என்று, அல்ல என்று.

கனிதரு சுவையு மமிர்தமு நிகர்சொற் காரிகை யெழிற்றிரு வதனம்
பனிமதி யொளியுந் தருப்பணத் தெளிவும் பங்கயப் புதுமலர்ச் சியுங்கொண்
டினிதுநான் முகத்தோன் கரத்தினு லன்றி யிலங்குபற் பலதினங் கருத்தால்
தனியிருந் தமைத்தா னெனிலதற் குவமை சாற்றுதற் கெளிதினெய் திடுமோ.

மின்னுசூற் படையோன் விரிசடைப் பிறையின் விளங்கெழிற் றிலதமொன் [றுளதேல்
அன்னவ னுதலிற் குவமையாம் புருவ மதற்குநே ரணங்கிவள் குனிக்கும்
கன்னல்வெஞ் சிலையைக் கருதுமெம் முள்ளங் கருதஃ தினியதோ பிறிதோ
இன்னெழி னுசிக் கியைந்திடா தன்றோ வெள்ளல ரானதெண் மலரே. 73

கயலினிற் பிறழ்ந்து குவளையின் மலர்ந்து கடுவினிற் கறுத்துநீண் டரி
இயமனைத் தரும னெனவுயிர் வாட்டி யிசைவரி களைச்சிறைப் படுத்தி [யுற்(று)
மயலுறு பிணையின் பார்வைகொண் டிலகு மடக்கொடி கூர்விழிக் குவமை
முயலுறு கணைவேல் வாளெனச் சிறிது மொழிவதோ முன்னினும் பிழையே.

முத்தினத் தளவை வடிவினு லன்றி மொழிநிறத் தாலுமொண் முறுவல்
ஒத்திடுந் தேனூ றிதழினைத் துவரென் றுரைக்கவவ் வுரையுமொவ் வாது
நத்தினைக் கமுகைக் கந்தர முறமு நவிலவள் கந்தர மெனவே
அத்தகைச் சங்குங் கமுகும்வீற் றிருக்கு மவையித ரேதர முறவே. 75

---

72. கனிதரு - முதிர்ந்த; கனிதருசுவை - பழச்சுவை. ''அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு'' (திருவாசகம்). வதனம் - முகம். தருப்பணம் - கண்ணாடி. பங்கயம் - தாமரை.

73. சூற்படை - சூலாயுதம். திலதம் - பொட்டு. நுதல் - நெற்றி. அணங்கு இவள். குனிக்கும் - வளையச்செய்யும். கன்னல் வெம் சிலை - கரும்புவில். எள் மலர் - எள்ளினது பூ. எள் அலரானது - எள்ளுதற்குரிய பழியாயிற்று: எள்ளுதல் - இகழ்தல். அலர் - பழிமொழி. 'எள்ளலரானது எண்மலர்' என்றது நயம். இன் எழில் நாசிக்கு.

74. கயலினின்: இன் உவமவுருபு. குவளை - கருங்குவளை: நீலோற்பலம். கடு - விடம். அரி உற்று - செவ்வரி கருவரிகள் பொருந்தி. இயமன் தருமன் என்பன ஒருபொருட் சொற்கள். தருமன் - தருமத்தையுடையான் என வேறுமொருபொருள் தொனித்தல் நயம். இசை வரி - இசைப் பாட்டினையுடைய வண்டுகள்; ''வரி பாட்டுளர்'' ''வரி கவ்வாணம் பாடும்'' ''வரிநேர் திறம்பாடும்'' ''பண்ணிசை வரியின் கணம்'' (கோடீச்சுரக்கோவை). பிணை - பெண்மான். முன்னினும் - கருதினும்.

75. முறுவல் - பற்கள். தேன் ஊறு இதழினை. துவர் - சிவப்பு. நத்து - சங்கு. கமுகு - பாக்குமரம். கந்தரம் - கழுத்து. இதரேதரம் -

கனைகடற் பிறந்த வமிர்தனுள் வரிக்கட் கயல்பொருங் குழையெழிற் காது
தனையெதிர் நோக்கு மிளைஞரா வியைக்கத் தரித்திடு கருவியே யாகும்
நனைமலர்ப் பகழி தொடுசிலைக் காளை நளினபங் கயமலர் பூத்துப்
புனையெழிற் றெளிநீர் நிறைவுபெற் றினிதாய்ப் பொலிந்திடு வாவியே
[கபோலம். 76

மீனெனுந் தடங்கட் பிறைநுதற் றிருவின் மென்மொழி தனைக்கரும் பிரதம்
தேனுயர் கனிபா லமிர்தமென் றுரைப்பர் சிலர்சில ரிவைசெவிக் கின்ப
மானதுற் றுதவுந் திறத்தவோ கலைப்பெ ணங்கையிற் பரித்திடு மியாழின்
கானமென் றுரைப்ப நாமினி வேறு கட்டுரைத் திடுவதென் னம்ம. 77

கனங்குழை மடந்தை யெழில்கனிந் தொழுகுங்
கதிரிளந் தடமுலை வரிவில்
அனங்கவேண் மனம்வைத் திடுமணிச் செப்பு
மவன்புனை மகுடமு நிகர்க்கும்
வனங்கொள்புற் புதந்தோற் றுடன்குலை வதுவும்
வனசமென் முகையுடைந் திடலும்
இனங்கிள ரவையிற் ருளமொன் றுடொன்றுற்
றிகல்வது மிதினுரு விளைவே. 78

---

ஒருவகையணி; அஃது பொருள் ஒருக்கால் உவமையாயும் உவமை ஒருக்கால் பொருளாயும் ஒரு தொடர்க்கண் வருவது. இதரவிதரம் - ஒன்றற் கொன்று; தண்டியலங்காரம். ''அந்நியோந்நியோப உவமை'' என்பர் முதனூலார். தடுமாறுவமம் என்பர் தொல்காப்பியர்.

76. கனை கடல் - ஒலிக்கும் கடல். அமிர்து அ(ன்)னுள். பொரும் - போர்செய்யும். இளைஞர் ஆவியை கத்தரித்திடு: நனை - அரும்பு. மலர்ப் பகழி - மலரம்புகள். சிலைக்காளை - மன்மதன்: சிலை - வில். நளின பங்கயம்: பண்புத்தொகை. கபோலம் - கன்னம்.

77. கரும்பு இரதம் - கருப்பஞ்சாறு. கலைப்பெண் - சரசுவதி. பரித்திடும் - தாங்கும். கானம் - இசை.

78. அனங்கவேள் - மன்மதன்: பண்புத்தொகை. வனம் கொள் புற்புதம்: வனம் - நீர். புற்புதம் - குமிழி. குலைவது - அழிவது. வனசமென் முகை - தாமரையரும்பு. உடைந்திடல் - கட்டுவிடுதல், தோற்றோடுதல். இதின் உரு விளைவே.

கோலமுற் றிலகு வயினதற் குவமை குலவுமா லிலேயெனச் சொலினவ்
வாலிலே யொருநீள் கருமயி ரொழுங்கு மடியிலோர் சுழியுமுற் றிலதா
வேலுறு பசுந்தோ ளிணையையுட் புரைகொள் வெதிர்நிகர்த் திடுங்கொல் [பைங் கன்னல்
ஏலுமென் றிடினெத் திடுமொரு வகைமற் றிருகையுங் காந்தளே யேய்க்கும். 79

வடிநெடுங் கண்ணி யிடைக்குநே ரென்று வந்திடு நிமித்தினு லின்னும்
துடியினம் பலர்பா லடிபடு மின்னுந் தோற்றுமுன் னொளிக்குமெம் மனத்தும்
கொடியிழை மதவே ளுடல்பணி மலர்ப்பூங் கொம்பிவை சிறப்பில செங்கைப்
பிடியென லதுவோர் பிடிமடங் கலினைப் பேசலா மறியமே லிரண்டும். 80

பங்கயப் பரும வல்குலுக் குவமை ப்டிசுமந் திடுமராப் படமும் [னும்
செங்கதிர் மணிப்பொற் றேருமா மென்னத் தெரிக்கலாந் தெரிந்திடப் பெறி
இங்கிவை யிரண்டி னுயர்ந்துள தொன்றே யிலங்கவள் கவானினை நிகர்க்கும்
அங்கனிந் திடுநீ டரம்பைகள் தலைகீ ழாகநின் றிடுமஃ திலையே. 81

---

79. வயின் - வயிறு. கருமயிரொழுங்கு - ரோமாவலி. சுழி - கொப்பூழ். வெதிர் - மூங்கில். உட்புரை - உட்டுளை. பைங்கன்னல் - பசிய கரும்பு. காந்தள்: ஆகுபெயர்.

80. வடி - மாவடு. நிமித்தினுல் - காரணத்தால்: ஏதுவால் என்றபடி. துடி இனம் - உடுக்கைக் கூட்டம். மின் - மின்னல். தோற்று - தோல்வியுற்று. ஒளிக்கும் - மறையும்; ஒளியைச்செய்யும் என்னும் வேறு பொருள்படுதலும் காண்க. துடியின் நடுவையும் மன்மதனையும் மின்னலையும் கைப்பிடியையும் சிங்கத்தையும் மகளிர் இடைக்கு உவமை கூறுதல் மரபு. ''இடைக்கிணை யாமெனப் போந்து சிலர், கையி னடிபட் டரற்றும் துடியதைக் கண்டு வெம்போர், செய்யுங் கணைமதன் கண்மறைவாகித் திரிந்திடுமே'' (கோடீச்சுரக்கோவை-11) ''இடை, சாயலுறு நற்றுடியை வாயிலறை வித்திடுமோர் சிங்கமே'' (சர - குற). மடங்கல் - சிங்கம். இது தற்குறிப்பேற்ற வணி. பருமம் - பதினெட்டுக்கோவை மணிவடம்; ''எண்கோவை மேகலை காஞ்சி யெழுகோவை, பண்கொள் கலாபம் பதினறு - கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று'' என்ருராகலின்.

81. பங்கயப் பரும அல்குல்: பங்கயம் - தாமரை மலர். ''திருமுகங் கமல மிணைவிழி கமலம் செய்யவாய் கமலநித் திலந்தாழ், வருமுலை கமலம் துணைக்கரம் கமலம் வலம்புரி யுந்திபொற் கமலம், பெருகிய அல்குல் மணித்தடங் கமலம் பிடிநடைத் தாள்களுங் கமலம், உருவவட் கவ்வா ருதலினன்றே யுயர்ந்தது பூவினுட் கமலம்'' (தணிகைப்பு - களவுப் - செய் 43) படி - பூமி. அரா - ஆதிசேடனுகிய பாம்பு. கவான் - துடை. அம் கனிந்திடும் - அழகு முதிர்ந்த. அரம்பை - வாழை. ''துடைவாழை மேல் மட வாரல்குற் பாம்பு தொட மயங்கி'' (நால்வர் நான்மணிமாலை).

அன்னமென் னடைச்சிற் றிடைமலர்க் கோதை யணிமுழந் தாளிணை நோக்கின்
இன்னது முழந்தா ளலவனென் பவற்று ளியாதுகொ லெனவரு மையம்
பொன்னியந் துறையிற் பயில்சினை வராலும் புகன்றிடு மிவள்கணைக் காலும்
மன்னநு தினமும் விரோதமுற் றெதிர்த்து மல்லிழைத் திடுநிக ராகி. 82

மயிலின மெவையும் பிணிமுக மாகி வரையிடைத் திரிந்திட வவற்றின்
இயல்கவர்ந் திடுமின் சீரடித் தளிர்தன் னெழிலெலாங் கவர்ந்ததென் றன்றோ
பயிலுறு வனசம் பங்கமுற் றின்னும் பன்னுதன் றலைவனென் றிசைக்கும்
வெயில்விரி பகலோன் முகனெதிர் நோக்கி மென்கணீர் ததும்பநிற் பதுவே.

இன்னண மியம்பு மவயவ மெவையு
மிலக்கணத் திசையெழில் கனியப்
பொன்மணிச் சதங்கை சிலம்புமே கலைவிற்
பொலிதொடி குழைதனிச் சுடிகை
வன்னவெண் டரள வடமுத லணிகள்
வனைந்துவந் தவனியி னுலவோர்
மின்னெனக் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கு
மெல்லிய லென்னமுன் னின்றுள். 84

---

82. மலர்க்கோதை: அன்மொழித்தொகை. அலவன் - நண்டு. ஐயம் - சந்தேகம். வரால் - மீன்வகையினென்று. மல் - மல்லயுத்தம்.

83. பிணிமுகம் - மயில்: பரியாயப்பெயர். நோயுடையனவாய் என வேறுபொருள்படுதல் காண்க. மின் சீரடித்தளிர் - மின்னற்கொடிபோன்ற இப்பெண்ணினது சிறந்த அடியாகிய தளிர். தன் என்றது வனசத்தை. வனசம் பங்கம் உற்று - தாமரை குற்றத்தை அடைந்து. பங்கம் - சேறு என வேறுபொருள் காண்க. வனசம் - நீரில் தோன்றுவது; பங்கசம் - சேற்றில் முளைப்பது என்னும் காரணக்குறி. பன்னு தன் தலைவன் என்று இசைக்கும் - சொல்லப்படுகின்ற தன்னுடைய நாயகன் என்று கீர்த்தி பொருந்தும். பகலோன் - சூரியன். முகன் எதிர்நோக்கி - முகத்தை எதிராகப் பார்த்து. முகம்: முகன் இறுதிப்போலி. கண்ணீர் ததும்ப - கண்களினின்று நீர் பெருக. கள் நீர் ததும்ப: கள்நீர் - கள்ளாகிய நீர். மயில் வரையிடைத்திரிந்திட வனசம் பங்கமுற்று நிற்பது என்றது நயம்.

84. இலக்கணம் என்றது சாமுத்திரிகா இலக்கணத்தை. எழில் கனிய - அழகுகளெல்லாம் முதிர: முற்ற என்றபடி. தனி சுடிகை - ஒப்பற்ற நெற்றிச்சுட்டி. வந்து அவனியில் உலவு ஓர் மின் என. அவனி - பூமி. கமலப்பொகுட்டு - தாமரைப்பீடம்: பொகுட்டென்றது தாமரைப் பூங்கொட்டையை. மெல்லியல் - திருமகள்.

கண்டன னரசன் கடலமு தனையாள் கச்சினைக் கிழித்தெழு தனமும்
வண்டமர் விழியுங் கூந்தலுங் கரமு மதிதனை மயக்கிடு முகமும்
தொண்டையங் கனியிற் சிறந்தசெவ் வாயுந் துலங்கிடு பிறவுறுப் பெழிலும்
கொண்டன னிவண்மற் றிறையவன் றனக்கே கொடுத்திடத் தகுவளென்
[றெண்ணம். 85

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அன்னநடைப் பெண்ணமுதை யுடனழைத்துக் கொண்டுபிற ரறிந்தி டாது
சென்னிமதி தொடுமெழிற்றன் மனையொடுவீ தியுங்கடந்து சென்று கோயில்
மன்னுகடைத் தலைநின்று மருதநா யகவென்ருன் வல்லை யாங்கே
என்னிறைவன் மணிக்கதவு திறந்துவர குணவருதியென்ருன் மன்னே. 86

வையவள நாடனெங்கண் மருதிறைவன் முன்னணுகி வணங்கிநின்ருங்(கு)
ஐயவுனக் கிவடகுமென் றுளத்தினிடைக் குறித்திட்டே னடியே னிங்ஙன்
உய்யும்வகை கொண்டருணீ யின்றேன்மற் றுய்யேனென்றுரைத்தானேர்முன்
கையொழிந்த வுருவனைத்துந் தனதுருவிற் கரந்திட்டான் கருணை மூர்த்தி. 87

அத்திறமீ னவனேக்கி யிஃதெளியேன் தொட்டதென வகற்றி விட்ட
கைத்தலங்கொ லென்றனன்கண் ணுதலிதுவு முனதன்புங் காலைப் போதின்
முத்தமிழோ யுலகறியக் கோடுமென்ரு னவன்மகிழ்ந்து முன்றி லுற்ருன்
மொய்த்தமணிக் கதவமெலாங் கடிதுகாப் பாயினவான் முன்பு போல. 88

---

85. கச்சு - ரவிக்கை. வண்டு அமர் விழி - வண்டையொத்த கண்கள்: அமர்தல் - விரும்புதல். மதி - சந்திரன்: புத்தி எனப் பொருள் படுதல் காண்க. தொண்டைக்கனி - ஆதொண்டைக்கனி. தகுவள் என்று எண்ணம் கொண்டனன்.

86. பெண்ணமுது: பண்புத்தொகை. கடைத்தலை - திருவாயிலின் கண். வல்லை - விரைந்து. இறைவன் வரகுண வருதி என்ருன். என் இறைவன் - எமது சிவபெருமான்.

87. உனக்கு இவள் தகும். குறித்திட்டேன் - உறுதியாக எண்ணினேன். நீ கொண்டருள். முன் கை ஒழிந்த உரு அனைத்தும்.

88. மீனவன் - பாண்டியன். கண்ணுதல் - சிவபெருமான். உலகு அறிய கோடும்; கோடும் - கொள்ளுவோம். முன்றில் - வாயில். காப்பு ஆயின - திருக்காப்பிடப்பட்டன.

மாதினையு மன்னனையுங் கண்டிலராய் மனைக்கணுற்றோர் மருண்டு தேடிக்
காதியல்வே லிறையைவந்து கண்டுதனித் தேவியெங்குங் காணே மென்றார்
சோதியிடத் தினளென்று னிதுவென்கொ லெனவவர்க டுணுங்கி நின்றார்
ஓதிடுமப் போதுபுலர் போதாகப் பூசிப்பா னுரியோர் சூழ்ந்தார். 89

அன்னவர்பொற் கதவுதிறந் துள்புகுந்தா ரரசனைச்சூழ்ந் தவரு மந்த [டார்
மன்னவன்ற னுடன்புகுந்தா ரியாருமிறை யோன்முடிமேன் மலர்க்கை கண்
பன்னுபர னங்கதனைக் கரந்திட்டான் மகிழ்ந்திட்டான் பார்த்து வேந்தன்
துன்னுபிறர் விதிர்ப்புமிறும் பூதுமுற்றார் மலர்மாரி சொரிந்தார் விண்ணோர்.

இந்துபுனை வேணியனைப் பணிந்தரச னினிப்பணியா தெனக்கீண் டென்
கந்தமலர்ப் பொழில்புடைசூழ் மதுரைதனக் கேகிடினீ கடிதி னுங்குத் [றன்
தந்திடுது நம்பதமென் றுரைத்திட்டான் மருதிறைவன் றனக்கவ் வேலை
செந்தமிழின் றொடைபுனைந்து தென்னன்விடை கொண்டுபுறஞ் சென்று
[னன்றே. 91

கனகமணிக் குலநெருங்கு கவிகைநிழன் மிசைநெருங்கக் கனிந்த காட்சி
மனமதனிற் புகழ்மருத வாணன்மலர்ப் பதநெருங்கி வாக்கி லோங்கு
புனிதனிசைத் திருநாம நெருங்கவிழி முன்னவன்றன் பொருவில் கோலம்
இனிதுநெருங் கிடச்சேனை புடைநெருங்க மதுரைநக ரெய்தி னானல். 92

பொங்குமகிழ் வுடனுங்கு வைகிடுநா ளாகமநீள் புராண மியாவும்
திங்கள்முடிப் பரன்மகிழுஞ் சிவபுரியின் பெருமையுரை செய்யக் கேட்டுத்
தங்குமதைக் காண்பதற்குப் பெருவிருப்புத் தொண்டுதனிச் சாரு மீசன்
கங்குலினிற் றிருக்கோயி லடைந்துமையாள் மணாளமுன் கண்டுதாழ்ந்து. 93

---

89. மருண்டு - மயங்கி. காது இயல் வேல் - கொல்லும் இயல்பினை யுடைய வேற்படை. சோதி - சிவபெருமான்; சோதிமகாலிங்கசுவாமி. துணுங்கி - நடுக்கமுற்று. புலர்போது ஆக - விடியற்காலம் வர.

90. அரசனைச் சூழ்ந்தவரும். பரன் - சிவபெருமான். விதிர்ப்பு - நடுக்கம். இறும்பூது - ஆச்சரியம். மலர்மாரி - பூமழை.

91. இந்து - சந்திரன். இனி பணி யாது எனக்கு; பணி - திருத் தொண்டு. மதுரைதனக்கு ஏகிடின் நீ. கடிதின் - விரைவின். செந்தமிழ் இன்தொடை - செந்தமிழ்ப்பாக்கள். தென்னன் - வரகுணபாண்டியர். பணிந்து அரசன் பணியாது: முரண்தொடை.

92. கவிகை - குடை. பொரு இல் - ஒப்பில்லாத. கனிந்த காட்சி மனம்: கனிந்த - அன்புமுதிர்ந்த. திருநாமம் - பெரும்பெயர்: அஃதாவது ஸ்ரீபஞ்சாக்கரம்.

93. சிவபுரி - சிவலோகம். ஈசன் கங்குல் - மகாசிவராத்திரி.

மண்டுபுக ழன்பருட னுயர்சிவலோ கத்திடைநீ வைகுங் காட்சி
கண்டுபணிந் திடற்கெளியேன் மனத்தினிடை யுதித்ததொரு காத லென்றுன்
வண்டவள மதிச்சடையோன் மகிழ்ந்தனைய வுலகுபுவி வருவா னெண்ணங்
கொண்டனன்மற் றதுகோடி மதிச்சுடரி னெடுபுவியிற் குதித்த தாங்கே. 94

அவ்வுலகி னெழிலுநெடு மான்முதலா னவர்பதமு மதனி லன்பால்
செவ்விதினெம் பிரானருள்பெற் றிருப்பவர்கள் சிறப்புமுயர் தேவர் போற்று
நவ்வியங்கைப் பரமனுறை கோலமுமன் னனருளா னந்தி காட்ட
வெவ்வினைத்திண் கடல்கடந்தான் கண்டுபணிந் தானந்த வெள்ளத்
[தாழ்ந்தான். 95

முன்னிறைஞ்சி நின்றிடுங்காற் சிவலோக மதுரையதாய் முன்பு போல
மின்னிடைமா துடனிறையோன் வீற்றிருப்பக் கண்டுநனி வியந்துவாழ்த்திப்
பின்னரும்பல் பகல்செங்கோல் செலுத்தியுல காண்டிருந்து பின்பு மற்றைத்
தென்னுலவு சிவபுரியுற் றரனுருவா யினிதிருந்தான் தேவர் போற்ற. 96

வரகுணதேவச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1028

---

94. அன்பருடன் - பழையவடியாருடன். காதல் - அன்பு: முறுகிய அன்பெனக. வண் தவள மதி: தவளம் - வெண்மை. திருவிளையாடற் புராணம் வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலத்தானுணர்க.

95. எழிலும் - அழகும். நெடுமால் - விஷ்ணுமூர்த்தி. நவ்வி அம் கை பரமன்: நவ்வி - மான். அருளால் நந்தி. வினைக்கடல்: பண்புத்தொகை. பணிந்து ஆனந்தவெள்ளத்து.

96. மாது - உமாதேவியார். தென் - அழகு. அரன் உரு - சிவ சாரூபம்.

நாற்பத்தொன்றுவது

# பிரதக்கிணமகிமைச் சருக்கம்

[சாந்தவேலி கோலித் தவப்பயிரை வளர்க்கும் முனிவர்களே! கந்தபுராணத்திலே சொல்லிய இத்தலமான்மியத்தை இதுவரை சொன்னேம்; இனி, இலிங்கபுராணத்திலே இத்தலவரலாறு கூறும் பகுதியையும் எடுத்துச் சொல்லுவோம்.

திருவிடைமருதூரிலே எழுந்தருளியுள்ள மருதக்கடவுளை வழிபடுதற்குப் புகுந்து முதல்மதிலின் உட்புறத்திலே வலம்வருதல் அசுவமேதப் பிரதக்கிணம் என்பர். இந்த அசுவமேதப் பிரதக்கிணம் செய்வோர் பெருஞ் செல்வம், அறிவு, மகப்பேறு, பகையை வெல்லுதல், சதுரப்பாடு, நோய் நீக்கம், புகழ் முதலிய பயனை அடைவர்; உயர்பதம் பெறுவர்; அசுவமேத யாகப்பயனையும் அடைவர்; உலகத்தை வலம் வருவதால் உண்டாகும் புண்ணியமும் பெறுவர். விநாயகக்கடவுளையும் முருகவேளையும் வழிபாடு செய்து இக்காரியம் தொடங்கினல் விரைவில் நிறைவுறும். கொலைமுதலிய பாதகங்களும் விட்டகலும். ஒருமண்டலம் அரைமண்டலம் கால்மண்டலம் என்று வரையறைசெய்து வலம்வரல் வேண்டும். வலம் வருவதும் இருபத்து நான்கு, பன்னிரண்டு, ஏழு தடவைகள் வலம்வரல் வேண்டும். அவரவர் வலிமையும் நோக்கி வலம் வருக. வலம் வருவோர் கனைப்புற்ருராயின் கைகளைக் கூப்பிக்கொண்டு மன ஒருமையுடன் அங்கப்பிரதக்கிணம் வருதல் நலம்தரும். தைமாதம் திருவிழாவிலே இவ்வாறு செய்தால் பெரும்பயனும்.

இனி, இதனை அடுத்துள்ளது கொடுமுடிப்பிரதக்கிணம் என்பது. கொடுமுடிப்பிரதக்கிணம் செய்வோர் நோய், வறுமை, பாவங்கள் முதலிய நீங்கப் பெறுவார்கள். பொருள், புகழ், மகப்பேறு முதலியன எய்துவர். அறிவு பெருகும். வாழ்நாள் மிகப்பெறுவர். கயிலாயமலையை வலம்வரும் பேறு இதனல் சித்திக்கும். இதனுள்ளேயும் வலம் வருதல் பல உள. சிவபெருமான் சந்நிதியை அடைந்து ஐந்துமுறை அட்டாங்க நமஸ்காரம் பண்ணி வணங்கி, பிரணவத்தை மெல்லென மனத்திலேயே எண்ணிக் கொண்டு முறையாக வலம்வருதல் வேண்டும். இவ்வாறு சிவாகமம் செப்பும். இப்படி இத்தலத்திலே வலம் வந்து பேறுபெற்ருேர் பலர். அவருட் சிலரைமட்டும் மேலே விரித்துச் சொல்லுவோம்.]

கலிநிலைத்துறை

சாந்த மாகிய வேலிசூழ்ந் திடத்தவப் பயிரை
வாய்ந்த சீருற வளர்த்திடு மாமுனி வீர்காள்
காந்த மோதிய தோதின மீங்கிது காறும்
ஏந்தி டும்புக ழிலிங்கமோ துவதினி யிசைப்பாம். 1

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கருதத் திருவிடை மருதென் றிடுநகர்க் கண்வாழ் வுறுநுதற் கண்ணுனன்
மருதக் கடவுளை யிமையோர் முதலினர் மலர்நே ரிணையடி பணிவுற்று
வருதக் கணமவை தமின்முன் மதிலினுண் மருவுற் றிடுதலச் சுவமேதப்
பிரதக் கிணமென வெவரும் புகழுறு பெயரிற் பொலிவுறு மினிதம்ம. 2

அதினுற் றிசைவலம் வருவோர் பெறுவர்க
ளணிநீ டிலகிடு முயர்செல்வம்
மதிநன் குறுவர்கண் மகவுற் றிடுவர்கள்
மருவார் தமைவென் றிடுவார்கள்
சதிர்பெற் றிடுவர்கள் பிணியற் றிடுவர்கள்
சகமெச் சுறுவர்க ளிவையன்றிப்
பதமொன் றவணுறு மதனுக் கியல்புறு
பரிமே தப்பல னடைவார்கள். 3

---

1. சாந்தம் வேலி. தவம் பயிர். 'சாந்தவேலிகோலி' என்றருளினர் பட்டினத்துப்பிள்ளையார். காந்தம் - கந்தபுராணம். இதுகாறும் - இது வரையில். இலிங்கம் - இலிங்கபுராணம். காந்தபுராணம்: சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரசங்கிதை என ஆறு சங்கிதைகளையுடையது. அஃது இலக்கம் கிரந்தங் களையுடையது என்பர். இச்சருக்கமுதலாகவுள்ளன இலிங்கபுராணத்தில் உள்ளன என்றார் இவ்வாசிரியர். இலிங்கபுராணம் நூறுகோடி கிரந்த முடையது. பிரமதேவர் அதனை ஒருகோடி கிரந்தமுடையதாகச்செய்தார். வியாசமுனிவர் அதனை நான்கு நூறாயிரம் கிரந்தமாக்கினர். சூதர் அதனைப் பதினோராயிரம் கிரந்தமாகச்செய்தார் என்ப.

2. கருது அ திரு இடைமருது. நுதற்கண்ணுனன் ஆகிய மருதக் கடவுள். மலர் நேர் - தாமரைமலரை யொத்த. முன்மதிலினுள் மருவுற் றிடுதல் அச்சுவமேதப் பிரதக்கிணம் ஆம். பொலிவுறும் - விளங்கும்.

3. அதின் உற்று இசை: இசை - சொல்லப்படும். மதி - புத்தி. பரிமேதம் - அசுவமேதம். அச்சுவமேதப் பிரதக்கிணம் வருவோர்: உயர் செல்வம், அறிவு, மகப்பேறு, பகையை வெல்லுதல், வலி, நோயின்மை, புகழ் முதலியவற்றைப் பெறுவார் எனப் பிரதக்கிணப் பயன் கூறியபடி.

மகரா லயம்வளை தருமிப் புவிதனை வலம்வந் திடினுறு வதுமெய்தும்
புகழ்வா ரணமுக விறைவே லவன்மறை புகல்வோ ரநுமதி முனமெய்தி
மிகுமா தரவொடு செயினெய் திடுபயன் விரைவெய் திடுவெங் கொலையாதி
இகழ்பா தகவினை யவர்செய் தனவுள யாவுந் தெருமர லுடனேகும். 4

வருநா ளொருமண் டலமரை மண்டல மருவொரு கான்மண் டலவெல்லை
ஒருநா லிருபதின் மேலா றிருதொகை யோரே ழெனுமூன் றினுளொன்று
கருதா வவரவர் வன்மைக் கிசைதரு கணிதம் பெறவந் திடல்வேண்டும்
ஒருவா றதில்வல னுற்றோர் களைவந் துழிவந் துழியறை கிற்பாமால். 5

கையா மிணைமலர் குவியா மனமொடு கருணைத் திருமுக மலர்வெய்த
மெய்யா லொருவலஞ் செய்வா ரதனிடை வினைநீத் துளமெண் ணியவெய்திப்
பையா டரவணி யெம்மா னுறைதரு பதியுற் றுறைவர்கண் மகிழ்வோடு
தையா மதியினில் விழவிற் புரிதரு தகையோர் பெறுபலன் புகல்வார்யார். 6

கலிநிலைத்துறை

இத்த கைத்தனிப் பதக்கிணத் துள்ளுற விமையோர்
சித்தர் சாரண ருரகர்கந் தருவர்பா ரிடங்கள்
சுத்த மாதவர் முதலினோர் சூழ்ந்துவெண் கயிலை
ஒத்தி லங்கிடுங் கொடுமுடிப் பதக்கிண மொன்று. 7

---

4. மகராலயம் - கடல். பூப்பிரதக்கிண பலனும் எய்தும் என்க. வாரணமுக இறை - விநாயகக்கடவுள்: வாரணம் - யானை. மறை புகல்வோர் - வேதமோதுவோர். ஆதரம் - விருப்பம். ஆதரவு - பற்றுக்கோடு. விரைவு எய்திடும். தெருமரல் - கலக்கம். ''அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி'' (தொல்).

5. பிரதக்கிணம் வரும் நாட்களின் எல்லை கூறுகின்றார். ஒரு மண்டலம் - நாற்பத்தைந்து நாட்கள்; நாற்பத்தெட்டு என்பதும் ஒருமுறை. அரை மண்டலம் - இருபத்துநான்கு. கால் மண்டலம் - பன்னிரண்டு. வலம் வருதலின் அளவு: இருபத்து நான்கு, பன்னிரண்டு, ஏழு தடவைகள் ஆம். இம்மூன்றனுள் அவரவர் வலிமைக்கு ஏற்றபடி செய்க என்பது. கணிதம் - எண். களை வந்துழி வந்துழி - களைப்புவந்த காலங்களில்: அடுக்கு.

6. கை ஆம் இணை மலர். மெய்யால் - உடம்பால்: அது அங்கப் பிரதக்கிணம். வினை நீத்து - வினைகளை நீக்கி. பை ஆடு அரவு அணி: பை ஆடு - படமெடுத்து ஆடுகின்ற. உறைதரு பதி - கயிலாயம். தை ஆம் மதி - தைத்திங்கள். விழவில் - விழாக்காலத்தில்.

7. தனி பதக்கணம் - ஒப்பற்ற பிரதக்கிணம்: மரூஉமொழி பாகதச் சிதைவு. பாரிடம் - பூதம். அசுவமேதப் பிரதக்கிணத்தை அடுத்து

தெரித ருங்கவின் மருவுமற் றதைவலஞ் செய்வோர்
விரித ரும்பிணி வறுமைவெம் பவங்களும் வெருளுற்(று)
இரித ரும்பொருள் புகழொடு மகவுநன் கெய்தும்
புரித ருந்தனி யறிவுறும் பொலிவுறும் வாணுள். 8

கயிலை மால்வரை தனைவலங் கனிந்திடன் போடு
செயில ணை ந்திடு பயனெவை யவையெலாஞ் சேரும்
இயலி தென்னவே யுதவிடு மிசைபல னிதற்குள்
பயில லுற்றிடும் புகழுறு பதக்கிணம் பலவும். 9

இறைவன் முன்னரட் டாங்கமைங் காற்பணிந் தேத்தித்
துறையி னீடுமத் துதியொடு துணைக்கைமார் பணைத்து
மறைமு தற்பத மனத்துற மெல்லென வருதல்
முறைமை யாமுறு வலமென மொழியுமா கமமும். 10

அன்ன தன்மையி னேங்கிடு மணிவலஞ் செய்து
மன்னு றுந்துயர் தீர்ந்தின்ப மருவலுற் றவர்கள்
இன்ன ரின்னரென் றியல்புற வெடுத்துமக் கினிது
பன்னு துஞ்சிலர் தமைப்பரன் பதமுறு மனத்தீர். 11

பிரதக்கிணமகிமைச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1039

---

உள்ளே கொடுமுடிப் பிரதக்கிணம் ஒன்று உள்ளது. கயிலை ஒத்து - கயிலாயத்தையொப்ப.

8. அதை - அக்கொடுமுடிப் பிரகாரத்தை. மற்று: வினைமாற்று. வெம்பவம் - கொடும்பாவம். வெருள் உற்று இரிதரும்: வெருள் - அச்சம். இரிதரும் - கெட்டோடும். கொடுமுடிப் பிரகாரத்தை வலம் வருவோர் அடையும் பேறுகள் கூறப்பட்டன.

9. கனிந்து அன்போடு வலம் செயில்.

10. அட்டாங்க நமஸ்காரம் - எட்டுறுப்புக்கள் நிலத்திலே பொருந்தச் செய்யும் வணக்கம். எட்டுறுப்புக்களாவன - தலை, நெற்றி, இரண்டு காதுகள், இரண்டு முழந்தாள்கள், இரண்டு கைகள் என்பன. ஐங்கால் - ஐந்து முறை. மறை முதற் பதம் - பிரணவம். முறைமை ஆம்.

11. இன்னர் இன்னர் - இன்னின்னர்: இன்னவர் இன்னவர் என்றபடி. எடுத்து உமக்கு இனிது. பன்னுதும் - சொல்லுவோம். பரன்பதம் - சிவபதம்.

நாற்பத்திரண்டாவது

# யுவனுசுவச் சருக்கம்

[அயோத்திநகர்க்கரசன் யுவனுசுவன் என்னும் பெயருடையான். அவன் அறமனத்தினன்: பகைவர்களுக்குச் சிங்க ஏறு போல்வான்; சூரிய குலத்திலே உதித்தவன்; கீர்த்திமிக்கோன். அவன் மைந்தன் இன்மையால் வருந்தினன்; குலகுருவாகிய வசிட்டமுனிவரை அடைந்தான்; மகப்பேறு எனக்கு எப்போது சித்திக்கும் என்று அருளிச்செய்க என்ருன். வசிட்ட முனிவர் அரசனைப்பார்த்து வருந்தாதே சொல்லுவேன் என்றருளினுர். அரசே! நீ உன் மனைவியுடன் திருவிடைமருதூர் என்னும் சிவதலத்தை அடைக; அங்கே விதிப்படி புத்திரகாமேட்டி என்னும் வேள்வியை இயற்றுக; சிவபெருமான் புத்திரப்பேறு அருளுவார்; விரைந்து செல் என்ருர். அரசன் மகிழ்ந்தான்; ஐயனே! தாங்களும் என்னுடன் வந்தருளவேண்டும் என வேண்டிநின்ருன். முனிவரையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு சேனைகளுடன் மன்னன் இடைமருதை நோக்கிச் செல்வானுயினன். செல்லுங்காலத்து எதிர்ப்பட்ட சிவதலங்களையும், தீர்த்தங்களையும், தவசிகள் இருக்கைகளையும், மலைகளையும் மன்னனுக்கு வசிட்டமுனிவர் கூறிக் கொண்டே சென்ருர்.

தன்னிடத்து இறக்கும் உயிர்களுக்குச் சூலத்தைவைத்து முத்தியருளும் காலபைரவர் எழுந்தருளிய காசித்தலம் இது. பகீரதன் விண்ணுலகத்தினின்று நிலவுலகத்துக்குக் கொண்டுவந்த கங்காநதி இது. இயமனுடன் தோன்றிய நதியாகிய காளிந்தி என்னும் நதி இது. சிலந்தி காளன் என்னும் பாம்பு யானை என்பன இறைவனைப் பூசித்துப் பேறுபெற்றுய்ந்த தலமாகிய சீகாளத்தித்தலம் இது. கழுகுகள் பூசித்தமையின் திருக்கழுக்குன்றம் என்று பெயர் பெற்ற தலம் இது. உமாதேவியார் பூசித்திருந்த காலத்து இறைவர் வெள்ளம்வர விடுத்தது இக்கம்பைமாநதி. ஒற்றை மாமரத்தின்கீழ் அம்மையார் தவம்புரிந்த தலமாகிய காஞ்சிபுரம் இது. திருமால் பிரமன் ஆகிய இவர்களின் செருக்கை மாற்றிய மலையாகிய திருவண்ணமலை இது. முழுமுதற்கடவுள் காளியின் செருக்கை அகற்ற நடனம் புரிந்த தில்லைப்பதி இது. பிரளய வெள்ளத்திலே தோணியாய் மிதந்த தலமாகிய தோணிபுரம் இது. வெவ்வினைகளைத் தொலைக்கும் முக்குள தீர்த்தத்துடன் விளங்கும் திருவெண்காடு இத்தலம். உமையம்மை

மயில் வடிவாய்ப் பூசித்ததலம் இம்மயிலாடுதுறை. காலகாலன் எழுந்தருளி இருக்கும் திருக்கடவூர் இத்தலம். யானையையுரித்துப்போர்த்த தலமாகிய இது வழுவூர். சொன்னவாறறிவார் என்னும் திருநாமத்தையுடைய சிவபிரான் எழுந்தருளியது இத்தலம். படரரசு தலவிருட்சமாயுள்ள அரசவனமாகிய திருவாவடுதுறை இத்தலமென முனிவர் அரசனுக்கு மூர்த்தி தலம் தீர்த்தம் முதலியவைகளை விரித்துணர்த்திவந்தார்.

அரசனும் தீர்த்தங்களில் முழுகிச் சிவபெருமானை வணங்கிப் போற்றி அவ்வத்தலங்களில் தங்கியிருந்து முடிவில் திருவிடைமருதூர் என்னும் இத்தலத்தை வந்தடைந்தான். முனிவர் கூறியவாறு காவிரியை அடைந்து பூசத்துறையிலே மூழ்கினான். மனைவியுடன் நீராடிய மன்னவன் கோயிலையடைந்து சோதிமகாலிங்கமூர்த்தியை வழிபட்டான். வீதியை அடைந்து ஒரு இருக்கையில் தங்கினான். வேதவிதிப்படி இடைமருதிலே புத்திரகாமேட்டியாகம் செய்தான்.

புத்திரப்பேறுகருதி வைத்துப்பூசித்த பொற்குடத்திலிருந்த நீரைத் தாகமிகுதியால் எடுத்து ஓர் இரவினில் மன்னன் குடித்தான். தாகம் தணிந்தபின் தான்செய்த செயல் அடாதது என உணர்ந்தான். அவன் வயிற்றில் கருத்தங்கியது. இதனைக்கண்டோர் துன்புற்றனர். வயிற்றிலுற்ற கரு பருவம் முதிர்ந்தது. வயிற்றைக் கிழித்துக்கொண்டு ஒருபுத்திரன் தோன்றினான். மன்னன் நடுங்கினான்; துன்புற்றுக் கீழே விழுந்தான்.

கருத்தழிந்து நிலத்தில் வீழ்ந்த அரசன் வருத்தத்தைமாற்றப் பல உபசாரங்களைச் செய்தனர். கிழிந்த வயிற்றைப் பொருத்தி ஆறுமாறு மருந்துகள் பல இட்டனர். புண் ஆறிலது; அதிகமாயிற்று. முனிவர்கள் இதனைக்கண்டு ஸ்ரீ மகாலிங்கேசர் கோயிலையடைந்து அச்சுவமேதப்பிரதக்கிணம் வந்தால் இத்துன்பம் நீங்கும், புண் ஆறும், வேறுபரிகாரம் இன்று என்றார்கள். அரசன் கோயிலை அடைந்தான். ஒருதரம் அசுவமேதப் பிரதக்கிணம் வந்தான்; வயிற்றிலிருந்த புண் ஆறக்கண்டான். அறிஞரை இகழ்ந்துரைக்கும் கயவர்செல்வம் அழிவதுபோல வினைகளும் கழிந்தன. பின்னும் ஆறுமுறை வலம் வந்தான். சிவபெருமான் திருவடிகளை வணங்கினான். நிலமுதலிய பொருள்களைச் சிவபெருமானுக்கும் அந்தணர்க்கும் வழங்கினான். தன் இருக்கையை அடைந்தான். புதல்வனை முகம் நோக்கினான். பொன்னை மழைபோலச் சொரிந்து தானம் புரிந்தான். தன் தேசத்தை அடைந்தான். சிலகாலம் அரசுபுரிந்திருந்து சிவலோகத்தைச் சேர்ந்தான். இனி அவன்புதல்வன் வரலாற்றையும் கூறுவோம்.]

கலிநிலைத்துறை

அறங்கு லாவிய மனத்தினு னயோத்திமா நகரான்
மறங்கு லாவிய பகைஞர்பான் மடங்கலே றனையான்
நிறங்கு லாவுசெங் கதிர்வழி நிருபன்மற் றொருவன்
பிறங்கு கீர்த்தியான் புகல்யுவ னாசுவப் பெயரான். 1

மைந்த னின்மையான் வருந்துறு வசிட்டனை யணுகி
எந்தை யேயினி யெந்தநாண் மகவெனக் கெய்தும்
சுந்த ரக்கனி வாய்மலர்ந் தருள்கெனத் தொழுதான்
அந்த மாதவ னிசைக்குதும் வருந்தலென் றறையும். 2

வெண்ண கைத்துவ ரிதழ்மனை மெல்லிய லுடனே
புண்ணி யம்பொலி யிடைமரு தெனும்பதி புகுந்தாங்(கு)
எண்ணு றுந்தனி மகப்பெறு மகமினி தியற்றின்
கண்ணு தற்பிரா னருள்செயுங் கடிதினே கென்றான். 3

காயி ருங்கதிர் வேலினான் கருதுள மகிழாத்
தூய மாதவ நீயும்வந் தருள்கெனத் துதிசெய்(து)
ஏயு மன்னவன் றன்னொடு மில்லவ ளுடனும்
பாய சேனையி னுடனுமுற் றெழுந்தனன் படர்ந்தான். 4

படரும் போதினி லெதிர்ப்படு பரனுயர் பதியும்
தடமி குந்திடு நதிகளுந் தபோதன ருறையும்
இடனு மொண்புகழ்ச் சயிலமு மிலங்கமன் னவற்குத்
திடனு றுந்தவ வசிட்டனு முனிவரன் றெரிக்கும். 5

---

1. மறம் - வீரம். மடங்கல் ஏறு - ஆண் சிங்கம். செங்கதிர் வழி - சூரியகுலம்: செங்கதிர் - சூரியன். நிருபன் - அரசன்.

2. மைந்தன் - புதல்வன். வசிட்டன் - குல குருவாகிய வசிட்ட முனிவர். மகவு எனக்கு எய்தும். மலர்ந்தருள்க என. இசைக்குதும் - சொல்லுவோம்.

3. மனை மெல்லியல் - மனைவி. புகுந்து ஆங்கு. எண்ணுறும் - மதிக்கத்தக்க. மகப்பெறு மகம் - புத்திரகாமேட்டி: மகம் - யாகம். கண்ணுதற்பிரான் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்: என்றது ஸ்ரீ மகாலிங்கேசுவரரை. கடிதின் - விரைவாக.

4. காய் இரும் கதிர்வேல்: காய் - (பகைவரைக்) கோபிக்கும். இல்லவள் - மனைவி. பாய - பரவிய. படர்ந்தான் - சென்றான்.

5. பயன் உயர் பதி - சிறந்த சிவதலங்கள். தபோதனர் - தவசிகள். சயிலம் - மலை.

தன்னி டத்திறந் திடுமுயிர் தனைவடு கேசன்
மன்னு சூலம்வைத் துயர்கதி வழங்கிடுந் தலனீ(து)
உன்ன ருந்தவம் புரிபகீ ரதனுளத் துவகை
துன்ன மேலையிப் புவிவரு துறையிது காண்டி. 6

இயமன் றன்னுட னுதித்ததா மிந்நதி சிலந்தி
உயருங் காளனே டத்திநின் றருச்சனை யுஞற்றும்
செயலி னற்பெயர் பெற்றதிச் சயிலமச் சிலம்பு
பயிலு மாதவக் கழுகினுற் படித்திடும் பெயர்த்தால். 7

முந்து சத்திசெய் பூசையை முடித்திட வெள்ளம்
வந்த வாறிஃ தஃதெழின் மாநிழ லிடத்து
நந்த லில்லதோர் தவமவள் புரிந்துறை நகரம்
அந்த நீள்வரை யரியய னுற்றன்மாற் றியதால். 8

இவணி லங்குதல் பாதிரி மேற்புலி யிலகூர்
நவமி சைப்பகர் நீதமார் நகரியீ தெதிர்த்த
குவளை வாள்விழிக் காளிதன் மதிமுகங் குனியத்
தவர்கள் போற்றிடத் தனிமுத னடித்ததித் தலனே. 9

---

6. வடுகேசன் - காலபைரவர். தலன் என்றது ஸ்ரீ காசியை. புவி வரு துறை - கங்கை.

7. இயமன் தன்னுடன் உதித்த நதி - காளிந்தி. சீகாளத்தி - சிலந்தி காளன் அத்தி பூசித்த தலம். மாதவக்கழுகினுல் படித்திடும் சிலம்பு - திருக்கழுக்குன்றம். கழுகு குன்றம் என்பது கழுக்குன்றம் என மருவிற்று; கிருதயுகத்தில் சண்டன் பிரசண்டன் என்பவரும், திரேதாயுகத்தில் சம்பாதி சடாயு என்பவரும், துவாபரயுகத்தில் சம்புகுத்தன் மாகுத்தன் என்பவரும், கலியுகத்தில் சம்பு ஆதி என்பவரும் கழுகு வடிவத்தோடு இத்தலத்தில் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றனர் ஆகலின், 'பயிலும் மாதவக் கழுகு' எனக்குறித்தார்.

8. வெள்ளம் வந்த ஆறு - கம்பாநதி. அவள் தவம்புரிந்து உறை நகரம் என்றது காஞ்சிபுரத்தை. அவள் - ஸ்ரீ காமாட்சியம்மையார். அரி அயன் ஆற்றல் மாற்றிய வரை - திருவண்ணுமலை.

9. பாதிரி மேல் புலி இலகு ஊர் - திருப்பாதிரிப்புலியூர். நவம் மிசை பகர் நீதம் ஆர் நகரி - நவநீதபுரி. நவநீதம் - வெண்ணெய்; இது திருவெண்ணெய்நல்லூரைக் குறிப்பதுபோலும்; ஆராய்க. தனி முதல் நடித்த தலம் - சிதம்பரம் (தில்லை).

தொக்க வேலேவிண் டொடர்ந்திடத் தோணியாய் மிதந்த
மிக்க சீருறு புரமிது வெவ்விணை தொலேக்கும்
முக்கு ளந்திகழ் பதியது மொழியுமை மயிலாய்த்
தக்க தண்புன லாடிய தனித்துறை யிவ்வூர். 10

அன்ன தாங்கணை மறலிறை யடியடைந் திடுமூர்
இன்ன தானைதன் னுரியிறைக் கீந்தவூ ரிவ்வூர்
சொன்ன வாறுணர் பரம்பொருள் துலங்குமூர் தோன்றும்
முன்ன தாலயத் தரசிருந் தரசுசெய் மூதூர். 11

என்ன வோதுறு தலங்களும் பிறவுமாங் கிசைத்திட்(டு)
அன்ன வற்றிசை தலங்களுற் றரும்புன லாடிப்
பன்ன கம்புனை பரமனைப் பணிந்தனர் படர்ந்து
பொன்னி நீடுபூ சத்துறை படிந்தனர் பொருந்தி. 12

மீத லத்துறு மதிலிடை விரைவினிற் படரும்
சீத வண்முகின் மோதுறீத் திகைத்துநின் றலறும்
ஓதை கேளுரு தோங்கிய வொலிமறைத் திலங்கும்
பூத லம்புக ழிடைமரு தெனும்பதி புகுந்தார். 13

புகுந்து ளாரொடு மன்னவன் புகழ்மரு திடத்தின்
உகந்த சோதியை வணங்கினு னுயர்மறு கிடத்து
மிகுந்த பொற்புறோர் வசதியுற் றுறைந்தனன் வேதம்
பகர்ந்த வாமக வேள்வியாங் கிழைத்தனன் பரிந்து. 14

---

10. வேலே - கடல். தோணியாய் மிதந்தபுரம் - சீகாழி (திருத்தோணி புரம்). முக்குளம் திகழ் பதி - திருவெண்காடு. முக்குளம் - சோமசூரியாக் கினி தீர்த்தங்கள். உமை மயில் ஆய்ப் புனல் ஆடிய துறை - திருமயிலாடு துறை (கௌரீ மாயூரம்).

11. மறல் இறை அடி அடைந்திடும் ஊர் - திருக்கடவூர்: மறல் - இயமன். ஆனை தன் உரி இறைக்கு ஈந்திடும் ஊர் - வழுவூர். சொன்ன வாறு உணர் பரம்பொருள் - சிவபெருமான் திருநாமம்: அது சொன்னவா றறிவார் என்பது. ஊர் - குத்தாலம். அரசு இருந்து அரசுசெய் மூதூர் - அரசவனம்; திருவாவடுதுறை.

12. பன்னகம் - பாம்பு. பொன்னி - காவிரிநதி. பூசத்துறை - தைப் பூசநாளில் இறைவர் தீர்த்தம் கொடுத்தருளும் துறை.

13. மீதலம் - விண். சீதம் - குளிர்ச்சி. முகில் - மேகம். ஓதை - ஓசை.

14. மருது - மருதமரம். சோதி - சோதிர் மகாலிங்கேசுரர்: உலகத் துப் பொருள்களை விளக்கும் சூரியன் முதலிய சோதிகட்கும் தாமே ஒளி கொடுத்து அவற்றை விளக்கியும், அவ்வாறு தம்மை விளக்குவார்

அன்ன வேள்வியி லனையவன் மனையவட் கருத்தம்
மன்னு புத்திர நிமித்தமா வைத்தபொற் கும்பம்
தன்னி லுற்றிடு புனலினைத் தாகமேற் கொள்ள
உன்னு மோரிரா வெடுத்தனன் குடித்தன னுற்று. 15

தீங்கி டாலமுங் குடித்திடச் செய்திடுந் தாகம்
நீங்க லுற்றதென் செய்தன மெனத்தனி நின்ருன்
ஓங்கி டுங்கரு வயிற்றினி லுற்றதப் பொழுதே
பாங்கி னுற்றுளோ ருணர்ந்திது பருவர லடைந்தார். 16

உதித்தி டும்பதம் வரிற்கரு வொருகண மாங்கு
வதிக்கு மோவிசை வயிற்றினைக் கிழித்துமுன் வந்து
குதித்த னன்றனிக் காதலன் குவலய மீது
விதிர்ப்பு மின்னலு மடைந்துகீழ் விழுந்தனன் வேந்தன். 17

கருத்த ழிந்துகீழ் விழுந்திடுங் காவலன் றனது
வருத்த மாறிடக் கிழிபடு வயிற்றினை யினிது
பொருத்தி மற்றதின் மருவுறு புண்ணினை யுலர்த்த
மருத்தி னங்கண்மேற் குவித்தனர் விரித்திடு மதியோர். 18

ஆய செய்கையி லனையபுண் ணுறிடா தோங்கத்
தூய மாதவ முனிவர்கள் சோதியா லயத்தின்
மேய வான்பரி மகவல மேவிநீ யியற்றின்
காயு மேலிதை யுலர்த்திடக் காணும்வே றென்ருர். 19

---

பிறரின்றி இயற்கை ஒளியாய்த் தாமே விளங்கியும்நிற்றலின் சிவபெருமான் சோதிர்மய மகாலிங்கம் எனப்பட்டார். மறுகு - தெரு. பொற்பு உறு ஓர் வசதி. பகர்ந்தவா - சொன்னபடி. மகவேள்வி - புத்திரகாமேட்டி: மக வேள்வி என்றது நயம். பரிந்து - விரும்பி.

15. மனையவட்கு அருத்தம் மன்னு. எடுத்தனன்: முற்றெச்சம்.

16. தீங்கு இடு ஆலமும்: ஆலம் - நஞ்சு. கரு - கருப்பம். பருவரல் - துன்பம்.

17. பதம் - காலம். வதிக்குமோ - தங்குமோ. காதலன் - புதல்வன். குவலயம்-நிலவுலகம். விதிர்ப்பு-நடுக்கம். இன்னல்-துன்பம். வேந்தன் - யுவனுசுவன்.

18. காவலன் - அரசன். மருத்து இனங்கள்; மருத்து - மருந்து: வலித்தல் விகாரம். மதியோர் - அறிஞர்.

19. ஓங்க - மிக. வான் - சிறந்த. பரி மக வலம் - அச்சுவமேதப் பிரதக்கிணம். காயும் - ஆறும்.

வெற்றி வேந்தனுங் கவரொடு மெல்லெனச் சென்று
மற்றை யோர்வலம் வந்தனன் வருமுனம் வயிற்றில்
உற்ற புண்ணுலர்ந் துயர்திரி வினைகளு முலர்ந்த
கற்று ளோர்களை யிகழ்ந்துறை கயவர்தந் திருவின். 20

பின்னு மூவிரு பதக்கிணம் போந்தனன் பெரிதும்
தன்னு ளங்கொளா மகிழ்வொடுந் தவளமால் விடையோன்
பொன்ன டித்துணை பணிந்தனன் புவிமுதற் பொருள்கள்
அன்ன வற்கும்வே தியர்க்குமாங் களித்தன னநேகம். 21

அந்த நீண்மனை யெய்தினு னருமருந் தனைய
மைந்தன் வாண்முக நோக்கினுன் மகிழ்ந்துபொன் வருடம்
சிந்தி னுனதி லிருந்தனன் சிலபகல் பின்னர்
வந்து ளோரொடு மகனெடு மருவினன் தன்னூர். 22

சந்த தம்புக விடைமரு திறையவன் தாள்கள்
சிந்தை யுற்றிட விருந்துபின் பலபகல் செலுத்தி
அந்த மார்சிவ புரியடைந் தானவன் புதல்வன்
வந்து வெம்பழி போக்கிய வாறினி வகுப்பாம். 23

யுவனுசுவச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1062

---

20. கயவர் - கீழோர். திருவின் - செல்வத்தைப்போன்று: இன்: உவமவுருபு.

21. மூவிரு பதக்கிணம் - ஆறுமுறை வலம்வரல்: பதக்கிணம் - பிரதக்கிணம் என்பதன் திரிபு. தவள மால் விடை-இடபம். தவளம்-வெண்மை.

22. பொன் வருடம் - பொன் மழை.

23. சந்ததம் - எப்போதும். வெம் பழி - கொடிய பாவம்.

நாற்பத்துமூன்றுவது

# மாந்தாதாச் சருக்கம்

[மாந்தாதா யுவனுசுவன் புதல்வன். அவன் அழகிலும் கல்வியிலும் மேம்பட்டு மன்மதனையும் ஆதிசேடனையும் வென்று விளங்கினன். மேரு வரையை வென்ற திடமுடையவன். மேகத்தை வெல்லும் கொடையுடை யான் அவன். மாந்தாதா அரசுசெய்தகாலத்துக் கலிங்கநாட்டரசனுக்கும் அவனுக்கும் போர் நிகழ்ந்தது. போரில் கலிங்கன் தோற்று ஓடினன்; ஓடிய கலிங்கனை மாந்தாதாவின் சேனைகள் வளைந்து போர் செய்தன. கலிங்கன் சேனையுடன் மாண்டான். புறங்கொடுத்தோனைக் கொன்ற பழி அரசனைச் சார்ந்தது. பழியால்தொடரப்பட்ட வேந்தன் வசிட்டமுனிவரிடம் சென்று உபாயம் யாதென்றுன். 'அரசே! உன்னைத் தொடர்ந்த பழி திருவிடைமருதூர் என்னும் தலத்தை அடைந்து அசுவமேதப்பிரதக்கி ணம் வரின் நீங்கும்' என்று கட்டளையிட்டார். மற்றும், 'இடைமருதீசரை வணங்கிப் போற்றியிருந்து, பல பணிகளையும் செய்க; விசாகநாளிலே திருவிழாச் செய்து சிவபெருமான் அருளைப்பெற்று வருக; இப்போதே செல்க' என வசிட்ட முனிவர் கூறினர்.

அந்தக்கட்டளையின்படியே மாந்தாதா இடைமருதை அடைந்தான். அசுவமேதப்பிரதக்கிணம் ஒருமுறை வருதற்குமுன்னமே தீயிடைப்பட்ட பஞ்சைப்போன்று அப்பாவம் தொலைந்தது. அரசன் மகாலிங்கமூர்த்தி சந்நிதியை அடைந்து விதிப்படி வழிபட்டான். ஒரு இருப்பிடத்தில் சென்று தங்கினன். சிவபெருமானுக்கு விளைபுலம், அணிகலம், பொற் காசு முதலியன வழங்கினன். மண்டபம் முதலியவற்றைப் பொற்புறக் கற்பணியாகச் செய்வித்தான்.

திருப்பணிகள்யாவும் முற்றுப்பெற்றன. திருவிழாச் செய்ய எண்ணி னன். வசந்தகாலமும் வந்தது. நகரமுழுவதும் அலங்காரம் செய்வித் தான். திருவிழா அழைப்புத் திருமுகங்களை எல்லோருக்கும் அனுப்பு வித்தான். அரசரும் அன்பரும்வந்து திரண்டனர். விடைக்கொடி ஏற்று வித்தான். பத்துநாட்களினும் வீதிகளில் திருவுலாக்காட்சியைக் கண்டு மகிழ்ந்தான். தேர்த்திருவிழாவையும் சிறப்பாகச் செய்தான். தீர்த்த விழாவும் முற்றியது. மறுநாள் வழக்கம்போல அரசன் கோயிலை அடைந்து மருதவாணரை வணங்கி வழிபாடாற்றி நின்றுன். சிவபெருமான் ஆகாய வாணியால் 'அரசனே! உன்னுடைய பாவங்களெல்லாம் நீங்கின; உன்

நகரடைந்து உலகத்தை ஆண்டிருந்து பின் சிவபதமடைக' என அருளிச் செய்தார். அரசன் அகமிகமகிழ்ந்தான். திருவருளைச் சிந்தித்து வணங்கிப் போற்றி விடை கொண்டான். சேனையோடும் மாந்தாதா அயோத்திநகரை அடைந்து அரசுபுரிந்து இன்புற்றிருந்தான்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வெயிலவ னிகரு மேனி விறல்யுவ னாசு வன்றன்
வயினிடை யிருந்து வந்த மைந்தன்மாந் தாதா வென்னும்
இயலுறு நாம மெய்தி யெழிலினின் மதனை வென்று
பயிலுறு கல்வி தன்னிற் பார்பரிப் பவனை வென்றான். 1

திடமதின் மேரு வென்னுந் தெய்வத வரையை வென்று
கொடையினிற் சலதி முற்றுங் குடித்தெழு முகிலை வென்று
வடிதரு நெடிய வேலின் மருவலர் தம்மை வென்று
சுடர்மணி மகுடஞ் சூடித் தொன்னிலம் புரக்கு நாளின். 2

திறல்கெழு கலிங்க வேந்தன் திறையெதி ருதவா னாக
மறமலி சேனை யானை வாம்பரி நெடுந்தே ரென்ன
நிறைதரு வேலை தன்னி னின்றெழு தூளி தன்னால்
அறைகதிர் மறையச் சென்றாங் கவனொடு மடுபோர் செய்தான். 3

நவிலுறு மவனு மோங்கு நால்வகைச் சேனை யோடும்
உவகையோ டெதிர்த்து வெம்போ ருடன்றுசில் பகல்பின் னோர்நாள்
அவலமுற் றனிகத் தோடு மோடினா னதனை நோக்கி
இவனையான் றுரத்து மாறீண் டியல்பல வென்று மீண்டான். 4

---

1. வெயிலவன் - சூரியன். விறல் - வலிமை. வயின் - வயிறு. நாமம் - பெயர். எழில் - அழகு. பார் பரிப்பவன் - ஆதிசேடன்; பார் - பூமி. பரித்தல் - தாங்குதல்.

2. திடம் - வலிமை. சலதி - கடல். முற்றும் என்றது ஏழ்கடல்களை யும் என்க. முகில் - மேகம். வடி - கூர்மை. மருவலர் - பகைவர். தொல் நிலம் - பழமையாக வரும் பூமியை.

3. திறல் - வலிமை. இறை - கப்பப்பொருள். மறம் - வீரம். வேலை - கடல்: இங்கே சேனாசமுத்திரமாம். தூளி - புழுதி. கதிர் - சூரியன். கடலினின்று தூளியெழ என்றது நயம்.

4. அவனும் - கலிங்கவேந்தனும். உடன்று - மாறுபட்டு. அனிகம் - சேனை. அவலம் - வருத்தம் தோன்றி நிற்றல். இவனை - இக்கலிங்க வேந்தனை. இயல்பு அல - முறையன்று.

அன்னவன் சேனை வீர ரடர்ந்துசெல் கலிங்க நாடன்
தன்னைமுன் வளைந்து நீடு சமர்செய்தார் தானை யோடு
பன்னிடு மவனு மிந்தப் பாரிடை நிற்க வஞ்சிக்
கொன்னுறு கணிச்சிச் செங்கைக் கூற்றினுூர் புகுந்தொ ளித்தான். 5

வன்படை வீர ரெய்தி மலைவினில் விதிர்ப்பு மேவி
வெந்கொடுத் தவரைக் கொன்ற வெம்பழி மாந்தா தாவைத்
துன்புறச் சூழ்ந்த தன்னுன் ரெழுதிசை வசிட்டன் றன்னை
அன்பொடு நின்ரு னன்று னஞ்சலென் றிதனைக் கூறும். 6

பொருதிரைக் கடல்சூழ் வையம் போற்றிடு மன்னர் மன்ன
கருதலன் றனைநின் சேனை கலக்கநீ மருவு பாவம்
சுருதிசூழ் மருதூ ரெய்தித் துதிபெறு புரவி மேதத்
தொருவலம் வருமு னம்ம வொருவலங் கணையு மன்றே. 7

மருதநன் னீழன் மேவு வரதனைப் பணிந்து போற்றிக்
கருதிடு பணிக ளாற்றிக் கலந்திடு விசாக நாளில்
திருவுறு விழாவுஞ் செய்து திகழவ னருள்பெற் றீண்டு
வருகவிப் பொழுதே செல்க மருவுறு தானை யோடும். 8

என்றெதி ருரைத்தான் வேந்த னினிதென மகிழ்ச்சி யெய்தித்
துன்றிருஞ் சேனை சூழத் துலங்கிடை மருதி னெய்திக்
குன்றவில் லிறைவற் போற்றிக் குலவொரு வலஞ்செய் முன்னர்ச்
சென்றன தீமை யாவுந் தீயுறு பஞ்சி யென்ன. 9

---

5. அன்னவன் - மாந்தாதா என்பவன். அடர்ந்து - நெருங்கி. சமர்- போர். தானை - சேனை. கொன் - அச்சம். கணிச்சி - மழு.

6. மலைவினில் - போர்செய்தலில். விதிர்ப்பு - நடுக்கம். வெந்= வெரிந் - புறங்காட்டல். இசை - கீர்த்தி.

7. பொரு திரை - கரையை மோதும் அலைகள். வையம் - பூமி. கருதலன் - பகைவன். சுருதி - வேதம். புரவிமேதத்து - அசுவமேதப் பிரதக்கிணத்து. ஒரு வலம் வரு முன் அம்ம ஒருவலங் கணையும்: இறுதி யடியில் மடக்கு அமைந்துளது. ஒருவல் அங்கு அணையும்: ஒருவல்=ஒருவு தல்-நீங்குதல். ஒருவல், அணையும் என்றது முரண்.

8. வரதன் - அடியார்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பவன். பணிகள் - தொண்டுகள். விசாகநாளில் விழாச்செய்தல் குறிக்கத்தக்கது. தானை - சேனை.

9. எதிர் உரைத்தான் - விடை கூறினன். துன்று - நெருங்கிய. துலங்கு இடைமருதின். குன்ற வில் - மேருமலையாகிய வில். குலவு ஒரு வலம். தீ உறு பஞ்சி: பஞ்சி - பஞ்சு. 'பஞ்சி கன் சொல்லா' (நன்னூல்).

ஆங்கதை யுணர்வுற் றெய்து மகமகிழ் வோடு பின்னும்
பாங்குறச் சூழ்ந்துள் ளேகிப் பரமனைப் பணிந்து முற்றும்
ஈங்கெனைக் காத்தல் வேண்டு மித்திற மென்ன வேத்தி
ஓங்கிடு மறுகி னெய்தி யுறைந்தனன் வசதி யொன்றில். 10

பற்றிடு சேனை யோரும் பகுத்திடு மிடங்க டம்மில்
உற்றனர் பின்ன ரெண்ணி லுயர்வினை நிலனுங் கர்சும்
பொற்றிருப் பணியு மீந்து புகன்றிடு மண்ட பாதி
கற்றிருப் பணியுஞ் செய்தான் காவல னதிக் காங்கே. 11

திருப்பணி பலவுஞ் செய்து திகழ்விழா வினிது செய்வான்
விருப்புறு மனத்தி னோடு மேவினன் மேவுங் காலை
அருப்பிள முலைமென் மாத ரடுபடைக் கன்னல் விற்கை
மருப்பயில் கணையா னேடும் வந்தது வசந்த காலம். 12

சலதியி னமுது நஞ்சுந் தனித்தனி யன்றே வந்த
மலையவெற் புதவு மந்த மருத்தொன்றே மணந்திட் டோர்கட்(கு)
அலகிலின் பமிர்த மாகித் தணந்தவர்க் கடனஞ் சாகி
இலகிடு மினையோர் வைகு மிடந்துரீஇ யெழுந்த தன்றே. 13

மறுவறு கலைக ளாய்ந்தோர் மடனெனத் தருக்க ளியாவும்
உறுபழுப் பிலைகள் போக்கி யோதவ ருணர்வு மானக்
குறைவறத் தளிர்த்தன் னோர்தங் குணத்தின்மெல் லரும்பு தோற்றி
நிறைபுக ழென்ன வெங்கு மலர்ந்தன நிறைபூஞ் சோலை. 14

---

*10.* ஆங்கு அதை உணர்வுற்று. மறுகு - தெரு. வசதி - இருக்கை : முன்னும் வந்துளது (யுவ. 14) காண்க.

*11.* காவலன் - மாந்தாதா. ஆங்கே - அத்தலத்தில்.

*12.* அரும்பு இள முலை : அரும்பு - தாமரைமொட்டு. கன்னல் வில் - கரும்பு வில். மரு பயில் கணை - மலரம்புகள். மரு - வாசனை. கணையான் என்றது மன்மதனை. வசந்தன் மன்மதன் தோழன்.

*13.* சலதியின் - திருப்பாற்கடலிடத்து. மலைய வெற்பு - பொதியில் மலை. மருத்து - காற்று. மலையவெற்புதவும் மருத்து - தென்றல். மணந்திட்டோர் - கூடினோர். அலகு இல் இன்பு அமிர்தம். தணந்தவர்க்கு - பிரிந்தவர்கட்கு. அடல் நஞ்சு ஆகி : அடல் - கொல்லுதல். துரீஇ= துருவி - ஆராய்ந்து. மருத்து துரீஇ எழுந்தது. வெற்புதவும் மருத்து என்றது நயம்.

*14.* மறு அறு கலைகள் - குற்றமற்ற கல்விகள் : கலை - நூல் என்க. மடன் - அறியாமை. ஓது அவர் உணர்வு : உணர்வு - அறிவு. மடன் பழுப்பிலை, உணர்வு தளிர், குணம் அரும்பு, புகழ் மலர் : உருவகம்.

பத்திர முதவு பொன்னிப் புதுப்புனல் பாய்ந்து காவும்
சித்திரத் தடமுந் தேமா முதலிய பூத்த செய்கை
சத்திர மதிகொண் டோனுக் கவன்பரி சனங்க ளன்னுன்
அத்திரங் களையங் கங்கே யமர்செயற் கீட்ட லொக்கும். 15

வந்திடு வசந்தஞ் சோலைத் தருவொடு வல்லி கட்கும்
அந்தளிர்ப் புதிய தூசு புனைந்தரும் பணிகள் பூட்டி
முந்துற வழகு செய்து முகமலர் வித்துக் கிள்ளை
மந்திர மிசைய நீடு மன்றல்செய் வித்த தம்ம. 16

அன்னதண் பொழில்செய் மன்றல் காண்பதற் கணைவாரென்ன
மன்னுறு தானை வீரர் வளவனீள் சேனை வீரர்
மின்னிடை மகளிர் சில்லோர் வியன்பொழிற் போது கொய்து
நன்னர்நீ ராடல் செய்ய நயந்தன ரெழுந்து செல்வார். 17

சிலரெழிற் றுரங்கம் யானை தேர்மிசை யேக லுற்ருர்
நலனுறு சிவிகை மீது நண்ணினர் சிலர்கள் சில்லோர்
பலனுட னெய்த வேதம் பதிகளாய் நடந்தார் நீடு
தலனுறக் குழுவிற் சில்லோர் தனித்தனி சில்லோர் சென்ருர். 18

காரிகை யொருத்தி கண்ணேர் காளையுற் றெவரு மியானை
தேரொடு சிவிகை மீது செல்கின்ரு ரியானுஞ் சோலை
சேருதற் கொருதே ரேனுந் திகழுறக் களிற தேனும்
ஆரிவ ணுதவ வல்லா ரவனுட னேக வென்ருள். 19

---

15. பத்திரம் - இலை. காவும் தடமும் பூத்த செய்கை. சத்திர மதி - சந்திரவட்டக்குடை : சத்திரம்-குடை. அத்திரங்கள்-அம்புகள். சத்திரம் மதி கொண்டோன் - குடையாகத் திங்களையுடைய மன்மதன். பரிசனம் - ஏவலர். ஈட்டல் - தேடித்தருதல்.

16. வசந்தம் - வசந்தகாலம். வல்லி - கொடி. தளிர் தூசு. அரும்பு அணிகள்: தூசு-ஆடை. அணி - ஆபரணம். மந்திரம் இசைய - மந்திரங் களைச் சொல்ல. மந்திரம் - வீடு. மன்றல் - மணம், கலியாணம்.

17. வளவன்-சோழன். போது-மலரும்பருவத்தரும்பு. பூம்பொழில் நுகர்தல் புனல்விளையாட்டுக் கூறப்படுறது. நயந்தனர் - விருப்பினராய் : முற்றெச்சம்.

18. துரங்கம் - குதிரை. தம்பதிகளாய்.

19. காரிகை - பெண். சோலையின்கட்சேருதறகு. ஒரு தேர் - ஒப் பற்ற தேர்போன்ற அல்குல். களிறு - நகில்களாகிய யானை. ஆர் இவண் உதவ வல்லார்.

சுந்தர மகளிர் சில்லோர் தொடர்பினோர் விடலை யெய்திப்
பைந்தொடி யவர்கட் கெட்டாப் பனிமலர் பறித்து நல்கி
முந்தவர் பணியு மாற்ற முன்னியிங் கெழுந்தே னந்த
நந்தன மறியேன் சற்றே காட்டுமி னல்லீ ரென்றான். 20

வல்லவ னொருவ னங்கோர் மடந்தைமுன் னெனது நெஞ்சம்
அல்லுறழ் கூந்த லுற்ற தென்றன னவிழ்த்தாள் கூந்தல்
வல்லுறுந் தனத்த தென்றான் வனைதுகில் சிறிது நீத்தாள்
புல்லிய தல்கு லென்றான் போவென நடந்திட் டாளால். 21

அன்னமென் னடையோர் பாவை யணைந்திடு துகிலி னூடு
வன்முலை சிறிது தோன்ற நோக்கியோர் மைந்தன் மாலாய்
மன்னவ ணிற்கி னின்று செலிற்செல்வன் மற்று நோக்கான்
பின்னுற வருவோர் தள்ள விடித்திடப் பெரிது நொந்தான். 22

சீதள முறுபூஞ் சோலை சேர்ந்தன ரசோகு முல்லை
தாதகி மயிலை சூதஞ் சாதிமந் தாரங் கோங்கு
பாதிரி செருந்தி புன்னை மல்லிகை பன்னி வெட்சி
மாதவி யாதி பூத்து நெருங்கிய வளமை கண்டார். 23

நீடின வேற்க ணல்லார் நேர்தலுஞ் சோலை தன்னுள்
ஆடின மயில்க ளீட்ட மகன்றன வெகின மெல்ல
வாடின மழையுண் போகின் மகிழ்ந்தன குயில்க ளோடு
பாடின கிளிகள் பூவை பதுங்கின குடம்பை யுற்றே. 24

---

20. விடலை - காமுகன். நந்தனம்: சிலேடை. நந்தனம் - சோலை, நம் தனம். முன்னி - கருதி.

21. அல் உறழ் கூந்தல்: அல் - இருட்டு. வல் உறும் தனத்தது: வல் - சூதாடு கருவி. துகில் - ஆடை.

22. மைந்தன் - ஆடவன். மால் ஆய்: மால் - காமமயக்கம். மன் அவள் நிற்கின் நின்று. இடித்திட.

23. சீதளம் - குளிர்ச்சி. தாதகி - ஆத்தி. மயிலை - இருவாட்சி. சூதம் - மா. பன்னி - பன்னிமரம். மாதவி - குருக்கத்தி.

24. ஈட்டம் - கூட்டம். எகினம் - அன்னம். பூவை - நாகணவாய்ப் புள். குடம்பை - கூடு.

தேசிழை யொருத்தி யங்கோர் செண்பக மலரைக் கொய்து
நாசிமுன் னீட்டி மோப்ப நவிலுறு காளை நோக்கி
வாசநீ டவைகள் நேரே மற்றிதை நிகர்பா ரென்றோர்
ஆசில்கோங் கரும்பைக் கொய்து நீட்டின னணுக வந்தே. 25

ஊடலுற் றவள்பின் காத லுயர்தலு மொருத்தி கேள்வன்
மாடுற நிற்ற னேக்கி நோக்குறு தவள்போல் வாவி
நீடொறு மலர்ப்பூங் கொம்பை நேருறப் பற்றி யீர்த்திட்(டு)
ஆடவ ரெனிலிவ் வேலை யறவளைத் திடுவ ரென்ருள். 26

விடையனு னெருவன் கொய்யு மென்மலர்க் கோட்டின் மீது
படிதரு கொம்பின் மென்பூப் பறிக்கவோர் பாவை பின்வந்(து)
இடையறு துகின்மேற் கால்வைத் தேறித்தன் ரேண்மே னின்ருள்
கொடிகளோர் கொழுகொம் பேறிக் குலவிமேற் பிடித்தல் போலும். 27

ஒருவிடன் ரேளின் மேனின் ரெருத்திபூப் பறிக்க வோர்மா(து)
உரியவ ளெனையுஞ் சற்றே பரியென வுறுகின் ருனவ்
வரிவைமுன் குதித்துச் சென்ரு ளவளுஞ்சூழ்ந் தகன்ருள் பின்னுற்(று)
இருவரு மிவர்மி னென்ருங் கின்னலி னழுந்தி நின்ருன். 28

சுடர்த்தொடி மகளிர் சில்லோர் வளைத்திடோர் துணர்ப்பூங் கொம்பைப்
பிடித்தலு மொருத்தி மற்ருேர் பெயர்ந்தனர் நிமிர்ந்தி டந்தக்
கடித்தடஞ் சினையை யன்னுள் கைவிடா தஞ்சி நின்ருள்
அடுத்தவள் கணவன் கண்ணுற் றணங்கெனக் கருதிச் சென்ருன். 29

---

25. நாசி - மூக்கு. ஆசு இல் கோங்கரும்பை: கோங்கு அரும்பு நகில்களுக்கு உவமையாம்.

26. காதல் - விருப்பம். கேள்வன் - கணவன். மாடு உற: மாடு - பக்கம். ஈர்த்திட்டு - இழுத்து.

27. விடை அன்னன். மலர்க்கோடு - பூங்கொம்பு. துகில் - ஆடை.

28. விடன்-காமுகன். பரி என-சுமப்பாய் என்று கூற. பின் உற்று - பின்னே போய். இருவரும் இவர் மின் என்று: இவர் மின் - இவர்ந்து செல்லும் மின்னற்கொடி: சிலேடை: இன்னல் - துன்பம்.

29. வளைத்திடு ஓர். துணர் - பூங்கொத்து. நிமிர்ந்திடு அந்த. அடுத்து அவள் கணவன். கண்ணுற்று - பார்த்து.

உரமிசை யென்கொல் சொற்க முயரற மியற்றி னோர்கள்
பரிவிற்சே ரிடமே யோங்கு பயோதர மின்ப மாரி
தருவதே தனமிங் கேழைத் தனியனேற் குதவ லாமென்(று)
ஒருவிற லோனும் வாட்க ணொருத்தியு மிசைத்து நின்றார். 30

மற்பொலி தொடிக்கை நீயார் மகளெவன் மணம ணாளன்
அற்புறு மனையி துண்மை யடியனேன் மணாள னேயாம்
சொற்பயி லுனக்கு நானம் மனையென்றோர் சுடர்வே லோனும்
கற்புறு மாதும் பேசிக் கலக்கமுற் றனையன் சென்றான். 31

வன்மதக் களிறன் னானோர் வயவனோர் வனிதை முன்போய்த்
தன்மைமுன் னிலைப்பே ரியார்க்குத் தகுமஃ துரைக்க வேண்டும்
என்னமற் றவளெ னக்கு முனக்குமீங் கிசையு மென்றாள்
அன்னவன் போது மீதென் றகத்திடை யுவகை பூத்தான். 32

அருத்தியோ டுரியா டன்பே ரினிதறைந் தவனை யங்கோர்
திருத்தகு விறலோன் கூவத் தெரிக்குமப் பெயராண் மற்றோர்
முருத்தன மூர லாளுங் கேள்வியின் முன்ன ருற்றாள்
ஒருத்திநா ணோடு நின்று ளொருத்திவெஞ் சினமேற் கொண்டாள். 33

வெற்றிவேற் றடக்கை யானோர் வீரனோர் கரிய வாட்கண்
முற்றிழை சென்னி மீதோர் முல்லைமென் மலரைக் கொய்தாங்(கு)
உற்றிட வெறிய வன்னா ளுயர்கழைச் சிலையெங் கென்றாள்
பற்றதி னிசைநாண் மற்று னுணெனப் பறந்த தென்றான். 34

---

30. உரம் - மார்பு. சொற்கம் - நகில், சுவர்க்கலோகம். அறம் - தருமம். பரிவில் - விருப்புடன். சேர் இடமே. பயோதரம் - கொங்கை, மேகம். தனம் - நகில், பொருள் (திரவியம்): கோடீச்சுரக்கோவை செய். 15 பார்க்க.

31. தொடிக்கை: அன்மொழித்தொகை. தொடி - வளையல். நீ யார் மகள், மணாளன் எவன். அற்பு=அன்பு: வலித்தல். மணாளன்-கணவன்; மண் ஆளன். நான் அம்மனை: அம்மனை - தாய்; அ மனை.

32. வயவன் - வீரன். வனிதை - பெண். தன்மைப்பேர் - நான். முன்னிலைப்பேர் - நீ. ஈது போதும். உவகை - மகிழ்ச்சி. அகம் -மனம்.

33. அருத்தி - அன்பு. உரியாள் - உரிமையுடையாள். விறலோன் - வீரன். கூவ-கூப்பிட. அப்பெயராள்-அப்பெயரினையுடையாள். முருத்து அன மூரலாள்: முருத்து - மயிலிறகின் அடிக்குருத்து. மூரல் - பல். கேள்வியின் முன்னர் - அழைப்பதன் முன்.

34. வாட்கண் - ஒளிபொருந்திய கண்: வாளாயுதம் போன்ற கண் எனினுமாம். முற்றிழை - திருந்திய ஆபரணமுடையாள்: அன்மொழித்

மெல்லியன் மகளி ராயம் விரவொரு மடந்தை கொங்கை
புல்லுதற் கலகில் காதல் பூண்டவ னொருவ னுங்கு
வில்வமென் கனியி னென்று தொடுதலு நோக்கி மேவும்
மல்லிகை முகையி னென்று மலரொன்று கொய்து நின்ருள். 35

விரும்பின ளொருத்தி சேஞேர் விறலினன் விழியை மூடக்
கரும்பெனு மொழியோர் பாவை கண்டுகண் சிவந்து நின்று
வரும்புறக் கேள்வன் முன்னுற் றென்னென மலிநா ணுற்றுச்
சுரும்புக ணலரின் மூழ்கித் தூற்றிய துகளை யென்ருள். 36

தென்னுறு சோலை யெங்குந் திரிந்தொரு மடந்தை நீடு
நன்னர்மா தவித்தண் ணிழ னணுகலு மொருவ னெய்திப்
பன்னிமென் மலர்க ளிண்டுப் பறித்தளித் திடவோ வென்ருன்
அன்னவ ளியான்வண் முல்லை யலர்கொள்ளே னடந்தி டென்ருள். 37

சீறரிக் கயற்க ணுளோர் சேயிழை மலர்கள் கொய்தாள்
வீறுசெந் நிறத்தண் போதி னென்றுதன் மென்கைக் கொண்டாங்(கு)
ஏறன கொழுநன் முன்ன ரெய்தலு மொருமின் னன்னுள்
வேருெரு வனிதை யின்ரே வென்றனள் வெள்கி நின்ருள். 38

---

தொகை. மீது ஓர். முல்லை : கற்புக்கு அறிகுறி. கழைச் சிலை - கரும்பு வில். பற்று அதின் இசை நாண் : இசை நாண் - பொருந்தியுள்ள வில்லினது நாணி. உன் நாண் என : நாண் - நாணம், வெட்கம். மன்மதனுடைய வில்லின் நாண் வண்டொழுங்கு ஆதலின் பறந்ததென்ருன்.

35. மகளிர் ஆயம்-மகளிர் கூட்டம். விரவு-பொருந்தும். மடந்தையினது கொங்கை : ஆருவது விரிக்க. கொங்கை புல்லுதற்கு : இரண்டனுருபு தொக்கது. வில்வப்பழம் என்க. மல்லிகை முகை - மல்லிகை மொட்டு. ஒன்றும் மலர் ஒன்று - பொருந்திய மலரொன்று. முகையினென்று மலரொன்று என்றது நயம். மடக்கு.

36. விரும்பினள் ஒருத்தி : முற்றெச்சம். விறலினன் - வலியுடையோன். மொழியினையுடைய பாவை. கண் சிவந்து - கோபித்து. முன் உற்று என் என. கேள்வன் - கணவன். நின்று - நிற்க. கேள்வன் என் என. மலி நாண் - மிக்க வெட்கம். சுரும்பு - வண்டு. கண் அலர் - கண்ணுகிய அலர். துகள் - பொடி ; மகரந்தம்.

37. தென் - தென்னை : அழகு எனினுமாம். மாதவி - குருக்கத்தி. பன்னி மலர். அன்னவள் முல்லை அலர் கொள்ளேன் ; நடந்திடு என்ருள்.

38. சீறு அரி கயற்கணுள்: அரி-செவ்வரி. ஆங்கு ஏறு அன கொழுநன். வனிதை - பெண். வெள்கி - வெட்கப்பட்டு.

இத்திற மயிலன் னுரு மிளைஞரு மினிதி னீண்டிக்
கொத்துறு முகையும் போதுங் கொய்தனர் புனைந்தும் மோந்தும்
ஒத்திட வொருவ ராகத் தொருவர்க ளெறிந்தும் முன்னர்த்
துய்த்தக மகிழ்ச்சி யுற்றார் தொகுமலர்க் காவி னின்பம். 39

மற்றரு மிவரிவ் வாறு மருவலர் தம்மை யெல்லாம்
பற்றிமுன் பிணைத்துக் கட்டிக் கொண்டுபின் பகரு நன்னூல்
கற்றிலர் மனம்போல் வைகுங் காவுறு வறுமை நோக்கி
யுற்றனர் குளனு மியாறு மொண்புன லாடல் செய்வான். 40

கலிநிலைத்துறை

வந்தி யாவருந் துடுமெனக் குதித்தலும் வனநீர்
உந்தி டுந்துளி விசும்பெழல் விசும்பினுக் கோடைக்
கந்த ரஞ்சொரி வியப்பதூஉம் வீழ்ந்திடல் கார்நின்(று)
அந்த ரத்திடை மழைசொரி விப்பதூஉ மாகும். 41

செய்ய சுண்ணமுந் தேய்வையுஞ் செறிந்திடு மொருவர்
மெய்யி னுற்றிட வொருவர்முன் வீசியும் விளங்கு
கையி னுற்றிடு சிவிறிநீர் கனமெனச் சொரிந்தும்
துய்ய நீர்குடைந் தும்விளை யாடுவார் சூழ்ந்து, 42

---

39. மயில் அன்னார் - மயில் போன்ற சாயலையுடைய மகளிர். ஈண்டி - நெருங்கி. முகை - மொட்டு. போது-மலரும்பருவத்தரும்பு. ஆகத்து - மெய்யின்மேல். துய்த்து - அனுபவித்து. காவில் இன்பம் துய்த்து மகிழ்ச்சியுற்றார்.

40. மருவலர்-பகைவர், மணம் பொருந்தும் மலர். இவர்-ஆடவரும் மகளிரும். முன் இரண்டடிகள் நயமுள்ளன. நன்னூல் - நல்ல நூல்; அறிவு நூல் என்க. இலக்கண நூலுமாம். மனம்போல் வைகும் கா என்றது இருள்சூழ்ந்துள்ள கா என்றபடி. இதுவரை பொழில்விளையாடல் கூறப்பட்டது.

41. வந்து யாவரும். துடும் என - திடீரென்று. வனநீர் - மிக்கநீர்: வனம்-மிகுதி, அழகு. வனநீர்: நயம். உந்திடும் - தள்ளும். விசும்பு - ஆகாயம். கந்தரம் - மேகம். அந்தரத்திடை - ஆகாயத்தில். ஓடை கந்தரம் சொரிவிப்பதும் கார் மழை சொரிவிப்பதும் ஆகும்.

42. செய்ய சுண்ணம் - சிவந்த சுண்ணப்பொடி: செவ்வையாகிய சுண்ணப்பொடி எனினுமாம். தேய்வை - சந்தனக்குழம்பு. சிவிறி - நீர் தூவும் துருத்தி. கனம் - மேகம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அன்னமென் னடைப்பூங் கோதை யரிவைய ரினிய தூநீர்
முன்னுறு விருப்பின் மூழ்கி மூழ்கியங் கெழுத லேக்கின்
துன்னுறு கருங்கொண் மூவிற் சுடர்விரித் தினிது காட்டும்
மின்னின நோன்றி யாழ்ந்து மீளவுந் தோன்றல் போலும். 43

சிலைமத னனைய னங்கோர் திறலின னெருபூங் கோதை
முலைமிசைப் புனலைச் செங்கை முகந்துகந் திறைத்தா னீடு
கொலைமதத் தடக்கை வேழங் குளித்திட வமைத்த பாகன்
அலைபுனல் வாரி வாரி யதன்மிசை யிறைத்தல் போலும். 44

தாக்கணங் கனைய ளோர்மான் குளித்திடத் தன்பி னெய்தித்
தூக்கிடு மலர்மென் கூந்தற் சொருக்கினை யவிழ்த்தோர் காளை
தேக்குறு புனலின் மூழ்கிச் சேணிடை யெழுந்தம் மாது
நோக்கியங் கயலோர்ச் சீற நோக்கிமுன் னகைத்து நின்றான். 45

களித்தவ ளொருத்தி யோர்பாற் கலந்திடு மூட லோடு
குளித்திட வவடன் கேள்வன் குளிர்புன லிடைச்சேண் மூழ்கி
ஒளித்துவந் தெழிற்றாள் பற்றி யுள்ளுற வீர்ப்பக் கண்ணீர்
துளித்திட வலறி முன்னர்த் தோன்றிடத் திகைத்து நின்றாள். 46

ஆழ்ந்திடு புனலி னங்கோர் வலவனோ ரரிவை பின்னர்த்
தாழ்ந்தவ ளினிய கால்க டன்கழுத் திடைத்தா ரென்னச்
சூழ்ந்திட நிமிர்வுற் றந்தத் துடியிடை சீற்ற நோக்கி
வீழ்ந்திட வெறிந்து நீரில் வீழுமுன் றடக்கை யேற்றான். 47

---

43. பூங்கோதை - பூமாலை. அரிவையர் - பெண்கள். கருங்கொண்மூ - கரிய மேகம். மின் இனம்.

44. சிலை - கரும்பு வில். முகந்து உகந்து. வேழம் - யானை.

45. தாக்கு அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வப் பெண். குளித் திடத்து : தொகுத்தல். தூக்கிடு - தொங்கவிட்ட. சேண் - தூரம். அயலோர்ச் சீற - அயலோரைக் கோபிக்க.

46. கேள்வன் - கணவன். ஈர்ப்ப - இழுக்க. கேள்வன் மூழ்கி ஈர்ப்ப தோன்றிட, அலறி திகைத்து நின்றாள். திகைத்து - மயங்கி.

47. அங்கு ஓர் வலவன். துடி இடை : அன்மொழித்தொகை. தாழ்ந்து அவள். தார் என்ன - மாலை எனும்படி. சீற்றம் - கோபம்.

பொற்றொடி யொருத்தி தெண்ணீர் புகுந்தொளித் திடுவ னீவந்(து)
உற்றெனைப் பிடித்தி யென்ன வுயர்வரை யனைய தோளான்
மற்றுனைக் குழாத்துட் காண்பான் வளைக்கைபற் றிடுவ னென்றுங்(கு)
அற்புடன் பற்றி மூழ்கி யாண்மகன் பிடித்தே னென்றான். 48

விழிகொடு வேலை வென்ற மெல்லிய லொருத்தி கஞ்சத்(து)
எழிலுறு மரும்பொன் றாழத் திருத்தல்கண் டிதைக்கொய் கென்ன
அழிதரு மதவே ளன்னா னருமக னதுகொண் டெய்தி
மொழியுமிவ் வரும்பி னோடு மூன்றெனக் கரத்தி லீந்தான். 49

நிறமுறு புனலி னின்று நீடெழில் வாவி யூடு
நறைவிரி மலர்கொய் வாரு ணவிலொரு திறலோ னங்கோர்
மறமலி வேற்க ணுடன் வனமுலை தொடலு நோக்கி
அறனிதோ வென்றாள் கஞ்சத் தரும்பெனத் தொட்டே னென்றான். 50

சமரவேற் கண்ணி னாளோர் தையல்வண் புனல்வாய்க் கொண்டாங்(கு)
உமிழ்தலு மதனை நேருற் றொருவன்றன் வாயேற் றுண்டான்
அமிர்தமோ வனைய தென்றா ளொருவனங் கதனுக் கன்னான்
குமுதமென் மலரின் தீந்தேன் கைக்குமோ குடித்தா லென்றான். 51

மங்கைமற் றொருத்தி பல்கால் மூழ்கலு முரியோன் வாரி
தங்குசெவ் வல்லிப் போது தனிலொன்று கைக்கொண் டிந்தப்
பங்கய மலர்நின் கண்போற் பருத்ததைப் பார்த்தி டென்றான்
அங்கவ ளனைய தெண்ணீ ரகன்கரை யேறி னாள். 52

---

48. குழாத்துள் - கூட்டத்தில். என்று ஆங்கு அற்புடன்: அற்பு - அன்பு.

49. விழி கொடு வேலை: வேலை - கடல். கஞ்சம் - தாமரை. ஆழத்து இருத்தல். கொய்க என்ன. அழி தரு மதவேள் - சிவபெருமான் நெற்றிக் கண்ணால் சாம்பரான மன்மதன். மூன்று என்றது நகில்களாகிய அரும்பு களுடன் மூன்றென்க.

50. வாவி ஊடு - குளத்தில். நறை - தேன்; வாசனையுமாம். அறன் இதோ - இது தருமமா. கஞ்சத்து அரும்பு என: கஞ்சம் - தாமரை. மறம் மலி வேல் - கொலைத்தன்மை பொருந்திய வேல்.

51. சமர வேல்: சமரம் - போர். ஆங்கு உமிழ்தலும் நேர் உற்று ஒருவன். வாய் ஏற்று. அங்கு அதனுக்கு: அதனுக்கு - அவன் வினவிய தற்கு: குமுத மென்மலர் என்றது ஆம்பல்போலும் வாய் என்றபடி. கைக்குமோ - கசக்குமோ. தீந்தேன் கைக்குமோ என்றான்.

52. பல்கால் - பலமுறை. உரியோன் - கணவன். வாரி - நீர். பங்கயம் - தாமரை. அங்கு அவள்: அங்கு - அப்பொழுது.

சேலன கருங்கண் சேப்பச் செய்யவாய் விளர்ப்பக் கூந்தல்
பாலுற வவிழ்ந்து லாவ நிற்குமோர் பாவை தன்னை
மாலனு னவடன் காந்தன் வடிவிதென் னெனவோர் தையல்
ஏலநீர் தோய்ந்திட் டான்மற் றெவ்வண மிருப்ப தென்ன. 53

ஓதுறு புலவி யாளோ ரொண்ணுதல் புனைமெல் லாடை
சீதநீர் நனைந்து மேனி தெரிதலு மணாளற் கூவி
வாதனந் தந்தி டென்றுண் மனமிரங் கியதோ வென்றான்
நாதமென் படமென் றுள்பின் னுனுமெண் ணினனீ தென்றான். 54

நண்ணுறு மிவரிவ் வாறு நாடியிவ் வொருவ ராக
வண்ண நீள் கரையி லேறி மறுதுகில் புனைந்து சாந்தும்
தண்ணுறு மலர்ப்பூந் தாருந் தழைகதிர்க் கலனுந் தாங்கி
உண்மகிழ் வெய்தித் தேற லுண்பதற் கொருப்பட் டாரால். 55

கன்னிகை யொருத்தி யீரத் துகிலளோர் காத லோனை
மன்னனீ கலையென் றுணீ மான்கொலென் றெடுத்தீந் திட்டான்
துன்னவள் கலவை யென்று டுகில்புனைந் தனையே யென்றான்
அன்னவள் கலனீ யென்று ளனையனீ நல்லளென்றான். 56

---

53. சேப்ப - சிவப்ப. விளப்ப - வெண்ணிறமாக. பால் உற - பக்கத்திலே பொருந்த. மால் அனன்: அன்னன்: தொகுத்தல். அவள் தன் காந்தன். வடிவு இது என் என. ஏல - பொருந்த. நீர் தோய்ந்திட்டால் - நீரிலே மூழ்கினல்; நீர் என்னை அணைந்தால் என வேறுமொருபொருள் தொனித்தல் காண்க. எங்ஙனம் - எவ்வாறு.

54. புலவியாள் - புலவியினையுடையாள். புலவி - ஊடல்: 'அஃதாவது தலைமகனும் தலைமகளும் ஓர் அமளிக்கண் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்குக் காரணமில்லையாகவும் காதல் கைம்மிகுதலால் நுண்ணியதோர் காரணம் உளதாக உட்கொண்டு அதனை அவன்மேலேற்றி அவள் புலத்தல்' என்பர் பரிமேலழகர். ஒண்ணுதல்: அன்மொழித்தொகை. சீத நீர் - குளிர்ந்த நீர். மணாளன் - கணவன். வாதனம் தந்திட என்றாள். நாத மென் படம்: படம் - ஆடை. நானும் எண்ணினன் ஈது.

55. மறு துகில் - வேறு ஆடை. தழை கதிர்க்கலன்: கலன் - ஆபரணம். தேறல் - தேன். மலர்ப்பூந்தார் - அழகிய மலர்மாலை. உள் மகிழ்வு எய்தி.

56. துகிலள் - ஆடையினையுடையாள். மன்னன்: விளி. ஈ கலை - ஆடையைக்கொடு; நீ கலை: கலை - ஆண்மான். யான் கலையாயின் நீ பெண் மான்கொல் என்றான் என்க. துன் அவள் கல வை என்றாள்; கல - கலப்பாய்; கூடுவாய் என்றபடி: கலவை - கலவைச் சாந்து. கலன் ஈ, கலன்

கஞ்சன வானில் வில்லுங் கணையும்போ கமுமுன் கொண்டு
மஞ்சினஞ் சூழத் தோன்று மதியெழி னேக்கிச் சேடி
வஞ்சியர் பளிங்கிற் பொன்னின் வகுத்திடு வள்ளந் தன்னில்
விஞ்சுதேன் வாக்கி நல்க மென்கனி வாய்வைத் துண்டார். 57

மின்னிடை யொருத்தி யுண்டு மிகுந்திடு நறவுட் டோன்றும்
தன்னெழிற் றனத்தை யிந்தச் சலசமென் முகைபூ வாத(து)
என்னென வொருத்தி யெய்தி யிருவர்த முகமு நோக்கி
இன்னவை மலருங் கொல்லோ விருமதி முன்ன ரென்ருள். 58

தேறன்மிக் கருந்தி ஞளோர் தெரிவைகஞ் சனத்தி னூடு
கூறுதன் படிவ நோக்கிக் கோற்றெடி யெனைப்போ னென்னல்
காறுநன் கிருந்தா யின்று கண்முகம் வாய்மற் றெல்லாம்
மாறுபட் டிருத்தி யென்னே மதுநுகர்ந் தனையோ வென்ருள். 59

குடித்தவ ளொருத்தி வேரிக் குழிசியின் மதியை நோக்கிப்
படுத்திமுன் னெனையின் நீண்டுப் பதுங்கிடில் விடுவ னேவென்(று)
எடுத்தலைத் திடக்கை யிட்டாள் காண்கில ளெதிர்வா னேக்கி
விடுத்ததிக் குழிசி யென்ன வெகுண்டுதைத் துடைத்திட் டாளால். 60

நீடிய மைய லாளோர் நேரிழை தனது சாயை
ஆடியு னேக்கி யானிங் கென்செய்தே னலக்க ணெய்த
ஈடுறு மிதனி லென்னை யடைத்தவ ரியார்கொ லென்ருள்
கூடிமற் றவளை நீங்காக் கொழுநன்பார்த் தெனையு மென்ருன். 61

---

நீ என்ருள். கலன் - ஆபரணம், வம்புக்காரன். நீ நல்லள் - நீ நல்லவள். கஞ்சனம் - கண்ணுடி ; கஞ்சன வான் - கண்ணுடிபோன்ற ஆகாயம்.

57. கணை - அம்பு. மஞ்சு இனம் - மேகக் கூட்டம். மதி - சந்திரன். சேடி - தோழி. வஞ்சியர் - வஞ்சிக்கொடி போன்ற மகளிர். வள்ளம் - கிண்ணம். வாக்கி - ஒழுகவிட்டு : வார்த்து என்றபடி.

58. நறவுள்-தேனினுள்ளே. சலசம் மென் முகை-தாமரைமொட்டு. இன்னவை - இவ்வரும்புகள் : என்றது நகில்களை. இருமதி - இரண்டு சந்திரர் : என்றது இருவர் முகங்களையும்: சந்திரன்முன் தாமரை மலர்வ தில்லையாதலால்.

59. தேறல் - தேன். கஞ்சனத்தினூடு - கண்ணுடியில். கோற்றெடி : விளி. நென்னல் - நேற்று.

60. வேரி - தேன். குழிசி - பானை : கட்குடம் என்றபடி. மதி - சந்திரன். படுத்தி - துன்புறுத்தி. பதுங்கிடில் - ஒளித்துக்கொண்டால்.

61. மையலாள் - மயக்கத்தையுடையாள். ஆடி - கண்ணுடி. சாயை- நிழல். அலக்கண் - துன்பம். கொழுநன் - கணவன், தலைவன் : கொடி

மட்டள விலாது கொண்டு மாதவ மியற்று மேலோர்
நிட்டையி லிருப்ப தென்ன விருந்தன ணிகழோர் தையல்
கட்டுபூங் கோதை யோர்மின் கணவனுந் தானும் வைகும்
இட்டமுஞ் சினமு மற்று மெடுத்தெடுத் திசைத்தாண் மன்னே. 62

வரிகளோச் சிடவோ டாது வள்ளமொய்த் திடலு முண்ணும்
அரிவையங் கொருத்தி யின்ன தளிகட்கோ வெனக்கோ வென்னப்
பரிவுறு சேடி யுண்மின் பகுத்திரு விரு மென்றாள்
இருதிறத் தவர்க்கும் வேண்டா வென்றெடுத் துகுத்து நக்காள். 63

ஒருமக னூடித் தன்பி னின்றிடு மூரிய ளென்றாங்(கு)
அருகுறு மொருத்திக் கீதை யருந்தெனத் தானுண் டெஞ்சும்
முருகினை நீட்ட வந்த மொய்குழல் கணவன் சீற
இருவரு மின்ன னூர்க ளிருவருஞ் சமரி னின்றார். 64

ஆரமு தனைய தீம்பா லடிசிலுந் தயிர்வி ராய
மூரலு மிழுதின் சோறு மூவகைக் கனியுந் தூய
நீருநீ டருந்து வார்க ணிகழுமியா ழிசைப்பார் மற்றை
ஓர்தரு மிசைமுன் சோர வொருவர்மே லொருவர் வீழ்வார். 65

---

போல்வாராகிய மகளிர் படர்தற்குக் கொழுகொம்பு போன்றவன் என்க. ஈடு உறும் - தனக்குத்தானே ஒப்பாகவுள்ள.

62. மட்டு அளவிலாது கொண்டு: மட்டு - தேன். மட்டு அளவிலாது என்றது முரண்; நயம்படக் குறித்தார்: மட்டு-அளவு. ''கண்ட மட்டில் தின்றாலும் கண்டமட்டிற் கடவாதே''; ''இன்ன மட்டென்று கூற'' என்பவைகளால் அறிக. மா தவம் - பெரிய தவம். பூங்கோதை - பூமாலை. மின் - மின்னற்கொடிபோல்வாள்: உவமவாகுபெயர். இட்டம் - விருப்பம். சினம் - கோபம்.

63. வரி - வரிகளையுடைய சுரும்பு: வரி - கோடு, புள்ளி. ஓச்சிட - ஓட்ட. வள்ளம் - கிண்ணம். இன்னது - இந்தக் கள். அளி - வண்டு. பரிவு உறு - அன்பு பொருந்திய. பகுத்து - பங்கிட்டு; பிரித்து என்றபடி. என்று எடுத்து உகுத்து. உகுத்து - கவிழ்த்து. நக்காள் - சிரித்தாள்.

64. ஊடி - பிணங்கி. ஆங்கு அருகு உறும் ஒருத்திக்கு. எஞ்சும் - மிகுதியான. முருகு-தேன். மொய்குழலினது கணவன்: மொய் குழல்- நெருங்கிய கூந்தலையுடையாள்: அன்மொழித்தொகை. இருவரும் - ஆடவர் இருவரும். மின்னார்கள் இருவரும் - ஊடி நின்றாளும் அருகுறும் ஒருத்தியுமாக இருவரும். சமர் - போர்; சண்டை.

65. பால் அடிசில் - பாற்சோறு. மூரல் - சோறு. இழுது - நெய். மூவகைக் கனி - வாழை மா பலாக்கனிகள். நீடு அருந்துவார்கள்.

வின்னுத லொருத்தி சூத மென்கனி யருந்தென் றியத்
தன்னுரி யவனீள் கொவ்வைத் தண்கனி தருகென் றுனோ்
மின்னிடை யிளநீர் மன்ன வேண்டுங்கொ லெனவோர் வில்லோன்
என்னதி னிருக்கும் பாலோ வின்சுவைப் புனலோ வென்றான். 66

பன்னிடு மிருதோ ராறிற் படிந்திடு வசந்த மென்ப(து)
உன்னிடு மதுவென் றோர்பே ருற்றுவந் தெவர்க்கு மின்பம்
இந்நிலத் தெய்து விக்கு மென்றிடி லினைய காலத்(து)
அன்னதை யருந்தி னோர்கள் களிப்பினுக் களவுண் டாமோ. 67

மருவுமிவ் வேனி றன்னின் மாதவ மெய்த லோர்ந்து
நிருபனு மகிழ்ச்சி யெய்தி நீணில வேந்த ரியாரும்
வருகென முடங்கல் போக்கி யவர்கடம் வரவு நோக்கித்
திருவுறு நகர மெங்குஞ் சிறப்புமேற் சிறப்பு செய்து. 68

புகல்விடைக் கொடிமுன் னேற்றிப் பொருந்துமீ ரைந்து நாளும்
திகழுறு மூர்தி மீதுந் தேரினும் பவனி போந்து
தகவுறு தீர்த்த நல்கித் தனிமுதல் மருத வாணன்
அகமகிழ் வெய்தச் செய்து சொரிந்தன னம்பொன் மாரி. 69

---

66. வில் நுதல் - ஒளியினையுடைய நெற்றி; வில்போலும் புருவம் எனினுமாம். சூதம் - மா. அருந்து என்று ஈய. தன் உரியவன் - தன் கொழுநன். கொவ்வைத்தண் கனி-கொவ்வைப்பழம்போலும் அதரத்தை. மன்ன : விளி. என் அதின் இருக்கும். இன் சுவை புனல் - இளநீர்.

67. பன்னிடும் - சொல்லும். இருது ஓர் ஆறில். வசந்தம் என்பது- வசந்தருது என்பது. உன்னிடும் - கருதும். மது - வசந்தகாலம். வந்து உவந்து. அன்னதை-அம்மதுவை. ''நாணி என்பதை நாரியென் றுரைத் திடும் நசையால்'' என்னும் பாடலை இப்பாடல் நினைவூட்டும்.

68. வேனில்-வேனிற்காலம். நிருபன்-அரசன். ஓர்ந்து-ஆராய்ந்து. முடங்கல் - ஓலை : திருமுகம்.

69. விடைக் கொடி - இடபக்கொடி. ஈரைந்து நாளும் - பத்து நாட் களினும். ஊர்தி - வாகனம். பவனி - திருவுலா. மருதவாணன் - மருத வனத்திறைவர் : ஸ்ரீ மகாலிங்கசுவாமி. பொன் மாரி - பொன் மழை. விருட்சத்தடி சேவை, சூரிய சந்திர பிரபாகாரத் திருக்காட்சி, நந்தி பூத வாகனரோகணம், பல்லக்கு சேவை - ஐம்முக நாகாரோகணம், இலிங்கா கார இடபவாகனரோகணம், யானை வாகனரோகணம், இடபாரூடத் திருக் காட்சி, அசுவ வாகனரோகணம், பிட்சாடனமூர்த்தக் காட்சி, திருநடனக் காட்சி என்பன முறையே பத்துநாள் விழாக்களினும் பவனிவரல் காண லாம். மற்றும், பதினொருநாள், இருபத்தொருநாள் செய்யும் விழாக்களும் உண்டு.

விரவுறு மறுநாள் வேந்தன் விளங்குபொற் கோயி லெய்தி
அரனெதிர் பணியுங் காலை யரசநின் பவங்க ளியாவும்
ஒருவின நீயுன் னூருற் றுலகையாண் டிருபன் னாள்பின்
பரபத மெய்து கென்னப் பகர்ந்தன னரன்விண் வாக்கால். 70

அம்மொழி செவியி னெய்த வகங்களி கூர்ந்து மன்னன்
கைமத வரைத்தோல் போர்த்த கடவுட னருளை யெண்ணிச்
செம்மைநீ டன்பிற் போற்றி விடைகொடு சேனை யோடும்
வெம்முர ணகற்றுங் காவல் வியனக ரயோத்தி யுற்றான். 71

பொலன்குவ டனைய திண்டோட் புகலுறு மாந்தா தாமுன்
கலிங்கநாட் டிறையைக் கொன்ற கடும்பழி தொலைத்தெம் மீசன்
இலங்கருள் பெற்ற வாறீ தினியெழில் வசுமா னெய்தி
வலங்கொடு தனது நாடு மருவிய காதை சொல்வாம். 72

மாந்தாதாச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1134

---

70. பவங்கள் - பிறப்புக்கள். ஒருவின - நீங்கின. பரபதம் - மேலான வீட்டுலகம். விண் வாக்கு - ஆகாய வாணி.

71. கை மத வரை - யானை. வெம் முரண் - கொடிய மாறுபாடு.

72. பொலன் குவடு - பொன்மலை; மேருமலை.

நாற்பத்துநான்காவது

# வசுமன்னவச் சருக்கம்

---

[வசுமான் என்னும்வேந்தன் காஞ்சிபுரத்திலிருந்து அரசுசெலுத்தி வந்தான். அவன் ஸ்ரீ காசியை அடைந்து கயாசிராத்தம் செய்யக்கருதி அங்கே அதனை முடித்துத் திரும்பினன். அதற்குள் பகைவர்கள் காலங் கருதியிருந்து அவன்நாட்டைக் கைப்பற்றினர். அரசன் வருந்திச் சாபாலி என்னும் முனிவரை அடைந்தான். இதனை விண்ணப்பித்தான். நான் நாட்டை இழத்தற்குக் காரணம் யாதென வினவினன். அதனைக்கேட்ட சாபால முனிவர் 'அரசனே! நீ முற்பிறப்பில் பெருஞ்செல்வன், வணிகன், பல பண்டங்களும் விற்கும் தொழிலுடையோன்; உன்வீட்டின் பக்கத்தில் ஒரு பிராமணன் வசித்தான். அந்தணன் உன்பால் அரிசி முதலிய பண் டங்களை விலைக்குக் கொள்வான். மாதமொருமுறை அவற்றின் மொத்தத் தொகையை உன்னிடம் செலுத்திவந்தான். நீ அவன் வாங்கும் பொருள் களின் விலையைமட்டும் எழுதிவைத்து மாதந்தோறும் அவன் கொடுக்கும் தொகையைமட்டும் எழுதாது விடுத்தனை; இவ்வாறு ஐம்பது ஆண்டுக ளாயின. அந்தணன் காலம்முடிந்து இறந்தான். அவன் மனைவியும் இறந் தனள். அவர்கட்கு நாலைந்து மைந்தர்கள் உளர். சிறுவயதுடையவர் அம்மக்கள். அம்மக்களை அரசவைக்கு இழுத்துச்சென்று வரவு இல்லாத கணக்கைக் காட்டி அம்மைந்தர்களுடைய வீடு, மற்றைப் பொருள்கள் எல்லாவற்றையும் கைக்கொண்டாய். அப்பாவம் இப்போது உன்பால் பயன்தருவதாயிற்று. அக்காலத்துச் சிவபெருமானுக்கும் சிவனடியார் களுக்கும் சில பொருள்களைக் கொடுத்தாய். அப்புண்ணியப்பயனால் இப் பிறப்பில் அரசனுக இருந்து உலகை ஆட்சிபுரிந்தாய். அசுவமேதயாகம் செய்வாயானல் நீ செய்த பாவம் ஒழிந்து இழந்த உன்நாட்டை மீட்டும் அடைவாய்' என்று அருளினர். அரசன் முனிவரைப் பார்த்து என்பால் பூமியில்லை, பொருளில்லை எவ்வாறு அசுவமேதம் புரிவேன்? பொருளிருப் பின் எண்ணிய காரியம் இனிது முடியும் என்றான். உன்பால் பொருளில்லை யானல் நீ திருவிடைமருதூரை அடைந்து, அசுவமேதயாகபலனைத் தரும் அசுவமேதப் பிரதக்கிணம் செய்வாயாயின் உன்னுடைய நாடு கிடைக்கும், அதுவே நீ செய்யத்தக்கது என்றனர்.

வேந்தன் மகிழ்ந்து விடைபெற்றுத் திருவிடைமருதூரை அடைந் தான். காவிரிநதியிலும், காருணியாமிருத தீர்த்தத்திலும் நீராடிக் கடன் களை முடித்தான். ஸ்ரீ மகாலிங்கேசரை வழிபட்டான். அசுவமேதப் பிரதக் கிணம் பண்ணிவந்தான். அவ்வாறு வலம்வந்த காரணத்தால் மனத்திலே

*பலம்பெற்முன். இடைமருதிலேயே அரசன் இருந்துகொண்டு அமைச்சர் முதலியோரைப் பகைவரிடத்துப் போர்செய்ய விடுத்தான். அரசனுடைய ஆணைப்படிசென்ற அமைச்சர் வெற்றிபெற்ருர்; இழந்த நாட்டைக் கைப் பற்றினர். அன்றிப் பகைவர் நாட்டையும் உடன்பற்றினர். அரசன் மகிழ்ந்து மருதவாணருக்குப் பகைவர்நாட்டைக் கொடுத்து நிபந்தம் அமைத்தான். மார்கழித் திருவாதிரை விழாவைச் சிறப்புற நடாத்துவித்தான். பின்னர் இறைவர்பால் விடைபெற்றுக் காஞ்சியை அடைந்தான்.]*

கலிவிருத்தம்

திரைமான மில்வளையுஞ் செழுந்துகிரு மெறிகடல்சூழ்
தரைமானெண் முகநிகருந் தண்பொழில்சூழ் கச்சியினுன்
உரைமானி கருமினைய வுலகுபுரந் தருளுவதில்
வரைமானும் புயமுடையான் வசுமானென் ருெருவேந்தன். 1

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருவளர் காசிக் கேகித் திகழ்கயாச் சிராத்தஞ் செய்யக்
கருதியங் குற்ரு னந்தக் காரிய முடித்துத் தன்னூர்
மருவுமுன் மருவ லார்கள் வலிகொடு மருவி யந்தப்
பெருநகர் தனைக்கொண் டார்கள் பெட்பொடு கால நோக்கி. 2

அத்திறம் வருவான் கேளா வராமணி யிழந்தாங் கொல்கி
நித்திய ஞானு னந்த நிருமலற் குரிமை யுற்ற
முத்தனை யுயர்சா பாலி முனிவனை யடைந்து போற்றிக்
கைத்தல மலரிரண்டுங் கலந்தொரு முகையாச் செய்து. 3

---

*1. திரை - அலைகள். மானம் இல் - அளவில்லாத. வளை - சங்கு. துகிர் - பவளம். தரை மான் - பூமிதேவி. கச்சி - காஞ்சிபுரம். வரை மானும் - மலையை ஒத்த.*

*2. கயா சிராத்தம்-ஸ்ரீ காசியிலுள்ள கயை என்னுமிடத்தில் செய்யும் சிராத்தம். கயை பல்குனி ஆற்றின் கரையில் உள்ளது. பலவித கயைகள் உண்டென்பர். மருவலார் - பகைவர். பெட்பொடு - விருப்பத்துடனே.*

*3. அரா மணி இழந்தாங்கு: 'நன்மணி யிழந்த நாகம்போன்று' (மணிமேகலை, சிலப்பதிகாரம்). நித்திய ஞானனந்த நிருமலன் - சிவபெருமான். முகை - மொட்டு: குவித்து என்றபடி.*

ஆதிதன் பொருள்கொண் டேனே வந்தணர் பொருள்கொண் டேனே
மாதவர் பொருள்கொண் டேனே வலிமையி னேரிழை யோர்கள்
ஏதமுற் றிடச்செய் தேனே யெனதெழி னகரு நாடும்
பேதுறு தெவ்வ ரெய்திக் கவர்ந்ததென் பெரியோ யென்றான். 4

முற்பிறப் பிடைநீ செல்வ முதிர்ந்தவன் புகல்பல் பண்டம்
விற்பவன் வணிக னுன்றன் விளங்கெழின் மனையின் பாங்கர்ப்
பொற்புறு மனையி னுனோர் பூசுர னுளு நின்பாற்
சொற்பெறு தண்டு லாதி வேண்டுவ தொடர்ந்து கொள்வான். 5

கொண்டவை திங்கட் கோர்காற் கூட்டியங் கவற்றிற் கெண்ணிற்
கண்டிடு பொருள்மற் றிவான் கணக்கினி லீத றீட்டி
மண்டிய வரவு தீட்டா திருந்தனை வருட மைம்பான்
விண்டிடு வனசத் தாரான் விளிந்தனன் கால மெய்தி. 6

அன்னவன் மனையும் வீந்தா ளவற்குநா லைந்து மைந்தர்
பன்னிடு மிளமை யுற்றோர் பற்றிநீ யவர்க டம்மை
மன்னவ னவையின் முன்னர் வரவிலாக் கணக்குக் காட்டித்
துன்னிடு மவர்வீ டாதி தொகுபொரு ளியாவுங் கொண்டாய். 7

ஆதலா னினது நாட்டைக் கவர்ந்தன ரமரா ரின்னுள்
ஓதுசில் பொருள்கண் முன்னீ யொளிர்மதிச் சடையி னற்கும்
கோதில்சீ ரடியார் கட்குங் கொடுத்தனை யதனு லிந்தப்
பூதலங் காவல் செய்தாய் புரவல னுகத் தோன்றி. 8

---

4. ஆதி - சிவபெருமான். வலிமை இல் நேரிழை: நேரிழையார் - பெண்கள். ஏதம் - துன்பம், குற்றம். பேது உறு தெவ்வர் - பேதைமை யுடைய பகைவர்.

5. பாங்கர் - பக்கம். பூசுரன் - பிராமணன். தண்டுலாதி - அரிசி முதலியன.

6. திங்கட்கு ஓர்கால் - மாதம் ஒருமுறை. ஈதல் தீட்டி வரவு தீட்டாது - கொடுத்தலை மட்டும் எழுதிவைத்து வரவுவந்த தொகை எழுதாமல். ஐம்பது ஆண்டுகள். வனசத்தாரான் - தாமரைமலர் மாலையை அணிந்த அந்தப் பிராமணன்: பிராமணருக்குத் தாமரை மலர்மாலை யுரியது. விளிந்தனன் - இறந்தான்.

7. வீந்தாள் - இறந்தாள்.

8. புரவலன் - அரசன்.

புரவிநன் மகமிப் போது புரிந்தனை யாயி னுன்றன்
திருநக ரெய்து மென்னச் செப்பினன் முனிவன் வேந்தன்
தெரிதரு புடவி யின்றி நிதியின்றிச் செய்வ தெவ்வா(று)
இருநிதி யுளதே லியார்க்கு மெண்ணிய முடியு மென்ருன். 9

பொருவில்சீர் முனிவன் வாவி புணரரி கமலப் போதும்
அரிவையர் முகமும் வேருங் கறிவுரு துழலுங் செல்வத்
திருவிடை மருதி னெய்தித் திகழ்பரி மகத்தின் பேறு
தருவலம் வரினுன் வையஞ் சார்ந்திடு மின்றே யென்ருன். 10

வேந்தன்மிக் குவகை யெய்தி விடைகொடு தடத்தின் வானை
பாய்ந்துசெவ் விளநீர் சிந்தும் பகரிடை மருதின் மேவித்
தோய்ந்துதண் பொன்னி யீசன் றுணையடி பணிந்து போற்றி
வாய்ந்திட வலனுங் குற்ருன் மனத்தினும் வலனுற் ருனல். 11

அவ்விடை மருதின் கண்ணே தானிருந் தமைச்சர் தம்மைத்
தெவ்வர்மேல் விடுத்தா னன்னுர் சென்றவர் தமைப்போர் தன்னில்
வெவ்வழற் படையால் வென்று மேவுதன் னுடே யன்றிக்
கவ்வைசெய் தவர்தந் நாடும் பற்றினர் கடிது வந்தார். 12

குரிசிலுண் மகிழ்ந்த மைச்சர் கொண்டிடு தெவ்வர் நாட்டை
வருசிலை மேரு வாக்கு மருதவா ணனுக்கு நல்கித்
துரிசறு தனுவிற் செங்கை தொடர்விழா நடாத்திப் பின்னர்
முரசதிர் தானை சூழ முதுநகர்க் காஞ்சி யுற்ருன். 13

---

9. புரவி நன் மகம் - அசுவமேத யாகம். புடவி - பூமி. இறுதியடி 'முனிவரு மன்னரு முன்னுவ பொன்னுன் முடியும்' என்னும் பழமொழியை நினைப்பூட்டுவது.

10. பொரு இல்-ஒப்பில்லாத. வாவி-குளம். அரி-வண்டு. அரிவையர் - பெண்டிர். பரிமகம் - அசுவமேதயாகம். அசுவமேதப் பிரதக்கிணம் செய்யின் சார்ந்திடும் என்ருன்.

11. தோய்ந்து - நீராடி. பொன்னி - காவிரிநதி. வலன் - வலமாக, பலம்.

12. தெவ்வர் - பகைவர்.

13. சிலை - வில். தனுவில் - மார்கழி மாதத்தில். செங்கை - திருவாதிரை : மார்கழித் திருவாதிரை விழா என்க. தானை - சேனை.

சத்திமு னிவ்வூ ரென்னத் தவம்புரி காஞ்சி வேந்தன்
இத்தனி வலஞ்செய் தீச னருளுந்தன் னெழில்கொ ணடும்
சித்தமின் புறக்கொண் டெய்து திறனிஃ துறந்தை மன்னன்
மித்திரற் கொன்ற பாவம் விலக்கிய கதைமேற் சொல்வாம். 14

வசுமன்னவச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1148

---

14. சத்தி - உமாதேவியார். எழில் கொள் நாடு. சித்தம் இன்புற. உறந்தை - உறையூர் : சோழமன்னருடைய பழைய இராசதானி. மித்திரன் - நண்பன், மித்திரன் என்னும் பெயருடைய அந்தணாளன்.

## நாற்பத்தைந்தாவது

# அஞ்சத்துவசச் சருக்கம்

---

[சோழவளநாட்டில் அஞ்சத்துவசன் என்னும் அரசன் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் உறையூரைத் தன் இராசதானியாகக்கொண்டிருந்தான். அவனுக்கு மித்திரன் என்னும் பெயருடைய நண்பன் ஒருவன் இருந்தான். அரசன் காசிமான்மியத்தை ஆராய்ந்தறிந்தான். ஒருநாள் மித்திரனுகிய அந்தண நண்பனிடத்துக் காசிச்சிறப்பையும் கங்கைநதியின் சிறப்பையும் எடுத்துக் கூறினுன். கங்கையில் மூழ்கும் அவாவைக்கூறினுன்; அயல்நாட்டுக்குச் செல்லல் தகவன்று என்பதையும் தெரிவித்தான். 'உண்மையான நேசனுகிய நீ கங்கைநீராடி அதன் பலனை எனக்குத் தத்தம்செய்து தருக' என்ருன். மித்திரன் அதனைக்கேட்டு 'அரசனே! என் மனைவி மிக இளமைப் பருவத்தினள்; வேறு அவளுக்கு உற்ற துணை இன்று' என மறுத்தான். அஞ்சத்துவசன் அந்தணுளனே! நீ காசிக்குச் சென்று கங்கையில் முழுகி வருமளவும் உன் மனைவியை யானே பாதுகாப்பேன்; அவள் என் தாய், நான் அவளுக்குத் தாயும் தகப்பனுமாவேன் என்று உறுதி புகன்ருன். வேண்டிய பொருள்களை மித்திரன் அரசனிடம் பெற்ருன். வீட்டுக்கு வேண்டிய பொருள்களையும் வாங்கி மனைவியிடம் கொடுத்தான். அரசன் சொல்லிய செய்திகளையும் அவளிடம் சொல்லி, விரைவில் கங்கைநீராடி மீண்டு வருவேன் என விடைபெற்றுச் செல்வானுயினன். அன்றுமுதல் அரசன் காவலாளர்களைக்கொண்டு அந்தத் தெருவை முன்னையைவிட நன்கு பாதுகாத்துவரக் கட்டளையிட்டான்; தானும் மாறுவேடம் பூண்டு அங்கே சென்று பாதுகாத்துவந்தான்.

மித்திரன் கங்கையில் முழுகித் தீர்த்தம்கொண்டு விரைவில் தனது நகரடைந்தான். இரவானதால் நாளைக்காலையில் சென்று அரசனைக் காண்பேன் எனத் தன் வீட்டுக்குச் சென்ருன். அன்றிரவு மனைவியுடன் மகிழ்ந்திருந்தான். வழக்கம்போல் மாறு வேடத்துடன் சென்ற மன்னவன் மித்திரன்மனைவியுடன் வேறு ஆண்குரல் அன்றிரவு ஒலிக்கக்கேட்டான். கவன்ருன்; மித்திரன் வருமளவும் காக்கக்கடவேன் என உறுதி கூறினேனே! அவன் இவ்வளவு விரைவில் காசியினின்று மீண்டுவர இயலாதே! யாரோ தூர்த்தன் ஒருவன் காவல் கட்டுக்களைக் கடந்து மித்திரனுடைய மனைவியை இச்சித்திருக்கின்ருன் போலும். அவனை என் வாளுக்கு இரையாக்குவேன் எனத் துணிந்தான். சுவரின்மீது ஏறி உள்ளே குதித்தான்;

மெல்ல உள்ளே சென்றான். வழிச்சென்ற களைப்பாலும் இளைப்பாலும் உடல்மெலிந்திருந்த மித்திரனை இன்னான் என்று உணராமல் அரசன் வாளால் வெட்டி விழ்த்தினான். மித்திரன் மனைவி அதைக்கண்டு அலறி அழுதாள். அரசனும் மித்திரன் என உணர்ந்து பெரிதும் துன்புற்று ஏங்கினான். தெருவிலுள்ளார் அச்சத்தத்தைக் கேட்டுக் கூடி ஓடிவந்தனர். செய்திகளையெல்லாம் விசாரித்தறிந்தனர். மித்திரனின் மனைவியையும் அஞ்சத்துவசனையும் அந்தணர்கள் தேற்றினர். ஈமச் சடங்குகளை விதிப்படி அரசன் செய்வித்தான். பிராமணக் கொலைப்பாவம் அரசனைச் சேர்ந்து மிக வருத்தத் தொடங்கியது. அரசன் பல பரிகாரங்களையும் செய்தான். ஒன்றானும் பிரமகத்தி நீங்கவில்லை. பின்பு பிராமணர்கள் அரசே! புண்ணியத் தீர்த்தங்களில் முழுகிச் சிவதலங்களில் விதிப்படி வழிபாடுசெய்து வரின் இப்பாவம் போம் என்றனர்.

அஞ்சத்துவசன் உறையூரை நீங்கித் தாயுமானவரை வணங்கினான். பல சிவதலங்களையும் தரிசித்து வணங்கிக்கொண்டு இடைமருதடைந்தான். வருண தீர்த்தத்தில் மூழ்கினான். அந்தணருடன் சென்று பூசத்துறையிலும் நீராடினான். நியதிகளை முடித்தான். காருணியாமிருத தீர்த்தத்தில் படிந்தான். அந்தணர்களுக்கு விதிப்படி நிதிகளும் பண்டங்களும் தானம் செய்தான். ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியை வணங்கிக் கோயிலினுட் புகுந்தான். பிரமகத்தி வாயிலின் புறத்தேயே நின்றது. பெரிய சுமையை நீங்கினவன் போல மன்னன் மகிழ்ச்சிகொண்டான். சுவாமியை வணங்கிநின்று தோத்திரம்செய்து வழிபட்டான். நெஞ்சு நெக்குருக, விழியில் நீர்வார, மெய்ம்மயிர் பொடிப்ப, நாத்தழுதழுப்ப நின்று இரந்தான். விடைபெற்றுத் தன் நகரடைந்து சிலநாட்கள் அரசுபுரிந்து கயிலையை நண்ணி இன்புற்றான்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நஞ்சத் துணைவேல் விழிமடவார் நயந்து மடறீட் டெழில்வடிவான்
கஞ்சத் துவளை முத்தளிக்குங் கழனித் தென்கா விரிநாடன்
வெஞ்சத் துருக்கட் கரியனையான் மிகுகல் வியினா னெருவளவன்
அஞ்சத் துவச னெனும்பெயரா னன்னா னுறையூ ருறையூராம். 1

---

1. நஞ்சம் துணை வேல் விழி - விடந்தோய்க்கப்பெற்ற இருவேலைப் போன்றகண்கள். மடல்தீட்டு - பனைமடலில் எழுதுதற்குரிய: மடல் - பனங்கருக்கு. நயந்து - விரும்பி. கஞ்சத்து - தாமரை மலரில். வளை - சங்கு, வெம் சத்துருக்கட்கு அரி அனையான்; வெம் - கொடிய. அரி - சிங்கம்: சத்துருக்களாகிய யானைகட்கு என்க. வளவன் - சோழன். உறை ஊர் உறையூர் ஆம் - வசிக்குமிடம் உறையூராம் என்க; அஃது பழைய சோழ ராசதானி;

வனைபொற் கழலா னவன்றனக்கு மறையோ னொருவன் மித்திரன்மற்(று)
அனையோன் பெயரு மித்திரனே யாகு மரசன் கலைகளினுற்
கனைவெண்டிரைநீர்க் கங்கையின்மான் மியமோர்ந்தொருநாட் கண்போன்று
தனையா தரவி னுற்பிரியா மறையோன் றன்னே டிதுகூறும். 2

நித்தன் மகிழு மெழிற்காசி நிகழுங் கங்கைப் புனல்படியச்
சித்த முடையேன் பிறர்நாட்டிற் சேற லெனக்குத் தகவன்று
மெய்த்த கினைு நீயாண்டு மேவிப் படிந்தப் பலன்றன்னைத்
தத்த மளித்தி யெனப்புகன்முன் றனிமா மறையோ னதையுணர்ந்தே. 3

மனைவி சிறியா ளுற்றதுணை மற்று வேறின் றெனவுரைத்தான்
புனைவேற் றடக்கைச் செம்பியனீ போதி வாளா வவளெளியேற்(கு)
அனையா மியான்மற் றவ்வனிதைக் கனைதன் னெடுதா தையுமாகும்
நினையல் வேறு புறநின்று காப்ப னென்று நேர்ந்து ரைத்தான். 4

அந்த ணாள னெதிரிசைவுற் றளவி னிதிகள் பெற்றேகிச்
சந்த மனைவிக் கரசுரைத்த தகவுந் தானே தியதுமுரைத்(து)
இந்து நுதலாய் சிலபகலி லியானிங் கணைவே னிரங்கலெனச்
செந்தண் சாலி முதலியன வாங்கிக் கொடுத்துச் செலலுற்றுன். 5

அந்த மறையோன் சென்றவுட னரச னகர்கா வலரையழைத்(து)
இந்த மறுகில் வளர்மறையோர்க் கிடையூ றென்று மணுகாது
முந்து தனிலும் பதின்மடங்கு முயன்று காப்பீ ரெனவுரைத்துச்
சிந்தை மகிழத் துகிலுதவி விடுத்தா னவருஞ் சென்றனரால். 6

---

உறந்தை என்றும் கோழி என்றும் வழங்கப்படும். உறையூர் உறையூராம் என்ற நயம் காண்க.

2. மித்திரன் - சிநேகன். கலைகளினுல் - நூல்களால். மான்மியம் - பெருமை: வரலாறு. ஆதரவினுல் - விருப்பத்தால்.

3. நித்தன் - சிவபெருமான். சேறல் - செல்லுதல். தகவு - தகுதி. மெய்த்த - உண்மையான. ஆண்டு மேவி படிந்து: படிந்து - முழுகி. தத்தம் அளித்தி - தத்தம் செய்து கொடுப்பாயாக.

4. வேறு இன்று. செம்பியன் - சோழன். போதி - செல்வாய். எளியேற்கு அனை ஆம். வனிதை - பெண். தாதை - தகப்பன். புறம் நின்று - புறத்திலேயிருந்து. நேர்ந்து - உடன்பட்டு.

5. எதிர் இசைவு உற்று. சாலி - நெல்.

6. மறுகில் - தெருவில். துகில் - ஆடை.

நாம வடிவேற் புரவலனு நணுகிப் பாங்கன் மனைப்புலத்தின்
ஏம முழுதுந் தளித்தகற்பி னெழிலார் மயிலை மதிமயக்கும்
காம ரூபி களாவிடையூ றின்றிக் காத்துப் புலர்காலைத்
தாம மணிப்பொற் றசும்பினெளிர் தன்மா ளிகையுற் றினிதிருக்கும். 7

கங்கை படிந்து புனல்கொண்டு கடுக நடந்து சிலநாளில்
பொங்கு கடலிற் பகல்குளிக்கும் போதி னெருத னகரணைந்து
திங்கட் கதிர்வெண் குடைவேந்தைச் சென்று காலை காண்டுமெனத்
தங்கு மனையுற் றில்லினொடு மகிழ்வுற் றிருந்தான் சதுர்மறையோன். 8

என்று மடைந்து காப்பதுபோ லினவண் டறையுந் தார்வேந்தன்
அன்று மிரவின் மனைப்புறத்தி லடைந்தா னகத்தி னெருகாளை
துன்று முரைகண் மெல்லெனத்தன் றுலங்கு செவியிற் புகுந்திடலும்
கன்று மனத்தன் மானத்த னின்றுங் கினைய கருதிடுமால். 9

திரைப்பாற் கங்கை படிவதற்குச் சென்றான் வந்தா னெனிலதற்குத்
தரைப்பா லதுவோ நெடுந்தூரஞ் சார்த லரிதித் துணைக்கதழ்வில்
விரைப்பூங் குழலாள் கற்புடையாள் விரும்பாள் பிறனை யாயிடினும்
கரைப்பார் கரைக்கப் புகுந்தனரேற் கல்லுங் கரையு மெனுமுலகம். 10

காவல் பலவுந் திகழ்கடையுங் கடந்து சிறிதும் பயமின்றி
மேவித் தனிவா ழிளங்குயிலை விகாரப் படுத்தும் விடனிவனைத்
தூவள் வடிவாட் கிரையாகக் கொடுக்க வேண்டு மெனத்துணிந்து
பாவு சுவரின் மீதேறிக் குதித்துப் பைய வுட்புகுந்தான். 11

---

7. நாமவடிவேல்: நாம் - அச்சம். புரவலன் - அரசன். புலர்காலை - விடியற்காலத்தில்.

8. கடுக - விரைந்து. பகல் - சூரியன். தன் நகர் அணைந்து. இல் - மனையாள்.

9. வண்டு அறையும் - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற. அன்றும் - அந்த நாளினும்: என்றது மித்திரன் நகரையடைந்த நாளினை. அகத்தின் - அவ் வீட்டினுள். கன்றும் மனத்தன்: கன்றும் - வருந்துகின்ற. மானத்தன் - பெருமையுடையோன்.

10. தரைப்பால் - தரையினிடத்து. சார்தல் - வந்து சேர்தல். கதழ் வில் - விரைவில். 'கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்' என்பது பழமொழி.

11. குயிலை - குயில் போன்றவளை. விடன் - தூர்த்தன். தூவள் வாள்: வள் - கூரிய. பைய - மெதுவாக.

வேறு

மன்னுவே தியனைக் கண்டான் வழிவந்த துயரான் மேனி
துன்னுவேற் றுமையி னுனுந் தோற்றுமவ் வழியி னுனும்
இன்னரென் றுணரா னேடு மென்றியா ரென்றுங் கேளான்
பின்னுறச் சென்றன் ஞன்மேற் பிறங்குவா ளெறிந்தான் மன்னே. 12

விழ்ந்தனன் பனவன் பார்மேன் மின்னிடை மடந்தை கண்டாள்
சூழ்ந்திடு மணிப்ப சும்பொற் றெடிக்கர நெரித்து வாய்விட்(டு)
ஆழ்ந்திடு கங்கை யாடி யணைபல மிதுவோ வென்முள்
ஏய்ந்திடு புறத்தோர் கேட்ப வேங்கிஞண் முறையோ வென்ருள். 13

கரவட னெருவ னென்றன் கண்மணி யனைய காந்தன்
சிரமறத் துணித்தா னையோ தெரிக்குமிந் நகரந் தன்னில்
புரவல னிலையோ மற்றும் புண்ணிய மிலையோ வென்று
மருள்கொடு விழிநீர் சோர விழுந்தனள் மணாளன் மீது. 14

தழுவின ளெளியே னிங்குத் தனியுறக் கங்கை யென்னும்
செழுநதி யாடப் பன்னுள் சென்றனை யின்று வந்தாய்
வழிவரு துயர்தீர் முன்னர் மறித்துமிப் போது மெங்கு
நழுவினை மெல்ல வையா நானினித் தனியி ரேனுல். 15

புனைபுகழ்க் கங்கை யாடிப் போந்தனை யிந்நா ளேகல்
கனைகட லிடைத்தோய் தற்கோ கவினுறு தலங்க ளெய்தித்
தனிமுத லினைக்காண் டற்கோ சார்ந்திடி லிவற்றிற் கியாரும்
மனைவியர் தம்மோ டேகும் வழக்கநீ யறிந்தி லாயோ. 16

தெரியர மகளிர் தம்மைச் சேர்ந்திடற் கென்னை வஞ்சித்(து)
இருவிசும் பணைவுற் ருயோ வெனையுனக் களித்த வென்றன்
குரவராண் டிருப்ப தாலெங் கொம்பனுள் பிழையென் செய்தாள்
மருவலென் னிவரை யீண்டு வந்தெனி லியாது சொல்வாய். 17

---

12. இன்னர் - இன்ன தன்மையர். கேளான் - கேளாதவனுய்.

13. பனவன் - பிராமணனுகிய மித்திரன். அணை பலம் - அணைந்த பயன்.

14. கரவடன் - வஞ்சகன். காந்தன் - கணவன். மருள் - மயக்கம்.

15. மறித்தும் - மீண்டும். மெல்ல நழுவினை.

16. இந்நாள் ஏகல் - இன்று செல்லுதல். தோய்தற்கோ - முழுகும் பொருட்டோ. தனி முதல் - ஒப்பற்ற சிவபெருமான்.

17. அரமகளிர் - தெய்வ அரம்பையர். இரு விசும்பு - பெரிய ஆகாயத்தில்; விண்ணுலகத்தில் என்றபடி. என்றன் குரவர்- என்னுடைய தாய்

என்னவெண் ணகைப்பூங் கோதை யிரங்கலு மிறைவ னோர்ந்து
தன்னுள நடுங்கி வீழ்ந்தான் றரைமிசைப் புரண்டா னேங்கிப்
பின்னரு மெழுந்தா னந்தோ பிறங்குகண் ணருவி சோர
இன்னுயிர் விடுத்தான் றன்னை யெடுத்தணைத் தினைய சொல்வான். 18

வேறு

வித்தகத்தண் குணநிதியே வேதியர்தங் குலமணியே வினையி னேற்கு
மித்திரனு யிருந்தனை நீ யானுனது தலைதுணிக்கும் வெய்ய பாவிச்
சத்துருவா யிருந்திட்டே னெனைப்போல மறுவேந்தர் தரணி மீதுன்
சித்தமறிந் திடவுளரோ வென்செய்தே னென்செய்தேன் சிறிய னேனே. 19

முந்துநினக் கிசைத்தபடி யநுதினமும் மனைப்புறத்தின் முயன்று கங்குல்
வந்தினிது காத்திருந்து சென்றிடுவே னவ்வாறு வந்தே னின்றும்
சந்தமுறு மனையகத்துன் மென்மொழிகேட் டிங்கெவனோ சார்ந்தா னென்று
சிந்தையுறு வெகுளியினு லியாரென்னு திவ்வாறு செய்தே னையா. 20

பொன்னுலகி லியானுமென்றன் மரபினரும் புகுந்திடுவான்பொருவில்கங்கை
தன்னிலுறப் படிந்தனைய பலன்றனை நீ தருதியெனிற் சார்ந்து வந்தீண்(டு)
என்னையறி யாதகத்திற் புகுந்திருந்தென் கைவாளா லிறந்திட் டியாரும்
வெந்நரகிற் புகப்புரிந்தாய் நீயுமின்று வஞ்சனைதான் விளைத்திட் டாயால். 21

என்றரசன் புலம்பலுமவ் வேந்திழைநீ டிரங்கலும்பாங் கிருப்போர் கேளா
மன்றதெரு மரலினுட னிறும்பூதுங் கொடுகதழ்வின் வந்து சூழ்ந்து
பொன்றுமறை யோன்றனையு மாதினையுங் குரிசிலையும் பொருந்த நோக்கி
வென்றிவடி வேலவனைப் புவிபுரப்போ யெவனிந்த வினைவென் ரூர்கள். 22

---

தகப்பன்மார். இவரை மருவல் என்: மருவல் - புணர்தல். ஈண்டு வந்து எனில்.

18. ஓர்ந்து - ஆராய்ந்து. இன் உயிர் விடுத்தான் - மித்திரனுகிய அந்தணன்.

19. வித்தகம் - மேம்பாடு. குணநிதி - குணக்கடல். மித்திரன் - நண்பன். துணிக்கும் - துண்டிக்கும். சத்துரு - பகைவன். தரணி - பூமி.

20. முந்து - நீ காசிக்குச் செல்லுதன்முன். மனையகத்து உன் மென்மொழி.

21. பொன்னுலகில் - தேவருலகில். பொரு இல் - ஒப்பில்லாத. என்னை அறியாது அகத்தில் புகுந்து. இறந்திட்டு யாரும்.

22. பாங்கு இருப்போர் - பக்கத்திலுள்ளார். தெருமரல் - மனச் சுழற்சி: ''அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி'' (தொல்). மன்ற -

வண்ணமதிக் குடைவேந்தன் கங்கைதனக்
கந்தணன்செல் வகையுந் தானேவந்(து)
ஒண்ணுதலைக் காத்ததுவு மன்றகத்தி
னுற்றதுவு முலவுந் தன்னெஞ்(சு)
எண்ணியதூஉ முடித்ததுவு மொன்றொழியா
தெடுத்திசைத்தா னியாது சொல்வார்
திண்ணமுறு மறையோரும் பிறர்களுமோர்ந்
திதுதெய்வச் செயலே யென்றார். 23

அனையமறைக் குலத்தினுறு முறவினர்பின் மடந்தைதனை யன்பிற் றேற்றிக்
கனைகடலிற் கதிர்பிறந்த பின்பிறந்தான் றனதுடலைக் கனலின் மாலை
புனைவித்துப் பிறவுமுள கடன்களுஞ்செய் வித்தனர்கள் புகலும் வேந்தன்
தனையுனையா னினிப்பிரியே னெனப்பிரம கத்திவந்து தழீய தன்றே. 24

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நின்றிடு மெதிரே நகைத்திடுங் குறுகும்
நீபழி தாவென வுரைக்கும்
வன்றனித் தடக்கை பிடித்திடு மிழுக்கும்
மடித்தித ழெயிற்றினு லதுக்கும்
சென்றிடுந் திரும்பு மருகினி லிருக்குஞ்
சென்னியுண் ணடுங்கிவெய் துயிர்த்துக்
குன்றுறழ் புயங்கண் மெலிந்துவெம் பணிவாய்
கொண்டிடு தேரைநே ரானுன். 25

---

மிகுதியும். இறும்பூது - ஆச்சரியம். கதழ்வின் - விரைவிலே. பொன்றும் - இறந்த. குரிசில் - அரசன். இந்த விளைவு எவன்: எவன் - என்ன காரணம்.

23. அன்று அகத்தின் உற்றதுவும். ஒன்று ஒழியாது - சிறிதும் விடாமல்: ஒன்று என்பதில் உம்மை தொக்கது.

24. கதிர் பிறந்த பின்பு இறந்தான்: கதிர் - சூரியன். பிறந்த பின்பு- தோன்றிய பிறகு. இறந்தான் - இறந்தவனாகிய மித்திரன். உனை யான் இனி பிரியேன். பிரமகத்தி - பிராமணனைக் கொலைசெய்த பாவம். தழீஇயது - பொருந்தியது.

25. இதழ் எயிற்றினால் அதுக்கும். சென்னி உள் நடுங்கி: சென்னி - சோழன். வெய்து உயிர்த்து - பெருமூச்செறிந்து. வெம்பணி - கொடிய பாம்பு. நேர் - ஒப்பு. பணி வாய் கொண்டிடு தேரை - பாம்பின் வாய்த் தேரை.

ஆனின மருந்தத் துருவைகொய் தளித்தா னுநெடு விளைநில னுதி
தானமெண் ணிலவந் தணர்தமக் கீந்தா னென்றினுந் தாழ்வுரு தறிந்து
தேனுகு வனசத் தொடையினேர் பலவாந் தெய்வதீர்த் தங்களிற் படிந்து
மானுறு கரத்தான் தனைப்பல தலத்தின் வணங்கிடிற் போமிஃ தென்றுர். 26

கொற்றவ னதனுக் கிசைந்திர தாதி குழுவுறு தானையி னேடும்
தெற்றென வெழுந்து திரிசிரர் பரவு சிரகிரி யிடத்துநன் களிக்கு
முற்றுசீர்த் தீர்த்தம் படிந்துதா யான தாதையை முறைமையின் வணங்கி
மற்றுள தலத்து மத்திறம் புரிந்து மருவினு னிடைமரு தெல்லே. 27

வாருண தீர்த்தக் கரையினுற் றிடுங்கால் வயங்குமா தவர்பல ரீண்டிச்
சீருறு மிதனிற் படியிலுன் னடுக்கந் தீர்ந்திடு மென்றன ரனைய
தாரணி புயத்தா னதனிடை மூழ்கிச் சாற்றுமாங் கிலங்கிடு பரமன்
ஏருறு பதங்கண் டிறைஞ்சினு னிறைஞ்சி யெழுமுனந் தீர்ந்ததந் நடுக்கம். 28

சிறிதுள மகிழ்வுற் றங்குநின் றேகிச் சிறந்தமா தவரொடும் பூசத்
துறையினு முயர்கா ருண்ணியத் தடத்துந் தோய்ந்துதன் னியதிகண் முடித்
மறையவர் தமக்கு நிதிபல வுதவி மருதநன் னிழல்வாழ் முக்கண் [து
இறைவனை யெதிர்கண் டிறைஞ்சினு னெழுந்தாங் கிலங்குபொற் கோயிலுட்
[புகுந்தான். 29

புகுந்திடு பொழுதி னெடியகோ புரத்தின் புறத்திடை நின்றதன் னவன்பால்
திகழ்ந்தவன் பிரம கத்திவல் லிருணேர் செலுங்கொலோ சோதிதன் முன்னர்
மிகுந்திடு பொறைதீர்ந் தவன்றனை யொத்து வேந்தனுள் ளடைந்துதண்
[ணிதழி
உகந்தசெஞ் சடிலக் கரும்பினை விழியா லுண்டுபே ரின்பமுற் றனனுல். 30

---

26. ஆனினம் - பசுக்கூட்டம். துருவை - அறுகம்புல். வனசத்தொடையினேர் - தாமரைமாலையை அணிந்த பிராமணர். இஃது - இப்பிரமக் கொலைப்பாவம்.

27. தானை - சேனை. தெற்றென - விரைந்து. சிரகிரி - திரிச்சிராப் பள்ளி. நன்கு அளிக்கும் முற்று சீர்த் தீர்த்தம் - நன்றுடையான் என்னும் தீர்த்தம்: 'நன்றுடையானைத் தீயதிலானை' என்பது தேவாரம். திரிசிரன் - இவன் அரக்க அரசன். இத்தலத்திலிருந்து அரசாண்டு இறைவரைப் பூசித்துப் பேறுபெற்றுன். தாயான தாதை - தாயுமானவர்: இத்தலத்தி லுள்ள இறைவர் திருநாமம்.

28. தார் அணி புயத்தான்: தார் - மாலை. ஆங்கு இலங்கிடு பரமன்.

29. முக்கண் இறைவன் - மருதவனேசர்: ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி.

30. நெடிய கோபுரம் - நீண்ட கோபுரம். வன் பிரமகத்தி - வலிய பிரமக்கொலைப்பாவம். சோதிதன் முன்னர் வல் இருள் நீர் செலும்கொல்.

அண்ணலே தனியே னறிவிலா திழைத்த வடுபழி தீர்த்தெனை யாண்ட
புண்ணிய மலையே புகழருட் கடலே புனிதநீ சரணமுண் டகத்தின் [தோர்
கண்ணுறு முனிவற் கண்ணினும் வாக்கைக் கண்ணுறு கனலியா யுணர்ந்
எண்ணிடத் திருக்கு மிடைமரு திருக்கு மிருக்குமன் னுதனே சரணம். 31

வில்லிடுங் கயிலை வரைதனை யெடுத்த விறலுடை யிலங்கையர் பெருமான்
வல்லுட னெரிந்து வாய்தொறு மிரத்தம் வார்ந்தரற் றிடமலர்ப் பதத்தோர்
மெல்விர லூதியான் மெல்லென வழுத்து வித்தகத் தலைவநீ சரணம்
சொல்லுறு முமையாள் புரிதவ நோக்கித் தோன்றிய சோதிநீ சரணம். 32

சலந்தர னுடலந் தடிந்திடக் கணத்தோர் தாளினிற் சமைத்தசக் கரத்தை
வலம்புரித் தடக்கை மால்விழி யனைய மலரடி புனைந்திட நோக்கித்
துலங்கிடு மவனுக் குகந்தினி தளித்த சுடர்மதிச் சடிலனே சரணம்
இலங்குமிற் கொடிசென் றிரவிதேர் தடுக்கு மிடைமரு திறைவனே சரணம்.

எனவிரு கரமுஞ் சிரமிசைக் குவித்தாங் கிதையநெக் குருகநின் றேத்திக்
கனமுறு வரங்கள் பெற்றகன் றனைய கவின்பதி யிடைச்சில வைகல்
இனமுற விருந்து பின்புதன் னகருற் றிருநிலம் புரந்திருந் ததன்பின்
புனிதவெண் கயிலை மருவிவீற் றிருந்தான் புகழ்மரு திறைவனின் னருளால்.

அஞ்சத்துவசச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1182

---

பொறை - சுமை. இதழி - கொன்றைமலர் மாலை. சடிலம் - சடை. செஞ் சடிலக் கரும்பு என்றது சிவபெருமானை.

31. தனியேன் - சிறியேன். இழைத்த - செய்த. சரண முண்டகம் - திருவடித்தாமரை.

32. வில் இடும் : வில் - ஒளி. வல் உடல் நெரிந்து. வார்ந்து - ஒழுகி.

33. கணத்து ஓர் தாளினில். மால் புனைந்திட. மதிச்சடிலன்: சடிலம் - சடை. இரவி - சூரியன்.

34. இதையம் - மனம். வைகல் - நாள்.

நாற்பத்தாருவது

# தேவவிரதச் சருக்கம்

[சூரியனைப்பற்றிய பிரமகைவர்த்த புராணத்திலுள்ள வரலாறு இனிக் கூறப்படும். நாரதமுனிவர் பிரமதேவரை வணங்கிச் சிவபெருமான் விற்றிருந்து ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் தலங்கள் பலவற்றைச் சொல்லியருளினீர்; அவற்றுள்ளே மிக்க சிறப்புவாய்ந்த தலங்கள் யாவை என இப்போது அருளிச்செய்க என விண்ணப்பித்தனர். பலப்பல பிறவி களில் ஈட்டிய சிவபுண்ணிய வினைவால் சிவகதையைக் கேட்க எண்ண முண்டாம். சிவகதையைப் பத்தி சிரத்தை விசுவாசத்துடன் விதிப்படி கேட்போர் நூற்றொரு தலைமுறைவரை வீட்டுலகத்தை அடைந்து இன் புறுவர். யானும் இதனுல் தூயனுயினேன். உலகில் ஏழாயிரத்துநானூறு சிவதலங்கள் மேன்மையுள்ளன. அவற்றுள் ஆயிரத்தெட்டுச் சிறந்தன. அவற்றுள்ளும் சிறந்தவை நூறு தலங்களாம். அவைகளுள்ளும் மிகச் சிறந்தன அறுபத்தெட்டு என்பர். அவற்றுள்ளேயும் இருபத்துநான்கு தலங்கள் சிறப்புடையன. அவைகளில் எட்டுத்தலங்கள் சிறந்தவையாம். அவ்வெட்டுத் தலங்களாவன :- திருக்கயிலாயம், ஸ்ரீ காசி, திருவண்ணுமலை, திருக்காளத்தி, மதுரை, சிதம்பரம், திருவாரூர், திருவிடைமருதூர் என்பன. திருவிடைமருதூர் உமாதேவியாரின் மனம்போன்று சிறப்புடைத்து. திருக் கயிலாய மலையினின்று சிவபெருமான் உமாதேவியாருக்குச் சிவதலங்களைக் காட்டிக்கொண்டு இத்தலத்துக்கு எழுந்தருளினுர். திருக்கயிலாயமலையும் அதன்முன்பே வந்து இங்கே மருதமரமாகி இருந்தது. இம்மருதமரமாகிய தலவிருட்சத்தைத் தரிசிப்போர் கயிலையைத் தரிசித்த பேறடைவர். இம் மருதமரத்தை வலம்வரினும், வணங்கினும், பூசிப்பினும் அவை கயிலை மலைக்குச் செய்ததுபோலாம்.

திருவிடைமருதூராகிய இச்சிவதலத்தில் ஒருவர் பிறந்தாலும், இறந் தாலும், நொடியளவு நேரம் வசித்தாலும், வழிச்செல்வோர் நோக்கினும் பாவங்கள் அகலும்; இன்பம் பெருகிடும். இத்தலத்திலுள்ள ஸ்ரீ மகாலிங்க மூர்த்தியைத் தரிசிப்போருடைய குருத்துரோகம்முதலிய கொடிய பாவங்க ளெல்லாம் அகலும். ஒருசோழன், ஒரு பாண்டியன், வேறொரு வேந்தன் முதலியோர் செய்த பிரமகத்தி பாவங்கள் இத்தலத்தில் நீங்கின. இத்தலத் தில் உள்ள புண்ணிய தீர்த்தங்கள் எண்ணில்லாதன. அவையாவும் கங்கா

நதியை ஒப்பனவாம். இத்தலத்திலே அணு அளவு புண்ணியம் செய்யினும் மேருமலைபோலப் பெரிதாம். செய்த பாவங்களெல்லாம் தொலைந்து போம். விபண்டகர் என்னும் முனிவர் சத்தரிஷிகள் பலர் சூழ எட்டுச் சதுர்யுகம் இத்தலத்திலே அம்மையப்பரை வழிபட்டிருந்தார். விபண்டகர் சோதியிற் கலந்தபின் நெடுங்காலம் கழித்து நான் அவ்விடத்திற்சென்று சிவபெருமானைப் பூசித்திருந்து தைத்திங்களில் பெருவிழாவையும் நடத்தினேன். இவ்வாறு என்னைப்போன்று அளவில்லாத பிரமரும், விஷ்ணுக்களும் இறைவனைப் பூசித்துப் பேறுபெற்றனர். இதன் பெருமை எம்மனோரால் சொல்லவொண்ணாததாகும்.

இத்தலத்தில் அசுவமேதப் பிரதக்கிணம் என்று ஒன்றுளது. அதில் வலம்வரின் குருடன் விழிபெறுவான், குட்டநோய் வாட்டமுறும், வறுமையும் கயரோகமும் தொலையும், துன்பமும் பேயும் நீங்கும். திருவிடைமருதூரில் உள்ள சிவபெருமானுக்குரிய பொருளை ஒருவன் அணுவளவு கவர்ந்தாலும் இழிந்த பிறப்புடைய நூறு சென்மம் பெற்றுப் பின்னர் நாய்ப் பிறப்பிலே நூறு பிறப்புப் பிறந்து, மலப்புழுவாய்ப் பிறந்து துன்புறுவான். முற்காலத்திலே இவ்வாறு பிராமணன் ஒருவன் தீபநெய்யைக் கவர்ந்து மேல் மலப்புழுவாய் உற்பவித்துப் பூசத்தீர்த்தம்ஆடிவந்தவன் காலிலுள்ள ஈரம்பட்டுப் புனிதமாய்ப் புண்ணியலோகம் சார்ந்தான். பூசநீராட்டும் மிகச் சிறப்புடையதாம்.

சண்பகவதி என்னும் ஒரு நகரத்தில் வினதன் என்னும் அந்தணன் இருந்தான். அவனுக்கு மாலினி என்னும் மனைவியிருந்தாள். அவள் அழகின் மிக்கவள். தன்னை அலங்கரித்துக்கொண்டு அடிக்கடி தெருவாயிலில் வந்து நிற்பாள், வீதியில் உலாவுவாள். தன்பாலுள்ள தனங்களைக் கொடுத்து ஆடவர்பாலுள்ள தனங்களையெல்லாம் பறித்துக்கொள்ளுவாள். மந்திரத்தாலும் மருந்தினாலும் தன் கணவனைத் தன் வசம் செய்துகொண்டாள். மிக்க தவசிகளையும் பார்வையால் வசியம் செய்வாள். அவள்வயிற்றில் பிறந்தவனே தேவவிரதன் என்பான். குலத்துக்குத்தக பூணூல்போட்டபின் அவன் தந்தையிடமே வேத அத்தியயனம்பண்ணினான். ஒருநாள் தந்தை மகனைக் கோபித்தான். மகன் தந்தையை ஒரு தூணில் கயிறுகொண்டு இறுகக்கட்டினான். கயவர்கூட்டத்துடன் எங்கும் திரிவானாயினான். பல இடங்களிலும் சென்று சென்று களவுசெய்தலே அவன் தொழிலாயிற்று.

களவாடித்திரியும் தேவவிரதன் திருவிடைமருதை அடைந்தான். ஸ்ரீ மகாலிங்கேசருக்குத் திருவிழா நடைபெறும் காலம் அது. பெருமான்

உமாதேவியாரோடு திருவுலாப் போதலைக் கண்டான். திருமேனியில் அணிந்து விளங்கும் அணிகலங்கள் அவன்மனத்தைக் கவர்ந்தன. விலை மதிக்கமுடியாத ஆபரணங்கள் அனைத்தையும் ஒருசேரக் கவர்ந்து செல்ல மனங்கொண்டான். ஓர் உபாயம் செய்தான். அரசனைக்கண்டு இவ்வாலய நிர்வாக அதிகாரத்தைப்பெறுவதே முதற்கடன் என எண்ணி, அவ்வாறே பெற்றான். வீதியில் தனக்கொரு இருப்பிடமும் அமைத்தான். மனத்தில் கரவடமும், கையில் செபவடமும் உடையனாய் ஆலயத்தில் அதிகாரம் செலுத்திவந்தான். நிதியிருக்கு மிடமும் ஆபரணம் வைக்குமிடமும் நன்கு தெரிந்துவைத்தும் கவர்தற்குச் சமயம்வாய்க்கப்பெறாமல் இருந்தனன்.

இவ்வாறாக, முன்னைவினையால் வலப்பக்கத்தில் பிளவை உண்டாயிற்று. அவ்விரணத்தில் ஈ அணுகாமல் தீபத்திலுள்ள நெய்யில் ஒருதுளி எடுத்துத் தடவினான். இரவுவந்தது; வீட்டுக்குப்போகத் தொடங்கினான். வழியில் பாம்பொன்று தீண்டியது, விடம் தலைக்கேறி இறந்தான். இயமனுடைய உலகத்தை அடைந்தான். அங்கே சிவத்துரோகத்துக்குரிய தண்டனையாக இருபத்தெட்டுக்கோடி நரகங்களிலும் வீழ்ந்து அரற்றினான். பூமியில் இழிந்த குலத்தில் நூறுபிறவியும், நாய்ப்பிறப்பில் நூறு பிறவியும் பிறந்திறந்து இளைத்தான். இறுதியில் திருவிடைமருதூரில் மலப்புழுவாய் வந்து பிறந்தான். தைப்பூசவிழா வந்தது. நெருக்கத்திலே படாமல் ஒரு பிராமணன் நீராடித்திரும்பினான். அவன் ஈரக்கால் அப்புழுவின்மேல்பட அது இறந்தது. பூசநீரில் தோய்ந்த ஈரம்படத் தெய்வ உருவம் பெற்று அப்புழு விண்ணுலகம் அடைந்தது என நாரதமுனிவருக்குப் பிரமதேவர் கூறியருளினர்.]

கலிநிலைத்துறை

அவம திக்குழுக் குறும்பெனு மடவி நன் கெறிந்து
சிவமெ னும்பயிர் வளர்த்திடு செழுமனப் புனத்தீர்
தவன னுக்கெனும் பிரமகை வர்த்தனந் தன்னில்
புவன முய்ந்திடப் புகல்கதை நனியினிப் புகல்வாம். 1

1. அடவி - காடு. "அமைதி....சிவமெனும்பயிர்...." "காராரு மாணவக் காட்டைக்களைந்து ...." (தாயுமானவர்) "நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை, வேரற அகழ்ந்துபோக்கி" (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை). மனப்புனம் - மனமாகிய புனம்: பண்புத்தொகை. தவனனுக்கு - சூரியனுக்கு. பிரமகைவர்த்தம் - பதினெண்புராணங்களில் ஒன்று: அது சூரியனுக்குரியது. இச்சருக்கமுதலாகவுள்ள வரலாறுகள் பிரமகைவர்த்தத்துள்ளன.

மேவு முப்பதிற் றிரண்டிரட் டியகலை விரிவும்
யாவ ரெண்ணமு முணர்ந்திடு முணர்ச்சியு மிமையாத்
தேவர் தம்முட னசுரர்க்கு முறவுறு திறனும்
பாவை பாகன்க ணிசையிசைத் திடலுநீள் பரிவும். 2

எவர்க ளாலுந்துன் புருமையு மறிந்தவை யிசையும்
அவரி டத்திலுற் றுரைப்பது மருந்தவ வலியும்
புவன மெங்குமுற் றெருநொடிப் போதில்வந் திடலும்
நவிலு மியாவையு மெய்திய நாரத முனிவன். 3

தாம ரைத்தலை யுறைந்திடு சதுர்முகக் கடவுள்
மாம லர்ப்பதஞ் சென்றெதி ரன்பொடும் வணங்கி
ஏம வில்வரைச் சிலையினு னினிதுறை தலங்கள்
ஆம வற்றின்முன் னலகில வுரைத்தனை யையா. 4

அன்ன வற்றினு ளுயர்தல மெத்துணை யவைகள்
இன்ன தின்னதென் றுணரவின் றெனக்கிவ ணறைதி
என்ன வோதின னேதிமத் திருப்பவ னிசைந்து
பன்னு மத்தலம் புகலுதுங் கேளெனப் பகரும். 5

---

2. நாரதமுனிவர் இயல்பு இரண்டு செய்யுளால் கூறுகின்றூர். முதலடியில் 'அறுபத்துநான்கு கலைகள்' என்றூர். தேவரிடத்தும் அசுரரிடத்தும் நட்புடைமை. பாவை பாகன் - சிவபெருமான். பரிவு - அன்பு. பாவை பாகன்பால் இசை இசைத்திடலும்: நாரதர் சிவசந்நிதானத்தில் இசை பாடி மகிழ்வித்தலை ''நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும், கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்'' என்றமையும் தெரிவிக்கும்.

தும்புரு நாரதர் என்னும் இருவரும் தேவ இருடிகள். அவர் சங்கீத சாகித்தியத்தில் வல்லவர். அவ்விருவருள் நாரதர் பிரசித்தி பெற்றுச் சிறந்தவர். ''தும்புருநா ரதரென்னு மிருவரினும் நாரதனுந் தோன்றல்'' ''..இசையின் வீணைத், தேன்புரிந்த தெள்ளமுதா லமுதுண்டோர் செவியிரதந் தெவிட்டுவிப்பாய், மான்புரிந்த திருக்கரத்து மதியிருந்த நதிவேணி மங்கை பாகன், தான்புரிந்த திருக்கூத்துக் கிசையமகிழ்ந் திசைபாடும் தத்வ ஞானி''. (வில்லிபார - சபா - இராயசூய - 9-11 செய்.)

3. இசையுமவர் - பொருந்திய அவர்.

4. தலை - இடம்: ஏழனுருபு. ஏமம் - பொன். வில் - ஒளி. வரைச் சிலை - மலையாகிய வில். சிலையினன் - சிவபெருமான் என்க. அலகு இல - எண்ணிலாதன.

5. அறைதி - கூறுக. ஓதிமம் - அன்னப்பறவை.

பூட்டி டெண்ணிலாப் பிறவிசெய் புண்ணிய வசத்தால்
நாட்ட மூன்றினுன் கதையினைக் கேட்கவுண் ணுடும்
கேட்ட மாணவ னூற்றெரு தலைமுறை கிளக்கும்
வீட்டி னுற்றிடச் செயுமிடை விளங்குதன் னுடனே. 6

ஆய தன்மையாஞ் சிவகதை யானுனக் கறைய
நீயு கந்துளங் கேட்பதி னீடினி யானும்
தூய ஞகினேன் சுருட்டுவெண் டிரைக்கடல் சூழ
மேய பாரிடைச் சிவத்தல மெண்ணில விளங்கும். 7

எண்ண வற்றுளே ழாயிரத் தீரிரு நூறு
நண்ணு மேன்மையன் னவற்றுளா யிரத்திரு நான்காண்(டு)
அண்ண லெய்திடு நூறவற் றறுபத்தெட் டவற்றுள்
ஒண்மை மேவுநா லாறவற் றுயர்ச்சியோ ரெட்டாம். 8

பேசி டன்னவை கைலைநீ டருணையாம் பிறங்கல்
காசிகா ளத்தி கூடல்வண் புலீச்சரங் கமலை
வாச மார்பொழி லிடைமரு தவ்விடை மருது
மாசில் பூண்முலை யுமையவண் மனமெனத் திகழும். 9

ஆதி யிற்பர னுமையவட் கனுதியா மனைய
மாத லத்தினைக் காட்டுவான் கைலைமால் வரைநின்(று)
ஆத ரத்தொடு போந்தன னதன்முனவ் வசலம்
போத லுற்றவ ணிருந்தது புகழ்மரு தாகி. 10

---

6. நாட்டம் மூன்றினுன் - மூன்று கண்களையுடைய சிவபிரான்: நாட்டம் - கண்: ''நாட்ட மூன்றுடை நாயகன் வரத்தினுல்'' (நைடதம்).

7. சுருட்டு வெண்திரை - மடங்கும் வெள்ளிய அலைகள்.

8. எண் அவற்றுள் - மதிக்கத்தக்க அத்தலங்களில். ஏழாயிரத்து நானூறு தலங்கள் சிறந்தன. அவற்றுள்ளும் ஆயிரத்தெட்டுச் சிறந்தன வாம். நூறு, அறுபத்தெட்டு, இருபத்துநான்கு, எட்டு என்பன முறையே சிறந்தனவாம்.

9. திருக்கயிலாயம், திருவண்ணுமலை, காசி, காளத்தி, மதுரை, சிதம்பரம், திருவாரூர், இடைமருது என்பன அவை. அருணை - திருவண்ணு மலை: பிறங்கல் - மலை. கூடல் - நான்மாடக் கூடலாகிய மதுரை. புலீச் சரம் - சிதம்பரம். கமலை - திருவாரூர்.

10. ஆதியில் - முன்னெருகாலத்தில். காட்டுவான்: வான்: வினை யெச்சம். ஆதரத்தொடு - விருப்பத்தோடு. அ அசலம் - அக்கயிலாயமலை.

வாச நீடுமம் மருதினை மணிவிழி நோக்கில்
தேசி லங்கிடு கயிலையின் றெரிசனப் பலனும்
ஆசை யால்வல மியற்றினு மிறைஞ்சினு மதனைப்
பூசை செய்யினு மம்மலைக் கியற்றலே போலாம். 11

சிறக்கு மவ்விடை மருதினிற் பிறக்குதல் செயினும்
இறக்கி னுங்கண மிருக்கினு மெதிர்படிந் திடினும்
நெறிக்க ணோருற நோக்கினு நினைக்கினு மதனை
மறக்கொ டும்பவ மகன்றிடு மருவுநீ டின்பம். 12

சாற்று மத்தலத் திறையவன் தந்தைதாய் குரவர்க்(கு)
ஆற்று வெவ்வினைத் துரோகமு மகலுமோர் வளவன்
மாற்றில் சீரொரு தென்னவன் மற்றெரு வேந்தன்
ஏற்ற பாதகப் பிரமகத் திகளுமாங் கிரிந்த. 13

அன்ன வண்பதி மருவுதீர்த் தங்களோ ரளவு
துன்னி டாவவை யாவையுஞ் சுரநதி பொருவும்
மன்னு புண்ணிய மணுவொரு மேருவின் வளரும்
என்ன பாதக மியற்றினு மிலங்கிடா தம்ம. 14

அத்த லந்தனில் விபண்டக முனிவர னளவில்
சுத்த மாதவர் சூழ்ந்திடச் சூழிரு நான்காய்
உய்த்தி டுஞ்சதுர் யுகமினி துறைந்தனன் றவத்தில்
சத்தி யோர்புறந் தனிலுறு தாணுவைப் பணிந்து. 15

---

11. மருது - மருதமரம்: தலவிருட்சம். நோக்கில் - தரிசித்தால்: தேசு - புகழ், ஒளி. வலம் - பிரதக்கிணம். அ மலைக்கு - அக்கயிலாய மலைக்கு.

12. நெறிக்கண் - வழியில். அதனை - இடைமருதாகிய அத்தலத்தை. கொடும்பவம் - கொடிய பாவங்கள்; கொடிய பிறப்பெனினுமாம்.

13. அதலத்து இறைவன் - ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி. ஆற்று - செய்யும். வளவன் - சோழன். தென்னவன் - பாண்டியன். ஏற்ற - ஏற்றுக்கொண்ட; எதிர்ந்த எனினும் ஆம். பாதகப் பிரமகத்தி - பாதகத்தால் வந்த பிரமகத்திபாவம். இரிந்த - கெட்டோடின.

14. ஓர் அளவு துன்னிடா: துன்னிடா - பொருந்தா. சுரநதி - ஆகாய கங்கை.

15. எட்டுச் சதுர்யுகங்கள். தாணு - சிவபெருமான்.

சொன்ன மாதவ விபண்டகன் சோதிதா ளடைந்த
பின்னெ டும்பக லகன்றபின் னேகியப் பேரூர்
மன்னு மீசனைப் பூசைசெய் தெழிற்சுரு மதியின்
நன்ன ரெய்திடு முயர்விழா நடாத்தினே நாமும். 16

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அதிகவளந் தருமனைய விடைமருதி
லெமைப்போல்வா ரளவி லாத
விதிகளுமன் னவர்களைத்தஞ் சுதராகப்
பெற்றருளச் சுதரு மேவி
மதிதரித்த செஞ்சடையோன் றனைப்பணிந்து
தாம்வேண்டும் வரங்கள் பெற்றார்
முதியனவா மவையனைத்து மெண்ணிறந்த
வாயுடையோர் மொழிய வேண்டும். 17

கலிநிலைத்துறை

நீடு மச்சுவ மேதமென் றெருவல நிகழுங்
கூடி யங்கதில் வலஞ்செயில் விழிபெறுங் குருடன்
வாடன் மேவுறு குட்டமும் வறுமையுங் கயமும்
ஓடு மற்றுள துன்பமு மலகையு மோடும். 18

புவன மேத்திடை மருதுறை யிறையவன் பொருளைக்
கவர்த லுற்றிடி னேரணுக் கடைஞராய் நூறு
பவம டைந்துபின் னூறுரு நாயினுற் பவித்துத்
துவள லுற்றுமேற் புழுவதாம் பிறவியிற் றொடர்வார். 19

---

16. சோதி - சிவபெருமான். சுரு மதியில் - மகரமாதத்தில்: அதாவது தை மாதம் என்க.

17. அளவிலாத விதிகள் - எண்ணில்லாத பிரமதேவர்கள். தம் சுதர் ஆக - தமது புத்திரராக. அச்சுதர் - விஷ்ணுக்கள். அளவிலாத விதிகளும் அச்சுதரும்: ''நூறு கோடி பிரமர்கள் நொந்தினார், ஆறு கோடி நாராயண ரங்ஙனே, ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர், ஈறி லாதவன் ஈச னொருவனே'' (திருநாவு: தேவாரம்).

18. அச்சுவமேதப்பிரதக்கிணம் - திருக்கோயிலினது வெளிமதிலின் உள்ளாக வலம் வருதலாம். கயம் - க்ஷயரோகம். அலகை - பேய்.

19. கடைஞர் - இழிந்தோர். பவம் - பிறப்பு. நூறு உரு - நூறு பிறப்புக்கள்.

முந்திவ் வாறொரு மறையவன் முதல்வனு லயத்து
நந்து தீபநெய் கவர்ந்துமேற் புழுவதாய் நண்ணரிச்
சுந்த ரம்பெறு பூசநீர் தோய்ந்தவன் பதந்தோய்ந்(து)
அந்த வானுல கடைந்தன னமரர்கள் போற்ற. 20

மேவு பூசமு மித்தகை வியனுடைத் தென்றுன்
பூவி னுன்றனை நாரதன் போற்றிமற் றன்னுன்
யாவ னுங்கவன் சரிதைக ளியாவுமின் றெனக்குத்
தாழ்வி லாவகை சாற்றுகென் றுன்விதி சாற்றும். 21

இயங்கு மாதவன் சோலைவெள் ளிணர்த்துக டோய்ந்து
தயங்கு மிந்துவிற் றேன்றிடச் சரோருகங் குவிந்து
பயங்கு லாவுசே தாம்பல்கள் பகலின்வாய் திறக்கும்
நயங்கொள் சண்பக வதியெனத் திகழுமோர் நகரம். 22

கிளக்கு மத்திரு நகரினிற் கிளர்மறை யொலியும்
துளக்கு மொண்மணித் துவசமுந் துதைந்துவிண் முகட்டை
அளக்கும் வேதியர் வீதிகள் பலவுள வவற்றேர்
வளக்கொள் வீதியில் வினதனென் றுளனொரு மறையோன். 23

சொற்றி டத்தனி வேதியன் றனக்கொரு துணைவி
மற்ற வட்குறு மியற்பெயர் மாலினி யென்ப
வெற்றி வேலைநீ டிதுசத்தி யிலையென வேலை
சுற்று மாநிலஞ் சொலவுறு துணைமத விழியாள். 24

---

20. தோய்ந்தவன் பதம் தோய்ந்து - நீராடியவன் காலால் மிதிபட்டு.

21. வியன் - மேம்பாடு. பூவினுன் - பிரமதேவர். விதி - நான்முகக் கடவுள்.

22. இயங்கும் ஆதவன்: ஆதவன் - சூரியன். வெள் இணர் துகள்: இணர் - பூங்கொத்து. சரோருகம் - தாமரை. பயம் - நீர். சேதாம்பல் - செவ்வல்லி.

23. துதைந்து - நெருங்கி.

24. வெற்றிவேல்: வேல் - வேலாயுதம். நீடு இது சத்தி இலை: சத்தி இலை - வேலினது இலை, ஆற்றல் இல்லை; ''சுத்தவீ ரத்தரங்கைத் துன்னு வடிவேலதனைச், சத்தியிலையென்னும் தடங்கணுள்'' (பெருவுடையாருலா, 225) ''வேல் முனைக்குச், சத்தியிலை யென்னவெற்றி தான் கொண்டு'' (கடம்பர்கோயில் உலா, 277). வேலை சுற்றும் - கடலாற்சூழப்பட்ட. துணை - இரண்டு.

திருவின் மிக்கவள் வனப்பினி லிரதியிற் சிலேவேள்
மருவு சிற்றிடை யிரதியு நாணுமம் மடந்தை
பொருவின் முற்றிழை யொடுநகை முகத்தொடும் போந்து
தெருவி னுற்றிடு மடிக்கடி திகழ்கடை நிற்கும். 25

சேர்வை யாநுதல் வசிகர திலகத்தி னுனும்
போர்வை யாமலர்க் கூந்தலி னுனுமேற் பூட்டும்
வார்வை காமர்வெம் முலேத்துணை யானு நீள் வாட்கண்
பார்வை யானுமா தவரையுங் கைவசப் படுத்தும். 26

அடுத்த காமுகர் மகிழ்வுற வணிபெறு தனங்கள்
கொடுத்து வாங்கிடு வாணிகம் புரிந்திடுங் கூடித்
தடுத்த காதல னிசைந்துதன் மொழிவழி சரிப்பத்
தொடுத்த மந்திர மருந்துக ளிசைத்தனள் சூழ்ந்து. 27

அந்த வாணுதல் வயிற்றினின் றவதரித் தவன்முன்
முந்து ரைத்திடு மறையவ னனையவன் முளைத்து
நந்த லில்லதோர் பிறையென நாடொறும் வளர்ந்தான்
மைந்தன் வஞ்சகன் தந்தைபான் மறைபயின் றிடுமால். 28

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தேவ விரத னவனும மொருநா ளுரைத்தல் சிந்தையினின்
மேவுற் றிலது கண்டுதனி வெகுண்டான் ருதை யவன்றன்னைத்
தாவில் கம்பத் திடைப்பாசந் தன்னுற் பந்தித் துறநிறுத்திப்
போவ தானுன் புறநாட்டிற் பொருந்துங் கயவர் கணங்களொடும். 29

---

*25. இரதி - மன்மதன் மனைவி. பொரு இல் முற்று இழை: இழை - ஆபரணம். நகை - விளங்கும். கடை - வாயிற்படி.*

*26. நுதல் - நெற்றி. திலகம் - பொட்டு. வார் - கச்சு. மாதவரையும் - சிறந்த தவசிகளேயும் : தவர் - தவத்தையுடையோர்.*

*27. தனங்கள் - நகில்கள், திரவியங்கள். வாணிகம் - வியாபாரம். மொழி வழி சரிப்ப - சொல்லின்படியே நடக்குமாறு. சூழ்ந்து - ஆராய்ந்து.*

*28. முந்து உரைத்திடு மறையவன் - தேவவிரதன் என்பவன். நந்தல் - தேய்த்தல். மைந்தனுகிய வஞ்சகன் என்க. அவதரித்தவன் என்பது இழிவு குறித்தது.*

*29. தாதை - தகப்பன். அவன் தன்னை - தகப்பனை. கம்பம் - தூண். பாசம் - கயிறு. கயவர் கணம் - கீழ்மக்களது கூட்டம்.*

அங்க ணிலகு பதிதொறுஞ்சென் றங்கங் கிசைந்த களவியற்றித்
திங்கட் பிறைநீள் வரைத்தலையிற் றெரிவ தெனத்தண் போரேறிச்
சங்க மிருந்த பிறைக்கதிரிற் றரளஞ் சொரியும் வயற்பொன்னித்
துங்க வளநா டணைந்ததனிற் றுலங்கு மருதூ ரிடைப்புகுந்தான். 30

அந்நா ளிலகும் விழாவதனு லந்நாட் டிலகு மனிதரொடும்
பொன்னுட் டிறையுஞ் சுரர்குலமும் பூத கணமும் புடைசூழ
மின்னூர் சடையோன் பவனிவரும் வியப்பு நோக்கி யவனெதிரே
துன்னு நின்றுன் றண்புடைசூழ் சோர மூடர் தூர்த்தரொடும். 31

கண்டான் கதிர்செய் மணிமுடியுங் கவினூர் மகர குண்டலமும்
எண்டா னிசையாக் கனகவிலை யெய்துந் தரள மணிவடமும்
தண்டா வயிரக் கங்கணமுந் தயங்கு மணிப்பொற் கவசமுமேல்
உண்டா மெவையும் பனிவரைமா னேங்கு மகுட முதற்பணியும். 32

இந்தப் பணிமாத் திரங்கொடுநா மேகல் பெரிதன் றின்னுமுறும்
எந்தப் பணியுங் கொளல்வேண்டு மிதற்கா லயத்தி னதிகாரங்
குந்தத் தடக்கைப் புரவலன்பாற் கோடல் வேண்டு மெனத்தனைச்சூழ்
அந்தப் பெரியோ ருடன்சூழ்ந்தா னவரு மதுதா னெறியென்றார். 33

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கிட்டினு னரசன் றனையிவ்வா லயத்திற் கிளர்தரு மெவர்களுந் தங்கட்(கு)
இட்டமாம் படியே நடத்துகின் றனர்க ளெனக்கதன் விசாரணை யுதவின்
திட்டமா வியற்றும் பூசையும் விழாவுந் திருப்பணி பலவுநான் செய்வேன்
மட்டவி ழலங்கன் மன்னவென் றுரைத்தான் மன்னனு மிசைந்தது கொடுத்
[தான். 34

---

30. சங்கம் - சங்குகள். போர் - வைக்கோற்போர். திங்கட்பிறை சங்குக்கும் வரை போருக்கும் உவமைகள். தரளம் - முத்து.

31. பொன்னுட்டு இறை - இந்திரன். சுரர்குலம் - தேவர் கூட்டம். சோர மூடர் - திருடராகிய அறிவிலிகள். தூர்த்தர் - காமுகர்.

32. எண் தான் இசையா: எண் - மதிப்பு. கனகம் - பொன். தரளமணி வடம் - முத்துமாலை, இரத்தின மாலைகள்: தரளவடம், மணிவடம் என்க. தண்டா - நீங்காத. பனிவரை மான் - உமாதேவியார். பணியும் - ஆபரணங் களும்.

33. எந்தப் பணியும் - எந்தவித ஆபரணமும்; எந்தவித அலுவலும் எனத் தொனித்தல் காண்க. குந்தம் - வேல். அந்தப் பெரியோர் என்றது சோரரையும் தூர்த்தரையும். சூழ்ந்தான் - ஆலோசித்தான். நெறி - வழி.

34. விசாரணை - கட்டளை; பேஷ்காரர் உத்தியோகம்: இப்போது நிர்வாக அதிகாரி என்றுளது. மட்டு அவிழ் அலங்கல்: மட்டு - தேன்.

அன்னவ னிடைநின் றுலயத் தடைந்தா னணிகிளர் ராலய மதனின்
முன்னுறு மெவரு மன்னவ னரசன் மொழிப்படி யணைந்தவா றுணர்ந்து
துன்னினர் சூழத் தன்வர வவர்க்குச் சொல்லினன் கேட்பன கேட்டான்
தன்னுரை கடவா தடக்கினன் சிலரைச் சிலர்தமைத் தழுவினன் மொழியால்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சந்தமுறு மறுகிடத்தோர் மனையினிடைக்
குடிபுகுந்தான் றனிப்பொற் கோயில்
வந்திறையோன் பரிசனமுந் தனையகலாத்
துணைவர்களு மருங்கி னீடச்
சிந்தைதனிற் கரவடமுங் கரமதனிற்
செபவடமுந் திகழ நாளும்
நந்தலிறன் னதிகார மங்கொருமண்
டபத்திருந்து நடத்து கிற்பான். 36

சிலபகலி னிதியிருக்கு மிடத்திநெடு பணியிடமுந் தேர்ந்தான் றேர்வுற்(று)
இலகுமவை யாவுமொரு நிசியினிடைக் கவர்ந்தேகற் கிலக்கம் வாயா(து)
அலகுபெறு பதநோக்கித் தனக்கயனேக் கிடுபதத்தி னமரு நாளில்
வலமருங்கி னூழ்வினையாற் பிளவையெனு மொருவிரண மருவிற் றம்ம. 37

ஆயதனி லியனுகா தாலயத்து ளிருந்திடும்போ தருகார் தீப
நேயமதி லொருதுளிதொட் டதன்மீது தடவினன்மே னிசிவந் துற்ற(து)
ஏயதனின் மனைக்குறுங்கா னெறிதனிலோர் பணிதீண்டிற் றேக லுற்றான்
காயழற்கட் பிறையெயிற்றுக் கிங்கரர்பின் னங்குநின்று காலன் றன்னூர். 38

---

அலங்கல் - மாலை. இசைந்து அது கொடுத்தான்: அது - அவ்விசாரணை அதிகாரத்தை.

35. துன்னினர் - நெருங்கினர்கள்.

36. சந்தம் - அழகு. மறுகு - தெரு. கரவடம் - வஞ்சகம். நந்தல் இல் தன் அதிகாரம்: நந்தல் இல் - கெடுதலில்லாத.

37. நிதி இருக்கும் இடம். பணி இடம் - ஆபரணம் இருக்குமிடம். நிசி - இரவு. இலக்கம் வாயாது - சமயமில்லாமல். பதம் - காலம். வல மருங்கு - வலப்பக்கம்.

38. அருகு ஆர் தீபம். மேனி சிவந்து உற்றது : மேல் நிசி வந்து உற்றது; மனைக்கு உறுங்கால். பணி - பாம்பு. அங்கு நின்று காலன் ஊர் ஏகலுற்றான். தீப நேயம் அதில்: நெய் என்பது நேய் என நீண்டு அம் சாரியை பெற்றது.

தூண்டுசுடர் நெய்யதனிற் றுளிகவர்ந்து மருவுசிவத் துரோகந் தன்னல்
ஆண்டிருபத் தெண்கோடி நரகிடத்தும் விழ்ந்தரற்றி யவனி மீது
மீண்டிழிஞ் ருயுதித்து நூறுபவ நூறுபவம் வெய்ய நாயாய்ச்
சேண்டிகழ்சி ரிடைமருதிற் பின்புமலப் புழுவாகிச் செனனஞ் செய்தான். 39

ஆங்கனைய வடிவுகொடு கிடந்திடுநாட் பூசவிழா வணைந்த தந்நாள் [காலை
ஓங்குபுகழ்ப் பொன்னிபடிந் தொருமறையோ னகர்க்கணைய வொதுங்குங்
நீங்கரிய நெருக்கதனி லொருவர்மிசை யொருவர்விழு நிகழ்ச்சி நோக்கிப்
பாங்குசிறி தொதுங்கினன்மற் றெதுங்கலுமப் புழுவின்மிசைப் பதம்வைத்
[தானல். 40

பொன்னிதனிற் பூசநாட் படியீரப் பதம்படலாற் புழுவி னுக்கை [கண்
தன்னைவிடுத் திமையோர்த முருவணைந்து புடையிரண்டுஞ் சமர்செய் வாட்
மின்னிடைப்பொன் னரமகளிர் துணைக்கவரி யிரட்டவெழில் விமான மேறி
மன்னுசுரர் கணத்திநெடு மளவில்பெரு மகிழ்ச்சியொடும் வானு டுற்றான். 41

வேறு

இந்தவே தியன்முன் செய்த தீமையு மியம னூருற்(று)
அந்தவெந் நரக மெங்கு மலைந்ததும் பின்னு மீண்டு
வந்ததும் வானு டுற்ற வளமையு முணர்ந்தா யன்றே
நந்தக னெனவோர் மைந்த னவிலவன் கதைமேற் சொல்வாம். 42

தேவவிரதச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1224

---

39. ஆண்டு - அவ்விடத்து; என்றது காலனூரில். மீண்டு இழிஞனுய். நூறுபவம் - நூறு பிறப்புக்கள். சேண் திகழ்.

40. அனைய வடிவு - அம்மலப்புழு வடிவம். படிந்து - மூழ்கி. பதம் - கால்.

41. பொன்னி - காவிரிநதி. பூச நாள் - தைப்பூசத்தில். ஈரப்பதம் - ஈரமுள்ள கால். ஆக்கை - உடம்பு. இமையோர்தம் உரு - தெய்வவடிவம். இரட்ட - மாறிமாறி அசைக்க. சுரர்கணம் - தேவர்குழு. வான்நாடு - விண்ணுலகம்.

42. இந்த வேதியன் - தேவவிரதனுகிய அந்தணன்.

திரிதரு காலை ஞாங்கர் தெரித்திடு துவச ரீன்ற
வரிமத வேற்க ணாளோர் மாதினை நெறியி னேக்கி
அரிவைநீ யெங்குற் றுயென் றுதியிற் பழகி னுன்போல்
விரிசில கதைக ளோதி மெல்லெனத் தொடிக்கை தொட்டான். 6

தொட்டலுஞ் சிறிது நாண ந் தோன்றிட வொதுங்கி னுன்சற்(று)
ஓட்டின னுங்கு மெல்ல வுயர்மறைக் குலத்தோ னீயான்
மட்டுவிற் பவரிற் றேன்று மடந்தையா லிசைவன் றென்னக்
கட்டுரைத் திட்டா ளந்தக் காரிகை யவனை நோக்கா. 7

கோற்றெடி மாதிவ் வாறு கூறலு மனையோன் கேளாச்
சாற்றிடு நளினஞ் சேற்றிற் சனித்ததாற் குறைவே தேனும்
ஏற்றதோ நலனும் பொற்பு மிசைந்திடு பொருள்க ளெங்குத்
தோற்றிலென் னுயிரே யென்று தொடர்ந்திடு மாசை பூட்டி. 8

நம்புறு மவடன் னேடு நடந்துதன் மனையி னுற்றுங்(கு)
அம்பலுற் றிடச்சேர்ந் தின்ப மார்ந்தினி திருந்தான் சின்னுள்
பம்பிடு வசைக்கு மியார்க்கும் பயந்திடா னிருக்குங் காலை
வம்புறு மலர்ப்பூங் கோதை பயந்தனண் மகவொன் றுங்கு. 9

சொல்லிடு மதலை யீன்ற தொடர்பினிற் றேட மென்னும்
அல்லனே யுற்றுள் பின்ன ரதுநிப மாகப் பற்றி
வல்லதன் றமர்க டேடி வந்துகண் டிழுத்துக் கொண்டு
செல்லுமா றென்னச் சென்றுர் தென்றிசைக் கால தூதர். 10

ஏற்றவ ளிறந்த பின்னை யிவடன்னைக் கொல்ல வந்த
கூற்றுவ னிதுவே யென்றக் குழவியை யுடலி ரண்டு
கீற்றுறக் காலைப் பற்றிக் கிழித்துநீர் கடுக வோடும்
ஆற்றிடைத் தூவி யிட்டா னல்லிடை யனைய பாவி. 11

---

7. ஒட்டினன் - நெருங்கினுன். மட்டு விற்பவர் இல்: மட்டு - கள். இல் - வீடு. இசைவு அன்று.

8. கோல் தொடி - வளைந்த வளையல். நளினம் - தாமரை. நலம் - நன்மை. பொற்பு - அழகு. ''தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனை பால், பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா - தாமழன்மற், றெங்கே பிறந் தாலும் எள்ளாரே நல்லோர்கள், எங்கே பிறந்தாலு மென்'' என்னும் வெண்பாவை இது நினைவுறுத்தும்.

9. அம்பல் - பழிமொழி. வசை - பழிச்சொல். வம்பு - வாசனை. பயந்தனள் - பெற்றுள். பயந்திடான் பயந்தனள்: நயம்.

10. மதலை - குழந்தை. அல்லல் - துன்பம். நிபம் ஆக - காரணமாக.

11. ஏற்ற அவள். கடுக - வேகமாக. அல்லிடை - இரவில்.

கொன்றெறிந் தவன்பி னில்லங்
குறுகிடான் றுயர மெய்தி
ஒன்றுநா மெண்ணத் தெய்வ
மொன்றினை யெண்ணிற் றென்னுத்
தென்றிசை நோக்கிச் சென்றுன்
சென்றிடில் விடுமோ பாவம்
கன்றிடுன் மத்த நோவும்
கவனமுய் நோவுஞ் சூழ்ந்த. 12

அந்தவெம் பிணிக ளோர்பா லலைத்திட வலைவுற் றுங்கு
முந்துறு குவடுங் காடு மொழிசில நாடு நீந்தித்
தந்திவெண் மருப்பும் பொன்னும் தரளமுங் காந்தட் போதும்
உந்துநீர்ப் பொன்னி நாடுற் றெளிரிடை மருது சேர்ந்தான். 13

சேர்ந்தொரு வீதி தன்னிற் கிடந்தனன் றெரித்த நோயால்
ஆர்ந்திடத் தினந்தைப் பூச மாதலி னங்கோர் பார்ப்பான்
ஈர்ந்துறைப் பொன்னி யாடிச் செல்கின்று னிவனைக் கண்டு
சார்ந்தரு கிரக்க மெய்தி யெடுத்தனன் றடக்கை தன்னுல். 14

இன்னிசைப் பூச நீர்தோய்ந் தீரமார் தடக்கை யின்னுன்
தன்னுடற் பிணிக ளோடு சார்ந்திடு மிவன்றன் பாவம்
என்னவோ திடுநுண் பஞ்சி னிராசிகட் கிலகும் வெய்ய
வன்னியா யிருந்த தாங்கே மற்றினி யுரைப்ப தென்னே. 15

தாங்கிய பிணிகள் யாவுஞ் சரிதலு முணர்வு தன்னே(டு)
ஓங்கிய மகிழ்வும் பொற்பு முற்றெழுந் திருந்தா னன்னுன்
ஈங்கிவண் கிடந்தாய் முன்ன ரெந்தவூர் யார்நீ யென்றுன்
ஆங்கவற் கெடுத்துச் சொன்னு னடுத்ததன் செயற்கை முற்றும். 16

---

12. வன்பில் - வலிமையால். இல்லம் - வீட்டை. 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' என்பது பழமொழி. கன்றிடு உன்மத்தநோவும். கவனம் உய் நோவும்: உன்மத்தம் - பைத்தியம்.

13. அலைவுற்று - வருந்தி. குவடு - குன்று. தந்தி - யானை. மருப்பு - தந்தம். தரளம் - முத்து. உந்தும் - தள்ளிவரும்.

14. ஈர்ந்துறை - குளிர்ந்ததுறை. சார்ந்து அருகு இரக்கம் எய்தி.

15. இன் இசை - இனிய கீர்த்தி. இன்னுன் - நந்தகன் என்போன். பஞ்சின் இராசி - பஞ்சின் கூட்டம்: என்றது பஞ்சுப்பொதியை. வன்னி - நெருப்பு.

16. சரிதலும் - வீழ்தலும். பொற்பு - அழகு. அன்னுன் - பூசநீராடி வந்த பிராமணன். அடுத்த - பொருந்திய.

அம்மறை யவனுஞ் சூழுற் றவருமவ் வுரையைக் கேட்டு
விம்மித மடைந்து பூச மேன்மையி தென்று சென்றுர்
இம்மறை யவனும் பொன்னிக் கேகிநீர் படிந்தே றூர்ந்த
செம்மலே வணங்க லுற்றுன் றிகழ்கரு மலேயென் றேத்தி. 17

பின்னருஞ் சிலநா ளந்தப் பெரும்பதி யிடத்தி லின்ப
மன்னுற விருந்து மீது மருதநன் னீழல் வைகும்
பொன்னலர் கடுக்கை வேணிப் புண்ணிய னருளா னீடு
நன்னர்செய் வெள்ளி வெற்பி னண்ணிவீற் றிருப்ப தானுன். 18

இத்தகை யவரும் பூசத் திலங்கெழிற் பொன்னி தோய்ந்தோர்
அத்தமுங் காலு மேற்பட் டரனரு ளடைந்தா ரென்னின்
பத்தியிற் படரு மாறு படர்ந்துமூழ் கினர்க ளிட்ட
சித்திபெற் றிடுவ ரென்னத் தெரித்திட வேண்டுங் கொல்லோ. 19

என்றிருக் கிறைவன் கூற நாரத னிலங்கவ் வூர்க்குச்
சென்றிடு திறனுஞ் சென்று செய்திடு திறனு மூழ்கித்
துன்றிடு பயனு நன்கு துலங்கிடச் சாற்று கென்றுன்
நன்றிசைக் குதுங்கே ளென்ன நவின்றிடுங் கலேமான் கேள்வன். 20

நந்தகச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1244

---

17. சூழுற்றவர் - சுற்றியிருந்தோர். விம்மிதம் - ஆச்சரியம். ஏறு ஊர்ந்த செம்மல் - சிவபெருமான்.

18. கடுக்கை வேணி - கொன்றை மலர்மாலையை அணிந்த சடையை யுடைய. வெள்ளி வெற்பு - கயிலாயமலே.

19. அத்தம் - பொன்.

20. இருக்கு இறைவன் - பிரமதேவர். துன்றிடு - அடையும். நன்று இசைக்குதும். கலேமான் - சரஸ்வதி. கேள்வன் - கணவன்.

நாற்பத்தெட்டாவது

# பூசமகிமைச் சருக்கம்

[முற்காலத்திலே உரோமசமுனிவர் திருவிடைமருதூரில் வீற்றிருக்கின்ற சோதிமகாலிங்கசுவாமிக்குத் திருவிழாச் செய்தற்காக ஆராய்ந்து உறுதிசெய்யப்பெற்றது தைப்பூசவிழாவாகும். சித்திரை முதலிய மாதங்களிலே ஒவ்வொருவர் திருவிழாவைச் சிறப்பாக நடத்துவித்தனர். அவற்றுள்ளே தைப்பூச விழா உயர்ந்தது. திருமால் பிரமன் முதலிய தேவர்களும் சித்தர் மாதவர் பூதர் கந்தருவர்களும் நிலவுலகத்திலுள்ள முனிவர்களும் பிறரும் தைப்பூசம் எப்போதுவருமென எப்போதும் நினைந்திருப்பர். தைப்பூசநாளே இறைவர் தீர்த்தம் கொடுத்தருளும் நாளாம். பூசநாளின் முன்னர் வரும் பத்தாம்நாளாகிய உத்தரட்டாதி நட்சத்திரத்திலே ஸ்ரீ மகாலிங்கமூர்த்திக்கு இடபக்கொடி ஏற்றி விழாநடைபெறும். உலகத்திலே அவ்விழாவினுக்கு ஒத்தவிழா இன்று. விழாக்காலத்திலே இடைமருதூர் எங்கணும் அலங்கரிப்பர். ஆடவரும் மகளிரும் ஆடை அணிகலங்களால் தம்மையும் அலங்காரம் செய்துகொண்டு குதூகலிப்பார்கள்.

ஏகநாயகர் திருவீதியில் உலா வருங்காலத்தில் யாவரும் அன்பு கூர்ந்து எதிரில் ஓடிவந்து வணங்குவர். இடபவாகனம் முதலிய வாகனங்களில் உமாதேவியாரும் சிவபெருமானும் உலா வருங்காலத்திலே ஒரு உறுப்பைப் பார்த்தோர் மனமும் கண்ணும் வேறொரு உறுப்பைக் கண்ணுறலின்று. அரகரமுழக்கம் எம்முழக்கமும் அடங்குமாறு ஒலிக்கும். பூச விழாவிற்குச் செல்லும் அறிஞர், அந்தணருக்கும் சிவனடியார்களுக்கும் அருத்தியுடன் அமுதருத்தி, பஞ்சகவ்வியத்தால் தம்மைச் சுத்திசெய்வர். யாத்திராதானம் முதலிய தானங்களைச் செய்து பிராமணர் ஆசிமொழியை ஏற்பர். சிவபெருமான் திருவடிகளை நினையும் நெஞ்சினராய், மகிழ்வுடன் செல்வர். அவ்வாறு சென்று அத்தலத்துறும் எல்லாத் தீர்த்தங்களினும் மூழ்கி, அங்கங்கே இயன்ற தானங்களைச்செய்துமுடித்து, இடைமருதீசரை அணுகித் தரிசித்தல் வேண்டும். இறைவரைத் தரிசித்துப் பின்பு பொன், ஆடை, அணிகலம், சந்தனம் முதலியவற்றை உதவி இறைவருக்குப் பூசனை ஆற்றவேண்டும். இடபக்கொடியேற்றுநாள் முதல் பத்துநாட்களிலும் காவிரியில் தோய்ந்து, மருதீசரைப் பணிந்து எதிரே மௌனமுடையராய் வலம்வரல்வேண்டும். சிவனடியார்கட்கு அன்னம் முதலிய வழங்குதல் வேண்டும்.

நாடோறும் தலபுராணத்தை ஒருவர் சொல்லக்கேட்டு, அவருக்கு வேண்டிய பொருளுதவ வேண்டும். சிவபெருமானுக்கு உகந்த வில்வமரத் துக்கு நீர் வார்த்தல் வேண்டும்; அதனை வலம் வருதலும் வேண்டும். பூச நாளிலே அங்குள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் மூழ்கி, பின்பு காவிரியில் நீராடி, பிராமணர்கட்குப் பொன்னையளித்து, அதன்மேல் ஏகநாயகரை இடப வாகனத்திலே தரிசித்தல் வேண்டும். பத்து நாட்களிலும் உபவாசம் இருந்து மற்றை நாளில் அடியார் கூட்டத்துடனிருந்து அமுதருந்தல் வேண்டும்.

உபவாசம் இருத்தற்கு இயலாதவர்கள் பால் பழம் மா முதலிய வற்றை உண்ணலாம். இவ்வாறு நோன்பு நோற்போர் எண்ணியாங்குப் பெற்று மகிழ்வர். பூமியில் பல நாள் இன்பமுற்றிருந்து பின் சிவபதம் பெறுவர். ஒருவேளையுண்டிருப்போர் நல்ல பயனையடைவர். மகப்பேறு வேண்டினோர் வரையறை செய்துகொண்டு நோற்றல் வேண்டும். ஈதல் விரும்புவோர் துயில், எண்ணெய் முழுக்கு, வெற்றிலை பாக்கு உண்ணல் இவற்றை விடுப்பின் விரைவில் பயன்பெறுவர்.

விழாத்தரிசித்து இருப்பிடத்துக்குச் செல்வோர் சிவசந்நிதியை அடைந்து விடைபெறல்வேண்டும். ஊரையடைந்து அந்தணர்கட்கு உண வளித்துப் பலனை இடைமருதீசருக்குத் தத்தம் பண்ணுவராயின் பூரண பலன் பெறுவார். இவ்வாறின்றித் தத்தமக்கு இயன்றவாறு சென்று பூச விழா தரிசிப்போர் பந்த பாசங்களும் நோய்களும் நீங்கப்பெற்று இறுதியில் கயிலையை அடைவர். இத்தலச் சிறப்பைப் படிப்போரும், கேட்போரும், அளவிறந்த பயனைப் பெறுவர் என்று நான்முகக் கடவுள் நாரதருக்குக் கூறியருளினர். பூசநாள் அணித்தாக வந்தது. நாரதர் விதிப்படி நீராடிச் சிவபிரானைத் தரிசித்து விழாவைக் கண்டு விண்ணுலகம் சென்றார்.]

கலிநிலைத்துறை

ஆதி நாளினி லுரோமச னிடைமரு தமர்ந்த
சோதி நாயகன் மனமகிழ் தூய்விழாப் புரிதற்(கு)
யாது நாளெனத் தேடிமற் றிதுவென நாட்டும்
மாதி டத்தினை யுடையது மன்னுதைப் பூசம். 1

1. ஆதி நாளினில் - முன்னொருகாலத்தில். சோதி நாயகன் - சோதி மகாலிங்கேசர். மற்று: வினைமாற்று. மா திடம் - மிக்க உறுதி.

மருவு சித்திரை முதலிய மதிதொறு மினிய
திருவி ழாவுற நடத்திடு மத்திறந் திகழொவ்
வொருவ ரியாவரு மின்புற வுஞற்றுவித் தனர்கள்
விரவு மன்னவற் றுயர்ந்தது மேவுதைப் பூசம். 2

நத்த னாதியாங் கடவுளர் கணங்களு நவிலும்
சித்தர் மாதவர் பூதர்கந் தருவருந் திணைக்கண்
மொய்த்த மாதவர் குலங்களும் முதுபுகழ்ப் பூசம்
எத்தி னத்துறு மெனத்தின மெண்ணலுற் றிருப்பார். 3

அந்த நாளுயர் தீர்த்தநல் கந்தநா ளாக
முந்தை மற்றதற் கொருபதாய் மொழிந்திடு தினத்தில்
நந்த லில்விடைக் கொடியுயர்த் தெழில்விழா நடக்கும்
சந்த நீடுமவ் விழா நிகர் தராதலத் தின்றும். 4

பதியி னெங்கணு மெழில்புரிந் தியாவரும் பலவாம்
விதமு றுங்கலன் புனைந்துறு கிளையொடு மேவிக்
குதுக லத்துடன் றிரிவர்கள் குலமனை யாவும்
புதும ணம்புரிந் திடுமனை போலினி திலங்கும். 5

ஏக நாயகன் மறுகிடைப் பவனியுற் றெய்தும்
ஓதை கேட்குமுன் மைந்தரு மகளிரு மோது
வாகு நீண்மனை யவரவர் செய்தொழின் மறந்து
மோக மெய்திமற் றெய்துவ ரவன்றிரு முன்னர். 6

---

2. மதிதொறும்-மாதங்கள்தோறும். திகழ் ஒவ்வொருவர். உஞற்றுவித்தனர்கள் - செய்வித்தனர். அன்னவற்று - அவ்விழாக்களிலெல்லாம்.

3. நத்தன் - பாஞ்சசன்னியம் என்னும் சங்கைத் தரித்த திருமால். மாதவர் - தெய்வ இருடிகள்; பின்னது நிலவுலகத்துள்ள தவசிகள். எ தினத்து உறும் என.

4. தீர்த்தம் நல்கு அந்த நாள் ஆக. முந்தை - முற்பட. ஒருபதாய் மொழிந்திடு தினம் - உத்தரட்டாதி நாள். விடைக்கொடி-இடபக்கொடி. சந்தம் நீடு - அழகுமிக்க.

5. கலன் புனைந்து - ஆபரணம் தரித்து. உறு கிளையொடும்.

6. ஏகநாயகன் - ஸ்ரீ சோமாஸ்கந்தமூர்த்தம். ஓதை-ஓசை. மோகம்-அன்பு. அவன் திருமுன்னர் - அப்பெருமான் பவனிவரும் சந்நிதியில்.

வென்றி மால்விடை யாதிய வூர்திகண் மீது
துன்று மியாவரு மகிழ்வுற நீடுலாத் தொடங்கும்
கன்று மானுறுங் கரனெழி லவயவங் களின்முன்
ஒன்று கண்டவர் கண்ணுறுர் பெயர்த்துவே றென்று. 7

மின்னு றுங்கரு முகிலொலித் திடுவதும் வேலை
முன்னு றோதையும் பல்லிய முழக்கினு ளடங்கும்
துன்னஃ தன்பர்கள் போற்றிடு துதியினு ளடங்கும்
அன்ன பேரொலி யரகர வென்பது ளடங்கும். 8

மண்ட பத்தின்மீ தினுமெழின் மாளிகை மீதும்
கொண்டன் மேவுகோ புரத்தினு மரத்தினுங் குலவு
வண்ட லத்தினு மசைவற நிற்பர்கள் மகிழ்வால்
அண்டர் நாயகன் றிருவெழி னோக்குறு மவர்கள். 9

அரக்கர் வானவர் மானுட ரசுரர்க ளியக்கர்
பெருத்த மெய்யுடைப் பூதர்கள் பிறரிவர் மகளிர்
வருக்க மியாவரும் விராவினர் மறுகிடை மிடைவார்
நெருக்கி னாதுல ரிடித்திட நிற்பர்க ணிருபர். 10

அவ்வெ ழிற்றிரு விழாவினுக் கேகிடு மறிஞர்
திவ்வி யந்தரு போனகஞ் செழுமறை யவர்க்கும்
நவ்வி யங்கையா னடியர்க்கு நல்கிமேற் பஞ்ச
கவ்வி யம்புறத் தகத்தினுங் கலந்திடச் செய்து. 11

---

7. மால் விடை-திருமால்ஆகிய இடபம்; பெரிய இடபமெனினுமாம். ஊர்தி - வாகனம். கன்று மான் - கன்றாகிய மான்.

8. கருமுகில் - கரியமேகம். வேலை முன்னுறு ஓதை: வேலை - கடல். பல் இயம் - பலவகை வாத்தியங்கள். 'அர அர' என்னும் முழக்கத்தினுள் எவ்வகை ஒலிகளும் அடங்குவன.

9. கொண்டல் - மேகம். வண் தலத்தினும் - வளப்பம் பொருந்திய தரையிலும். நோக்குறும் அவர்கள் அசைவற நிற்பர்கள்.

10. விராவினர் - கலந்தவர்களாய்: முற்றெச்சம். மறுகு - தெரு. மிடைவார் - நெருங்குவார்கள். நெருக்கின் ஆதுலர் இடித்திட: நெருக்கத்தால். ஆதுலர் - வறிஞர்.

11. திவ்வியம் - திப்பியம். போனகம் - உணவு. நவ்வி அம் கையான்: நவ்வி - மான். பஞ்சகவ்வியம் - ஆனைந்து: பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன. இவற்றை விதிப்படி சேர்த்தல் சிவாகமங்களிற்காண்க.

நல்கி யாத்திரா தானமு நான்மறை யவர்தம்
சொல்லு றும்விடை யேற்றுமேற் சுற்றமு மனையும்
செல்வ மைந்தருந் துணைவருந் தொடர்ந்திடச் சிவன்ருள்
புல்லு நெஞ்சொடு மகிழ்வொடும் போந்திட வேண்டும். 12

போன பின்னரத் தலத்துறை புண்ணிய தீர்த்தம்
ஆன வற்றெலாம் படிந்தெழுந் தங்ஙன முதவும்
தான முங்கொடுத் ததற்குமேற் றனிமரு திடத்து
ஞான மூர்த்தியைப் பணிந்திட வேண்டுமு னணுகி. 13

பணிந்து பொன்னெடு துகில்களும் பணிகளு மினிய
மணங்கு லாவுறு வில்வமு மலர்களும் பிறவும்
இணங்கு மன்பொடு தத்தமக் கியைந்தன வுதவி
அணங்கு பாகனைப் பூசனை யாற்றிட வேண்டும். 14

சிதவி டைக்கொடி யேற்றுநாண் முற்றச தினமும்
இதம ளித்திடு பொன்னிதோய்ந் திடைமரு திடத்து
மதித ரித்தவற் பணிந்தெதிர் மௌனமாய் வலம்வந்(து)
உதவல் வேண்டுமெய் யன்பர்கட் கோதனம் பிறவும். 15

அனுதி னம்புக ழறிஞர்பா லத்தல புராணம்
வினவி யன்னவர்க் கிருநிதி வீசிட வேண்டும்
புனித னன்புறு கூவிளத் தருமுதற் புனல்விட்(டு)
இனிது சூழ்ந்தெதிர் போற்றியென் றிறைஞ்சிடல் வேண்டும். 16

---

12. சொல்லுறும் விடை - திருப்தி சொல்லல். புல்லும் - பொருந்தும்.

13. அ தலத்து உறை. கொடுத்து அதற்குமேல். ஞானமூர்த்தி - ஞானமே வடிவாகிய மூர்த்தி: என்றது ஸ்ரீ மகாலிங்கேசுரரை.

14. துகில் - ஆடை. பணிகள் - ஆபரணங்கள். மணம் - வாசனை. இணங்கும் - பொருந்தும். தத்தமக்கு இயைந்தன. அணங்கு பாகன் - உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமான்.

15. சிதம் விடை கொடி - வெண்ணிறமுடைய இடபத்துவசம்: சிதம் - வெண்மை. தச தினமும் - பத்து நாட்களினும். இதம் - நன்மை. மதி தரித்தவன் - சந்திரனையணிந்த சிவபெருமான். ஓதனம் - சோறு.

16. வினவி - கேட்டு. இரு நிதி - பெரும்பொருள். கூவிளத்தரு முதல் - வில்வமரத்தின் அடியில்.

பன்னு பூசநா ளாண்டுறை தீர்த்தங்கள் பலவும்
முன்னர் மூழ்கிமேற் பொன்னியின் மூழ்கியந் தணர்க்குச்
சொன்ன தானமு மளித்துமேற் றூய்விடை மீது
மன்னு மேகநா யகன்றனை வணங்கிடல் வேண்டும். 17

பத்து வைகலு முபவசித் திருந்துமேற் படுநாள்
அத்த னன்பர்சூ ழிருந்தன மருந்திடல் வேண்டும்
இத்தி றத்துப வசித்திடற் கசத்தரா மென்னின்
துய்த் திடத்தகும் பால்பழந் தூயநுண் பிண்டி. 18

புகலு மித்தகை நோற்றிடிற் புவிமிசை யவர்கள்
அகம திற்குறித் தவையெலா மொல்லையி னடைந்து
சுகமு றப்பல நாளிருந் ததற்குமேற் றூய
திகழ்ம திச்சடைப் பரன்பதம் பெறுவது திண்ணம். 19

ஏக வாரமுண் போர்பல னெய்துவ ரளவில்
வாகு மைந்தர்வேண் டினோருவர் வரைந்திடல் வேண்டும்
ஈகை வேண்டினோர் துயிலுட னெண்ணெய்மூழ் கிடுதல்
பாகு வெள்ளிலை விடுத்திடில் விரைவினிற் பலிக்கும். 20

மன்னு தம்பதிக் கேகுநாண் மருதநா யகன்றன்
முன்ன ருற்றநு மதிபெருச் சென்றுமுற் குலத்தோர்க்(கு)
அன்ன நல்கியவ் விடை.மரு தண்ணலுக் கிசையப்
பன்னு மர்ப்பிதஞ் செய்திடிற் பூரண பலனே. 21

---

17. ஆண்டு - அவ்விடைமருதில். சொன்ன தானம்: சொன்னம் = சுவர்ணம் - பொன். ஏகநாயகன் - சிவபெருமான்: இத்தலத்துச் சோமாஸ் கந்தமூர்த்தி திருநாமம்.

18. பத்து வைகலும் - பத்து நாட்களிலும். உபவசித்திருந்து - பட்டினியிருந்து. அத்தன் அன்பர் சூழ் இருந்து அனம் அருந்திடல்வேண்டும்: அத்தன் அன்பர் - சிவனடியார். அன்னம்: அனம் - தொகுத்தல். உபவசித்திடற்கு அசத்தராம் என்னில்: அசத்தர் - சத்தியில்லாதவர். துய்த்திட - உண்ண. நுண் பிண்டி - நுண்ணிய மாவு.

19. நோற்றிடில் - விரதமிருப்பின். அகம் அதில் - மனத்தில். ஒல்லையின் - விரைவில். இருந்து அதற்கு மேல்.

20. ஏக வாரம் - ஒரு வேளை. வாகு மைந்தர் - அழகிய புத்திரர். வெள்ளிலை - வெற்றிலை உண்ணுதலை.

21. தம்பதிக்கு ஏகும் நாள்: பதி-ஊர்; இருப்பிடம். முன்னர் உற்று அநுமதி பெறு. முற்குலத்தோர் - அந்தணர். பூரண பலன் - முழுப்பயன் ஆம்.

இந்தவா றன்றித் தத்தமக் கிசைந்தவா றெய்திச்
சந்தநீள் விழா நோக்கினோர் தாமுமேற் சூழ்ந்த
பந்த பாசமும் பிணிகளும் பற்றறத் தொலைந்து
நந்து நீளிடை யின்புரு நணுகுவர் கயிலை. 22

இத்த லக்கதை படிப்பவர் கேட்பவ ரெவர்க்கும்
பத்து நூறுகன் னிகையரு மனைகளும் பசுவும்
தத்தஞ் செய்திடு பலன்களுஞ் சகத்திர வருடம்
துய்த்த லின்றிமா தவம்புரி பலன்களுந் துன்னும். 23

என்ன நான்முக னிசைத்தலு நாரத னிறைவ
துன்னி யானுமத் தலத்தெழிற் பொன்னிநீர் தோய்ந்து
மன்னு மீசனைப் பணிந்துசில் வரங்களு மடைந்தேன்
இன்ன மான்மிய மறிகிலே னின்றுநன் கறிந்தேன். 24

இலங்கு பூசமு மணிமையி னெய்திடு திறத்தான்
நலங்கொ ளந்நகர்க் கெய்துகே ளனையென் றிறைஞ்சிச்
சலங்கொ டாமரை மேலினன் விடைகொடு சார்ந்தான்
புலன்க ளைந்தையும் வென்றிடு புனிதர்க ளுடனும். 25

வஞ்சிவிருத்தம்

தண்ணா ருந்தவர் தம்மொடு
நண்ணி யந்நகர் நாரதன்
விண்ணி னோங்கிசை மெய்விழாக்
கண்ணி னோக்கிக் களித்தனன். 26

பொன்னி மாநதிப் பூசநீர்
தன்னி னும்புறஞ் சார்ந்திடு
தென்னி சைந்திடு தீர்த்தமும்
துன்னி யின்புறத் தோய்ந்தனன். 27

---

22. பற்றறத் தொலைந்து - அடியோடு கெட்டு. நீளிடை - நீண்ட காலம்.

23. சகத்திரம் - ஆயிரம். துன்னும் - வந்து பொருந்தும்.

24. இறை: விளி; என்றது நான்முகக்கடவுளை.

25. அணிமையின் - சமீபகாலத்தில். தாமரை மேலினன் - நான் முகக்கடவுள். புனிதர் - தூயோர்.

26. விண்ணின் ஓங்கு இசை: இசை - கீர்த்தி.

மேய வச்சுவ மேதமாம்
தூய நீள்வலஞ் சூழ்ந்தனன்
சேயி னத்தன் றிருப்பதம்
ஏயு மன்பொ டிறைஞ்சினன். 28

திறத்து றுந்துதி செய்தனன்
குறித்தி டும்வரங் கொண்டனன்
செறித்தி டோகை திளைத்தனன்
புறத்தி னெய்துழிப் போயினன். 29

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இணங்கிடெழிற் பூசமான் மியமிஃதா மிதுகாறு மினிது நீடு
வணங்குலவு பிரமகை வருத்தனத்தி லுரைத்தனவா மன்னு மீது
குணங்குலவு மற்றுமுள புராணங்கள் புகல்காதை கூற வெண்ணி
உணங்கியமீ னுயிர்மருவி யுருத்திரரா கியகதையீண் டோது வாமால். 30

பூசமகிமைச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1274

---

27. தென் - அழகு.

28. சேயின் அத்தன் - முருகக் கடவுளின் தந்தையார். சேய் - முருகவேள். அத்தன் - பிதா. அன்பொடு இறைஞ்சினன்.

29. செறித்திடு ஓகை - நிறைந்த மகிழ்ச்சி: ஓகை = உவகை.

30. இணங்கிடு எழில் பூசம். வணம் குலவு: வணம்-அழகு. இதுவரை கூறியன பிரமகைவர்த்தபுராணச் செய்திகள் என்றார். உணங்கிய-வாடிய.

நாற்பத்தொன்பதாவது

# உணங்கன்மீன் உயிர்பெற்ற சருக்கம்

---

[*உருத்திரபுவனம் என்பது இருநூற்றிருபத்துநான்கு புவனங்களுள் ஒன்று. அப்புவனத்திலே அளவில்லாத உருத்திரர் உளர். அவர்களுள்ளே கோடி உருத்திரர்கள் ஒரு தொகுதியினராய் ஒத்தசெயல் உள்ளவராய் ஒருபக்கத்தில் இருந்தனர். தங்கள் வடிவத்தை நோக்கி ஒன்றும் உணர்வில்லாதவராய்த் தம்முள்ளே பேசிக்கொண்டனர். நாம் பரமசிவனுடைய வடிவத்தைப் பெற்றுள்ளோம்; நாமும் பரமசிவனும் ஒப்பாவோம்; அப்பரமேசுவரன் நம்மின் வேறல்லர், நம்முள்ளே அவரும் ஒருவரே ஆவர் என உரைத்தனர். எள்ளினுள் எண்ணெய்போல - பாலில் நெய்போல எங்கும் கலப்பினுல் ஒன்ருயிருந்துணரும் சிவபெருமான் இவர் கூற்றை உணர்ந்து வெளிப்பட்டார். உருத்திரரே! நீவிர் அகந்தையால் நம்மை மதித்திடாமல் எண்ணிய எண்ணத்தால் 'அனைவரும் மீனுருக்கொண்டு கடலிற் சென்று அலைக' என்றருளினர். இறைவனிட்ட கட்டளையைக்கேட்ட உருத்திரர் அஞ்சி வணங்கித் துதித்தனர். 'பெருமானே! எங்கள் சிறுமையால் செருக்குற்று ஏதோ பிதற்றிவிட்டோம்; எளியேமாகிய எங்களைப் பாது காத்தருளுக' என்று இரந்து விண்ணப்பித்தனர். பெருமானும் நீவிர் விண்ணப்பித்த செய்தி திருவிடைமருதூரிலே நிறைவேறும் என்றருளி மறைந்தனர். அவ்வாணைப்படி உருத்திரர் கடலிற் சென்று சிறுமீன் உருப் பெற்று ஒரு குழுவாகத் திரிந்தனர். சிலகாலம் சென்றன. சிவபெருமானுடைய அருளால் அங்கே ஒரு பரதவன் சென்று வலைவிசி உருத்திர மீன்கள் எல்லாவற்றையும் ஒருசேரப் பிடித்தான்; அவற்றை நன்ருக உணக்கினுன்; ஓலைப்பாயிலே வைத்து அவ்வுணங்கலை ஒரு பொதியாகக் கட்டினுன். இவ்வாருக,

பரதவர் குலத்து ஒரு சிறுமகன் திருச்சத்தி முற்றத்திலிருந்து கடற்கரைக்குச் சென்ருன். தந்தையில்லாதவன் அவன். விலை கொடுத்து அப்பொதியை வாங்கினுன். பொதிமாட்டின் மேல் அவ்வுணங்கலின் பொதியை ஏற்றிக்கொண்டான். தம்முடன் வந்த மீன்வாணிகருடன்

---

*இதன் விரிவைக் கந்தபுராணம், சிவதருமோத்தரம், சிவஞானபாடியம், சித்தாந்தப்படவிளக்கம் முதலியவற்றில் காண்க.

தொடர்ந்து திரும்பித் தன் ஊருக்குச் செல்வானுயினன். செல்லும்வழியில் பொழுதுபோயிற்று. இரவில் ஆலயத்தின் தென்பாலுள்ள உருத்திரதீர்த் தத்தின் சிறிது தூரத்திலே தன்னுடன் வந்தோருடன் தங்கி நித்திரை செய்தான். விடியற்காலத்தின் முன்னரே உடன் வந்தோர் எழுந்து சென் றனர். சிறுவன் விழித்துப்பார்த்தான், கொஞ்சதூரம்போய்க் கூப்பிட்டான், தனியே அழுதுகொண்டு மீண்டான், மிக மயங்கி வருந்தினன். முன்பு உருத் திரர்கட்குக் கொடுத்த வாக்கின்படி அருள்செய்தற்பொருட்டு மருதநாயகர் தோன்றினர். சடையைச் சுற்றிக்கட்டிய திருமுடியும், விபூதி பூசிய திரு மேனியில் அசையும் பூணுநூலும், சூலப்படையும், விபூதிப்பையும் விளங்கக் கோவணத்துடன் வந்தார். சிறுவனைப் பார்த்து நீ தனியே நின்று அழக் காரணம் என்ன? என்றுர் வந்தவர். சிறுவன் நான் சத்திமுத்தத்திலே உள்ள ஒரு பரதவர் குலத்துள்ளேன்; என்னுடன் வந்தோர் என்னை விட்டுச் சென்றனர்; இம்மீன்பொதியை ஏற்றுதற்கு வேறு யாரும் துணை யில்லேன் என்றுன். அதனைக்கேட்ட 'இறைவர் நீ உன்னுடைய பொதிமாட் டுடன் ஊருக்குச்சென்று, நாளை உன் தாயை அழைத்து வந்து இம்மீன் பொதியைக் கொண்டுசெல். இப்போது நான் அதனைப் பார்க்கும்பொருட் டுப் பொதியின் வாயைத்திறந்து காட்டுக' என்றருளினர். சிறுவனும் மன மிசைந்து பொதியின் வாயைத்திறந்தான். இறைவர் திருவிளையாடலால் பொதியிலுள்ள உணங்கிய மீன்களெல்லாம் உயிர் வரப்பெற்று அவ்வாவி யில் பாய்ந்தன; நீரிலே பொருந்தின. உடனே அம்மீன்கள் நெற்றிக்கண் ணும் நான்கு தோள்களுமுடைய உருத்திரர் வடிவங்கொண்டு, வாவியில் கோடி சூரியர் எழுந்து தோன்றுதல் போலத் தோன்றி, விமானத்திலே ஏறி, தேவர்கள்வணங்க உருத்திரலோகம்சென்றன. எத்துணைப்புண்ணிய முடையராயினும் கேடுவருங்காலத்திலே அறிவுகெடுவர், எத்துணை இழிந் தோரும் பெருமை பெறுங்காலத்து அறிவுபெற்று விளங்குவர் என்பது இதனுல் விளங்குகின்றதன்றே! அக்காலமுதல் அத்தீர்த்தம் உருத்திர தீர்த்தம் எனவும், அதன்கரையில் எழுந்தருளிய சிவபெருமான் ஆன்ம நாயகர் எனவும் பெயர் பெற்று விளங்குதல் கண்கூடு.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உருத்திர புவன ந் தன்னி லோதிடு மலகி லாத
உருத்திர ருளர்மற் றந்த வுருத்திரர் தம்மிற் கோடி
உருத்திரர் செயலொன் ருலங் கொருபுடை யிருந்தார் தங்கள்
உருத்திர நோக்கி யெண்ணு தொருவரோ டொருவர் சொல்வார். 1

---

1. அலகு இலாத - எல்லையில்லாத. உரு திரம் நோக்கி: உரு - வடிவம். ஒருபுடை - ஒரு பக்கத்தில். எண்ணு து - ஆலோசியாமல்.

பரமனை நிகர்வோ நாமப் பரனும்வே றல்ல னம்மில்
ஒருவனே யாகு மென்ன வுரைத்தன ரஃதோர்ந் தீசன்
மருவுமற் றவரை நோக்கி மதித்திடா தெம்மை நீவிர்
கருதிய திறத்தான் மீனய்க் கடலினுற் றலைக வென்றான். 2

வாசமென் கடுக்கை சூடு மறைமுத லினைய கூற
மாசுறு மவரு மஞ்சி வணங்கிநின் றேத்தி யெங்கள்
ஈசனே மதுவுண் டோர்க ளியாரையு மதித்தி டாமல்
பேசுமா றென்ன விங்கு பேசினே மதமேற் கொண்டு. 3

கருணைசெய் தெளிய வெம்மைக் காத்தியென் றிரந்தா ரீசன்
திருவிடை மருதி னீவிர் தெரித்ததா மென்று சென்றான்
பரன்மொழிப் படிமற் றன்னோர் பரவையிற் சிறுமீ னாகித்
திரிதர லுற்றார் சென்று திகழொரு குழுவாய் மன்னே. 4

சிலபகல் சென்ற பின்னர் சிவபர னருளால் வேலை
அலைதரு கோடி மீனு மாங்கொரு திமில னேகி
இலகொரு வலையிற் பற்றி யெடுத்துநன் குணக்கி யோலை
பொலிதரு பாயி னூடு பொதிந்தொரு பொதிசெய் திட்டான். 5

சாற்றிடு மதனை யங்கோர் சிறுமகன் றாதை யில்லான்
போற்றிடு சத்திமுத்தத் திருப்பவன் போந்து பொன்னீந்(து)
ஏற்றியங் கிடுமோ ரேற்றி னேற்றிமற் றதனைக் கொண்டு
தோற்றுதற் போல்வார் தம்பின் றொடர்ந்தனன் சென்றான் மன்னே. 6

---

2. ஓர்ந்து - ஆராய்ந்தறிந்து. அவரை - அவ்வுருத்திரரை. கடலின் உற்று அலைக.

3. கடுக்கை - கொன்றைமலர்மாலை. மறை முதல் - வேதமுதல்வராகிய சிவபெருமான். மாசு உறும் - குற்றம் பொருந்தும். மது உண்டோர் - கட்குடித்தோர். மதம் - செருக்கு.

4. காத்தி - பாதுகாத்தருள்க. நீவிர் தெரித்தது ஆம். பரன் - சிவபெருமான். பரவை - கடல். ஒரு குழு ஆய் - ஒரு கூட்டமாய்.

5. சிவபரன் - சிவனாகிய மேலோன்; 'எப்பொருட்கும் தலைவனாகலின் என்க. வேலை - கடலில். திமிலன் - வலை வீசுவோன். உணக்கி - வற்றச் செய்து; காயவைத்து என்றபடி. பொதி - மூட்டை; கட்டு.

6. தாதை இல்லான் - தகப்பனில்லாதவன். சத்திமுத்தம் - திருச்சத்திமுற்றம்: காவிரியின் தென்கரையில் உள்ளது. திருப்பட்டீச்சுரத்தின் வடக்கிலுள்ள சிவதலம். சுவாமி: சிவக்கொழுந்தீசர்; அம்பிகை: பெரிய நாயகியம்மை; சூலதீர்த்தம். உமாதேவியார் சிவபெருமானைத் தழுவி

தெரித்திடு மொருநாள் சாய்ந்து திகழுவான் பிறையும் வாழைக்
குருத்துமோர் கதலி போலக் குலவிடை மருதி னெய்தி
மருத்தடங் கண்ணி மார்கள் மருவுமா லயத்தின் றென்பால்
உருத்திர தீர்த்த வாவிக் கொருபுடை தள்ளி யாங்கு. 7

உடனணை ந் தவர்க ளோடு முறங்கின னவர்க ளியாரும்
கடன்மிசை யிரவி தோன்றுங் காலைமுன் னெழுந்து சென்றார்
திடமில னன வந்தச் சிறியனும் விழித்தான் பார்த்தான்
குடவயி னோடி நின்று கூவின னழுது மீண்டான். 8

ஆங்கெதிர் கண்டோர் தம்மை யழைத்தன னெவரு நேரார்
நீங்கிநின் றினியென் செய்வா னெடிதுள மருளுங் காலை
ஓங்குருத் திரர்க்கு முன்ன ளுரைத்திடு முரையி னாலே
வாங்குவின் மேரு வாக்கு மருதநா யகன்மற் றெய்தும். 9

கலிநிலைத்துறை

பின்ன லொன்றினிற் சுற்றிய மருடமும் பெரிதும்
துன்னு றப்புனை நீறுமேற் றுவளமுந் நூலும்
பன்னு சூலவெம் படையுமோர் வெண்பொடிப் பையும்
மன்ன வந்தெதிர் நின்றனன் வயங்குகோ வணத்தான். 10

---

முத்தம் கொடுத்த தலம்: இந்தத் திருவுருவமும் கோயிலில் உண்டு. 'கோவாய் முடுகி' என்னும் தலைப்புள்ள திருநாவுக்கரசு சுவாமிகள் திருவிருத்தம் உள்ளது. ஏற்று இயங்கிடும் ஓர் ஏற்றின் ஏற்றி: ஏறு - பொதிமாடு. தற்போல்வார் - தன்னைப் போன்றவர்: என்றது உணங்கல் மீன் வாங்கி விற்கச்செல்லுவோரை.

7. வான் பிறையும் - ஆகாயத்திலுள்ள பிறைச்சந்திரனும். கதலி - வாழை. உருத்திர தீர்த்தம் ஸ்ரீ மகாலிங்கேசர் கோயிலின் தென்பால் உள்ளது. ஒருபுடை - ஒருபக்கம்.

8. குடவயின் - மேற்குப் பக்கத்தில்.

9. மருளும்காலை - மயங்கும்பொழுது. வாங்கு வில் - வளைந்தவில் லாக. மேருவை ஆக்கும்.

10. பின்னல் - சடை. மேல் துவள முந்நூலும் - மேலே விளங்கும் அழகிய பூணூலும். வெண்பொடிப்பை - வெண்ணிறமுடைய விபூதிப்பை. மன்ன - பொருந்த. கோவணத்தான் - கோவண ஆடையைத் தரித்த சிவ பெருமான்.

தனிய ஞகிநீ யழுவதென் சாற்றுக வென்ருன்
அனையன் சத்திமுத் தத்துறு பரதவ னடியேன்
எனைவி டுத்தன ரேகின ரென்னுட னணைந்தோர்
இனைய மீன்பொதி யேற்றுவார்க் காணென்வே றென்ருன். 11

கொன்றை யானுன தேறுடன் குறுகிநின் னூருக்(கு)
இன்று நாளைநின் னன்னையைக் கொணர்ந்துமீ னிதனை
மன்ற கோடிகண் ணுறப்பொதி வாய்திற விப்போ(து)
என்றி சைத்தன னனையவன் றிற்ந்தன னிசைந்து. 12

அகில காரணன் றிருவிளை யாடலியா ரறிவார்
புகலு மீனெலா முயிர்கொடு பொதியினின் றெழுந்து
தகுமவ் வாவியிற் பாய்ந்தொரு கணத்திடைத் தம்மை
நிகரி லாச்சல சரங்களாய் நிலவியாங் குடனே. 13

முண்ட நாட்டமீ ரிருபுய முதலிய வடிவம்
கொண்டு ருத்திர ராகியோர் வாவியிற் கோடி
எண்டெ ழுஞ்சுட ராதவ ரெழுதல்போ லெழுந்தாங்(கு)
அண்டர் போற்றிட விமானமுற் றரனுல கடைந்த 14

---

11. பரதவன் - வலைஞன். உடன் அணைந்தோர் - கூட வந்தவர்கள்.

12. கொன்றையான் - சிவபெருமான். ஏறுடன் - பொதிமாட்டுடனே. நின் அன்னையை - உன்னுடைய தாயை. கோடி - கொள்ளுவாய். கண்ணுற - நான் பார்க்குமாறு. பொதியின் வாயைத் திறப்பாயாக. இப்போது என்று இசைத்தனன்; இசைத்தனன் - சொன்ஞன். இசைந்து - ஒப்புக்கொண்டு.

13. அகில காரணன் - உலகத்திற்கு நிமித்த காரணராகிய சிவபெருமான்: அகிலம் - உலகம். அ வாவியில் - அந்த உருத்திர தீர்த்தத்தில்: வாவி-குளம். சலசரம் - நீர் வாழ்வன.

14. முண்ட நாட்டம் - நெற்றிக்கண். ஈர் இருபுயம் - நான்கு தோள்கள். உருத்திரர் ஆகி - முன்போல உருத்திரவடிவம் பெற்றவராய். கோடி எண் தெழும் சுடர் ஆதவர் - கோடி என்னும் எண்ணிணைப் பொருந்தும் ஒளியோடு கூடிய சூரியர் : சுடர் - பிரகாசமுடையராய் என்க. செழுஞ் சுடர் என்றது தெழுஞ்சுடர் என்ருயிற்று எதுகை நோக்கிப் போலும்: சகரத்துக்குத் தகரம்போலி. அண்டர்-தேவர். ‘முதலிய வடிவங்கொண்டு’ என்றது மான் மழு சதுர்ப்புஜம் காளகண்டம் திரிநேத்திரம் என்பனவற்றில் முண்டநாட்டமும் ஈரிரு புயங்களும் கூறவே எஞ்சியவற்றை என்க.

நீடு புண்ணியஞ் செய்திடு நீர்மைய ரேனும்
கேடு வந்திடுங் காலமெய் திடின்மதி கெடுவர்
நாடு வெம்பவ மலகில நவில்பவ ரேனும்
பீடு பெற்றிடுங் காலமேற் பெறுவர்நன் மதியே. 15

திரைத்த டங்கடற் கயல்களாய்த் திரிந்துலர்ந் தாங்கு
விரித்தி டுந்தனி வாவியாய் விளங்குதன் னிடஞ்சேர்
உருத்தி ரப்பெய ரினர்க்குமுன் னுருவுத வியதால்
தெரித்தி டன்னவர் பெயர்கொடு திகழுமத் தீர்த்தம். 16

அன்ன தீர்த்தத்தி னருகினி லமர்ந்திடு மீசன்
மன்னு நல்லுயிர் போயின வுணங்கலா மீன்கள்
துன்னு மாவியு முருவமுந் துலங்கிடும் வண்ணம்
நன்னர் செய்தலி னுன்மநா யகனென நவில்வர். 17

ஈச னுர்தமை மதித்திடா துருத்திர ரிசைத்த
காசி னுற்கடன் மீனமாய்க் கவினிடை மருதுற்(று)
ஆசி லாததம் வடிவுபெற் றிலங்கிய தறைந்தேம்
பேசு வாமினித் தமனிய வளவனீள் பெருமை. 18

உணங்கன்மீன் உயிர்பெற்றசருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1292

---

15. நீர்மையர் - தன்மையையுடையார். மதிகெடுவர் - புத்தி நீங்கப் பெறுவர். வெம்பவம் - கொடிய பாவங்கள். பீடு - பெருமை. நன்மதி பெறுவர்.

16. திரை தடம் கடல் - அலைகளையுடைய பெரிய கடல்: தடம் கடல் என்றது நயம். தெரித்திடு அன்னவர். தன் இடம் என்றது உருத்திர லோகத்தை.

17. உணங்கல் ஆம் மீன் - வற்றல்மீன். ஆவியும் உருவமும் - உயிரும் வடிவமும். நன்னர் - நன்றாக. ஆன்ம நாயகன் என்பது அத்தீர்த்தக்கரையி லுள்ள சிவபெருமான் திருநாமம்.

18. காசினுல் - குற்றத்தால். கவின் இடைமருது உற்று. ஆசு இலாத- குற்றமில்லாத. தம் வடிவு - உருத்திர வடிவம். தமனிய வளவன்: தமனியம் - பொன். வளவன் - சோழன்.

ஐம்பதாவது

# பொன்னுருவச்சோழச் சருக்கம்

[மருதப்பிரான் ஆணைப்படி தந்தையிலாப் பரதவகுலத்துச் சிறுவன் உணங்கல்மீன் பொதியைத் திறந்துகாட்ட, அவையெல்லாம் உயிர்பெற்றெழுந்து வாவியில் பாய்ந்த செய்தியை உணர்ந்து அச்சமும் ஆச்சரியமும் அடைந்தான். நேரில் நின்ற கோவணப் பிரானைப் பார்த்து ஐயனே! இஃதென்ன விச்சையோ செய்தீர் என்றான். நல்ல பாரமுடைய சுமையில்லாதொழியின் இப்பொதிமாடு துள்ளிக்கொண்டு அடங்காமற் செல்லுமே என் செய்வேன்? என்றான். மருதவாணர் சிறுவனை நோக்கி, இங்கே கிடக்கும் செங்கற்களையெல்லாம் பொதியாகக் கட்டுவாய் என்றருளினர். அவ்வாறே கற்களைப் பொறுக்கிப் பொதியினுள் அடக்கினான். அப்பெருமானை மெல்ல வைதுகொண்டே அச்சுமையை ஏற்றத் தொடங்கினான். சிவபெருமானும் அப்பொதியை எருதின்மேல் ஏற்றினார்; இனி எருது துள்ளாது, நீ ஊருக்குச்செல் என்றார். பரதவச் சிறுவன் அவ்விடம்விட்டு அகன்றான். மருதப்பிரானும் ஆலயத்தை அடைந்தார். சிறுவனும் தன் ஊரை அடைந்தான்; திருவிடைமருதூரில் நிகழ்ந்தவற்றைத் தாய்க்குச் சொன்னான். தாய் மிகத் தளர்ந்தாள். அரசன் அரண்மனையைத் தாயும் சேயுமாக அடைந்து நிகழ்ந்தவற்றை அரசனுக்குக் கூறினர். அரசன் அப்பொதியைச் சென்று நோக்கினான். செங்கற்களெல்லாம் பொற்கட்டிகளாக விளங்கின. அரசன் உடல் நடுங்கினான். சிவபெருமான் திருவிளையாட்டு இது என்றான். 'மருதவாணர் உங்களுக்குக் கொடுத்த திரவியங்களே இவை, இவற்றை நீங்களே எடுத்துச் செல்லுங்கள்' என்றான்.

அவர்களுக்கு ஆடையும் அணிகலமும் பிறவும் நல்கி மகிழ்ந்தான். சிவபெருமானைத் தரிசிக்கும் பெருவிருப்புடன் திருவிடைமருதூரை அடைந்தான். சந்நிதியில் சென்று வணங்கித் துதித்து விண்ணப்பம் செய்வானாயினன். வழிவழி என் தாதை மூதாதையர் யாவரும் உம்மடித் தொண்டு புரிந்தோர்; என்னையும் உம்முடைய அடித்தொண்டு செய்ய ஆளாக்கிக்கொள்ளவேண்டும்; உலகில் என் மரபு தழைக்க ஒரு புதல்வன் இலனாயினன்; தான தருமங்கள் பல செய்தும் ஒருபயனும் பெறாதவனானேன்; ஆதலின், பொன்னால் ஒரு மகவு செய்வித்து வளர்க்கின்றேன்; அதற்கு உயிர்கொடுத்தருளவேண்டும் என இரந்தான். பின்னும், உணங்கல் மீனுக்கு உயிர் கொடுத்த அருட்பெருக்கையும் எடுத்துக் கூறினான்.

சோழனே! உன் விருப்பின்படி தங்கமகவுக்கு உயிர் அளிப்போம்; உனக்கு அஃது உதவாதென்றருளினர். அரசன் இறைவனே! உமது திருவுள்ளம் எப்படியோ? என்று பின்னும் இரந்தான். இறைவர் அம்மதலைக்கு உயிர் அருளினர். தேவர்கள் மலர்மழை சொரிந்தனர். சோழன் வணங்கித் துதித்தான். பொற்சோழன் உயிர்பெற்றெழுந்து கோயிலை வலம்வந்தான். இறைவரை வேதமந்திரங்களால் துதித்து நின்றான். பொற்சோழன் சிரத்தில் தமது திருவடிகளைச் சூட்டினர் மருதவாணர். ஐந்தெழுத்து மந்திரத்தை அடைவே உபதேசித்தருளினர். பரம்பொருளின் உண்மை நிலையையும் உபதேசம் செய்தார். ஐவகைப் பாசங்களின் இயல்பையும் விளங்க உணர்த்தினர்.

இவ்வாறு உணர்த்தி இறைவர் சோதிவடிவாகக் காட்சியளித்தருளினர். பொற்சோழன் அச்சோதியுட்புகுந்தான். தேவர்கள் பூமழை சிந்தினர். அரசன் இறைவரைப் பணிந்து மகப்பேறு வேண்டி இரந்தனன். நாம் உனக்கு மகவளிப்போம்; நம்முடைய கோயில் திருப்பணியை நன்குசெய்து முடிக்க எனக் கட்டளையிட்டார். அரசனுக்கு மகவை அருளினர். வளர்ந்து தக்கபருவம் அடைந்தபின் இறைவரைத் தந்தையுடன் வந்துவணங்கினன். திருப்பணிகளைச்செய்ய ஏவினர். காவிரியைத் தூரத்திலே அமைத்தான். கொள்ளிடத்தையும் நன்கு திருத்தினன். திருப்பணிகள் பலவற்றையும் செய்து முடித்தான். மருதவாணர் ஆணைப்படி மகனும் தந்தையும் அரசு புரிந்திருந்து சிவபெருமான் திருவடிநீழலெய்தினர்.]

கலிநிலைத்துறை

திறந்தி டப்பொதி மீனெலா முயிர்பெருச் சென்ற(து)
அறிந்து மீன்விலைச் சிறுமக னச்சமும் வியப்பும்
பிறந்த நெஞ்சினன் செஞ்சடைப் பிரானைமுன் னேக்கி
அறைந்தி டப்படு விஞ்சையோ வைய நீ செய்தாய். 1

பரமு றுஞ்சுமை யில்லையேற் பரித்திடு மினைய
எருது துள்ளுமா லிதாகியா னென்செய்வே னென்றான்
மருத வாணனிங் கிலகுமிட் டிகையெலாம் வாரி
உருவு றப்பொதி யடக்கிநீ வரிந்திடென் றுரைத்தான். 2

---

1. திறந்திடு அ பொதி. விஞ்சை - வித்தை.

2. பரம் உறும் - பாரமுறும். பரித்திடும் - தாங்கும்; சுமந்து செல்லும். இது ஆகி. இட்டிகை - செங்கற்கள். வரிந்திடு - கட்டிடுவாய்.

வள்ளல் சொற்படி கற்களை வாரிமுன் முறியா
உள்ளு றப்பொதிந் தடக்கினு னேதுமெம் பிரானை
மெள்ள வைதெடுத் தேற்றலும் விமலனுங் கூடித்
துள்ளு ருதெரு தேற்றியூர் துன்னிடே கென்றுன். 3

அனைய னேகலு மீசனு மாலயத் தடைந்தான்
இனைத லுற்றவன் ருனுறு மெழிற்பதி யடைந்து
வினையி னெய்தியம் மனைக்கிடை மருதிடை யுற்ற
தனையு ரைத்தனன் கேட்குமுன் னனையவ டளர்ந்து. 4

இறைவன் மாளிகை யடைவுரு வெதிர்முறை யிட்டாள்
அறைக ழற்றனி யபயன்மற் றவடனை யழைத்துன்
குறையெ வன்புக லஞ்சலை யென்றனன் குலவு
சிறுவ னேடுமற் றனையளு மிறைஞ்சினர் தெரிப்பார். 5

கூடு தண்புகழ்க் காவல்கூ ரிடைமரு ததனில்
நீடு செஞ்சடை யொருதவ னேர்ந்துறு பொதியின்
வாடன் மீனெலா முயிர்பெற வாவியின் விடுத்து
மாடு துன்னுசெங் கலிற்பொதி வாய்ந்திடச் செய்து. 6

வரவி டுத்தன னிற்றைநா ளென்றனர் மன்னன்
விரவு விம்மிதத் துடன ந்த வியன்பொதி தன்னை
மருவி நோக்குவ மென்றவண் வந்துநோக் குற்றுன்
இருநி திப்பொதி யாகிநீ டிலங்கிய தன்றே. 7

---

3. மெள்ள வைது எடுத்து. எருது துள்ளுருது, ஊர் துன்னிடு, ஏகு என்றுன்: துன்னிடு - பொருந்துவாய். ஏகு - செல்.

4. இனைதல் உற்றவன் - வருத்தமடைந்த அப்பரதவச் சிறுவன். தான் உறும் எழில் பதி - திருச்சத்தி முத்தம். அம்மனைக்கு - தாய்க்கு. இடைமருதிடை; இடை: ஏழனுருபு. உற்றதனை-பொருந்திய செய்தியை. அனையவள் - அன்னையாகிய அவள்.

5. இறைவன் - அரசன். அறை கழல்-ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த. அபயன்: பெயர். மற்று அவள்தனை அழைத்து. அஞ்சலை - பயப்படாதே.

6. ஒரு தவன் - ஒரு தவசி: தவன் - தவத்தையுடையோன். நேர்ந்து - எதிர்ப்பட்டு. வாடல் மீன் - உணங்கல் மீன். மாடு - பக்கம். செங்கலின் - செங்கல்லினுல். வாய்ந்திட - பொருந்த.

7. இற்றை நாள் - இன்றைய தினம். விம்மிதத்துடன் - ஆச்சரியத் துடன். நோக்குவம் என்று அவண் வந்து. மன்னன் நோக்குற்றுன் என்க. நிதிப்பொதி - திரவிய மூட்டை. நீடு இலங்கியது.

செங்க லியாவையும் பசும்பொனுய்த் திகழ்வது நோக்கி
அங்க மேவுறு விதிர்ப்பின னரன்றிரு விளையாட்(டு)
இங்கி தென்றறிந் தவர்களுக் கிதுமரு திறையோன்
உங்க ளுக்கரு ணிதியமே கொண்மினென் றுரைத்தான். 8

ஆடை யாதிய வரிசைகள் பின்னரு ளளித்துப்
பாடல் வண்டுசூ ழிதழியும் பணியும்வெண் மதியும்
சூடு மெம்மரு தீசனைத் தொழுவனின் றென்னத்
தேடு பொன்னெழின் மகவொடுஞ் சென்றனன் மருதூர். 9

அனக னம்புயச் செய்யதாள் பணிந்துநின் றைய
தனிய னேனருட் டாதைமூ தாதையா தியர்கள்
உனத ருட்கிசைத் தொண்டரா யுறைதலுற் றதனுல்
எனையு நின்னடிக் கடிமையா யிசைத்திட வேண்டும். 10

ஞால மீதிலென் மரபின்னு நடத்திலங் குதற்கோர்
காலி லாமையா லறம்பல வியற்றியுங் காணு(து)
ஏல வோர்நிதி மகவுசெய் திவண்வளர்க் கின்றேன்
கோலு மன்னதற் கருளுதி யாவி நீ கொடுத்து. 11

என்றி ரந்தனன் மற்றதற் கிடைமரு திறையோன்
ஒன்று மோதிடா திருத்தல்கண் டுணங்கன்மீ னினத்திற்(கு)
இன்று நல்கினை யுயிரினி தெனதுபொன் மதலை
ஒன்றி டும்படி யருள்கிலை யெனக்கசி வுற்றுன். 12

---

8. விதிர்ப்பினன் - நடுக்கமுடையனுய். இங்கு இது என்று. உங்க ளுக்கு அருள் நிதியமே. அரன் - சிவபெருமான்.

9. வரிசைகள் - சிறப்புக்கள். இதழி - கொன்றைமாலை. பணி - பாம்பு. தொழுவன் இன்று என்ன.

10. அனகன் - கடவுள்; பாவமில்லாதவர். அம்புயம் - தாமரை. தாதை - தகப்பன். மூதாதை - பாட்டன். உனது அருட்கு இசை தொண்டர். இசைத்திட - பொருத்த.

11. ஞாலம் - உலகம். மரபு இன்னும் நடத்தி இலங்குதற்கு. கால் - மகன் : சந்ததி என்றபடி. நிதி மகவு - பொன்னுல் செய்த குழந்தை. ஆவி நீ கொடுத்து அருளுதி. ஆவி - உயிர்.

12. இனிது எனது பொன் மதலை : பொன் மதலை-பொன்னுல் செய்த குழந்தை. ஒன்றிடும்படி - பொருந்துமாறு. கசிவுற்றுன் - அழுதான்.

இதழி வேணிய னருள்செயும் வளவனின் னீகை
மதலை பெற்றிடும் படியுயிர் வழங்குது முனக்கீண்(டு)
உதவி டாதென வளவனுஞ் சிறிதுள முகந்து
மதித ரித்தவ மீதுநின் மனமெனப் புகன்றான். 13

சென்னி யுண்மகிழ்ந் திடவுயர் தேவர்தங் கணங்கள்
பன்னு கற்பகச் செழுந்துணர் மலர்மழை சொரியச்
சன்னி தித்தலை மருவிய தமனிய மதலைக்(கு)
என்னை யாண்டிடம் மருதிறை யவனுயி ரீந்தான். 14

ஈச னுருயி ரளித்தலு மிலங்குமம் மதலை
தேசு லாவுபொற் சோழனுய்த் திகழ்ந்தினி தெழுந்தாங்(கு)
ஆசி லாலையஞ் சூழ்ந்தர னடிமல ரிறைஞ்சி
மாசி லாமறை மொழிகொடு வழுத்திமுன் னின்றான். 15

முன்னி றைஞ்சிநின் றருமறை முழக்கிடுந் தனிப்பொற்
சென்னி சென்னிமே லெம்பிரான் றிருப்பதம் வைத்திட்(டு)
உன்னு மஞ்செழுத் தடைவுந்தன் னுண்மையு முரைத்துப்
பன்னு மைவகைப் பாசத்தி னியல்பையும் பகர்ந்தான். 16

---

13. இதழி வேணியன் - கொன்றையை அணிந்த சடையையுடைய சிவபெருமான்: வேணி - சடை. வளவன் - சோழனே: அண்மை விளி. நின் ஈகை மதலை - உன்னால் தரப்பட்ட பொற்குழந்தை. உனக்கு ஈண்டு உதவிடாது: ஈண்டு - இப்போது, இவ்வுலகத்து. மதி தரித்தவ: விளி. மீது நின் மனம் - மேலே உமது திருவுள்ளம்.

14. சென்னி - சோழன். துணர் - பூங்கொத்து. மலர் மழை - பூமாரி. சன்னிதித்தலை - திருமுன்னர்: தலை: ஏழனுருபு. தமனியம் - பொன். ஆண்டிடு அ மருது இறையவன்.

15. ஈசனார் உயிர் அளித்தலும்: தேசு உலாவு: தேசு - ஒளி, புகழ். ஆசு இல் ஆலையம் சூழ்ந்து: ஆசு இல் - குற்றமில்லாத. சூழ்ந்து - வலம் வந்து. அடிமலர் - பாததாமரை. மாசு இலா - குற்றமில்லாத. மறை மொழி - வேதமந்திரம். வழுத்தி - துதித்து.

16. அஞ்செழுத்து அடைவு - பஞ்சாக்கரமுறை. ஈண்டு அஞ்செழுத் தென்றது முத்தி பஞ்சாக்கரத்தை. அடைவு என்றது முறையை: அஃதா வது விதிப்படி என்க. உன்னும்-கணிக்கும்: இங்கே அறிவாற்கணித்தல். 'மானதம் மந்தம் உரை எனக் கணிக்குமாறு மூவகைப்படும். அவற் றுட் சுத்தமானதம் எனப்படும் அறிவாற்கணித்தலே ஈண்டு உச்சரித்த லாம்'. அதுவே உன்னுதல்; இதனைத் தியானித்தல் என்பர். இவ்வியல்புக ளெல்லாம் 'உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்

பகர்ந்து சோதியா யிலங்கலும் பரவுபொற் சோழன்
திகழ்ந்தி டத்தனிச் சோதியுட் புகுந்தனன் றெரிந்தோர்
மகிழ்ந்து வாழ்த்தின ரிமைப்பிலோர் மலர்மழை சொரிந்தார்
சகந்த னிற்பணிந் தெழுந்துநின் றரசன்முன் சாற்றும். 17

வித்தி லாமலே விளைந்திடச் செய்திடும் விமலா
கத்த னேநினை யன்றியோர் துணைபிறி தறியேன்
இத்த ராதலத் தென்வழி யிலங்கிடற் கினுமோர்
புத்தி ரன்றர வேண்டுநீ யருள்கெனப் புகன்றான். 18

வயவ ரிக்கொடி யாயொரு மகவளிக் குதுநீ
நயனு றும்படி நமதுபொற் கோயிலி னன்கு
செயவு றுந்திருப் பணியெலாஞ் செயப்புகு கென்ன
வியனு றுந்திகி ரிப்படை விடையவ னிசைத்தான். 19

---

பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட்காண்க'. பொற்சென்னி சென்னி மேல் - சோழன் தலைமேல்: பொன்னுருவச்சோழன். திருப்பதம் வைத்திட்டு - திருவடி சூட்டி. தன் உண்மை - சிவசொரூபம்: என்றது தடத்த நிலை சொரூபநிலைகளை என்க. ஐ வகை பாசம் - ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதம் என்பன. ''எவ்வெவகோட் படுபொருளும் அஞ்செழுத்தின் அடக்கியவற் றியல்புகாட்டி, மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை ஓதுமுறை விளங்கத்தேற்றி, அவ்வெழுத்தின் உள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்பதேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்'' என்னும் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் அருளிச்செயலானும் இவ்வியல்பு உணர்க.

17. சோதி ஆய் இலங்கலும் - சோதி வடிவாய் விளங்கித்தோன்றுதலும். பொற்சோழன் - பொன்னுருவச் சோழன். தெரிந்தோர் - 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும், கேட்பான்புகில் அளவில்லை' என்பதனை ஆராய்ந்தறிந்தோர். இமைப்பிலோர் - தேவர்கள். சகம் தனில் - பூமியில். முன் - சந்நிதியில். அரசன் சாற்றும் என்க.

18. ''விச்ச தின்றியே விளைவு செய்குவாய்'' என்ற திருவாக்கை முதலடி நினைவூட்டும். விமலன் - மலரகிதன்: இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர் என்றபடி. தராதலத்து - நிலவுலகில். என் வழி-என்னுடைய பரம்பரை: வழி - வழித்தோன்றல். அருள்க என.

19. வய வரி - புலி. புலிக்கொடி சோழற்குரித்து. நயன் உறும்படி - மகிழுமாறு. நன்கு செய உறும் திருப்பணி. புகுக என்ன - தொடங்குக என்றருள. திகிரிப்படை விடை - திருமாலாகிய விடை: திகிரிப்படை - சக்கராயுதம். விடை - இடபம்.

யாவர் கண்ணினு மெவற்றினும் மிருந்தினி திலங்கும்
தேவ தேவநீ யத்திறஞ் சேயுத வினையேல்
ஏவு தற்கெளி தாமெனக் கென்றனன் வளவன்
பாவை பங்கனேர் நந்தன னுதவினன் பரிந்து. 20

அந்த நந்தனன் வெண்ணகைச் செய்யவா யணிநீ(டு)
இந்து வாணுதற் கொம்பனு ளெழில்வயிற் றுதித்து
நந்த லில்லதோர் பிறையென நாடொறும் வளர்ந்து
வந்து மாமரு திறையவன் மலரடி பணிந்தான். 21

பரவி நிற்குமப் புதல்வனை நோக்கியெம் பரமன்
அரசர் தம்பிரான் வருகென வழைத்துநற் கோயில்
மருவு காவிரி சேணுற வடபுறத் தொதுக்கித்
திருவு றும்பணி பலகுயிற் றிடுகெனத் தெரித்தான். 22

தெரித்த மாற்றமு மனையவன் றிருவடி மலரும்
விரித்தெ ழுந்திடு மகிழ்ச்சியு மனத்துற மீண்டு
பரித்தி டும்புகழ்த் தந்தைமுன் பகர்தலு மவனும்
உரித்தி னோதினன் பரமன்முன் னுரைத்ததுந் தனக்கு. 23

---

20. யாவர் கண்ணினும் - எவரிடத்தும்: கண்: ஏழனுருபு. எவருடைய கண்ணினும் கருமணியாய் மணியாடுபாவையாய் இருந்து என்க. சேய் - புத்திரன். வளவன் - சோழன். பாவைபங்கன் - உமாதேவியாரை வாமபாகத்திலே வைத்தருளும் சிவபிரான்: பாவை - உமாதேவியார். பங்கு - பாதி. நந்தனன் - புத்திரன். பரிந்து - அருள்கூர்ந்து.

21. நந்தல் இல்லதோர் பிறை - கேடில்லாத சந்திரன்; வளர்பிறைச் சந்திரன் என்றபடி.

22. அரசர் தம்பிரான் - அரசர்களில் சிறந்தோய்; விளி: இராசராசனே என்பது குறிப்பு: ஆராய்க. காவிரி சேண உற - காவிரிநதியினுக்குத் தூரத்திலே. கோயில் மருவுறு காவிரி சேணுற என்றது கோயிலின் அருகிலே செல்லும் காவிரியாறு தூரத்திலே பொருந்துமாறு என்க. குயிற்றுதல் - செய்தல்.

23. மாற்றம் - சொல்: என்றது சிவாக்ஞையை. உரித்தின் - உரிமையுடன். தனக்கு முன் உரைத்ததும் ஓதினன்.

காவன் மன்னவ னிசைத்ததுங் கேட்டனன் களிகூர்ந்(து)
ஏவி யெண்ணில்வெம் பூதங்க டம்மையோ ரிரவின்
மாவி யற்புகழ்ப் பொன்னியை வடபுறத் தொதுக்கித்
தாவின் மிக்கநீர் கொண்டிடக் கொள்ளிடஞ் சமைத்தான். 24

அற்பி னேடுயர் சிற்பநூ லறிந்தவர் தமைக்கூஉய்ப்
பொற்பின் மேம்படு துகிலொடு பூண்களு முதவி
விற்பொ லிந்திட நகரநீர் விதித்திடு மென்றுன்
முற்ப ணிந்துசென் றனரவர் பணிசெய முயன்று. 25

நெடிய வீதிகள் காவண நிகழ்சிறு வீதி
கொடிகொண் மாளிகை மணிமதில் கோபுரந் தெற்றி
படிப யின்றிடு மண்டபம் பாடல்செய் சாலை
நடந வின்றிடு மரங்கொடு நகைநிலா முற்றம். 26

தரும சாலைகள் சாளர முதலிய சமைத்துப்
பரம னுலயத் தமைதிருப் பணிகளும் வகுத்தார்
மருமலர்த்தொடை மன்னவர்க் கிறைவனுண் மகிழ்ந்து
திரும லிந்திடு நகர்க்குறு சாந்திமுன் செய்து. 27

முறையி னிற்குடி யேற்றினன் முதலவன் றனக்கு
நிறைவி திப்படி பூசையு நித்திய விழாவும்
மறுவில் பக்கமுற் றிடலொடு மதியுறு விழாவும்
நறுமை யுற்றதைப் பூசநாள் விழாவதூஉ நடாத்தி. 28

---

24. காவல் மன்னவன் - அரசுபுரியும் தந்தையாகிய மன்னவன். தா இல் - கெடுதலில்லாத. மிக்க நீர் - மிகுந்த நீரை.

25. சிற்பநூல் அறிந்தவர் - சிற்பசாஸ்திர நிபுணர். பூண்-ஆபரணம். வில் பொலிந்திட - ஒளியுடன் விளங்க.

26. காவணம் - பந்தர். தெற்றி - திண்ணைகள். படி பயின்றிடு மண்டபம்: படி - பூமி: ஒப்பெனினுமாம்.

27. சாளரம் - பலகணி. ஆலயத்து அமை திருப்பணி. இறைவன் - சிவபெருமான்.

28. முதலவன் - முழுமுதற்கடவுள்: சிவபெருமான். மறு இல் - குற்றமில்லாத. நறுமை உற்ற - நன்மை பொருந்திய.

முன்னி றைஞ்சிநின் றேத்தினுன் முக்கணு னீண்டு
மன்ன வுன்பணி யாவையுங் கொண்டன மகிழ்வுற்(று)
என்னு னக்கினி நாந்தரத் தகுவர மென்றுன்
அன்ன மன்னனின் னடித்துணை யருள்கென வுரைத்தான். 29

இன்னு நீசில பகல்புவி யிடத்துவாழ்ந் திடுதி
பின்ன ளிக்குதும் பதமெனப் பின்னரவ் வகையே
தன்ன டிக்கண்வைத் தனனவ னுடனவன் றந்தை
என்னு மன்னவன் றன்னையு மிடைமரு தீசன். 30

கனகச் செம்பிய னிருபர்தங் காவல னிவர்கள்
சனக னும்புர வலனிவர் தங்களை வணங்கி
அனக னுமொரு முனிவனை யடுத்திடு ஞமலி
பனக வேணிய னருள்பெறு காதைமேற் பகர்வாம். 31

பொன்னுருவச்சோழச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1323

---

29. முக்கணுன் - சிவபெருமான். ஈண்டு - இப்போது; இவ்விடத்து. அடித்துணை - இரண்டு திருவடிகளையும்.

30. அவ்வகையே - முன்பு கட்டளையிட்டருளியபடியே.

31. கனகச்செம்பியன்-பொன்னுருவச்சோழன். நிருபர்தம்காவலன்-பின்னேதோன்றிய இராசராசன். சனகன் - பிதா. அனகன் - பாவமில்லாதவன். ஞமலி - நாய். பனக வேணியன் : பன்னகம் = பனகம் - பாம்பு : தொகுத்தல்.

ஐம்பத்தொன்ருவது

# சுணங்கன் கதிபெற்ற சருக்கம்

[முற்பிறப்பிலே மனிதப்பிறப்பையடைந்த ஒருவன் சிவாலயத்திலே அதிகாரம் செய்திருந்தகாலத்திலே கொடிய சிவத்துரோகங்களைச் செய்த காரணத்தால் பிற்பிறப்புக்களில் துன்புடையனுய்ப் பல இழிந்த சென்மங்களை யெடுத்து உழன்ருன். மீண்டும் நாய்ப்பிறப்பை எடுத்தான். அந்த நாய் உலகத்திலே பல இடங்களில் சென்றுசென்று அலைந்து திரிந்து திருவிடைமருதூரை அடைந்தது; தளர்ச்சி மிக்கு ஒரு சிவயோகியின் மடத்தின் வாசலில் படுத்திருந்தது. அந்த நாயின் களைப்பையும் இளைப்பையும் கண்டு அச்சிவயோகி இரக்கங்கொண்டார். வீடுகள்தோறும் சென்று பிச்சை எடுத்துவரும் உணவிலே மிஞ்சியவற்றை அந்த நாய்க்குப்போட்டு வந்தார். மிச்சிலை உண்ட நாய் அவ்விடத்தைவிட்டு அகலாமல் கிடந்தது. சிறந்த சிவயோகியின் பலிச்சேடத்தையுண்ட நாய் புண்ணிய விசேடத்தால் காசிப்பதியில் அரசன்மகளாகப் பிறந்து வளர்ந்தது. இவ்வாருக வளர்ந்து பருவம் வந்தகாலத்தில் அப்பெண்ணைச் சோழ அரசனுக்கு மணம் செய்வித்தான். காசிமன்னன் மகளும் காவிரிநாட்டரசன் மகனும் இரண்டு உடம்புகளுக்கு ஓர் உயிர்போல இன்பம் நுகர்ந்திருந்தனர். சில நாட்கள் கழிந்தன. சோழன் மனைவி ஒருநாள் திருவிடைமருதூர் இறைவரை வழிபட்டுவர எண்ணங்கொண்டாள். காஞ்சிபுரத்திலிருந்து கன்னிப்பருவத் தோழியர் புடைசூழ்ந்துவர, சிவிகையில் ஊர்ந்து பலவகை உபசாரங்களுடன் இடைமருதடைந்தாள்.

இடைமருது சென்றவுடன் சிவிகையினின்று இழிந்து அரசன் மனைவி காலாலே நடந்து முனிவர் இருப்பிடத்தையடைந்தாள். சிவயோகி சந்நிதியில் சென்று அப்பெண் வணங்கியெழுந்தாள் ; பயபக்தி விசுவாசத்துடன் நின்ருள். முனிவரைப்பார்த்து, அவள் என்னை யாரென ஆராய்ந்து அறிந்திரோ என்ருள். எதிரிலே நின்ற அப்பெண்மணியைச் சிவயோகி அறியாதவராய் நீயே உன் வரலாற்றைக் கூறுக என்றனர். முன் சென்மத்திலே உம்முடைய மிச்சில்சோற்றை உண்டு மடத்தின் எதிரில் கிடந்த நாய்தான் நான் என்று விண்ணப்பித்தாள். கேட்டமுனிவர் பதறிவீழ்ந்தார். இனி சாஸ்திரங்கள்தான் எதற்கு? தவஞ்செய்வதனுல் பயன் யாது ? நிலைத்த சாதனங்களால் யாது பயன்? பலிச்சேடம் உண்ட நாய் மறுபடியும் பிறந்து வருமாயின் மேற்கூறிய எவற்ருனும் ஒருசிறிதும் பயனின்ரும்;

அந்தோ! இச்செயல் என்னைக் கெடுத்தற்கு நிகழ்ந்தது போலும் என்றுர். திருக்கோயிலினுள்ளே அரசன் மனைவியையும் உடன் கூட்டிச்சென்றுர். இறைவரே! பிச்சை எடுத்துண்டவர்க்கும் மேலே பிறப்பு வருமோ? என்று விண்ணப்பித்தார். இல்லை எனச்சொல்லிச் சிவபெருமான், சோதி வடிவாய்த்தோன்றினர். அச்சோதியினுள் சிவயோகியும் அப்பெண்மணியும் சென்று கலந்தனர். அங்குள்ளோர் அனைவரும் இறைவன் திருவருளை எண்ணியெண்ணி மகிழ்ந்தனர். தேவர்கள் மலர்மாரி சொரிந்தனர். தேவ துந்துபிகள் முழங்கின.]

சந்தக்கலிநிலைத்துறை

முன்புறு சென்மத் திடைநர ஞகி முக்கண்ணன்
இன்புறு கோயிற் கண்ணாதி கார மாற்றுங்கால்
வம்புறு வெவ்வினை செய்திற ஞலே மறுமைக்கண்
துன்புறு வெம்பவ மெண்ணில வெய்தித் தோன்ருேர்நாய். 1

சங்க மறைந்திடு வேலை யுடுத்த தரைமீதில்
எங்கு மலைந்து வருநா ளெழிலிடை மருதெய்தித்
திங்கண் முடித்தோ னடிபணி யங்கோர் சிவயோகி
தங்கு மடத்துறு முன்பு கிடந்தது தளர்வோடும். 2

கண்டு பெருந்தவ னெஞ்ச மிரங்கிக் கடைதோறும்
அண்டி யிரந்தெதிர் கொண்டடை யும்பலி யதுதன்னில்
உண்டு மிகுந்தது செங்கையி னல்குவ னுணவுற்றுத்
தண்டரு மத்தலை யேயுறு மோர்புடை சாராதால். 3

---

1. நரன்-மனிதன். வம்பு உறு வெவ் வினை-வீணுகிய கொடிய பாவம். மறுமை - அடுத்தபிறவி. வெம்பவம் - கொடிய பாவம்: கொடிய பிறப்புக்கள் எனினுமாம். எண் இல - அளவில்லாதனவாய்.

2. சங்கம் - சங்குகள். அறைந்திடு - ஒலிக்கப்பெற்ற. திங்கள் முடித்தோன் - சிவபெருமான் : திங்கள் - சந்திரன் ; என்றது பிறையை. அடிகளைப் பணியும்.

3. தவன் நெஞ்சம் இரங்கி : தவன்-தவத்தையுடைய அச்சிவயோகி. கடைதோறும் - வீடுகள் தோறும். அண்டி - அணுகிச் சென்று. பலி - பிச்சைச்சோறு. நல்குவன் - கொடுப்பான். உணவுற்று - உண்டு. தண்ட அரும் அ தலையே - நீங்குதற்கு அரிய அவ்விடத்திலேயே. ஓர் புடை சாராது - வேருெருபக்கத்தையும் அடைதலின்றும்.

மாதவ னல்கிய பிச்சை நுகர்ந்த வலியாலே
போதுறு காவிரி கங்கை யிலங்கு புகழ்க்காசிக்
கோதறு வென்றிக் கதிர்மணி வேற்கைக் குலமன்னன்
காதலி யாக வுதித்தது மாதோ கவினீடி. 4

அத்தனி வாணுதன் மின்னென முன்னுறு மறிவோடு
நித்தமு முன்மதி யெனவள ருற்று நிகழ்செய்தி
முத்த மதிக்குடை மன்னவ னேக்கி முறைநோக்கிச்
சித்த மகிழ்ந்துத வுற்றுன் மணமுறை சென்னிக்கு. 5

மடமயி லன்னுண் மணமிசை வுற்ற வளவன்றன்
னுடனுட லோரிரு வகையொன் றுயிரென வுரைசெய்யப்
படைமத வேளு மிரதியு மென்னப் பயில்காலை
இடைமரு தீசனை வழிபட வோர்நா ளெண்ணுற்று. 6

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

காந்தன தனுமதி பெற்றோர் சிவிகையிற் கன்னியர் கணமோடு
நாந்தக மொளிர்தர வேந்திய வீரரு நணுகினர் புடைசூழ
வாய்ந்திடு தூரிய மேங்க விரட்டுற வண்கவ ரிக்குலமுன்
ஏந்திடு சீருறு காஞ்சியி னின்றுங் கெழுந்தனள் செலவுற்றுள். 7

---

4. போது உறு காவிரி-மலர்கள் பொருந்திய பொழில்கள் நிறைந்த : காவிரி ஆறு என்னும் பொருள்படுதல் காண்க, காவிரி கங்கை என்பன ஆறுகள். கோது அறு வென்றி : வென்றி - வெற்றி. காதலி - அன்புடைய மகள். கவின் நீடி - அழகு மிக்கு.

5. வாள் நுதல்: அன்மொழித் தொகை. முன் உறும் அறிவு - முற் பிறவியில் பொருந்திய அறிவுடன். முன் மதி - வளர்பிறைச் சந்திரன். முத்துக்கள் வேயப்பட்ட சந்திரவட்டக்குடை. முறை நோக்கி-உறவினைப் பார்த்து. சென்னி - சோழன். மணம் முறை உதவுற்றான்: முறை - விதிப் படி.

6. மணம் இசைவுற்ற வளவன்: வளவன் - சோழன். உடல் ஓர் இரு வகை ஒன்று உயிர் என ; என்றது '' காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந் தாங்கிருவர், ஆகத்துளோருயிர் கண்டனம்'' என்னும் திருச்சிற்றம் பலக் கோவைச்செய்யுளை நினைவூட்டுவதாம். மதவேள் - மன்மதன். எண்ணுற்று - நினைந்து.

7. காந்தன் - கணவன். பெற்று ஓர் சிவிகையில். நாந்தகம் - வாள். தூரியம் - வாத்தியம். ஏங்க - ஒலிக்க. இரட்டுற - மாறிமாறி அசைக்க.

புகழிடை மாமரு தெல்லை யணைந்திசை பொன்னியி னினிதாடித்
திகழுறு நியதிமு டித்தனள் கால்கொடு சென்றனண் மடமெய்தி
மகிழ்வொடு முனிவர னேருற நோக்கி வணங்கி யெனையிங்கு
மிகுபுகழ் மாதவ வோர்ந்தனை யோவென வினவின ளெதிர்நின்றாள். 8

கலிநிலைத்துறை

முனிவ னோர்ந்திலன் மயிலனுய் மொழிந்திடு நீயே
உனைய றிந்திடும் படியென வுரைத்தன னனைய
சினவு வேற்கணு ளியான்முனர் நின்பலிச் சேடம்
இனித ருந்தியிம் மடத்தெதிர் கிடந்தநா யென்றாள். 9

அதுசெ வித்தலத் தணைதலு முனிவர னாகம்
பதறி வீழ்ந்தினிக் கலைகளென் பயிறவ மென்னே
திதிகொள் சாதனை யென்கொலோ தேர்பலிச் சேடம்
உதவ வுண்டநாய் கொடும்பவ முற்றிடி னென்று. 10

நனைகொள் கொன்றையஞ் சடையினு னவில்பலி யடிசில்
வினைசெய் வெம்பவ மறுத்திடு மென்றன மிசைந்தேன்
அனைய கட்டுரை மிச்சையென் றறிந்தில னையோ
எனையி வண்கெடுத் திடுவதற் கிசைந்ததோ வென்றான்.  11

---

8. இசை பொன்னி - புகழோடு கூடிய காவிரி. கால் கொடு சென்றனள் - பாதசாரியாகச் சென்றாள்: பெரியோர் அவதரித்த ஊர்களினும், சிவபெருமான் கோயில்கொண்டு விளங்கும் தலத்து வீதிகளினும் காலால் நடந்தே செல்லுதல் வேண்டும். ஊர்தி முதலியவற்றில் ஏறிச் செல்லுதல் கூடாது என்னும் விதி நோக்கி என்க. முனிவரனை நேருற நோக்கி. ஓர்ந்தனையோ - ஆராய்ந்தறிந்தாயோ: ஓர்தல் - ஆராய்தல். அணங்கின் எனை- பெண்ணுருவோடு (நின்முன்னே வந்து நிற்கும்) என்னை.

9. சினவு வேல்-(பகைவரைக்) கோபிக்கும் கூரியவேல். பலிச்சேடம்- பிச்சைச்சோற்றின் மிச்சில். இனிது அருந்தி.

10. அது - அச்செய்தி; முன்னே நடந்த செய்தியை. ஆகம் - மனம்; உடம்பு எனினுமாம். கலைகள் ஏன் - சாத்திரங்களால் பயன் யாது? பயில் தவம் என். திதிகொள் சாதனை என்கொல்: திதி- நிலை. சாதனம்- தொழிலைப் பயப்பிக்கும் முக்கிய காரணம் என்பர்.

11. நனை - அரும்பு. சடையினுன் பலி அடிசில் என்றது சிவநின் மாலியத்தை. பவம் அறுத்திடும் - பிறவியை நீக்கும். என்று அனம் மிசைந்தேன். அடிசில் - சோறு. அன்னம் = அனம்: தொகுத்தல். மிசைதல் - உண்ணுதல். மிச்சை=மித்தை - பொய். கட்டுரை - உறுதிச் சொல், பொருள் பொதிந்த வார்த்தை. இசைந்ததோ - இச்செயல் பொருந்தியதோ.

என்ற னுளுடன் கோயில்புக் கிடைமரு திறையோன்
மன்ற லந்துணைச் சரோருக மலர்ப்பதம் பணிந்து
மின்ற யங்கிடைத் தடமுலை விளங்கொரு புறத்தோய்
துன்று மன்பர்தங் களைகணுஞ் சோதியே சரணம். 12

அவனி நீர்தழ லநிலம்விண் ணுதவன் மதியம்
நவிலு மன்னுயி ரெனவொளிர் நாயக சரணம்
பவநி ரஞ்சன நிராமய பராபர விமல
உவமை யில்புக ழிடைமரு திறைசிவ சரணம். 13

ஏற்றி டும்பலி யருந்தினர் தமக்குமே லெய்தும்
தோற்ற முண்டுகொ லென்றன னிலையெனச் சொல்லி
மாற்றில் சோதியாய் விளங்கினுன் பரனதின் மாதும்
போற்று மாமுனி வரனும்புக் கிலங்கினர் புகழ்ந்து. 14

---

12. என்று அன்னுளுடன்: அன்னுள் - காசியரசன் மகள், சோழன் மனைவி. மன்றல் - வாசனை. சரோருகமலர் - தாமரைமலர். மின் தயங்கு இடை: தயங்கு-விளங்கும். தடமுலை-உமாதேவியார்: பெருமுலையம்மை என்ற குறிப்பு: அன்மொழித்தொகை. விளங்கு ஒரு புறத்தோய்: புறம்-பக்கம். களைகண் - பற்றுக்கோடு. சோதி - சோதி மகாலிங்கமூர்த்தி.

13. முதல் இரண்டடிகள் சிவபெருமான் அட்டமூர்த்தி சொரூபர் என்றபடி. அவனி - பூமி. அநிலம் - காற்று. ஆதவன் - சூரியன்: ''நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனுய மைந்தனே டெண் வகையாய்ப் புணர்ந்து நின்ருன்'' (திருவாசகம், திருத்தோணேக்கம் 5); ''இருநிலனுய்த் தீயாகி நீருமாகி இயமானனுய் எறியும் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயிருகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி'' (திருநாவு. பொது. நின்ற திருத்தாண்டகம்). பவன் - எல்லாம் தோன்றுதற்குக் காரணமானவன்: நிமித்தகாரணன் என்க. நிரஞ்சனம் - இருளின்மை, நிறைவு: அஞ்சனம் - குற்றம். நிரஞ்சனம் - குற்றமின்மை: என்றது அஞ்ஞானமின்மையை. நிராமயன் - நோயில்லான். பவநிரஞ்சன நிராமய பராபர விமல: ''மதசம்மதம் பெருச் சாலம்பரகிதமான, சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப சாந்தபத வ்யோம நிலையை, நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ்சப் பொருளை நிர்விஷய சுத்தமான, நிர்விகாரத்தைத் தடத்தமாய் நின்ருெளிர் நிரஞ்சன நிராமயத்தை'' (தாயுமானவர்); ''நிராமய பராபர புராதன பராவுசிவ ராகவருளென்(று)'' (திருஞான. திருப்பிரமபுர. வழிமொழித்.). மூன்ரும் அடிமுழுவதும் வடசொற்ருெடர் தொடர்ந்தன காண்க.

14. ஏற்றிடும் பலி - இரந்துண்ணும் பிச்சை. தோற்றம் - பிறப்பு. இல்லை=இலை: தொகுத்தல். மாற்று இல் சோதியாய். மாதும் முனிவரனும்: மாது - சோழன்மனைவி. புக்கு இலங்கினர்.

முந்து நோக்கிடு மன்னவர் முன்னவ னருளைச்
சிந்தை கொண்டனர் நின்றனர் சிந்தினர் விழிநீர்
கந்த மென்மலர் சொரிந்தனர் கண்ணிமைத் திடாதோர்
அந்த ரத்திடை யெழுந்தன நாதமோ ரைந்தும். 15

போற்று மாதவ னுதவிய பிச்சையூண் புசித்திட்(டு)
ஆற்ற லாலொரு சுணங்கன்மே லணங்கெனத் தோற்றி
ஏற்றி னூர்திதா ளடைந்தவா றிசைத்தன மீது
சாற்று வாந்திரி யம்பக முனிவரன் சரிதம். 16

சுணங்கன்கதிபெற்றசருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1339

---

15. நோக்கிடும் அன்னவர். முன்னவன் - சிவபெருமான். அந்தரத் திடை - ஆகாயத்தில். நாதம் ஓர் ஐந்தும் - தேவதுந்துபிகள் ஐந்தும்.

16. பிச்சை ஊண் - பிச்சை உணவு. சுணங்கன் - நாய். அணங்கு - தெய்வப்பெண். ஏற்றின் ஊர்தி - இடபவாகனத்தையுடைய பெருமான். முனிவரன் - முனிவரிற்சிறந்தவன் : வரன் - சிறந்தோன்.

### ஐம்பத்திரண்டாவது

# திரியம்பகச் சருக்கம்

[பொன்னிநதி பாயும் சோழநாட்டிலே ஒரு நகரத்திலே அந்தணர் குலத்திலே தோன்றி உயர்ந்தவன் திரியம்பகன் என்பவன். வேத அத்திய யனம் செய்து, அதன் பயனுகச் சோதிர் மகாலிங்கமூர்த்தியிடத்து அன்பு பூண்டொழுகுபவன். அவன் சிறந்த குரவனைத் தேடி அறிந்து, அவனை வணங்கி, நிழல்போலத் தொடர்ந்து நீங்காதவனுய்க் குருவருள் பெற்றுன். மனம் தெளிந்திலன். பின்னும், அக்குரவனை அணுகி வழிபாடாற்றினுன். மனையை மனைவியைப் புதல்வரை மற்றைப் பொருளை மனத்தினும் நினையா தவனுய்க் குரவனே மெய்ப்பொருளெனத் தேர்ந்து தெளிந்தான். சிவஞான உணர்ச்சி பெற்றுன். குரவன் மனம் ஞானமேவடிவான பரம்பொருள்பால் செல்லும் காலத்தை நாடியிருப்பதை உணர்ந்தான். இனி, குரவன் இவ் வுடலை விட்டுச் செல்வான் என உறுதி பூண்டான்; சிறிதும் பிரியாமல் இருந்து வந்தான். அக்காலத்துக் குரவன் தாகசாந்தியின்பொருட்டுத் தண்ணீர் கேட்டான். திரியம்பகன் விரைந்து பக்கத்திலே உள்ள நீர் நிலைக்குச் சென்று நீர் எடுத்து வந்தான். வரச் சிறிது நேரம் தாழ்த்தது. குரவன் பூமியில் உள்ள மண்பரப்பில் முன் உபதேசித்த மொழியையே அவன் மனங்கொண்டு மாண்புறும்பொருட்டு எழுதினுன்; சிவபிரான் திருவடியைச் சார்ந்தான்.

ஆசிரியன் திரியம்பகன்பொருட்டுப் பூமியில் வரைந்த உபதேச மொழியை அயலில் நின்ற கழைக்கூத்திகண்டு அதனை ஓலையில் வரைந்து காதில் அணிந்துகொண்டாள்; மண்ணில் எழுதிய எழுத்தை அழித்து விட்டாள். திரியம்பகன் நீர் எடுத்துக்கொண்டு குரவனிடத்து வந்தான். குரவன் சிவத்துடன் கலந்தமையையும், அயலில் எழுதிய எழுத்துக்கள் அழிந்திருத்தலையும் கண்டான், கவன்றுன், பதறினுன், கதறினுன், வீழ்ந்தான், புரண்டான், பின்பு எழுந்தான். வேதவிதிப்படி குரவனுக்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்தான். அழிந்த எழுத்துக்களை அறிந்து கொள்ள முயன்று ஆராய்ந்தான். அருகிலிருந்தோர் சொல்லக் கழைக் கூத்தியை அணுகி வினவினுன். ஆசிரியன் உயிர் நீங்குங்காலத்து உபதேச மொழி ஒன்று வரைந்தான் என உண்மையைச் சொன்னுள். அன்று முதல் அவளைக் குருவாக வரித்தான் திரியம்பகன். அவள் உள்ளம் மகிழ வேண்டுங்காரியங்களை எல்லாம் செய்து வந்தான். தன் மந்திர வித்தை

வலியால் மூங்கிலில் தானே கயிறு பொருந்தச் செய்தான்; பறைகளும் தம்மிலே முழங்கிவரச் செய்தான். இதனைக் கண்ட கூத்தி மகிழ்ச்சியடையினும் மயங்கியிருந்தாள். கூத்தி திரியம்பகனைப் பலவாறு சோதித்தாள். பிறரைக் கொண்டு நன்ருக அடிக்கச் செய்வாள். அந்த அடிகள் யாவும் அவன்மேல் பட்டில. தழும்பும் உற்றில. இதனை யாவரும் கண்டு வியப்புற்றனர். ஒருநாள் கூத்தி கழையின்மேல் ஏறி ஆடும்பொழுது நீர் தருக என்ருள். கையிலுள்ள கமண்டலநீர் அவள் கையிலுற்றது. அச்சமுற்ருள், மனமிரங்கினுள், கழையினின்றும் இறங்கினுள். காதிலணிந்திருந்த அவ் வோலையைத் தந்தாள். குற்றம் பொறுக்க என வேண்டினுள். திரியம்பகன் ஓலையை வணக்கமுடன் பெற்று வாசித்தான். முன்பு தனக்கு உபதேசித்த மொழியையே அதில் வற்புறுத்தியிருத்தலை அறிந்தான். குருபரன் அருளை வியந்தான். தன்னை மறந்து நின்று ஆடினுன். ஆனந்தக்கடலில் அமிழ்ந்தான். சித்திரப்பாவை போலச் செயலற்றிருந்தான். கூத்தி பணித்த வண்ணம் அவளிடம் விடைபெற்ருன். பல தலங்களினும் சென்று சென்று அம்மையப்பரைத் தரிசித்து வணங்கி வழிபாடு செய்து வரலாயினன். தைப்பூசவிழாத் தரிசித்துப் பூசத்துறையில் நீராடச் சென்ருன். வேதியர் பலர் அவனைச் சூழ்ந்துகொண்டு இழித்துப் பேசினர். பூசநீராடுதல் உனக்கு ஏற்றதல்ல என்றனர். மருதவனேசரை வணங்குதலும் தக்கதல்ல என மறுத்தனர். திரியம்பகன் என் நிலையை மருதவாணரே அறிவார் என்ருன். அப்பிராமணர் மருதப்பிரான் இது தக்கதென அறைவரோ என்றனர். திரியம்பகன் நீங்கள் வெகுளியைவிட்டு நிற்பீராயின் இறைவர் கூறியருளுவர் எனச் சாதித்தான். ஆகாயவாணியால் இது தக்கதே என்று இறைவர் அருளினர். இதனைக் கேட்ட அந்தணர் நடுங்கினர். இறைவன் அருளைச் சிந்தித்தனர். பெரிதும் வியந்தார். திரியம்பக வருக என அழைத்துத் தம் திருவடிநீழலில் இருத்தினர் இறைவர் என்று சூத முனிவர் சவுனகராதி முனிவர்களுக்கு அருள்செய்தார்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மருவிய கவின்மென் கொங்கை வணக்கநுண் மருங்கு லோங்கு
பொருவில்சீர் மணிப்பூ ணீடு புகழ்க்கலை நீதி யொண்கண்
அருளுறு முகவண் கல்வி யமைந்தநெஞ் சுதவிச் செங்கைத்
தருமமா தினிது வாழுந் தண்புனற் பொன்னி நாட்டில். 1

1. மருங்குல் - இடை. தருமமாது - தருமதேவதை.

பாங்குறு நகர மொன்றிற் பனவர்தங் குலத்திற் றோன்றி
ஓங்கிடு மொருவன் போலு முயர்திரி யம்பகன்மற்(று)
ஆங்கவ னும மன்னு னருமறை முதனூல் யாவும்
தாங்கிடு மனத்தன் சோதி தாளிணைக் கன்பு பூண்டோன். 2

குலனுட னருளுந் தெய்வங் கொள்கையு மேன்மை தானும்
கலைபயி றெளிவி னேடுங் களங்கறு பதங்க ணான்கும்
நிலன்மலை நிறைகோல் பூவி னிலவுறு குணனு மன்பும்
உலகிய லறிவும் வல்ல வொருகுர வனைக்கண் டேத்தி. 3

நனியுறு தாக முற்றோர் நறியநீர் நாடு மாறும்
துனிதரு பிணியி னுழ்ந்தோர் மருத்துவற் றுருவு மாறும்
தனிமுதிர் வெயிலிற் சார்ந்தோர் தண்ணிழ றேடு மாறும்
எனவினை யகற்றி யின்ப மீந்திடு குரவற் றேடி. 4

கலிநிலைத்துறை

அனைய னின்னரு டாங்கினு னவனடிப் பிரியா
வினையு முப்பொரு ளிராசியு நிகழ்ச்சியாய்ந் திடுங்கான்
மனம திற்றெளி வுருமையிற் செம்மைமுன் வணங்கி
இனமு முண்டுகொ லென்றன னுண்டென வுரைத்தான். 5

கனமு றும்படி யின்னுமுண் டென்றலுங் கருத்தின்
மனையை மைந்தரை மனைவியை மற்றுள பொருளை
வினையி ழைத்திடு மலகைகண் டகறல்போல் வெறுத்துப்
புனித மெய்தியிக் குரவனே பொருளெனக் குறித்து. 6

---

2. பனவர் - பிராமணர். நாமம் - பெயர். சோதி-சோதி மகாலிங்க மூர்த்தி.

3. ஆசிரியன் இலக்கணம் கூறிற்று. ''குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை, கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை, நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும், உலகியல் அறிவோ டுயர்குண மினையவும், அமை பவன் நூலுரை ஆசிரி யன்னே'' (நன்னூல் - 26 சூத்.) களங்கு அறு - குற்றமற்ற. பதங்கள் நான்கு - நாற்பாதங்கள்; சரியை கிரியை யோகம் ஞானம் என்பன அவை. குரவன் - ஆசிரியன்.

4. துனிதரு - துன்பத்தைத்தரும்.

5. தாங்கினன் - பெற்றவனாகி: முற்றெச்சம். வினை - கன்மம். முப் பொருள் இராசி - பதி பசு பாசங்கள். செம்மை - செவ்வையாக.

6. அலகை - பேய். அகறல் - நீங்குதல். புனிதம் - தூய்மை. இக் குரவனே பொருள்: 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' (திருமந்திரம்).

நடக்கு நாளிடைப் புகன்றிடு நற்றவ னருளால்
அடுத்த பஞ்சினிற் றழலென வகத்தின்மெய்ஞ் ஞானம்
மடுத்த தங்ஙனம் வயங்குநாண் மாதவ னுள்ளம்
திடத்தின் மேவுசிற் பரத்தினிற் றொடர்ந்தமை தேர்ந்தான். 7

ஆகு மத்திறந் தெளிந்தினி யையனிவ் வுடல்விட்(டு)
ஏகு மென்றயல் பிரிந்திடா னிருந்துழி யனையோன்
தாக முற்றது புனலெனத் தருவதென் றதற்குப்
போக லுற்றனன் மருங்கொரு போதுறு வாவி. 8

சென்று நீர்கொடு திரும்பிடச் சிறுவரை தாழ்ப்ப
மன்ற மற்றதன் முன்புமுன் னிசைத்ததே வாய்மை
என்றி டும்பொரு ணிலத்திடை யிலங்கிட வெழுதி
மின்ற யங்குவே ணியன்பத மடைந்தனன் மேலோன். 9

மாத வத்தினேன் புவியிடை வரைந்தவண் கவியை
ஓது மோர்கழைக் கூத்தியாங் கியல்பின்வந் துற்றுள்
காதி னேலையில் வரைந்தணிந் தனளதைக் கலைத்துப்
போதல் செய்தனள் சிறிதயல் பொருந்துறு குடிசை. 10

வந்து நோக்கினன் மாதவ னிலைமையும் வயங்கு
முந்து மண்டலத் தெழுதிய தழிவுறு முறையும்
சந்த முற்றகைப் புனலொடு விழிவிடு சலமும்
சிந்த மற்றவ னடிமிசை வீழ்ந்தனன் றிகைத்து. 11

---

பொருள் - மெய்ப்பொருள். சிற்பரம் - ஞானமாகிய மேம்பட்டபொருள். அடுத்தது - பொருந்தியது. கருத்தின் வெறுத்துப் புனிதம் எய்தி.

7. மெய்ஞ்ஞானம் - சிவஞானம். தேர்ந்தான் - தெளிந்தான்.

8. தெளிந்து இனி ஐயன்: ஐயன்-குரவன். பிரிந்திடான்: முற்றெச்சம். அனையோன் - அக்குரவன். புனல் என - தண்ணீர் எனக் கேட்க. மருங்கு - பக்கம். வாவி - குளம்.

9. சிறுவரை தாழ்ப்ப - சிறிது நேரம் தாமதிக்க. மன்ற - மிகுதியும். முன் இசைத்ததே வாய்மை - முன்பு உபதேசித்ததே உண்மைப் பொருளாம். இலங்கிட - விளக்கமாக. மின் தயங்கு வேணியன் - சிவபெருமான். மேலோன் - முற்கூறிய குரவன்.

10. கழைக் கூத்தி - மூங்கிலின்மேல் ஏறி விளையாடுபவள்; கூத்தாடிச்சி. அதைக் கலைத்து - குரவன் நிலத்திலே எழுதிய செய்தியைக் கலைத்துவிட்டு.

11. மண் தலத்து எழுதியது. சந்தம் உற்ற - அழகிய. அவன் அடிமிசை - அக்குரவன் திருவடிகளின் மீது.

விழுந்து மண்மிசைப் புரண்டனன் கலுழ்ந்தனன் மெல்ல
எழுந்து பின்னுளந் தெளிந்தன னென்செய்வான் மறைநூல்
மொழிந்த வாறுமேற் செய்கடன் முழுவதுஞ் செய்தான்
அழிந்தி டவ்வெழுத் தின்னதென் றறிந்திடற் காய்ந்தான். 12

துன்றி னார்சொலா லனையமெல் லியலெதிர் தொடர்ந்து
வென்றி மாதவன் செலும்பொழு தாங்குமே வுற்றோர்
சென்றி யாரென வினவினான் றெரிவைநான் சென்று
நின்று ளேனுண்மை தீட்டின னென்றன னேர்ந்து. 13

அந்த வாசகங் கேட்டலு மிகமகிழ்ந் தவளை
நந்து மத்தின முதற்குரு வெனத்தனி நயந்து
சிந்தை யுட்கொடு பிரிவில னாகியே திரிவான்
கந்த வார்குழ லனையவா ணுதலுளங் களிப்ப. 14

இன்ன ணந்திரி பவனவ ளாடிடு மிடத்தில்
பன்னு மந்திர வலியினாற் பணைகளும் வடமும்
முன்னர்ப் பூணிடுந் தம்மிலே பறைகளு முழங்கும்
பொன்ன ளிப்பர்கண் டவர்மிகப் பூவையு மருள்வாள். 15

விரவு காளைய னிவன்வரு விருப்பினை யறிவான்
அரிவை யேவலின் வைவர்க ளடிப்பர்க ளவற்றைக்
குரவ னாற்றுதண் டனையெனக் கொடுமகிழ்ந் திருக்கும்
உருவி னிற்றழும் புருமைகண் டவர்வியப் புறுவார். 16

---

12. கலுழ்ந்தனன் - கதறினவனாய். புரண்டனன், கலுழ்ந்தனன் என்பன முற்றெச்சங்கள். அழிந்திடு அவ்வெழுத்து. அறிந்திடற்கு ஆய்ந்தான்.

13. துன்றினார் - அங்கே பக்கத்திலுள்ளார். செலும் பொழுது அங்கு மேவுதல் உற்றோர். நேர்ந்து - ஒப்புக்கொண்டு.

14. நயந்து - விரும்பி. சிந்தையுட்கொடு - மனத்தில் வரித்து. வாணுதல் - அக்கழைக்கூத்தி.

15. பணை - மூங்கில். வடம் - கயிறு. தம்மிலே பூணிடும், தம்மிலே முழங்கும் எனக் கூட்டுக. தம்மிலே: இடைநிலைத்தீவகம். பூவையும் - நாகணவாய்ப்புள் போன்ற கூத்தியும்: பூவை - நாகணவாய்ப்புள். மருள்வாள் - மயங்குவாள்.

16. காளையன் ஆகிய இவன். அறிவான் - அறியும் பொருட்டு. வைவர்கள் அடிப்பர்கள். உருவினில் தழும்பு உருமை - உடம்பிலே அடித்த தழும்பு பொருந்தாமையை. உரு - வடிவம். கண்டு அவர்: கண்டவர் எனினுமாம்.

செழிய வேதிய ரிவளை யோர் தினஞ்சிலர் வெளியின்
விழியி னேக்கிநீ கூத்தியோ டயின்றனை மிகவென்(று)
இழிவு பேசவுஞ் சலிப்பில னெறும்பெண யிரமேல்
கழுதை யும்பரந் திடுமெனக் கட்டுரைத் தகன்ருன். 17

சுற்று நாள்பல முயலினுந் தொடங்குமெவ் வினையும்
பற்று நாள்பல னெய்தினன் ருேவெதிர் பலிக்கும்
முற்று சீர்த்திரி யம்பக முனிவற்கித் துணை நாள்
இற்ற தத்தனிக் குருவரு ளெய்துதற் கம்ம. 18

கூடு மோர்பக லடைந்ததோர் கொற்றவ னவைமுன்
நீடு றுங்கழை வடத்தின்மீ திலங்கநின் றனையாள்
ஆடும் போதுநீர் தருகென வம்பொனீர்க் கலசம்
நீடு றுங்கரத் துற்றது நெல்லியங் கனிபோல். 19

நச்சு வாள்விழிப் பிறைநுதல் கரத்தினீர் நணுக
அச்ச முற்றுள மிரங்கின ளிறங்கின ளனைய
விச்சை வேதிய னருகுற மேவியன் னவன்ருள்
உச்சி யுற்றிடப் பணிந்தன ளோலையை யுதவி. 20

மன்னி நீவரு விருப்புநின் மகிமையுஞ் சிறிது
முன்ன மோர்ந்தும்வா ளாவுறு மூடரி னிருந்தேன்
என்ன வோதினும் பெண்ணறி விழிதகைத் தன்ருே
துன்னு மென்பெரும் பிழைபொறுத் தருள்கெனச் சொன்னுள். 21

---

17. அயின்றனை - உண்டாய். கட்டுரைத்து - சொல்லி.

18. முதலிரண்டடி : ''அடுத்து முயன்ருலும் ஆகுநாளன்றி, எடுத்த கருமங்கள் ஆகா'' என்னும் மூதுரையை நினைப்பிக்கும். இத்துணைநாள் இற்றது.

19. கொற்றவன் அவை - இராச சபை. கழை வடத்தின் மீது - மூங்கிலிற் கட்டிய கயிற்றின் மேல். நீர் தருக என. நீர்க்கலசம் - ஜல பாத்திரம்.

20. நச்சு வாள் - விடம் தோய்க்கப்பெற்ற வாள் : நஞ்சு=நச்சு : வலித்தல். பிறை நுதல் : அன்மொழித்தொகை. கரத்தில் நீர் நணுக. இரங்கினள் - மன இரக்கமுற்றவளாய் : முற்றெச்சம். இறங்கினள் - கீழே இழிந்து. அன்னவன் - திரியம்பக முனிவன். தாள் உச்சி உற்றிட - திருவடிகள் சென்னியில் படுமாறு.

21. வாளா - சும்மா. மூடரின் : இன் : ஐந்தாவது ஒப்புப்பொருள். பெண் அறிவு இழிதகைத்து : 'பேதைமை என்பது மாதர்க் கணிகலம்' என்னும் முதுமொழியை ஒட்டிக் காண்க.

அத்த போதன னவளையுங் குருமொழி யதையும்
உய்த்தி றைஞ்சியவ் வெழுத்தினை நோக்கமுன் னுரைத்த
சத்த மேகபுக லுண்மைமற் றன்னதைத் தழுவு
சித்த மேசிவ மெனத்தொகுத் திருந்தது தெரிந்தான். 22

அனைய தன்பொரு ளுட்பமுந் திட்பமு மறிந்து
நினைவின் மேற்படக் குருபர னருளினை நினைந்து
தனைம றந்துநின் றுனந்தச் சலதியிற் படிந்து
வனைத லுற்றிடு மோவியத் துறைந்தனன் மாதோ. 23

அந்த வானுத லேவலி னவளைவிட் டகலுற்(று)
அந்தண் மாமல ரிதழிவா ளரவம்வாழ் வேணி
அந்த மில்லரன் றனையுமை யவளுட னிலகும்
அந்த மார்பல பதிகள்சென் றிறைஞ்சின னதன்பின். 24

வினைய கற்றுதைப் பூசநாள் வியன்விழா விழைந்து
தனையி லங்கிடப் பூசனை தான்புரிந் திடுப
வனைநல் வெண்பொடி பூசநா தியையிடை மருதின்
இனிதி றைஞ்சவேள் பூசனண் ணுதவ னியன்றுன். 25

மாலி னேங்கிய சிகரிகண் மதிமருங் கண்டு
சால்பு மேலிடு மத்தலந் தனின்மிரு கண்டு
சீல மைந்தனுக் கருளியைத் திறங்கொள் கற்கண்டு
பாலெ னுஞ்சொலா ளிடத்தனைப் பணிந்தனன் கண்டு. 26

---

22. தபோதனன் - தவத்தைத் தனமாக உடையோன்.

23. அனைய அதன். ஆனந்தச் சலதி-ஆனந்தமாகிய கடல். வனைதல்-எழுதுதல். ஓவியம் - சித்திரம்.

24. அந்தம் இல் அரன் - முடிவில்லாத சிவபெருமான். பல பதிகள்-பல தலங்கள்.

25. இரண்டாம் அடி: தம்மைத் தாம் அருச்சித்தமை குறித்தது. பூசு அநாதியை. வேள் பூசல் நண்ணுதவன்: வேள் - மன்மதன். பூசல் - போர்: என்றது காமத்தை. இடைமடக்கு.

26. மாலின் - மலைகளைப்போல: திரிவிக்கிரம அவதாரத்தையுடைய திருமாலின் எனினும் ஆம். மதி மருங்கு அண்டு: அண்டு - நெருங்கும். மிருகண்டு மைந்தன் - மார்க்கண்டேய முனிவர். சிகரி-கோபுரம். அருளி: பெயர். கடை மடக்கு.

உள்ள நெக்குரு குற்றிடத் துதித்துநின் றுகந்து
வள்ள வார்குழைப் பணைமுலை யுமையெதிர் வணங்கிப்
பள்ள முற்றிடு தீர்த்தங்கள் பலவினும் படிந்து
தெள்ளெ ழிற்றடந் தேர்முதற் சிறப்பெலா நோக்கி. 27

விரவு பூசநாள் பொன்னியிற் படிந்திட மேவிக்
கருது மால்விடை மேல்வரு கண்ணுத லிமையோன்
அருகு பற்றினன் வருதலு மவன்றனைப் பலர்கள்
சுருதி வாணர்கள் குழாங்கொடு சூழ்ந்தனர் புகல்வார். 28

வேணு நாடகிக் கடிமையாய்க் கழுதைகண் மேய்த்தும்
பூணி டுஞ்சுமை சுமந்துமாங் குழன்றநீ புகுந்து
மாணு றும்புகழ்ப் பூசநீ ராடவு மருதத்
தாணு வின்பதம் பணியவுந் தகாதொழி யென்றார். 29

நிறைபெ ருந்தவ முனிவனென் னிலைமரு திடத்தின்
உறையு மீசனே யறிவனென் றிசைத்தன னுனக்கின்(று)
அறைவ னேயவ னென்றன ரறைவனீர் வெகுளி
மறைத லுற்றிடச் செய்துபின் கேண்மென வகுத்தான். 30

இகழ்ந்தி டப்படு கூத்தியோ டயின்றுபா ரெங்கும்
அகழ்ந்தி டேனமொத் தலைந்தவிவ் வந்தணன் பூசம்
உகந்து மூழ்கவு நின்னடி யவர்கள்பா லுறவும்
தகுங்கொ லோவிடை மருதுறை சங்கரா வென்றார். 31

அண்ண றன்னடிக் கன்புசெய் பாவமு மறமென்(று)
எண்ணி னூல்கண்மற் றிசைப்பது சரதமே யிறையோன்
உண்மை மாதவ ரிடத்துள முருகிடு மன்றே
வண்ண வானிளங் கன்றினுக் கிரங்குதன் மான. 32

---

27. பள்ளம் - ஆழம்.

28. கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடைய. சுருதி வாணர்கள் - வேதப் பிராமணர்.

29. வேணுநாடகி - கழைக்கூத்தி: வேணு - மூங்கில். மாண் உறும் - பெருமை பொருந்தும். மருதத்தாணு - மருதீசர். ஒழி - நீங்குக.

30. இன்று அறைவனே அவன்: அறைதல் - சொல்லுதல். வெகுளி - கோபம்.

31. அயின்று - உண்டு. ஏனம் ஒத்து - பன்றியைப் போன்று. அலைந்த இ அந்தணன். பூசம் - பூசத்தீர்த்தம்.

32. சரதமே - சத்தியமே. வண்ண ஆன் கன்றினுக்கு இரங்குதல்:

ஏற்றின் மீதெழிற் பொன்னியந் துறையுறை யிறைவன்
ஆற்றல் சாலிவ னெனக்குமெய் யன்பனு நீவிர்
சாற்று மன்னவை தகுந்தகுந் தகுமென வுரைத்தான்
போற்று மியாவருங் கேட்பவிண் பொருந்திய மொழியால். 33

மீத லத்திடை யோலமிட் டித்திறம் விதித்த
போதி லெம்பிரா னருளினைக் கருதியப் புனித
மாத வத்திரி யம்பகன் வருகென வழைத்துப்
பாத பங்கய முதவினன் பரமனீ டருளால். 34

எண்ணு மீதலத் தொலியையு மெதிர்முனி வரனைக்
கண்ணு ருமையு நோக்கினர் கலைமறை வல்லோர்
உண்ண டுங்கின ரிரங்கின ருருகிநீர் சொரிந்தார்
விண்ணி னுர்மலர் சொரிந்தன ரியாவரும் வியந்தார். 35

அந்த ரத்திடை முழங்கின வைவகை யொலியும்
சந்த மாலயன் புரந்தரன் றயங்குபா ரிடங்கண்
முந்து நின்றரன் கருணையை முன்னினர் துதித்தார்
இந்த மான்மிய மெங்ஙனுண் டிசைபெறுந் தவத்தீர். 36

என்று சூதமா முனிவர னிசைத்தலு மெதிரே
துன்று மாதவச் சவுனக ராதியோர் துதிசெய்(து)
இன்று காறுமோர்ந் திலம்புக லித்தல மகிமை
ஒன்று மிப்பொழு துணர்ந்தன மோங்குநின் னருளால். 37

---

ஆன் - பசு. ''அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்'' (சித்தி. சூத்திரம் - 2, செய்யுள் - 29).

33. ஏற்றின் - இடபத்தின். விண் பொருந்திய மொழி - ஆகாய வாணி. திரியம்பகன் : விளி. பாத பங்கயம் - திருவடித்தாமரை.

34. மீதலம் - ஆகாயம். ஓலம் இட்டு இ திறம் விதித்த.

35. விண்ணினுர் - ஆகாயவாசிகள்.

36. அந்தரம் - ஆகாயம். புரந்தரன் - இந்திரன். பாரிடம் - பூதம். முந்து நின்று. எங்ஙன் - எவ்விடத்து.

37. இ தலம் - இத்திருவிடைமருதூர்.

எடுத்த வாக்கையின் பயனினி தெய்தின மின்னும்
கடுத்த தும்பிய மிடற்றனைக் கருதுமத் தலத்தில்
அடுத்தி றைஞ்சிடப் பெரிதுமிங் காதர முடையோம்
தொடுத்தி டின்னதற் கொருநெறி புகல்கெனச் சொன்னார். 38

சொல்லி டன்னரை நோக்கிமேற் சூதனீர் வினுதன்
மல்லன் மான்மிய மத்தல மருவிலீ ரென்னின்
செல்லு ருதவூர்க் கியனெறி தேடிய தொக்கும்
நல்ல தெண்ணினீ ரெண்ணினே நாமுமித் திறனே. 39

மாத வத்தினீர் வருகென வுரைத்தனன் மகிழ்வுற்(று)
ஓது மத்தலந் தொழவுறு விருப்பெனு முயர்தேர்
மீதி லேறினர் மாதவ ரியாவரும் விளம்பு
சூத னுயினன் சூதனு முனிவரன் றுலங்க. 40

கங்கை யாதிய தீர்த்தங்கள் படிந்தனர் கலந்து
செங்கை யான்றிகழ் தலங்களிற் சென்றினி தணையோன்
பங்க யத்துணை யடிகளில் பணிந்தனர் படர்ந்து
திங்க ளூர்பொழி லிடைமரு தெனும்பதி சேர்ந்தார். 41

சேர்ந்து காவிரி முதலிய தீர்த்தங்க டோய்ந்து
கூர்ந்தி டந்நகர் வளன்முனி கூறிய வவற்றின்
ஊர்ந் திடாயிர மடங்குகண் டதிசய மிகவுற்(று)
ஏந்து நல்லெழின் மணிதிக ழாலய மெய்தி. 42

பணைமு லைக்கொடி புரிதவப் பயனெனத் தோன்றி(டு)
இணையில் சோதியைக் கண்டுமுன் னிறைஞ்சின ரெழுந்து
தணிவி லன்பினின் றேத்தியத் தனிமுத லருள்பெற்(று)
அணையி லானந்த வாரிவீழ்ந் தழுந்திமேன் மிதந்து. 43

---

38. கடு ததும்பிய மிடற்றன்-ஆலகாலநஞ்சுபொருந்திய கண்டத்தை யுடைய சிவபெருமான். ஆதரம் - விருப்பம். சொல்லிடு அன்னரை.

39. மருவிலீர் - பொருந்தீர். ஊர்க்கு இயல் நெறி.

40. விருப்பு தேர். சூதன் - தேர்ப்பாகன்.

41. செங்கையான் - திருவாதிரை நாளினுக்குரிய சிவபெருமான். திங்கள் ஊர் பொழில் - சந்திரன் ஊர்ந்துசெல்லும் சோலை; திங்களூர் என ஊரின் பெயர் தொனித்தல் நயம்.

42. கூர்ந்திடு அ நகர்.

43. தோன்றிடு இணையில் சோதியை. ஆனந்த வாரி - ஆனந்தமாக் கடல்.

கருதி டேகநா யகன்றனை யாண்டிடு களிற்றை
மருத வாணனைக் கயிலையென் றிசைத்திடு மருதைக்
குரவ வார்குழற் பெருநல மாமுலைக் கொடியைப்
பரவ லுற்றனர் சென்றுசென் றவரடி பணிந்து. 44

சுற்று மூவல னெய்திவே லிறையையுந் தொழுது
மற்று மாங்குள தேவர்க டம்மையும் வணங்கிப்
பெற்று மன்னவர் திருவருள் பின்னுமத் தலத்தே
உற்றி டுந்தவம் புரிந்துநீ டுளமகிழ்ந் திருந்தார். 45

திரியம்பகச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம்—1384

## மருதவனப்புராணம் மூலமும் குறிப்புரையும் முற்றும்.

திருச்சிற்றம்பலம்

---

44. கருதிடு ஏகநாயகன். ஆண்டிடு களிறு - ஆண்டபிள்ளையார். பணிந்து பரவல் உற்றனர்: பரவல் - தோத்திரித்தல்.

45. மூ வலன் - மூன்று பிரதக்கிணம்.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

பக்க எண்


KOVILOOR ANDAVAR
A. No. 25916
LIBRA
VILOOR

